உ

சிவமயம்

ஸ்ரீமத் கைலாச பருவதச்சார்பில் சைவமுனி குருபரம்பரை
சிவதருமணி அதிவருண சிவாசிரம குடிசிகசந்நியாச
சுத்தசைவம் புலியூர்மடம் ஆதீனம் வித்வத்
அழகிய திருச்சிற்றம்பல தேசிகரவர்களால்
அருளிச்செய்த.

# தென்காசித் தலபுராணம்.

## மூலம்.

இராஜஸ்ரீ பேட்டை,
ஆறுமுகநயினர்பிள்ளை அவர்களது
அரும்பதவுரையுடன் அச்சியற்றப்பெற்ற.

திருநெல்வேலிஜில்லா இந்து கலாசாலை
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,
ஸ்ரீ ல ஸ்ரீ,
மே.சொ. சுப்பிரமணிய கவிராயரவர்களால்
பரிசோதிக்கப்பெற்றது.

ஸ்ரீலோகாம்பிகா சமேத விசுவநாதசுவாமி தேவஸ்தானம்
மகா-ராஜ-ராஜ-ஸ்ரீ தருமகர்த்தர்கள் அனுமதியுடன்
ஷை கோவில் பொருளுதவியைக்கொண்டு.

தென்காசி,
ஸ்ரீ ராமாநுஜம் அச்சுயந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

அக்ஷய ஸ்ரீ

முதல் பதிப்பு காப்பி 1000.
இதன் விலை ரூ 1]  1926  [ரிஜிஸ்தர் செய்யப்பெற்றது

31-3

சிவமயம்

## தட்சணாமூர்த்தி தேசிகரவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

சீராரு மதிகுலத்துப் பாண்டியர்தம் பரம்பரையிற் சிறப்புற் றோங்கிப்
பேராரும் விந்தகல்லூர் மன்னவன்சண் பகமாறன் பெட்பாற் கந்தன்
வராரும் பதம்பரவிக் கவனமா குளிகையினை யெய்திக் கங்கை
நீராரும் காசிநிதந் தரிசித்துத் தொழுதுவரும் நியமம் பூண்டான். (க)

அன்னதனுற் காசிகண்ட பராக்கிரம னாகியிருந் தரசா ளந்த
மன்னவனுற் சிவபெருமா னருளியவா சண்பகமா வனந்தி ருத்தித்
துன்னியமாற் றிசைபுகழ்தென் காசிமான் மியந்தமிழிற்சொல்லு கென்றச்
தென்னவனுட் டுறைசைவ சிரேட்டரொலா மன்புகொடு தெரிவித் தாரால்.

வேறு

ஆங்கவர்தம் ஞானவுப தேசஞ்செய் குருவா
யமர்ந்தசிவ தருமணிய வாசிரிய னென்னத்
தீங்கில்வட மொழியினுந்தென் மொழியினினுஞ் சிறந்து
திகழ்பலசாத் திரங்களையுந் திரிபறக்கற் றுணர்ந்தோன்
பாங்கினொடு திருநீறு மக்கமணிப் பணியும்
பாமுத்தி சாதனமாம் பண்பதென வணிவோன்
ஓங்கியநித் தியநைமித் தியகாமி யமென
உரைப்பனவைக ளநுட்டிப்போன் சிவயாக முடையோன் (உ)

மிச்சிரகே வலசுத்த பூசையொடு மிளிரு
மெய்கண்ட சந்தான சிவாச்சிரம மேலோன்
நச்சுருகா மாதியோரா றுட்பகையை நலிதல்
நாடுறுஷட் குண்டலமுங் காதணியா நயந்தோன்
மெச்சுகுடி சிகசந்தி யாசனுப வீத
மெய்யணியா நங்கள்குல மேலோன்சித் தாந்த
அச்சைவ குலகுருவா மழகியதி ருச்சிற்
றம்பலகு மாரகவி திருவுள்ள மமைந்தே. (ந)

வேறு

ஆரியத்தி லுள்ளதிருத் தென்காசிப் புராணகதை யாராய்ந் தெண்ணிச்
சீரியற்று செந்தமிழா லுலகமெலாம் புகழ்ந்தேத்தச் செய்து வானோர்
நாரியற்று விசுவேசன் பதம்பணிந்து நமையாளு முலகாண் மூன்னே
நேரியற்று சைவமகா சபையிலரங் கேற்றியிசை நிலைபெற் றானே. (ச)

திருவனழ கியதிருச்சிற் றம்பலகு மாரகவி செய்தென் காசி
மருமையுறு புராணமிதை யத்தலத்துத் தருமகர்த்த ராய சைவப்
பெருமையினர் சுந்தரமா வுடையாய கம்வேலா யுதமாம் பேர்கொள்
தருமகுணர் புவிபரவ வச்சியற்றி னாரவர்மே தகவின் வாழி. (ரு)

சிவமயம்

# படல அட்டவணை.



படலம் முற்றும்

# பரிசோதவிணப்பத்திரம்.

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 5 | 4 | 6 | பாரணத்தை | புராணத்தை |
| 10 | 6 | 3 | டதகி | டத்தி |
| ,, | 11 | 4 | பதிடடித் | பதிட்டித் |
| 14 | 31 | 2 | கடுப்ப | கடுப்பப் |
| ,, | 32 | 4 | காதது | காத்து |
| 15 | 37 | 3 | லாம | லாம் |
| 16 | 44 | 1 | பது | புது |
| ,, | ,, | 4 | ருப்ப | ருப்ப |
| ,, | ,, | ,, | ளிங்கெடுத | கிழங்கெடுத் |
| ,, | 45 | 3 | கொன | கொன் |
| ,, | ,, | 4 | பொன | பொன் |
| 17 | 55 | 2 | ளி | ளிப் |
| 21 | 9 | 4 | கழ்து | கழ்ந்து |
| ,, | 11 | 2 | நாய | ஞப |
| 22 | 13 | 3 | பகர்ந்து | கர்ந்து |
| ,, | 14 | ,, | வேப்போ | வெப்போ |
| 24 | 29 | 2 | பொழில்பூ | பொழிற்பூ |
| 29 | 63 | 4 | பலவளக் | பல்வளக் |
| 30 | 68 | 2 | புறந் | புறந்த |
| 31 | 76 | 2 | மீட்டி | மீட்டிச் |
| 32 | 82 | 3 | விழித்க | விழித்க் |
| 39 | 11 | ,, | யனனி | பன்னி |
| ,, | ,, | 4 | னமம | னம்ம |
| 44 | 34 | 1 | திகழ் | திகள் |
| 46 | 50 | 3 | வேள | வேள் |
| 48 | 61 | 2 | கடன | கடன் |
| ,, | ,, | ,, | ளன்ப | ளன்பு |
| ,, | ,, | 2 | மூடித் | மூடித் |
| 52 | 27 | 3 | தாத்து | தரத்து |
| 54 | 39 | ,, | ளிமபரு | ளிம்பரு |
| 57 | 60 | 2 | கிளற்று | கிளத்து |
| 60 | 8 | 3 | திரம | திரம் |
| ,, | ,, | 4 | மாததரன் | மாத்தான் |
| 61 | 14 | 2 | வைமபத் | வைம்பத் |
| ,, | 18 | ,, | பேசி | பேசிப் |

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 61 | 19 | 3 | துறுவு | துருவு |
| 63 | 31 | 4 | மனி | மணி |
| 64 | 38 | 1 | கற்றுளி | கற்றுளிக் |
| 65 | 40 | 4 | னௌனு | னௌன |
| 69 | 7 | 4 | போலி | பொலி |
| 71 | 18 | 1 | முருக | முருகக் |
| ,, | ,, | 2 | முருக | முருகச் |
| ,, | ,, | 3 | முருக | முருகப் |
| ,, | 20 | ,, | முன | முன் |
| ,, | ,, | 4 | யயில | யயிற் |
| ,, | ,, | ,, | னெனற் | னெனல் |
| 72 | 30 | 3 | யுறஞ் | புறஞ் |
| ,, | 31 | 4 | ஞேனுயநின் | ஞேனுநின் |
| 73 | 34 | 2 | நிங்கிட | நீங்கிட |
| ,, | 39 | 3 | பழிச்சற் | பழிச்சக் |
| 80 | ,, | 4 | சிததிரை | சித்திரை |
| 81 | 4 | 2 | வததா | வத்தா |
| ,, | 6 | ,, | புததி | புத்தி |
| ,, | 10 | 3 | பிததே | பித்தே |
| 84 | 31 | 4 | ாரா | ாரா |
| ,, | 32 | 3 | ஞாதஞ் | ஞதாஞ் |
| 85 | 37 | 2 | கைததின | கைத்தின் |
| ,, | ,, | 3 | தைகசோ | தைக்கோ |
| ,, | ,, | ,, | டமப | டம்ப |
| 92 | 17 | 2 | நிற்ப | நிற்பச் |
| ,, | ,, | 3 | நிற்ப | நிற்பக் |
| 96 | 44 | 2 | வற் | வெற் |
| 97 | 51 | 2 | தரும்படி | ரும்படி |
| 99 | 8 | ,, | நாகவி | நாகம்வி |
| ,, | 10 | 4 | வாழ்விஃ | வாழ்வி · |
| 104 | 3 | 3 | கூடுமோ | கூடுமோ |
| 105 | 9 | 2 | பான்மை | பான்மையின் |
| 106 | 19 | 1 | ரண் | மாண் |
| ,, | 21 | 4 | பொங்கன் | பொங்கல் |
| 107 | 26 | 3 | புடம்பி | யுடம்பி |
| ,, | 28 | 2 | வுலகவம | உலகவம் |
| 108 | 33 | 3 | கரீஇப | ரீஇப் |

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 109 | 7 | 1 | வமா | வுமா |
| 110 | 9 | 2 | போனு | போனும் |
| 112 | 24 | 3 | கென்ன | கென்னத் |
| 113 | 30 | 2 | நிற்ப | நிற்பக் |
| ,, | 34 | 4 | லேனே | லேனே |
| 116 | 59 | 1 | சகங் | சகங் |
| 124 | 35 | 3 | ஞப | ஞய |
| 126 | 4 | ,, | சாவா | சாவாப் |
| 127 | 13 | ,, | மஞ்சற் | மஞ்சட் |
| 130 | 31 | ,, | ளு | ளும் |
| 132 | 47 | 4 | கவு | கவும் |
| 133 | 54 | 1 | வின்று | லின்று |
| 134 | 57 | 3 | தவு | தவும் |
| ,, | 62 | 4 | மென்றுக் | மென்று |
| 135 | 63 | 3 | யெயான் | யியான் |
| 137 | 80 | ,, | லாரு | லாரும் |
| 139 | 88 | ,, | லமமை | னம்மை |
| 142 | 109 | ,, | றற | றா |
| 143 | 113 | 1 | தெலிங்கர் | தெலுங்கர் |
| ,, | 118 | 2 | ம | ம் |
| 144 | 123 | 1 | களுவங் | களும்வங் |
| ,, | ,, | 2 | வனைத்துவங் | வனைத்தும்வங் |
| ,, | ,, | 4 | ரலாரு | ரலாரும் |
| 146 | 133 | 2 | டுததா | டுத்தா |
| 152 | 176 | ,, | ளார்த் | ளார்தத் |
| 154 | 193 | ,, | குழீக் | குழீ இக் |
| 166 | 71 | 1 | மிககத் | மிகக |
| ,, | 72 | 4 | நனமைய | நன்மைய |
| 168 | 82 | 3 | கெழின் | கெழில் |
| 169 | 92 | ,, | குறுகல | குறுகல் |
| ,, | 93 | 2 | மிப்பாற | மிப்பாற் |
| 171 | 109 | 3 | யியன | யியன் |
| 173 | 6 | ,, | திகழுவாய் | திகழும்வாய் |
| ,, | 16 | ,, | சொலு | சொலும் |
| ,, | ,, | 4 | வகர்க்கு | வகர்க்கும் |
| 175 | 20 | 3 | றிரண்டு | றிரண்டும் |
| 182 | 25 | ,, | மஞ்சல் | மஞ்சள் |

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 182 | 26 | 1 | ணெடிய் | ணெடிய |
| 191 | 40 | ,, | நிற்குண | நிர்க்குண |
| 193 | 52 | 2 | வததிர் | வத்திர் |
| ,, | 1 | 4 | பலசு | பலகி |
| 194 | 3 | ,, | றனன | றனன் |
| ,, | 4 | ,, | ரெலாம் | ரெலா |
| 195 | 13 | 3 | கொடுதத | கொடுத்த |
| ,, | 15 | 2 | பஞ்சகும | பஞசகும் |
| ,, | 16 | 4 | கழந்திடி | கழ்ந்திடி |
| 198 | 1 | 3 | நம | நம் |
| 205 | 45 | 1 | போய் | போய்த் |
| 208 | 13 | 4 | டுறப்பிலா | டுறபலா |
| ,, | ,, | ,, | விவிங்கம் | விலிங்கங் |
| 209 | 21 | ,, | ரெனுந் | ரெனத் |
| 241 | 57 | 3 | புண்மை | யுண்மை |
| ,,4 | 63 | 4 | றுற்றனர் | றுற்றனர் |
| 245 | 79 | ,, | ழைத்தான் | ளைத்தான் |
| | 83 | ,, | னின்றுமா | னின்றும் |
| ,, 24 | 88 | 3 | வல்மி | வல்லி |
| ,, | 91 | 1 | பாண்டியின் | பாண்டியன் |
| 248 | 6 | 4 | றுனை | றுறை |
| 250 | 26 | ,, | ஞபிஞன் | ஞன் |
| 253 | 46 | ,, | சாத் | உதாய்ப் |
| 254 | 1 | 4 | ிவா | ெவா |
| 256 | 14 | ,, | ெறறி | ெறரி |
| ,, | 18 | 3 | னெரிப்பட்டுப் | னெறிப்பட்டுப் |
| 258 | 32 | 4 | தூங்கிலா | துறங்கிலா |
| 265 | 27 | 2 | மிலர் | மலர் |
| 268 | 48 | 1 | னினைந்த | னிறைந்த |
| ,, | 49 | 2 | ணலெணலர்ந் | ணலெனுவார்ந் |
| ,, | 50 | 1 | கூடடு | கூட்டு |
| ,, | 51 | 2 | ரூல | ரூல் |
| ,, | ,, | 4 | செயது | செய்து |
| 269 | 4 | 2 | ணீணி | நீணி |
| ,, | 8 | 4 | தனிலு | கனிலும் |
| 270 | 10 | 3 | றறிப்பிற் | றரிப்பின் |
| 271 | 14 | 4 | செரிந்த | செறிந்த |

| பக்கம் | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 271 | 16 | 4 | விடத்தம | விடத்தம் |
| 272 | 2 | 4 | ஞத்திரி | ஞகதிரி |
| ,, | 3 | 1 | ெறனப் | ரெனப் |
| ,, | 4 | 4 | வமமை | வம்மை |
| 273 | 6 | 1 | ண று | ந று |
| ,, | 6 | 4 | நிலததி | நிலத்தி |
| ,, | 8 | 2 | ேவண் | வெண் |
| ,, | 9 | ,, | வட்சு | வட்டு |
| ,, | ,, | 3 | னில்லாமம் | நில்லாம் |
| ,, | ,, | 4 | வயுற்குக் | வுயிர்க்குக் |
| ,, | ,, | ,, | யு ந | யு று |
| 274 | 11 | 2 | ஓம | ஓம் |
| ,, | ,, | 4 | நன | நன் |
| ,, | 12 | 1 | கொலைபிற்கொ | கொலைக்கொடி |
| ,, | ,, | ,, | ரொறுத் | தொறுத் |
| ,, | ,, | ,, | கூழ்களை | கூழ்களைக் |
| ,, | ,, | 3 | படை | புடை |
| ,, | ,, | 4 | வுரைக்கிலலா | யுரைக்கில்லா |
| ,, | 13 | 1 | கிரை | கிறை |
| ,, | ,, | 2 | கரண | கரண் |
| ,, | ,, | 3 | கண | கண் |
| ,, | 15 | 2 | வாழித் | வாழி |



# முகவுரை.

உலகத்தில் ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிர் வரையுள்ள அனைத்துயிர்களுமின்பத்தையே நாடுகின்றன. ஆயினும், அவைக ளுள் தாம் நாடுமின்பத்தைச் சிறப்புவகையானனுபவித்தற்கு ஆறறிவுயிராகிய மக்களுயிரே உரிமையுடையது. தீயொழுக்க மிக்க தூர்த்தன்முதல் நல்லொழுக்கந்தலைநின்ற சிவஞானியீறுதி யாகவுள்ள அனைவரும் நாடுவது இன்பமேயென்றாலும், அவ்வின் பங்களெல்லாம் ஒரு நிகரனவாகாமல் பல பல படிமுறைகளாக அமைகின்றன. உலகப்பற்றே மருவிய ஒருவன் கட்காமாதிகளா லின்பம் வருகின்றதென்று கொண்டு அவ் வின்பங்களைப்பெற விரும்பி அவைகளையனுபவித்து இன்பம் நுகர்கின்றான். உலக நிராசையுள்ள சிவஞானியொருவன் சிவபெருமான் திருவடிக்கண் அன்பு செலுத்துவதனாலே யின்பம் வருகிறதென்று கொண்டு அவ்வின்பத்தைப்பெற விரும்பிச் சிவபெருமானைத் தலையாக்கும் பிட்டு மனமார வாயார வழுத்தித் தான் கருதுமின்பம் நுகர்கின் றான். இவ்விருவகையின்பமும் பொதுவகையான் இன்பமெனப் படினும், அவை தம்முள் ஒப்பனவல்ல.

சுவையுடைய பொருளொன்றையுண்ணுமொருவன் அப் பொருளை யுண்ணுங்காலத்து ஓரின்பங்கொள்கின்றான். மிகுந்த வாசனையுடைய பொருளை முகரும் ஒருவன் அப்பொருளை முக ருங்காலத்து ஓரின்பங்கொள்ளுகின்றான். இவற்றுள் உண்ணும் பொருளினும் முகரும்பொருள் சிறிது நீண்ட காலமிருத்தலின் உண்ணுதலான் வருமின்பத்தினும்முகருதலால் வருமின்பம் சிறந் ததாகின்றது. இதனாலறியக்கிடப்பதென்னவென்றால், பொருள்க ளின்கால நீட்சியைப்பொறுத்தே அவற்றால் வருமின்ப நீட்சியு முள்ளதென்பதேயாம்.

இனி உண்மையால் நோக்குவார்க்கு உலகத்திலுள்ள பொருள்களனைத்தும் அழியும் பொருள்களாலிருத்தலின் அவற் றால் வருமின்பமும் அழிவுள்ளதேயாகும். ஆகவே, உயிர்கள் உலகப்பொருள்களாலனுபவிக்குமின்பம் நிலையற்றதே. பின்னை நிலையுள்ள வின்பந்தான் யாதோவெனின், எப்பொருள் எக்காலத் துமுள்ளதாய், என்றும்ஒருபடியாயுள்ளதாய் ஆனந்தமயமாயுள்ள தோ அப்பொருளால் வருமின்பமே யென்றும் மாறாதவின்பமாம்.

அப்பொருள் பரமமங்களப்பொருளாகிய சிவபரம்பொருளேயன்றி வேறின்மையின் சிவபெருமான் தருமின்பமே பேரின்பமாம்.

இதுபற்றியே:-

நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்து மின்ப மின்பமே.

யென்னுஞ் சுருதியுமெழுந்தது.

இனி யிப்பேரின்ப நிலையை நாமடைவது அச்சிவபெருமானுடைய திருவருளாலேயேயன்றி மற்றெதனாலுமன்று. கடவுளுடைய திருவருளை நாமடைவதற்கேற்பட்ட சாதனங்கள் சரியை கிரியை, யோகம், ஞான மென்னும் நான்குமாம். இந்நான்கினையும் நாம் பயின்றுவரின் அவ்வந்நிலைதோறும் அநுபவப்பயனாக அன்பு நிகழும். இவ்வன்பினாலே கடவுளருளைப்பெற்று அப்பேரானந்தத்தைநாமடையலாம்.

ஒருவனுடைய சிறந்த வீரச்செயல்களைக் கேட்டமாத்திரத்தில் வீரர்களுக்கு அவன்மீது அன்பு உண்டாவதும் ஒருவனுடைய அகடிதகடன சாமர்த்தியத்தைக்கேட்குங்காலத்து உலகத்தார்க்கு அவன் மீதன்புண்டாவதும் நாமநுபவத்திலறிவோம். ஆகவே சிவபெருமானிடம் அன்பு நிகழவேண்டுமாயின் அப்பெருமானுடைய அனந்த கல்யாண குணங்களையும் அப்பெருமான் மெய்யன்பர்களுக்கு அருள்புரிந்த செயல்களையும் நாம் செவிமடுத்தல்வேண்டும். இங்ஙனம் சிவபரம்பொருளின் குணங்களையுஞ்செயல்களையுங்கூறும்நூல்கள்பலவாம். ஆயினுமவற்றை விரித்துக்கூறவெழுந்தநூல்களேபுராணங்களாகும். இப்புராணங்கள்சிவபெருமானதுபொருள்சேர் புகழைக் கூறுதலோடு வேதமந்திரங்களுக்கும் பொருள் விரிப்பனவுமாகும். இதனையறிவுறுத்தவே "சூதனொலிமாலையென்றே கவிக்கோவை சொல்லே" என்னுஞ் சுருதியும், "சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதசிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றூற் சைவத்திறத்தடைவர்" என்னும் அருள்மொழியும் எழுந்தன. இதனை விளக்கவே,

தாளாண்மை யில்லாதார் வேளாண்மை செலுத்துவதுந்
தரைமே லென்றும்
வேளாண்மை யில்லாதார் மனைவாழ்க்கை செலுத்துவதும்
விசயம் வேட்டு

வாளாண்மை யில்லாதார் மண்டுசமர்க் கேறுவதும்
வளர் புராணங்
கேளாதார் கதிவிழைவும் விழியிலார் வழிகடக்கும்
கிரம மாமால்

என்று பெரியோர் கூறியுள்ளார்.

இதனால் மேலானவின்பமடைய விரும்பி அன்பு வளர்ந்து மேற்கதியடைவார்க்கு முக்கியசாதனமாயுள்ளவை சிவபுராணங்களென்பது துணிபாம், புராணங்கள் பதினெட்டாம். கயிலையங்கிரியில் ஸ்ரீகண்டபரசிவம் திருநந்திதேவருக்கு உபதேசிக்க, அவர் சனற்குமாரற்கு உபதேசஞ்செய்ய, அவர்வியாதபரமுனிக்கு உபதேசிக்க, அவர் சூதமுனிக்குபதேசித்த பதினென் புராணங்களுள் சிவபுராணங்கள் மச்சம், வாமனம், கூர்மம், வராகம், மார்க்கண்டேயம், பவிடியம், காந்தம், இலிங்கம், பிரமாண்டம், சைவமெனப்பத்தாகும்.

அநாதி மல முத்தநித்த வியாபக சச்சிதானந்தப்பெருங் கருணைத்தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் தம்மை வழிபட்டுப் பத்திசெய்துய்யும் பொருட்டுத் தமதருவுருவத்திருமேனியாகிய சிவலிங்கத்திலமர்ந்து திருக்கோயில்கொண்டு தேவர்,சித்தர் முனிவர், மானுடர் முதலியோர்கள் பரவ, இஷ்ட சித்தி முத்திப் பேறுகளையீந்து தமது கருணைவிலாசங்காட்டி யெழுந்தருளியிருக்குந் தலங்கள் பலவற்றின் சரித்திரங்களே அச்சிவபுராணங்களுட் டொகுத்துக்கூறப்பட்டிருப்பன.

இச் சிவதலங்களுட் சிறப்புற்ற தென்காசித்தலமானது திரிகூட வரைச்சாரலிலுள்ள திருக்குற்றாலத்தின் வடகிழக்கின்கண் சித்திராநதிக்கரையின்பாலுள்ளது. இத்தலமகிமை சூதமுனிவரால் மற்றைய முனிவர்களுக்குப் பவிடியோத்தர உபரிபாகம் லிங்கபுராணம், காந்தம் இவைகளினின்று எடுத்துக்கூறப்பட்டனவாம்.

இத்தலம், சச்சிதானந்தபுரம், முத்துத்தாண்டவநல்லூர், ஆனந்தக்கூத்தனூர், சைவமூதூர், தென்புலியூர், குயின்குடி, சித்தர்வாசம், செண்பகப்பொழில், சிவமணவூர், சத்தமாதரூர், சித்திரமூலத்தானம், மயிலைக்குடி, பலாலிங்கப்பாடி, வசந்தக்குடி தென்காசி, கோசிகையென்னும் சோடசநாமங்கள் அமைந்துள்ளது.

இந்தத் தலம் தனக்குச்சமீபித்துள்ள விந்தைநல்லூரை இராஜதானியிடமாகக்கொண்டு அரசாண்டுவந்த செண்பகமாறன்

குமாரக்கடவுளை வழிபடு தெய்வமாகக்கொண்டு தியானித்துவரும் நாளில், அப்பெருமானருளாற் கிடைத்த கவன குளிகையால் நாடோறுங் காசி சென்று, கங்கை நீராடி, விசுவேசரைத்தரிசித்து வருநாளிலோர்நாள் அம்மன்னவன் தேவி தன்னாயகன்பால் தன்னையுமழைத்துச்செல்லுமாறு வேண்டினளாக, அவ்வாறழைத்துச் சென்று திரும்பி வருங்கால் மதுரைப்பதியையடைய, அவ்விராஜமாதேவி பூப்பெய்தினளாக, ஆங்குத்தங்கித் தன்னித்திய விரதந் தவறுவதை யெண்ணிக் கவன்று நித்திரை செய்யுங்கால் காசி விசுவேசப்பெருமான் அம்மன்னவன் கனவிற்றோன்றி யருளி மன்னவ! நினது நகருக்கணித்தாயுள்ள முனிவர் பலர் தவஞ் செய்யுஞ் செண்பக வனத்துட்சென்றால் ஆங்கோரெறும்பொழுக் கஞ்செல்லும். அதனைத் தொடர்ந்து செல்வாயாயின் ஆங்கோர் நந்தி தோன்றும். அதன்பானின்று தியானஞ்செய்யின் அந்நந்திக் கருகேயுள்ள மடுவில் தேவர் முனிவராதியோர் வழிபட வெழுந் தருளியிருக்குஞ் சிவலிங்கப்பெருமான் வெளிப்படுவர். அவரைத் தரிசித்து ஆலயங்கட்டுவித்துப் பூசித்து வணங்குவாயாயின் காசி தருவதினுஞ் சிறந்த பேறடைவாயென உரைத்தருள, அவ்வாறரு ளப்பெற்ற அம்மன்னவன் எம்பெருமான் திருவருளிருந்தவா றென்று ஆனந்தவெள்ளத்தாழ்ந்து அப்பெருமான் அருளிச் செய்தவாறே தன்னூர் சென்று செண்பகவனத்தையடைந்து சிவலிங்கப் பெருமானைத்தரிசித்துத் திருக்கோயில் கண்டனன். அவ்வாலயத்திலுலகுயிரனைத்தும் வழிபட இறந்தார்க்கு முத்தி தருங்காசியினும் பிறந்தார்க்குமிறந்தார்க்கும் வழிபட்டார்க்கும் பேறருளும் விசுவேசமூர்த்தி வீற்றிருக்கும் பெருமைவாய்ந்தது.

பராக்கிரமபாண்டியன் காசிகண்ட பராக்கிரமபாண்டிய னெனப்பெயர்பெற்ற செண்பகமாறனால் ஆலயங்கட்டிக் காரணாகம விதிப்படி பூசை நித்திய நைமித்தியஉற்சவாதிகளும் நடைபெறச் செய்து அதற்குவேண்டும் நிதி நிகேதனங்களுமேற்படுத்தி நகர வமைப்பிலக்கணப்படி திருநகரமுமமைக்கப்பட்டு அவ்வாலயத்தி னெண்டிசைகளிலும் சுத்த சைவாசாரியர் திருமடங்களும் நிறு வப்பட்டன. அவைகளுள் கீழ்த்திசையில் அரசருக்கு முடிசூட் டும் சிவந்தபாதவூருடையாராதீன மென்னும் சந்நிதிமடம் சிவா கமங்களோதியுணர்தற்கும், தென்கீழ்த்திசையில் சாமிதேவநயினா ரகோர தேவாதீனமென்னுமடம் சிவ தீட்சை பெற்றுக்கொள்வ தற்கும், தென்றிசையில் தருவாசராதீனமென்னும் வேம்பத்தூர் மடம் கல்விகற்றுத் தேர்வுறற்கும், தென்மேற்றிசையில் பௌரா ணிக ஆனந்தக்கூத்தராதீனமென்னுமடம், சிவபுராணங்கள்கேட் டுணர்வடைவதற்கும், மேற்றிசையில் தத்துவப்பிரகாசராதீன

மென்னுமடம் தத்துவ விசாரணை செய்வதற்கும், வடமேற்றிசை யில் மெய்கண்டாராதீனமென்னுமடம் சைவசித்தாந்த சாத்திரங் களையோதியுணர்ந்து ஞானோபதேசம் பெறுவதற்கும், வடதிசை யில் உமையொருபாக குருவாதீனமென்னும் மடம் சைவருக்கு உபதேசஞ்செய்வதற்கும், வட கிழ்த்திசையில் இடிவலஞ்சூழ் பரஞ்சோதி தேவாதீனமென்னும் மடம் சிவயோகிகள் யோகஞ் செய்து வாசஞ்செய்வதற்குமாக நிறுவப்பட்டன. இன்னும் அறச் சாலைகள், கழகங்கள் முதலிய வேண்டுவனவெல்லாமமைய எவ் வகைப்பேறுமெளிதிற் பெருமாறமைக்கப்பட்டு விளங்கும் தலமகி மையயுடையது.

வடகாசியின்கணுள்ள மூர்த்தி தீர்த்தம் தலமென்னுமூன் றனுள் முன்னையவிரண்டும் பெற்றுக்கொண்ட காசிகண்ட பராக்கி ரமபாண்டியன் எஞ்சிய தீர்த்தமும் அநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க அவவிசுவேசமூர்த்தி திருவருளாற் கங்கைபொங்கி யெழுந்த கூவற்றீர்த்தம், உலகத்திலுள்ள உயிர்களின் பாவங்கள் தீர வேற்றுக்கொண்ட தன் பாவந்தீரக்கங்கையால் மதுவா லாட் டிப்பூசை செய்த சித்திரகங்காநதி முதலாகிய தீர்த்தங்களில் மூழ் கினர்க்குப்பேறுதரும் பலபுண்ணிய தீர்த்தங்களையுடையது,

இன்னும் அரிபிரமேந்திராதிகள் பூசித்துப் பேறுபெற்ற இத்தென்காசியாலயங்கண்டகாலத்தையாராயுங்கால் சாலிவாகன சகாப்தம் 1171-ல் ஆலயமுயர்ந்ததாக இப்புராணங்கூறுகின்றது. திருக்குற்றாலப்புராணமுதலிய அருளிச்செய்த மேலகரம் திரிகூட ராஜப்பக்கவிராஜ மூர்த்திகள் தாஞ்செய்த திருக்குற்றாலக்குற வஞ்சியில் குறத்தி குறிசொல்லுவதில் "கொல்லத் தாண்டொரு நானூற்றிருபத்துநாலில், தென்காசியாலயமோங்கக், குறி சென் பகமாறற்குச் சொன்னபேர் நாங்கள்" என்று கூறியுள்ளார்கள். இவ்விரண்டும் ஒத்திருக்கின்றதாலிவ்வாலயம் விருத்தியான காலந் தொட்டுஇன்றுவரை 677-வருடங்களாயினவென்பது தெளிவாம்.

இத்தென்காசிப்புராணமியற்றியவர் தில்லைகண்ட குலசே கரபாண்டியன் தென்காசியில் நிலைநிறுத்திய சந்திரசேகர குரு பரம்பரையில் 42-வது தலைமுறையில் வந்த அழகிய திருச்சிறறம் பலதேசிகராகிய குமாரகவிராய தேசிகராவர். இப்புராணத்தைத் தமிழிலியற்றியருளவேண்டுமென்று சைவநெறிக்குரிய ஆன்றோர் பலர் பிரார்த்தித்து வேண்ட, அக்குமாரகவிராயதேசிகர் இப்புரா ணத்தைக் கொல்லம் ஆண்டு ஆயிரத்துப்பதினொறிற் செய்து முடித் தனரென்பது இப்புராணவிறுதிச்செய்யுளால் விளங்குகின்றது.

பின்னர் அறநெறியுஞ் சித்தாந்த சிவாகமச் சைவநெறியுக் தழைத்தோங்கி நிறை செல்வம் பெற்று இத்தென்காசியில் வாழ்ந்துவந்த சொக்கலிங்கம்பிள்ளை முதலான வேளாளர் குலத்தலைவரும் கார்காத்த குலோத்தமரும் தொண்டை வேளாண்குலசிரேட்டருமாகிய சுத்த சைவோத்தமர் வேண்டிக்கொள்ள அழகிய திருச்சிற்றம்பல குமாரகவிராயதேசிகரால் 1030-ம் ஆண்டில் உலகம்மை சந்நிதியிலிப்புராணம் அரங்கேற்றியதாக அக் காலத்துடனிருந்து கேட்டு ஆனந்தித்த சங்கரலிங்கம்பிள்ளை கூறிய சிறப்புப்பாயிரத்தால் தெரியவருகின்றது.

இத் தென்காசிப்புராணத்தை யியற்றியருளியவர் சுத்த சைவ மெய்கண்ட சந்தான சிவதருமிணி குருபரம்பரையினராதலால் வைதிக சைவநெறிப்பூஜாவிதி முதலியன நன்கு விளக்கிப் புராண விலக்கணமமைதர இனிய செந்தமிழ்ப் பாக்களாற்கூறி முடித்திருக்கின்றனர்.

இவ்வாறு சிறப்புற்றோங்கிய இத்தென்காசிப்புராணத்தை யாவருமுணர்ந்துய்யுமாறு கருதித்தற்காலம் அத்தலத்துத்தரும கருத்தர்களாய்த்தேவாலய கைங்கரியங்களை நெறிபெற நடாத்தி வரும் வேலாயுதம்பிள்ளை யவர்கள், ஆவுடைநாயகம்பிள்ளையவர்கள், கானுகோ சுந்தரம்பிள்ளையவர்களாகிய இவர்கள் புராண ஆசிரிய பாம்பரையினரும் தென்காசி சந்நிதிமடம் சிவந்தபாதவூருடையாராதீன கர்த்தாயுமிருக்கின்ற தட்சிணமூர்த்திதேசிகரவர்கள்பால் தமது கருத்தை வெளியிட அன்னார் மனமுவந்து தம்பாற் சேமஞ்செய்து வைத்திருந்த தென்காசித்தலபுராண ஏட்டுப்பிரதியைக் கொடுத்தருள அதனைப்பெற்றுப் பேட்டை, ஆறுமுகநயினர்பிள்ளையவர்களைத்தம்பாற் சிலகாலமிருக்கச்செய்து அன்னாரால் காகிதத்தில்வழுவின்றிஎழுதுவித்தும் பலவற்றிற்குக் குறிப்புரை வரைவித்தும், அச்சேற்றியுலகினுலவுமாறு செய்து சிவபுண்ணியப்பேறெய்தினர். இவர்கள் செய்தபேருதவிக்கு நந்தமிழ்மக்களனைவரும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளார்கள்.

தாம் செய்துவருஞ் சிவ புண்ணியங்களுளிதுவு மொன்றெனக்கருதித் தென்காசித் தலபுராணத்தைத் தமிழுலகமுணர்ந்துய்யுமாறு செய்து புண்ணியஞ்செய்த பூதவுடம்போடு புகழுடம்பும்பெற்றவர்களாகிய தருமகர்த்தர்களின்னும நீண்ட ஆயுளும்

நிறைபெருஞ்செல்வமும், பேரறிவும் அளவிலாற்றலும் பெற்றுச் சிவபெரும்புண்ணியங்கள் செய்து சகல குண சம்பந்நராய்ப்பெரு வாழ்வுற்று விருத்தியடையவேண்டுமென்று எல்லாம் வல்ல கடவுளை மனமொழி மெய்களாற்சிந்திக்கின்றேன்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

இங்ஙனம்

மே. சொ. சுப்பிரமணியக்கவிராயர்,

திருநெல்வேலி

இந்து கலாசாலைத்தலைமைத் தமிழ்ப்பண்டிதர்.




  

உ

சிவம்

# தென்காசித் தலபுராணம்.

## காப்பு.

முக்கட் சோதிதேன் காசிமுன் னேன்கதை
மிக்க வேதவி யாசன்வி ரித்ததைத்
தக்க வாய்தமி ழாற்சொலச் சண்பகக்
கைக்க ளிற்றின் கழல்பணிந் தேத்துவாம்.

---

## கடவுள் வணக்கம்.

### விசுவநாதர்.

உலகதி னேற்ற மான வுவணமா லன்ன வூர்தி
யிலகிவர் மனவாக் கிற்கு மெட்டொணு வருமை காட்டிப்
பலன்மிகத் தருதென் காசிப் பதிவளர் புனல்சேர் சென்னி
நலனுறு விசுவ நாதர் நறுமலர்க் கழலுட் கொள்வாம். (க)

### உலகம்மை. (வேறு)

முருகோங்கு குழலாளைச் சிந்தூரநன் னுதலாளை முதுமீனேக்காற்
கருவோங்கிக் குடிதழைய வருள்சுரந்து மடைதிறந்தகண்ணினளை
யுருவோங்குகளபமணிமுலையாளைக்கொடியிடைப்பட்டுடையினளை
மருவோங்குபதத்தாளைத்தென்காசியுலகாளைமனத்துள்வைப்பாம்.

### திருநடராசர்.

நாமேவு மிசைவாணி மணவாள னொருதாள நாதங்காட்டச்[தூதத்
கோமேவு திருமான்மத் தளமுழக்கித் இத்திமிதெய்க் கோடேய்ந்
தேமேவு கற்பகக்கா வாசுமுனி வருமிறைஞ்சத் தேவிகாணப்
பூமேவு மறைச்சிலம்பு புலம்பநடம்புரிசிவனைப்போற்றல்செய்வாம்.

### சிவகாமியம்மை.

மாற்கருமை புரிதிகிரி கொடுத்தானை யிடப்பாக மருவி வாழ்செங்
கோற்கருது பெண்ணரசா யடியவர்க்கு வேண்டுவன கொடுப்பா ளாகிப்
பாற்கழுத பாலனுக்கும் பால்கொடுத்தென் றனையாளும் படிக்கு நீண்ட
சேற்கருணை விழிவைத்த சிவகாமித தாய்மலர்த்தாள்சென்னிசேர்ப்பாம்(ச)

---

ந. கோடு—மூங்கிற்கொம்பாலாக்கப்பட்ட குழல்.

## மயேச்சுரர்.

சகளவடி வாயெழுந்து தோன்றுசரா சரமனைத்துந் தழைவித் தேசத்து
முகளவடி வாமனந்தேச் சுரசோதி யெனவடிய ருகந்து வாழ்த்சத்
துகளறவெள் விடையேறித் துறக்கமுத லியபதங்க டேய்க்க நல்கித்
திகழவொளி ரொருபரமா னந்தசிவன் சேவடியைச்சிந்தை செய்வாம். (ரு)

## மயேச்சுரி.

உலகமுழு வதுமீன்று தானுட வுலகுயிர்க டாமு மாட
நலகருணை பெருகாறு யைவகைத்தா யராயெமருமை நடாத்தோ ராயாய்த்
திலகமணி முடிபுனைந்து சேற்கணருள் பரித்தவகை திறத்தி ஞற்றி
யிலகநன்மை யருளுமெம தம்மைமயேச் சுரிமலர்த்தா ளிதையஞ் சேர்ப்
[பாம். (சு)

## தென்முகத் தெய்வம்.

காரணகா ரியமாகி யாதிவிதி கற்பனையுங் கடந்த சோதிப்
பூரணமாம் பொருடன்னை நால்வருக்கும் புகலாமற் புகல வேண்டித்
தாரணமெய் யறிவின்ப மாய்வளர்கல் லானிழலிற் றழைத்த பண்டை
யாரணவா கமவித்தாந் தெக்கணா மூர்த்திபத மகத்துட் கொள்வாம். (எ)

## சண்பகப்பிள்ளையார்.

உருவமலி நாகத்தை மாவிலங்கை யொருகோட்டை யுடையு வாவை
வெருவமுனைத் தருட்கண்ணை விரும்பலரைச் சிந்தூரத்த வேழந் தன்னை
கருவுயிர்க்கப் பாலமுன்னக் காக்கவெழு முன்னோனை யவாசிக் காசித்
திருவளரத் தியினரசைச் செண்பகவா ரணத்தினையாஞ்சிந்தை செய்வாம்.()

## முருகவேள். (வேறு)

தருக்குடை யரசா லத்தி தான்கொதித் திடவே வன்னி
முருக்கிட வேலை யேவி முன்னமா விருகூ றாக்கி
யிருப்பையு மடித்த சேவற் பிடித்துமயூர மேறுந்
திருக்கிளர் குமர வேடன் சேவடிக் கடிமை செய்வாம். (கூ)

## கலைமகள். (வேறு)

கரிய சுரித்த குழலாளைக் கமல முகவின் னுதலாளை
விரிய மலர்க்கண் ணருள்வாளை மிகநல் வாக்குத் தருவாளை
பெரிய குரும்பை முலையாளைப் பிறங்கு காநான் குடையாளை
யுரிய வளத்தென் காசிநகர்ச் சரித முரைப்பக் கருதிடுவோம். (ய)

ரு. உகளவடிவாம்—இரண்டு திருமேனியுமாகும், இட்டமாகிய திரு
மேனி கொள்ளும்.

## நந்தியெம்பெருமான். (வேறு)

சந்தி கேசவர் சதக்கிரு தேசது முகனுர்
பந்தி கேசரம் வீசிட வேத்திரப் படையால்
வந்தி கேசனென் றேவரும் வாழ்த்திடக் காக்கும்
நந்தி கேசரி னடிமலர் நாமுடிக் கணிவாம். (௰௧)

## தண்டியடிகள்.

பாலெ லாங்கறந் தானுரு மணலினுற் பண்ணி
மேலெ லாகிரம் பிடவபி டேகித்து விமலற்
காலெ லாம்பட வுதைத்ததந் தையினிரு காலைக்
கோலெ லாம்படத் தடிதண்டி குரைகழல் பணிவாம். (௰௨)

## திருஞானசம்பந்தர். (வேறு)

தோடேற்றிய செவியானெனுஞ் சொல்லேற்றிய செய்யு
ளேடேற்றிய தமிழாகர னலமேற்றிய மதுரை
வீடேற்றிய வழன்மீனவன் மீதேற்றிவெல் வைகை
யேடேற்றிய சம்பந்தர்சொல் லேதிரேற்றடி தொழுவாம். (௰௩)

## திருநாவுக்கரசர். (வேறு)

வெப்ப மாகிய வமணர்க ளீற்றறை வெகுளி
செப்ப மாகிய திருமலர்ப் பொருட்டெனத் தினைத்தே
யொப்ப மாகிய கருங்கற்றூண் டோணியா வுகைத்த
வப்பர் தான்மல ரடியரேந் தலையிசை யணிவாம். (௰௪)

## திருநாவலூரர்.

சொல்ல டற்கரா வுண்டசேய்த் தோற்றுவித் தின்ற
நல்ல வட்களித் தற்புதம் பலபல நடாத்தி
வில்ல வன்றொடர் வேழமீ தேறிவெண் கயிலை
செல்ல முந்திய சுந்தரர் திருவடி துதிப்பாம். (௰௫)

---

௰௧. சந்திகேசவர்—சந்திக்கவந்த திருமால். பந்திகேசரம்--கூட்டமாக வந்துநெருக்குபவாது முடியின்கண். வந்திகேசான்—தலைவரே (நீர்அடிப் பது) வலிக்கிறது, தலைவரே உமக்கும் வணக்கம் எனப்பொருள் கூறுவாருமுளர்.

## திருவாதவூரர்.

போத வூதியந் தருதிரு வாசகப் பொருளை
வேத மூழ்முறை பயின்றுள விமலவாத் திகர்கட்
கோத வேபுகுந் தானுட னம்பலத் துறையும்
வாத வூரெமா னடிமலர் முடியின்மேல் வைப்பாம். (௰௬)

## அகத்தியர்.

முகத்தி யங்கிய விருகணின் முன்புகாண் பொருள்போ
லகத்தி யற்கையோர் விஞ்சையஃ தீரொன்பா னெழுத்தாற்
சகத்தி யங்குரு முறைகலை ஞானத்தைத் தந்த
வகத்தி யன்செழுந் தாண்மல ரகத்திலே வைப்பாம். (௰௭)

## அறுபத்துமூவர். (வேறு)

முத்த மூசிடை மொய்பவ ளக்கொத்தி
னுத்த மோத்தம வொண்குணக் குன்றனார்
நித்த நாயக னிட்டையிற் சேரறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம். (௰௮)

## தேசிகர். (வேறு)

மனற்கு மாரக மிதழிகூ விளமிள மதிவெண்
புனற்கு மாரபாத் தழைசடை மறைத்தொளிர் போதம்
பனற்கு மாரக சியவுப தேசமே பணிக்குஞ்
சனற்கு மாரபா ரதிகுரு சரணமே சரணம். (௰௯)

## அடித்தொண்டவழுதி.

முகில னாபனென் றடிதொழ முறையர சளித்து
நகில னாயகிக் கிடப்புறங் கொடுத்துநம் படியார்
புகில னாயறு திங்கண்முன் னவர்பதம் புகச்செய்
யகில னாயக னடித்தொண்ட வழுதிக்கஞ் சலிப்பாம். (௨௰)

---

௰௭. சகத்தியங்குருமுறை—உலகத்திலே சொல்லப்பட்ட ஆசிரியநெறி, உலகத்திலே நடைபெறும் உருப்போடுமுறை. எழுத்தால் என்பதிலுள்ள மூன்றனுருபை இவ்விடத்துங் கூட்டிப்பொருள் கூறுக. ௰௯. மனற்கு மாரகம்—நிலைத்த நன்மை வடிவாகிய மாவிலங்கம். குமாரமா—ஓடவைத்த பொன்போல உ௰. முகிலன்—இந்திரன். நகில்—கொங்கை. அன்னாயகி—தன்னில்வேறல்லாத் தேவி. புகிலனாயறு—புகவிடமில்லாத சூரியன் (அடையாத சூரியன்). அகிலனாயகன்—எல்லாவுலகங்களையும் தன்னுடைமையாக்கொண்டவனாகிய தலைவன்.

### சைவாசிரியர். (வேறு)

இந்திர தருவை போலத் திருவெலாம் நல்லா நீட்டி
மந்திர கும்ப புட்ப மாரிகள் சொரிந்து வாசத்
தந்திர தூப தீப மனனைவே தனச மத்தம்
பந்திர சதத்தா லத்திற் பலிசெய்வார்க் கன்புசெய்வாம், (உக)

### சைவத்தொண்டர்.

பூசனை புரியு மாதி சைவர்பூ சுரர்பூ மாலை
வாசனைச் சாந்த மீவார் மணிவிளக் கிடுவார் தூபம்
போசனை வீச வுப்போ சொலிமுழ வொடுசங் கீர்த்தித்
தீசனைப் பரிவிற் காண்போ ரிவர்களுக் கன்பு செய்வாம். (உஉ)

## கடவுள் வணக்கம் முற்றிற்று.

காப்பு க. கடவுள்வணக்கம் உஉ.

ஆகப்பாட்டு உங.



# புராணவரலாறு.

எறித்த செஞ்சுடர்க் கதிர்களொண் கண்ணொளிக் கிசைவாக்
குறித்த பல்பொருட் காட்டலிற் கூறுமைந் தெய்வம்
பிறித்த மூவறு புராணங்கள் பிறங்குளக் கிசைவாச்
செறித்த வற்றைநல் கினன்முதல் வியாசனுஞ் செய்யோன். (க)

அன்ன வன்றனை யடிதொழு திரத்தலி னன்பாற்
பின்ன வன்றவச் சூதனுக் குரைத்தனன் பிறங்கு
மென்ன ரற்கொரு பத்துமாற் கீரிரண் டிரண்டே
ரன்ன னுக்கெரிக் கொன்றரிக் கொன்றவை யாமே. (உ)

வேறு.

கதைதாஞ் சைவம் பவுடிகமார்க் கண்டமி லிங்கங் காந்தமச்சம்
மதிசேர் வராகம் வாமனங்கூர் மம்பிர மாண்டம் பாகவதம்
பதுமங் கருடம் விண்டுபிர்மம் பகர்நா ரதம்பிர் மகைவர்த்த
மதியாக் கினேய மெனப்பெயர்கொண் டறிவாக் கிடுமவை பதினெட்டே

வேறு.

பன்னெண் காதையிற் பவுடிகோத் தாமதிற் பிறைவேய்
சென்னி யெம்பிரா னுறைசிவச் சேத்திரப் பெருமை
சொன்ன பந்தியா முபரிபா கத்தது தூக்கி
நன்ன ராய்திறற் சூதனே நைமிசர் குரவன். (௪)

முனிவ ரேத்துதங் குரவனை முறைதொழு திறைஞ்சித்
தனிவ ருந்தலந் தீர்த்தமூர்த் திகள்புகழ் தழைப்பக்
கனிவ தாங்கதை கேட்பவெம் மவாக்கதித் தெழலா
வினிவ ழுத்துகென் றிரந்தன ரியைந்தனன் சூதன். (௫)

பரக்கு மஞ்சுதண் மழைபொழி தனுமிசைப் பரிதி
வரக்கு ணக்கதிர் வீசலும் வள்ளல்க டம்பா
விரக்கு நர்க்கரு ளலும்பிறர்க் கிடர்தவிர்த் தறவோர்
புரக்குந் தன்மையுந் தமக்கொரு பொருள்குறித் தன்றே. (௬)

ஆத லாலெமை யறிந்துநீர் கேட்டது மதையே
யோத லாமென உகந்தியான் வந்தது முயிர்த்தோர்
காத லானதைக் காதலர்க் கறிந்தருள் கடனி
லீத லாலற மியைந்தது சுதினமென் றிசைப்பான். (௭)

திருந்து மேலவர்க் கரும்பசிக் கமிழ்தெனத் திளைப்பப்
பொருந்து நற்கதை களிலுள தொருகதை புகலஃ
தருந்து வோர்செவிக் கின்பமா மிருமையு மாகும்
மருந்துண் மிக்கசஞ் சீவிதென் காசிமான் மியமே. (௮)

உரைக்கு மிக்கதை கேட்பவர்க் கதிசய முயர்தென்
றரைக்கு கந்தது வடசொலிற் பயின்றுவித் தாரத்
திரைக்கு ளோங்கமிழ் தெனச்சுரர் தேருவ ததுதான்
வரைக்கு மேல்விளக் காயதென் காசிமான் மியமே. (௯)

இப்ப டிக்கென நற்றவ மாரிரு டிகள்கேட்
டப்ப டிக்குயர் சூதனன் கருள்கதை மடுத்தார்
தப்ப டிக்கொளாத் திறத்தின ராகிய சதுரர்
முப்ப டிக்குமேற் றினர்கதை வந்ததிம் முறையே. (௰)

வேறு

வேதனைப் பிறவி தீர்க்கும் வேதத்தின் ஞான பாகைப்
போதனைத் திறுமெடுத்துப் போதத்தேன் வைத்தாற் போலு
மீதனை வோருங் கொள்ள வடசொலான் முன்னர்த் தந்த
சூதனைப் பணிந்து மூவாத் தமிழினிற் சொல்ல லுற்றேன். (௰௧)

தூயமா மறையோ ராதி சைவர்க டொன்னூல் கற்ற
வாயமாம் பெரியோர் மேழி யாதிபர் நிறைய வைக்கண்
மேவயமார் தோளி பாகன் விசுவநா யகவி டங்கன்
ஞாயமார் கதைசொ லென்னு நலோருரை நயப்பினாலே. (௰௨)

## அவையடக்கம்.

ஓதுவ தியைந்தேன் முன்னா னுவரியுண் முனியொப் பாய்க்கான்
மோதுவல் லெறும்பு முந்நீ ருண்ணமுன் னினவாய் முன்னே
போதுவ வாஞ்சை யுள்ளம் பொருதுவ பின்போய் நாண
மீதுவந் திடினு மிக்க வாஞ்சையே வென்ற தம்ம. (௰௩)

### வேறு.

கவுரி சங்கரக் களத்தனா மிறைவனற் கருணை
யவுட தத்தமிழ் தன்னவாம் புராணநூ லதனுட்
கவுசி கர்பவந் தொலைத்ததென் காசிநற் காதை
பவுடி யோத்தர புராணத்தி னுபரிபா கத்தில். (௰௪)

எடுத்த காதையு மிலிங்கமா புராணத்து மிசைவாற்
றெடுத்த கேள்வியார் காந்தமா புராணத்துஞ் சொல்லிக்
கொடுத்த மற்றிது பொழிப்புரைக் கோப்பிருந் திசைப்பேன்
மடுத்த தேனொடு பால்பழம் கலந்தென வயங்க. (௰௫)

சிங்க மற்றவைக் கதிகமாத் தெரிதமிழ்க் காசித்
துங்க மத்தியி லொருவனென் மழலைமென் சொற்று
னங்க மச்சர மாய்க்கொள்வ ரோவழ கழகே
பங்க மற்றதென் றவர்குறு நகைகொளும் பரிசே. (௰௬)

## வாழ்த்து. (வேறு)

தருமமழை முகில்பொழிக தரணியெலாம் பயிர்விளைக சைவ மேற
பெருமணமங் கலமாதர் மைந்தர்குழா மக்களொடும் பெருகி வாழ்க
மருமலர்மார் பரசர்குடி மகிழ்வெய்தும் படிகாக்க மாருச் செல்வத்
திருமருவு தென்காசிச் சிவபெருமான் பூசனைகள் சிறக்க மாதோ. (௰௭)

புராணவரலாறு முற்றிற்று.

ஆகப்பாட்டு ௪௰.

புலியூர் சிதம்பரேசுவரர்பா லன்புடையவரும்,
நூலாசிரியரைச்சேர்ந்த சந்நிதிமடத்து மாணுக்கரும்,
சிவபூசைச்செல்வரும், தமிழ்வித்துவானும், அரசாங்கக்கணக்கருமாகிய,
சைவத்திருவாளர்,

## ஆ. சங்கரலிங்கம்பிள்ளையவர்களியற்றிய

## சிறப்புப்பாயிரம்.

முன்புலியூ ராயதில்லை கண்டகுல சேகரனு முதவிந் தைக்கோன்
மன்புலியூ ரிருந்துகொணர் சந்திரசே கரகுரவன் வழிக்க ணன்காப்
பன்புலியூர்க் குருமரபிற் கனகசபா பதிக்குரவன் பயிற வச்சேய்
தென்புலியூர் கண்டவழ கியதிருச்சிற் றம்பலதே சிகனு னன்னே. (௧)

ஐந்தாய தலைமுறைச்சே யாமவன்பின் முப்பத்தே ழாந்த லைப்பால்
வந்தாய கவிஞனழ கியதிருச்சிற் றம்பலவன் மாட்டன் பார்ந்தோர்
முந்தாய தென்காசிப் புராணத்தை வடசொனின்று மொழிபெ யர்த்துத்
தந்தாயே னன்றெனவேண் மார்கேட்பப் பாடியிது தந்த தாமால். (௨)

ஆற்றலழ கியதிருச்சிற் றம்பலராங் குமாரகவி ராய வாசான்
நூற்றதென்கா சிக்கதையாண் டாயிரத்து முப்பானி ரேனுன்மை வேண்மார்
பாற்றிலகன்சொக்கலிங்கமான்முதலோர்வேண்டுவண்ணம்பலருங்கேட்பா
னேற்றிறைபா லுலகம்மை திருமுனர்வைத் தன்பொடரங் கேற்றினனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஆகப்பாட்டு சங.





# முதலாவது நாட்டுச்சிறப்பு.

உலகம் போற்றுசெங் கோல்வள மோங்கமிக் குயர்வா
னிலகங் கைபடி மழைநல னீடவல் விகலார்
கலகந் தீர்தா யர்வரு முரிமையிற் கனியத்
திலக ராமகி லேசர்பூ சனைதினஞ் சிறக்க. (க)

கண்டு பாகுதேன் போன்றமுத் தமிழ்க்கலை மகடன்
மண்டு பானிற மேனியி னெழீஇக்கடல் வாரி
யுண்டு பேர்ந்துமை யருட்டிரு மேனியி னுருவங்
கொண்டு தண்ணென மின்னிவந் ததுகருங் கொண்டல். (உ)

விண்ணெ லாங்கரு மயிர்ப்படாம் விரித்தென விம்மித்
தண்ணெ லாமொரு புடையினிற் றடுத்தெனத் தகைந்து
பண்ணெ லாமயங் குறக்குரல் காட்டிமேற் பரந்து
மண்ணெ லாம்புகழ்ந் திடமலர்ந் தெழுந்தது கொண்டல். (ங)

புரக்கும் பைஞ்சிலை பிடித்தப்பு கோலியே புழுக்கம்
நிரக்குங் கோடையைத் தொலைத்திடப் புரவலர் நெறியே
சுரக்கு மம்பெலா முதற்றிணைக் குறிஞ்சியிற் சொரிந்து
பரக்குந் தண்மையாற் படிக்குநன் கருள்வது கொண்டல். (ச)

நிலஞ்செ ழித்திடப் பெய்புநன் மழைவள னீடி
நலஞ்செ ழித்திட மலையெலா மருவிக ளணிகூர்ந்
திலஞ்செ ழித்திடப் பெருகியா றெலாமிவர்ந் தறவோர்
குலஞ்செ ழித்திடப் பொருநைசித் திரைவெள்ளங் குலவும். (ரு)

---

ச. அம்புகோலி—பாணத்தை அள்ளி, நீரைமுகந்து. அம்பெலாம்—நீரெலாம். ரு, இலஞ்செழித்திட—இல்வாழ்கை சிறப்புற. 'இல்லம், என்பது இடைகுறைந்து நின்றது.

ஆரமும் புழுகு முத்து மாடகத் துகளு மஞ்ச
னீரமு மலைக்கை வீசி யீட்டுபா கிலையை நீட்டு
நாரமுந் தகரச் சாந்துங் கோட்டத்தி னறிய சேறும்
வாரமு மலருந் தாங்கு மங்கைசித் திரைப்பூங் கங்கை. (௬)

வண்டகப் பதுமக் கண்ணும் பௌவல்வெண் ணகையும் பாசி
கொண்டகத் திகையு ரோமக் கூந்தலும் வளைக் காது
முண்டக முலையும் வாழைத் துடையுமு சலரின் றூளுங்
கண்டக நெய்தல் வேலைக் கணவனைக் கூடிற் றன்றே. (௭)

மயந்தரு வாழை தேங்காய் மாம்பழத் தேற லானும்
நயந்தரு பனிநீ ராட்டு நறும்பலாப் பழச்சாற் றூனுங்
குயந்தரு மணச்சாந் தானுங் கோதையின் பூந்தே னானும்
வியந்தரு கடற்றுண் டாய்த்தே வீரையென் றுருபே ரம்ம. (௮)

வேறு.

பெருகுஞ் சித்திர கன்னிநற் றிணைகளிற் பிறங்கு
முருகு வீசிய பொருளெலாம் கொடுசெலன் முதுகற்
றருகு ணத்தபெற் றவனவன் மகட்கொளுஞ் சலதி
மருகு வப்புற வழங்கிய மகட்பொருண் மான. (௯)

பொலங்க லந்தரித் திருங்குழற் பாசிமேற் போர்த்தங்
கிலங்க லந்தளி ராசிடை யீகமோ டெய்திக்
கலங்க லந்தட வுவரிம ணாளற்குக் காத
லலங்க லந்தகங் கையவெனப் போந்தபொன் னதியே. (௰)

பருப்ப தத்தெறி யருவித்தென் டிரைகொழி பாறைக்
குருப்ப ளிக்கொளிச் சிவவிக்க மொத்தசதவ் வருமேற்
றருப்பந் தர்க்குநேர் நிழல்செய்து தாங்குத ரூனை
குருப்ப ரற்பதிட யத்துள கோயிலை யொக்கும். (௰௧)

---

௬. நாரமும்—வெள்ளத்தையும். வாரமும்—அன்புக் கரையையும், அணையையும். ௭. பாசிகொண்டகத்திகை--பாசிபோன்றமாலையையுடைய. ௮. வீரை—மணமுடையது. (விரை—வாசனை. வீரையெனமுதனீண்டது) ௯. முதுகல்—பொதியமலை. மகட்பொருள்—சீதனம். ௰. பொலங்கலம்—பொன்மணிப்பூண் இலங்கலந்தளிராசிடை—பிரகாசித்தலையுடைய அழகியதளிராகியசீலை. ஈகம்—சந்தனம். கலங்கலந்தடவுவரி—கப்பல் கப்பலோடு உராய்ச்செல்லுங்கடல்.

ஒளிருஞ் சிற்சில குவட்டிடை நாளுநீ ரொழுகன்
மிளிரு வான்சிவக் குறிமைநீ ராட்டலும் மேற்பூத்
தளிரு திர்ந்திட லருச்சனை புரிதலுந் தழங்கல்
குளிரு மாறுளம் பழிச்சலும் போலவே குலவும். (௧௨)

நலப்பு கன்றிடும் பொற்பொறை முக்கிரி நலாண்மார்
தலம்பு கழ்ந்திடு மிருவாறுந் தருநதிச் சுதைகள்
குலம்பு ரிந்தமுற் றவத்தினு கியதிருக் கொளுப்பா
ரலப்பு காதுபேண் செவிலியை யொத்தன வாமால். (௧௩)

சலச மேந்தலாற் றிசைமுகம் படைத்தலாற் றுங்கு
கலசம் பாணியேய் தலானற்றண் டுறைபெறு கையிற்
னிலச மங்கொளப் புள்ளுமே லூர்கலா னெருங்கப்
பலச மாக்கிடுஞ் சித்திரை பங்கயன் போலும். (௧௪)

பரவப் பாயிசைப் பண்ணையே வழங்கலாற் பதுமக்
கரவ லாழிகொண் டுவந்ததாற் சங்கணி கையினு
லரவந் தாங்கலான் மலருந்தி பதலைதோன் றழகால்
விரவ நீண்மரு துதைத்தலான் வெள்ளமால் போலும். (௧௫)

இமைய வல்லியி னுடன்கலந் திவர்தலா லிரக்க
மமைய வாடலா லம்பல முகத்ததாற் பாசங்
குமைய வேசுற்றிக் கோடலாற் குறையிலாச் சைவ
சமைய வீசனை நிகர்த்ததே சித்திரத் தடநீர். (௧௬)

---

௧௨. நதிச்சுதைகள்-ஆறுகளாகியமக்கள். இவைகுற்றாலத்துஞ் செங்கோட்டைக்கண்ணுமிருந்து வருவன. அலம்-அலமால். ௧௪. சலசம்—தாமரை. பாணி-நீர், கை. தண்டுறைபெறுகை-தண்ணியஇறங்குதுறைபெற்றிருக்கை பிரமதண்டம் விளக்கப் பெற்றகை. புள்ளு—அன்னம், பறவை. பலசம்—வயல். ௧௫. பாயிசைப் பண்ணை—நீர்பாய்தற்கேயைந்த வயல், வேய்ங்குழற்கண் இயைந்தெழும பண்ணினை. ஆழி—சுழி வட்டம், சக்கரம். அரவம்—ஒலி, ஆதிசேடன். மதலை—பிள்ளை, தோணி. மருது—மருதமரம், ஓரசுரன். ௧௬. இமையவல்லி—மயில்போலும் சாயலையுடையஉமையம்மையாகிய கொடி, சிறியபடர்கொடி. இரக்கமமையவாடல்—உயிர்க்கருளேயத்தால் ஐந்தொழிற் கூத்துச்செய்தல், இறையருள் உண்டாம்படி நீராடல். அம்பலமுகத்தது—(கூத்து) மன்றின் கண்ணது, வெள்ளம் கலப்பைத்தொழில் நடைபெறும் வயலின்கண்ணது. பாசங்குமையவே சுற்றிக்கோடல்—மலம் கெடும்படி அன்பர் சூழ்ந்து பற்றல், வேர்க்கொள்ளாத நீர்ப்பாசி குமையச்சூழ்ந்து பற்றிக்கிடத்தல்.

தேக்கு நின்றெழீஇத் தேனரு விப்பெயர் பொங்கு
மாக்க டற்பெயர் கொடுகுறும பலாதிபூல் வழியாய்
மேக்கி ருந்துதென் காசிவாழ் சண்பக விமல
ராக்க மார்திரு முன்வழிக் கொளுஞ்சித்தி ராநதி (௰௭)

நலங்கி ளத்திய வேதவா கமவழி நன்றுக்
துலங்கி லார்வினை யுளமெனத் துளங்கிய பெருநீர்
கலங்கி லாதசை வோத்தம ரறிவுயா கருத்தி
விலங்கி யோங்குசித் திராநதி மிகத்தெளிந் தெழுந்த (௰௮)

கரங்க ளாயிரங் கொண்டுவா ணசுரன் கரகத்
தரங்க மீசனுக் காட்டவி னிருகரைக் காணு
வரங்க ளீந்திட வாசநீ ராலய வலஞ்சூழ்ந்
திரங்க லாயின வனைகள்கான் மதகுக ளெங்கும். (௰௯)

இழிந்த வெள்ளங்கண் டிடையிடை மள்ளர்பாம் புருட்டி
வழிந்த வோடையிற் கொண்டுபோய் மடைதொறும் பாய்ச்சிக்
குழிந்த பண்ணையி னிரப்பிநன் குறக்குளிர் வித்து
மொழிந்த நன்னிலப் பயிர்விளை வேற்றிட முயல்வார். (௨௰)

பகடு பற்பல நிறத்தவாப் பூட்டியே பழனத்
தகடு கீண்டிய மள்ளர்க ளாழமா வுழுது
தகடு போன்றுமெட் டாம்பிறை போன்றுமச் சாவின்
முகடு காட்டுமி ரேகைவைக் குநர்முறை யொருபால். (௨௧)

மேழிச் செல்வங்கோ ழைபடா தெனுமொழி விழைபு
மாழி சூழ்பொழி லறிஞரி னிருகதிக் கரணூண்
வாழி யிந்திர வருணநல் கெனவரங் கிடந்தே
யூழி யின்புறப் பணைதொறு முழுகுந ரொருபால். (௨௨)

நிரப்புச் செய்குநர் காவினீ ரியாக்குந ரொருபால்
வரப்புச் செய்குநர் வாரிவித் தெறிகுந ரொருபால்
பரப்புச் செய்குநர் மரமடித் தூனறுந ரொருபா
லுரப்புற் றேறுநர் கட்குடித் தாடுந ரொருபால். (௨௩)

---

௰௭. தேக்கு—தெக்கு. எதுகைநோக்கி நீட்டல் விகாரம் பெற்றது. ௰௮. துளங்கிய—கலங்கிய. ௰௯. கரகத்தரங்கம்—கமண்டலநீர். இதில், நீர்த்திரைப்பெயராகிய தரங்கம் நீருக்கு ஆகுபெயராயிற்று. ௨௰. பாம்புருட்டி—வரம்பு (கரை) எடுத்து. ௨௧. முகடு—உச்சி. ௨௨. பொழில்—பூமி.

இடுகை யேற்குமிந் நிலமென னுனிலத் தினைக்க
மொடுகை வந்தெனப் பசுமையாய் விளைபயி ருழையி
னடுகை தேறின காப்பரண் மள்ளர்க ணயப்பாய்
விடுகை காட்டலின் வளர்ந்தன விளைவுறு செந்நெல். (௨௪)

அலைக ளைக்கடைந் தாலென மள்ளிய ரடுத்த
களைக ளைப்புலந் தோறுநின் றெடுத்திடக் கருத்தாய்க்
கிளைக ளைக்கொடு தாநிரை நிரைநின்று கிளறி
முளைக ளைப்பல மலரொடும் பறிக்குநர் முயன்றே. (௨௫)

சுறவு பூத்தசெந் தாமரை முகமெனச் சொல்லார்
நறவு பூத்தசெவ் வல்லிவாய்க் கிணையென நயவார்
மறவு வேந்தரின் முறைகொடு செல்லுமள் ளியராவ்
வுறவு காண்பரோ காணினென் னுமவ ருளுற்றே. (௨௬)

கயலை மேற்கொளும் கமலமங் ககழ்கயற் கண்ணு
ரியலை யென்னென வுருநிழன் மரையினீ ரிருக்குஞ்
செயலை வீழ்ந்துபின் னிமிர்ந்திடக் கண்டிலர் திகைத்தம்
மயலை யாற்றுவர் முறுவலாய்ச் செவ்விதழ் வாயார். (௨௭)

வேறி யற்கையின் செயற்கையின் மள்ளர்கள் விருப்பா
லாறி யற்புதக் கழனிகட் காவன வமைக்கும்
பேறி யற்றிய பதப்படு பயிர்வளம் பெருகித்
தேறி மிக்குயர் வான்றலை நிமிர்ந்தது சிறந்தே. (௨௮)

கறுவ மேறினோர் நிமிர்வென க்கதித்துலாங் கிளியி
னுறுவ னத்தபாற் கதிர்திரண் டுயர்ந்துதாக் குற்று
மறுவ றுங்குலை சைவமா தவர்மகிழ் மனம்போன்
முறுவ லார்ந்துபாற் கோவின கோத்தமுத் தெனவே. (௨௯)

எதிர்த்த வான்பொறி வாணமே மலரும் பேபோல்
விதிர்த்த நீள்கதிர் விதவித மவிர்தரு செந்நெல்
முதிர்த்த தன்குலை விளைந்தது முதல்வனோர் தொண்டர்
கதிர்த்த செங்கைதஞ் சென்னிமேற் குவிப்பதிற் காட்டும். (௩௰)

---

௨௫. அலைகளை — தயிர்களை. முளைகளை — முளைத்தகளையை. ௨௬. சுறவு — சுறா. இம்மகரமீன் பெயரை இனம்பற்றிக் கயலுக்கும் கொண்டால் சுறவுபூத்த முகம் எனப்பொருளாம் போலும். சுறா தாமரையின் மேற்கிடப்பதாயின் மலர்போலுமுகத்திற்கயல் போலுங் கண்ணுள்ளமை காண்க. மறவு — வலிமை. இதில்வந்த உகரம் சாரியை. ௨௯. தாக்குற்று — கனங்கொண்டு.

குலம ணித்திரட் கோவையைக் குன்றவில் லியின்கட்
கலம ணித்தொடை யினைநவக் கோளினைக் கடுப்ப
பலம ணிந்திர திசைமுதற் றிருவளம் பலிப்ப
நலம ணித்ததா வோங்கின நறியபூஞ் சாலி. (௩௧)

ஆலைவ ளைந்தடுக் கடுக்கதாய்க் கோலமும் பலவாய்
நிலைவ ளைந்தநீள் வாழையின் கடுங்குலை நிகராய்த்
தலைவ ளைந்தவிந் திரவிலாய்த் தயங்கிகலார் மள்ள
ருலைவ ளைந்திலார் முத்துகட் காததுகந் திடுவார். (௩௨)

வளைத்த வல்லிரும் பகங்கையிற் றுங்கியே மள்ளர்
கிளைத்த நெல்லறுத் தெடுத்திடக் குணத்தொடு கெழுமி
யுளைத்த சும்மைகொண் டுய்த்தனர் மலையினந் தடைத்துத்
தளைத்த வாயுசேய் வெற்பெடுத் திட்டதிற் றயங்கும். (௩௩)

அடுக்குச் சும்மைகட் பொற்றைபோற் குவித்துட னவற்றை
விடுக்கு மாறுகை வினைஞர்நீள் கயிற்றினை விரைவிற்
றடுக்கு ருதெடுத் திடுவது வாசவன் சயில
முடுக்கு வன்சிற கரிந்துருட் டியதையே யொக்கும். (௩௪)

கருங்க டற்பொருங் கொண்டலை நிகர்த்தகார்ப் பகடு
நெருங்கு தும்புறப் பிணைத்தவை நிரைநிரை பிணைத்த
பிருங்க மாலைபோத் திடுங்கதி ரிடைவிடாப் பெய்து
மருங்கு சுற்றுதன் மதிமிசை முயற்கறை மானும். (௩௫)

பிணையல் வட்டமேற் பிடுங்கியிட் டணியணிப் பிறிவா
யணைய வேற்றியென் டிசைமலை யனையபோ ரடுக்கி
யிணைய பொன்மலை வெள்ளிவெற் பெனக்குவித் தெழின்மெய்த்
துணைய நெற்பொலி பற்பல கட்டுவர் தொடர்பால். (௩௬)

---

௩௧. கட்கலமணித்தொடை—கண்மணிப்பூணாகிய மாலை. இதிலெடுத்துக்காட்டிய குலமணிகளும், கண்மணிகளும், நவக்கோள்களும பலநிறத்தனவாகலின் பலநிறங்களையுடைய நெல்லுக்குக்காட்டாதலறிக. ௩௨. உலைவளைந்திலார்—மனக்கலக்கம பொருந்தமாட்டார்கள். (உலைவு—மனக்கலக்கம். அளைதல்—கலத்தல்.) ௩௩. வளைத்தவல்லிரும்பு—கூனலாய் வலிய இரும்பினாலாக்கப்பட்ட அரிவாள். குணம்—கயிறு. வாயுசேய்—அநுமான். ௩௫. பிருங்கமாலை—வண்டுகளின் அணி. ௩௬. போரடுக்கி—சூடுவைத்து. இதனிடை வட்டமுதறலும், வீசிப்பதர் களைதலுந்தீர்ந்தன. மெய்த்துணையநெல்—உடம்புக்குறுதி தருவதாகிய நெல். இதில் எழின்மெய் என்றது பாடுபட்டுண்ண வலிபெற்றுள்ள நல்லுடம்பைக்குறித்ததாம்.

மணியெ லாமரக் கால்கொடு கணிக்குமுன் மள்ளர்
பணியெ லாம்புரி பதினெண்மர்க் கடைவினிற் கொத்துந்
துணியெ லாமவிரித் தடைகளப் பிச்சையுஞ் சொரிந்திட்
டணியெ லாம்பெற வாசிறைக் காறிலோன் றளந்தே. (௩௭)

உள்ள நெல்லளந் தகன்றகோ ணியின்வரிந் துருளை
கொள்ள வேற்றியிற் குய்த்துவித் தாக்கொளல் கொண்டு
வள்ளன் மார்முறை தென்புலத் தார்தெய்வம் வரத்து
தள்ள ருங்கிளை தானுணை வேள்வியாற் றழைவார். (௩௮)

ஆட கந்தினை சாமைகொள் ளெள்பய றருநென்
மாட கங்கட லைகளென் றொன்பது வகையாங்
காட கத்தவுங் கடுகுமொச் சைவயற் பயறு
கோட கும்மிவை முதற்சிறு விளைவுங்கைக் கொள்வார். (௩௯)

முருகு வீசுமின் னறுசுவைக் கறிபல முறையே
பெருகு பாகமாச் சமைத்துவா ழையின்றழைப் பெய்து
தருகு ணத்தறச் சாலையின் மனைதொறுந் தாய்மா
ருருகு மன்புட னின்புற வூட்டுவர் தவர்க்கே. (௪௰)

வேறு.

குமரியந் துறைசூழ் நாட்டிற் கோகன கத்தோ னும்ப
ரமரிய மடமே ராஞ்சோ றருளற மடநீர்ப் பந்தர்
விமரிய நகர்க்கண் கோயில் விளங்கொளிப் பதக்க மென்னத்
தமரியம் பிடமாண் கோலந் தாங்கிவீற் றிருக்கு மாதோ. (௪௧)

வேறு.

விரியு மைந்திலொன் றொழிந்தநாற் குலத்தினை விளைவே
புரியு யிர்க்குறு திப்பொரு டருமென்ப புலவர்
தெரியு நாற்றிசை விரவிய பொருட்கொடு திகழுங்
கிரியு டன்முல்லை மருதநெய் தலுங்கிளத் திடுவாம். (௪௨)

---

௩௮. உருளை—வண்டி. வரத்து—விருந்து. வரவெதிர்பார்ப்பதாக லின் ஈண்டுப் புதியோர் எனப்பொருள் தரும் விருந்து வரத்தெனப்பட்டது. ௩௯. ஆடகம்—துவரை. அருநெல்—யவம் எனப்படும் ஒருவகைநெல். அதுகிடையாவிடின் யவமெனப் பெயர் கொண்டவாற் கோதுமையைக் கூட்டி நவதானியஞ்சேர்ப்பதும் வழக்கு. மாடகம்—உழுந்து. மாடம் (மாஷம்) என்பதே உழுந்துக்குப்பெயர். ஈண்டுக் ககரம் தீர்க்கமாம்போலும். கோடகும்—கொள்ளத்தகும். ௪௧. விமரியநகர்—நாற்கேள்வியுள்ள பதி. (விமரிசம்—கேள்வி.)

முல்லை யம்பொது வியர்மகார் மலைப்புலின் முன்னி
நெல்லை யங்கரிங் திறக்கின ரெடுத்தனர் நீள்வார்
வில்லை யம்பிணை வேடுவச் சிறார்கொடு வருகை
கொல்லை யம்புற முயலினைத் தொடர்வருங் குறித்தே. (சங)

பொருப்ப மைந்திடு வேடுவச் சிறுமியர் புதுநீர்த்
தருப்ப நீண்மலர் கொய்துதம் முச்சிமேற் றரிப்பார்
கருப்ப வெங்கழை முத்தினைக் கண்டெடுத் தன்னே
ரிருப்ப வாய்ச்சியர் வள்ளியின் கிளங்கெடுத் திடுவார். (சச)

முறையு றுத்திய குறிஞ்சியின் கொப்பரின் மூசி
யறையு மென்குருந் தணிமலர் சொரிவன வழகாய்
நிறையுங் தேக்கதி னெண்பொடி கொன்றைமே னிரப்ப
வுறையு மற்றது பொன்னுருட் டாமல ருகுக்கும். (சரு)

பூங்கு ழற்சுழ விளம்பிடி யுழத்தியர் போந்தே
தீங்கு ழற்புரி யிசைவினுய் மகிழ்ந்ததிற் றிளைப்பார்
பாங்கு ழக்கிய செவ்வினப் பசுக்களின் பாங்கர்த்
தூங்கு ழத்தியர் மென்முலை கன்றுகள் சுவைக்கும். (சசு)

கனைப்பு றப்புலிப் பாலைமான் கன்றுணுங் கடமை
நினைப்பு றத்தருந் தேனுவின் கன்றுண நிறைபால்
சுனைப்பு றத்ததா ராக்களின் றேழமை யெடுத்துத்
தினைப்பு னக்கிளி புகன்றுதென் காஞ்சிவீற் றிருக்கும். (சஎ)

மள்ள ராடிநீ ரருவியின் மணத்தசங் தணிவார்
கள்ள ரும்பலந் தருசில்லர்க் குதவுவார் கழைகள்
கொள்ள ருந்தினைக் களையைமட் டிற்குமாக் குடவர்
வள்ள யாற்றியெள் ளளந்துமீன் வாங்குவர் மகிழ்ந்தே. (சஅ)

குருமணிச்சுடர் வெயில்விடு முப்பவாய்க் குறவர்
தருமலைப்படு புதியதேன் சரிச்சரி யளப்பார்
திருமகட்பொரு முழத்தியர் நெற்றரத் திருந்தும்
பருமவல்குலம் பரத்தியர் முத்தளப் பாரே. (சகு)

சங. நீள்வார்—ஓடுவார். கொல்லை—முல்லைநிலம். சச. நீர்த்தருப்பம்—தண்ணிய பெருமையையுடைய. சரு. குறிஞ்சி—குறிஞ்சிமரம். கடமை—காட்டுப்பசு. தேனு—எருமை. காஞ்சி—காஞ்சிமரம். சஅ. அரும்புலம்—அரிதாகிய கிழங்குகளை. கொள்ளு—காணம். அளையை—தயிரை. வள்ளம்—வட்டிலில்.

விளரி யாழினச் செவ்வழி பூவையும் வினவுங்
களரி கூறிய வன்றிறெங் கரும்பனங் காவின்
வளரி ளஞ்சிறைப் பேட்டுடன் கூட்டுண்டு மகிழும்
முளரி விண்டிற வாவிமீன் குதிகொண்டு மோதும். (ரு௰)

தரித்த வாழையின் பழக்குலை யொருபுறஞ் சாயத்
தெரித்த வாவிபைங் குவளைக்கண் காட்டியுண் சித்த
முரித்த வாப்பனை முகமசைத் திடவளை முரன்று
வரித்த தேற்றமுத் தினஞ்சிரித் தனபொழில் வளமே (ருக)

இசையி லாசைதொண் மருமலர் பாடளிக் கெனத்தேன்
பசையி லாதருள் செய்யவண் டுண்டுண்டு பாடும்
விசையி லாகிரி யேறளிப் பாக்கொளா மேலோர்
வசையி லாச்சிவ கீதமே பாடுவார் வாழ்வார். (ருஉ)

வேறு.

கற்பகம் போலுந்தாரு காமதே னுவைப்போன் மேகம்
விற்பகர் பசுமைவிற்றுன் விளம்பலவ் விடியே போலும்
நற்பக விரவிமோவி நாகர்கோன் மூன்று லோகம்
பொற்பகங் கருதி யாளல் போற்றிரி கூடக் காப்பே. (ருங)

வேறு.

காய முந்திய கானயா றெறியலை முக்க
ணுயன் முன்னைநாட் பகீரதற் காக்கங்கை நல்கி
யாய முத்தெறி யந்நதி சித்திரை யாக
வேய சன்னுமா விநடிதென் காசியா யிலங்கும். (ருச)

இரவி யிந்துகண் ணிரண்டெனத் தெங்குக ளேந்தி
வரவி ளங்கியுள் வெளியெலாம் வெள்ளிதா மன்னி
பரவி யம்பர முட்டிமே னீரருள் பரிசா
விரவி யண்ணல்நே ரடிநிழ றந்தென்றும் விளங்கும். (ருரு)

---

ருக. உண்சித்தமுரித்தவாம்-கள்ளுண்டவர் சிந்தையை வேறுபடுப்பன வாகும். முரிப்பவென்பது முரித்தவென ஈண்டு எதுகைநோக்கிக் கால மயங்கி நின்றது. வரித்தல்—கட்டுதற்கு. இதில் நான்காம்வேற்றுமை தொக்கது. தாக்குற்ற குலைவிழுந்த வாழைகளை முட்டுக்கொடுத்துக் கட்டுதல் நாட்டு வழக்கு. ருஉ. பசையிலாது—தன்னிடத்துள்ள தேனில் தான் பற்றுவைக்காமல். ருச. கானயாறெறியலை—கானயாறுகளைத் தோண்டு கின்றமலை.

### வேறு.

வாவிமாண் குண்டஞ் சூழ மலர்ந்தசெந் தோன்றி தீநீ
ராவிமா கஞ்செ றாம மாமகங் குளங்கள் காட்டும்
கோவிமா னத்தி லிங்கக் கோலமாம் பலாக்கா யெல்லாந்
தூவிமா மலர்மிக் கோங்குந் தூயசண் பகங்கண் மாதோ. (ருசு)

### வேறு

குங்கு மச்செழுங் கொம்பரிற் றுகளளி கொடுப்பத்
தங்கு மட்கிடை முன்பொழி யிலவிதழ் தாங்க
வங்கு மத்தியிற் சுடரொழுந் தனையநீண் டரிதிற்
பொங்கு மன்னபுற் புதவழ கண்டமே போலும். (ருஎ)

அடரு கோட்டமி லவங்கங்குங் கிலியமோங் கார
வகிருங் தீத்திவர் புகைவளத் தினைப்புனம் வாரித்
துகிரும் வெஃகிடந் தூயவா யிரத்துணை வேலி
பகிரும் வேட்டுவர் சிறந்தசிற் றூர்பல வளத்த. (ருஅ)

யாவ ருக்குமட் டிடுசுல்லித் தூமமு மரிய
தேவ ருக்கருள் சருநைவேத் தியப்புகைப் புகையும்
காவ ருக்கமீ தகிலனுக் கப்புகை கமழ்ந்து
பாவ ருக்கநெய் வேள்வியின் புகையொடு பரவும். (ருகூ)

கருமு கிற்றொடுத் தெறிமழை யாலியின் கல்லும்
வெருமு ரட்கரி முத்துவேய் முத்தரி முத்துந்
திருமு கக்குறச் சிறுமியர் கவணிடைச் சேர்த்துப்
பொருமு கத்தெறிந் தோச்சுவர் கிளிதினைப் புனத்தே. (சு௦)

வசிய மோகனம் பேதனந் தம்பனம் மரண
மிசிய வேடணங் கருடணஞ் சாடன மெட்டும்
பொசிய நல்கிலை யொட்டுவோர் புற்றொலி சாற்றோ
டொசிய நீண்முளை விரைகளாற் செயுமுயர் பொதியம். (சுக)

---

ருசு. செந்தோன்றி—செங்கழுநீர், சிவந்தகாந்தள். காய்—பழம். ருஎ. புற்புதம்—நீர்க்குமிழி. ருகூ. சுல்லி—அடுப்பு. சரு—தேவருணவு. (சருக்கரைப்பொங்கல்) அனுக்கம்—சந்தனம். அகிலனுக்குப்புகையான தூமமும் புகையுங்கமழ்ந்து வேள்விப்புகையொடு பரவும் என இக்கவிப் பொருள் காண்க. சுக. வசியமுதலிய எண்கருமம்—இணக்கம், மயக்கம், பிரிப்பு, தடை, அழித்தல், மாறுபாடு, அழைத்தல், ஏவல் என்னும் எட்டுமாம்.

பூவ தேயுநா ளனைத்துமப் பூம்பொழில் சுற்றி
யாவ தேழ்கிரி யொன்பது கோள்களு மமைந்தின்
பீவ தேய்ந்துநாற் பத்துமுக் கோணமா ரிலக்காத்
தேவ தேவுரு வாந்திரி கூடமே சிறந்த. (கூஉ)

கூடன் மூன்றகில் சந்தனங் கோட்டமு மூன்று
லாட மூன்ருரு வியதுதேன் மலர்புன லாமால்
வேட மூன்றுவெண் ணிறுகண் மணிசடை மேலா
மீட மூன்றுபன் னவர்பணி யிலிங்கமூன் றினிதாம். (கூங)

மாண்செங் கோட்டையா முயகங் கைபுந்தவர் வணங்கிக்
காண்செ மூந்திரி கூடவா ஞறுமே கலந்தங்
கேண்செய் பாதல நதியுமுக் கூடலா வெழுந்தே
ஆண்செய் நாடிய வோங்குதென் காசிநின் றெழுகும்: (கூச)

ஒருமுக் கூட்லா வுருத்திரிந் தாயசித் திரைப்பேர்
வருமு தன்மைகொள் வளத்ததென் காசிமா நதிதான்
கருமு கிற்படி கமுகுமா தெங்கெலாங் காத்தே
திருமு கப்புலம் பேணிமாண் பொருநையிற் சேரும். (கூரு)

பரம முத்தியைத் தருசிவன் வாழுமிப் படிக்கோர்
சிரம தாயதென் காசிநன் நகர்நதி சீவர்
புரம தற்குண வமிழ்தமா யிறையருள் பொருந்து
வரம ளிப்பதாய் மலங்கழீஇ யின்பருள் வளத்த. (கூகூ)

வேறு.

ஆவ லாயிருப் பிடமது கயிலையும் பொதியையு மழகென்றே
மூவ ரான்மொழி பதிகமு முகிண்முலை முதலொடு முனிகாணத்
தேவ தேவன்ற னெல்லையுங் கூடலுந் திருப்புடை மருதூரும்
பாவ நாசந்தென் காசிமுக் கூடமும் படைத்தது தமிழ்ப்பாண்டி. (கூஎ)

வேறு.

கொத்த லங்களு மழகுபாண் டியும்பொழி குபினு
நத்த லப்புசித் திரைபொரு னையும்பெறு நலமு
மெத்த லங்களிற் றேடினுங் கிடைக்கும்பா விதுபோன்
முத்த லம்புகழ் சிறப்பதிந் நாடென மொழிந்தான். (கூஅ)

---

கூஉ. அமைந்து—அடங்கி. (கீழ்ப்பட்டு.) கூரு. உருத்திரிதல்—சித்திரித்தல். இப்பெயரடியாக வந்ததே சித்திராநதி யென்ப.

இன்ன வாறுரை மிசத்துறை மாதவ ரியாரு
மன்ன வாவொடு கேட்டனர் மற்றதன் சார
முன்ன வார்ந்தெழு மன்பினி லினித்தன ருறவோன்
சொன்ன வாய்மையி தினிநகர்ச் சிறப்பினைச் சொல்வாம். (௯௧)

## நாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆகப்பாட்டு, ௱௰௨.



# இரண்டாவது நகரச்சிறப்பு.

திங்க ளன்னவா ளுதற்கன்னி பாண்டிமா தேவிக்
கங்க மாகிய கூந்தல்சோ லையம்பதி யலர்ப்பூங்
கொங்க விழ்ந்திடு மதுரைபொன் முடிகுளிர் முகமே
மங்க லத்ததென் காசியந் நகர்வளன் வகுப்பாம். (௧)

இசைய வேய்வன நெல்லையூ ரேயிரு தோளாம்
வசைய கன்றிடு வளசையே யிழையணி வளையாம்
நசைய டுத்திடு களங்களங் காட்டுமா நகராம்
விசைய நன்மொழி யோங்குபா கூரதா விளங்கும். (௨)

இலவை யூரித ழாகுமா னூரிரு கண்ணும்
பலவை யேயொளிர் மணிமுத்தூர் கொங்கையிற் படிந்த
கலவை மாமணப் படைநகர் நுதற்குறி காணும்
நிலவை யூர்தனுக் கோடியே புருவமா நிலவும். (௩)

இருந்து ணைத்தனந் திருமலை பொதியவெற் பெனலாந்
திருந்து நாபிதென் னிலஞ்சிசீ ரடிபற்ப னேரி
தருந்து லக்கமா ரோடகம் புறவடி சாகை
பொருந்து மென்விர லகடுமுத் தாலமா புரமே. (௪)

இன்ன வாறிசை யோங்குதென் காசிமா தினுக்கு
மன்ன வாழ்வுய ருருவக வடிவமூர் மகிழச்
சொன்ன வாய்மணம் பெறுதலி னினியதன் றொன்மைப்
பொன்ன வாய்ப்பையும் பொருள்வளச்சிறப்பையும் புகல்வாம். (௫)

புறங்கு லாவுபொன் னெடுமதிற் கொடிகள்போர்ப் பருண
னிறங்கு லாவுதேர்க் காலத்தி யெடுத்தலு நீடவ்
வறங்கு லாவுமெற் குருப்பற வணங்கனூர் விசிறி
கறங்கு லாவுற வீசிவேர் வாற்றலுங் கடுக்கும். (௬)

உலக மங்கையின் றிருமுடி பாண்டியா மொளிகான்
றிலக ருங்குல மணியெலாம் புறநக ரிடையிற்
பலக வின்றரு மிடுபொனே சிறியபட் டிகண்மேற்
றிலக நாயக மணியதா மோங்குதென் காசி. (௭)

பரவு வாவியி லியானைபோய்ப் படிகையிற் பதும
வுரவுத் தாட்கொடி தனையொரு துதிக்கையென் றுயர்த்தக்
கரவு காட்டுசெந் தாமரை முகைவிரி கனலி
விரவு தீக்கழ லெனவெரூஉக் கொண்டன மயங்கும். (௮)

இருளைத் தின்றொளி யெண்டிசை பரப்பிவின் னினர்க்கு
மருளைத் தந்தெழு மாடம்வெள் ளியங்கிரி மான
வருளை யொன்றுமீ தரிவாந்துபோ தளப்பவ னூர்க்குத்
தெருளை யாக்கிமேற் றிகழ்துயர்ந் ததுசெழு மாடம். (௯)

வடிகற் சுண்ணநீற் றியசுதை பூசுமா ளிகையிற்
றொடிக லிந்தகை மினார்கழங் காடுகாற் சோர்ந்து
கடிக மழ்குழல் சரிந்திடக் காண்மணிச் சாலீள்
படிகப் பதநிரன் முத்தரீர் காட்டலிற் பரிக்கும். (௰)

மாக தத்தொளி யாடநீ டெழில்வெளி வானின்
கிரக நாயபாற் கானதேர்க் கீழ்ப்படா திர்க்குங்
குரக தங்களக் கதிர்க்கொழுந் திளம்புலாக் குறிக்கொண்
டுரக தத்தொடு வளைத்துநாச் சுவைத்திவ ருவவே. (௰௧)

வெள்ள நீர்ப்பணை விரிந்தெழு வாவிபென் காவி
பள்ள நன்மலர் பானுநே ரொளிபரந் தேற
வுள்ள வானைநற் பொன்னுரு வாக்கின வெளியாங்
கொள்ள நோற்றில மெனமுரன் றனகருங் கொண்மூ. (௰௨)

நலம்ப கர்ந்துவின் மினார்தின நறுஞ்சுனை யாடிப்
பலம்ப கப்புறத் தேன்பொழி பலாநிழல் வாழ்வை
வலம்ப கர்ந்துதாழ்ந் தவப்புடன் வந்துதென் காசி
யிலம்ப கங்கொளெம் மிறையையேத் தினரரு ளிசைவார். (௰௩)

பன்ன லாகிய பாசடை மேலன்னம் பயிறல்
பொன்ன னார்தவ னெடுமஞ்சம் பயிறலே போலும்
மின்ன னார்நுதல் வைத்தசிந் தூரத்தையே வெய்யோ
னென்ன மாமலர் விரிந்தமை தேவர்கண் ணேயும். (௰௪)

வெண்ணி லாவெறிந் தோங்குமா ளிகைவெளி யிருளை
மண்ணி லாமலே துரத்திவாள் வீசிவா னுலவிப்
பண்ணி லாரிசை பயின்றுய ரரம்பையர் பதியுங்
கண்ணி லாவலாய்க் காண்டிரு நகரையுங் காட்டும். (௰௫)

நெல்லை வாலிய கழைபதாய் நிறைகழை கமுகாய்
வல்லை நீள்கமு கினையுயர் தெங்கதாய் வளர்த்தே
சொல்லைச் சூழ்கொடி நடுவளர் கமுகினைச் சுற்றி
யொல்லை வல்லியே றுதல்கொடி விழாச்செயு முரச்செய். (௰௬)

முருந்து வாணகை யுருத்திரி பாகனார் மூதூர்
பொருந்து பாரதி யாள்மண வாளனார் புரசீ
ரருந்து சங்கமம் பொதிபமா மலர்மகண் மணாளன்
றிருந்து மூர்குறுங் குடிசிவ னுலகுதென் காசி. (௰௭)

சிரும்ப னையவோர் சூரனைச் சிறியே செயித்து
வருப்ப னும்பரைக் காத்துவெந் திவினை மாற்றித்
தரும்ப ரற்கவ ரைந்தருந் தந்துவாழ் வதுபோற்
சுரும்ப ரார்பழக் தேன்மலர் வழங்குவ சோலை. (௰௮)

முறுக்கு டைந்துபொற் சுருள்விரி சண்பக முகிழ்த்தே
யிறுக்குந் தேனெடுந் தாதொடு மரைக்கனாழ்த் திலர்தல்
சிறுக்கு மின்னிடைத் தேவியை மணந்தருட் சிவனை
பொறுக்கு மென்றுமா ருரைவார்த் தருள்வர்த போலும். (௰௯)

---

௰௩. தென்காசியிலம்பகங் கொளெம்மிறை—தென்காசியிலே எழுந் தருளிய எம்மிறைவன். (அம்பகம்—எழுச்சி.) ௰௬. சொல்லை—நெற் பயிரை.

கமல வாவியிற் செம்மலர் மலர்வமுக் கணன்பா
லமல வாழ்வரு னெனச்சைவ ரிரத்தனே ராம்பெட்
புமல ரிற்சிவ தீக்கைபெற் றுயர்கடன் புரிந்து
விமல மாக்குமே லவருடல் போன்றவெண் பதுமம். (உ0)

மருணை வாலய னரிமுனம் நின்றுமல் லாடத்
தருணை யாகிய நாயகி பங்கனுட் டயவா
யருணை யோதியின் சிறுசுடர் சிற்பா மாகுங்
கருணை நாயகன் கவினெனச் சிவந்தகல் லாரம். (உக)

நிதிய சங்கமு மலர்களு நிறைந்தநீர்ப் பொய்கை
மதிய முந்திலே பார்த்தகண் பறிக்குமோர் வயங்கும்
முதிய கார்படி யகழியின் முகிழ்த்தபொன் முளரிப்
பொதிய விழ்ந்தவாழ் கிடங்கிது புரிசைமேற் புகல்வாம். (உஉ)

ஆன மூன்றையுந் தந்துமே லாயினொ னருளொப்
பான மூலிகை சதுரபா கிரியுறை பாங்காய்க்
கான மூங்கிலின் றேளியர் மனமெனக் கருத
வான மூடுற வுயர்ந்ததென் காசிசூழ் மதில்கள். (உ௩)

குடக்கு வார்தரு கவுரியுங் கங்கையுங் கூடி
நடக்கு பாதல நதிகொண்முக் கூடலார் நலங்கூர்
வடக்கு வாவியா முகமென வதிகுளிர் மாலை
கிடக்கு நீண்மதிற் காடையாக் கிளத்தலாந் தகைத்தே. (உச)

குருப்ப ளிங்கொளி வீசியே குறைவிலாத் தவஞ்செய்
பருப்ப தங்களே கோபுர மாயின பரம
விருப்ப வானளாஞ் சிவகிரி யிதுவெனத் திகழும்
விருப்ப மாமறை யிருகதிர் தவழுமேற் சிகரம். (உரு)

---

உ0. பெட்புமலரில்—பெருமை தங்கிய மும்மலப்பசுக்களில். உக. ஓதியின்—மலையினிடத்துள்ள. கல்லாரம்—செங்குவளை. உ௩. ஆனமூன்றை—நிலவரண், நீரரண், மலையரண் என்று மூன்றரண்களை. செங்கதிர், வெண்கதிர், செந்தீயென்னு முச்சுடர்களை எனக்கூறுதலுமாம். அருளொப்பான மூலிகை—சாவாமூலிகை, மூவாமூலிகை, சாவாமூலிகைகளையுடைய. பாங்காய்—மாதிரியாய். உச கவுரி—வெண்ணிறமுள்ள குற்றாலநதி. கங்கை—செந்நிறமுள்ள செங்கோட்டை நதி. பாதல நதி—ஊற்றெழுகல். இம்மூன்றுங்கூடியது முக்கூடல். உரு. சிகரம்—கோபுரத்தின் முடி.

புரங்க டந்தபுட் கூக்குரல் பொற்பொடுஞ் சுருதிச்
சிரங்க டந்தவற் கோதுமைம் பாடலிற் சிறக்கும்
வரங்க டந்திட வேண்டுவோர் புகழென வளநீர்த்
தரங்கம் வீசுதென் காசிநேரச் சியினிசை தழைக்கும். (உசு)

பரிசை பொற்கம டங்கடாழ் கயத்தெதிர் பாங்கர்
திரிசை யார்ந்தவெண் சங்கின முத்தெறி திரைநீர்
வரிசை யாகமே றென்றிகிழ் வடக்குறுங் குடிஞைப்
புரிசை மாண்பிது பொன்னகர் வீதிமேற் புகல்வாம். (உஎ)

தோர ணங்களும் வாழையுந் துவசமுந் தூப
தார ணங்களுந் தீபமும் பாகசா தனன்செல்
வார ணங்களு மணவிழாத் தினமென வயங்கும்
வீர ணங்கமழ் நீரதென் காசிமன் வீதி. (உஅ)

முந்தி ரக்கமுற் றன்பருக் கருள்செயு முதல்வற்
கிந்தி ரன்மலர் மழைதின மிறைப்பதிற் பொழில்பூ
சந்தி ரக்கதிர் வீசநீர் தந்திவர் காந்த
வெந்தி ரக்கன்மே டையிற்சிந்தும் வளத்ததிவ் வீதி. (உகூ)

ஈச னைத்தினம் பூசனை புரிதவ ரிதைய
மாச னைத்தையுங் கழீஇயருள் வளம்பெறு வண்ணந்
தேச னைதரு சராசர நிழல்கவர் சிதக்கற்
பூச னைவிலார் வளமனை பொலிந்ததிவ் வீதி. (ந0)

சதத்த ளம்பொலி பராகமட் டுண்டுசஞ் சரிக
மிதத்த வின்னிசை பாடுவ வெண்டிசை யினுமும்
மதத்த டுக்கரி பருஉக்கைகொண் டெறியுமட் பூழி
கதத்த நாவிநா னம்மிவை தெருத்தொறுங் கமழும். (நக)

அந்த ரங்கமா ரரங்கமும் மாடமு மழகார்
மந்த ரத்திவர் மேடையு மடமடைப் பளியுஞ்
சுந்த ரப்பதச் சுவடொடு நங்கைமார் துணைமாண்
டந்த னம்புனை களபநா றிலக்கணந் தயங்கும். (நஉ)

---

உசு. ஐம்பாடலில்—தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணங்களில். உஎ. சையார்ந்த—ஆக்கம்பொருந்திய. குடிஞை—ஆறு. உஅ. வீரணம்—இலாமிச்சைவேர். ந0. தேசனை—ஒளிவடிவாகிய உமை. சிதக்கல்—வெள்ளியசுண்ணக்கல். நஉ. அந்தரங்கமார்—ஆலோசிக்கப்பொருந்தும்.






மூரசு மூன்றுமுக் காலமு முழங்கிடு[illegible]
பாசு பஞ்சவாத் தியங்களெக் காலமும் பயிலும்
சிரசு றும்படாந் திகழ்ந்துமுக் கடங்களைத் தினமு
மரசு வாபொழிந் தொழுகுவ தானநீ ராறு. (௩௩)

சூட கம்புனை மாதர்தங் கணவர்தோட் டோய்காற்
பாட கஞ்சிலம் போச்சிடு மொலிபரம் பாமல்
நாட கம்பயில் கிளியொடு நாகண வாயு
மாட கங்கரை குரலினுற் கவ்வையை மறைக்கும். (௩௪)

மதிமு கத்தியர் முகங்களு மலர்களுங் குழைய
விதிமு றைக்கணுங் குவளையும் விளங்குவ வரிகள்
பொதிமு லைகளுஞ் சேவகங் களும்புகுங் களபந்
துதிமுன் னங்கையுஞ் சுல்லியுந் தோய்வகூ டகமே. (௩௫)

தரும லர்களு முளரியுந் தருவன பராகம்
பரும ஞாமு மாலையு மணப்பன பரந்து
திரும னும்பலு வீணையுஞ் செறிவன தந்தி
குரும ணிக்கலுஞ் சுல்லியுங் குலவுவ வன்னம். (௩௬)

திரைம னைந்துப டுக்கையின் மகிழ்ந்துதே மொழிபன்
னுரைம றுத்தலிற் சினந்துசிந் தியமணி யோதைத்
தரைம றைத்தொளிர் நித்திலத் தாழ்வடந் தழைத்த
வரைம டுத்தெனக் கூட்டின மதிற்கடைக் குப்பை. (௩௭)

தேசி கன்றெய்வ யானைக்கு நாயகன் சிவந்த
கோசி கந்தரித் தவன்றரு குளிகையை வாங்கிக்
காசி கண்டவன் காண்சொயஞ் சோதிமுக் கணன்றென்
காசி கண்டிடத் தவஞ்செய்த கவினதித் தெருக்கள். (௩௮)

வேறு.

பெருந்துசங் குடங்கண் ணாடி பேரிசா மரமொண் டீபம்
பொருந்திணைக் கயலே தோட்டி புகழிவெண் டீங்க லத்த
திருந்துதென் காசி மான்றூன் றேரல்கு ணகைபொற் றாவி
யருந்துவண் முலேகும் பம்பொன் னலர்முகங் கொடுசி றந்தாள்.()

௩௫. களபம்—சாந்து, யானைக்கன்று. ௩௬. திருமனும்பல்—அழகிய இராசயானை. ௩௮. சிவந்தகோசிகம்—செம்பட்டேடை.

அருத்தியமுழவி ேனுைத யவிர்மணி முரசி ேனுைத
பொருத்திவெல் பேரி யோதை புரவிகள் கனைக்கு மோதை
பெருத்ததும் பிகளி ேனுைத பிறங்கருட் கொண்ட லோதை
திருத்தவை முழங்கு மோதை சிறந்தன முதுதென் காசி. (௪௰)

## கணிகையர் வீதி.

உவரியுப் பதுகாய்க் கெல்லா முறுசுவை தருதற் போலத்
துவரித ழமிழ்த வாயார் சுருள்பகிர்ந் தளவ ளாவி
யெவரினு ஞரின்மூத் தோரி னிருப்பினு மிரந்தாற் செம்பொன்
கவரிரும் போகம் விற்குங் கணிகையர் வீதி சொல்வாம். (௪௧)

விரும்பினுர் கருத்துக் கேற்ப மெய்யன்பு செலுத்து வார்போ
லரும்பினு ணேரீ இகல் லின்ப மருந்தவீழ்ந் தருத்து வார்போற்
கரும்பினுன் காம னூலுங் கண்டவர் போற்கண் டோர்கண்
டிரும்பினுன் மடமொன் பார்போற் சித்திரஞ் சுவரிற் செய்வார் ()

விலைமுதிர் பவளத் தூடே விரவுமுத் தாரந் தாங்கிச்
சிலைமுரி புருவம் வாங்கிச் செங்கணை யேவிக் காமன்
கலைமுழு வதுமெண் ணேற்றிக் கண்கவர் வனப்பு வாய்ந்த
முலைமுனை சிறிது காட்டி முயக்கிமுப் பொறியுங் கொள்வார். (௪௩)

பூரண மதிய வீசும் புதுநிலா வெறிமுற் றத்துத்
தோரணக் கருப்பம் பந்தர்த் தொடைபல தூக்கிப் பன்னீர்
வாரணத் தென்றல் வீச மலரம ளியைக்கொள் கட்டிற்
றூரணத் திருந்து பாடி யிசையினி தாத்தந் தேய்ப்பார். (௪௪)

ஐயல ரரும்பு வேடன் றுணையிற் செங்கோ லோச்ச
மையலர் விழியுஞ் சீத மதிமுக வொளியுங் கானம்
பெய்யல ரிதழி னிற் போமிழ் திறைத்துத் தேவ
ருதயலர் தமக்கு முண்ணுண் டமணந் தனியுண் பிப்பார். (௪௫)

குரவனூல் கேட்போர் பண்புங் குறிப்புமோர்ந் தியைபுக் கேற்பத்
தரவவை சார்பிற் கேட்ட தவச்சிறூர் சொலல்போற் கற்கு
மரவக லல்கு லார்பாட் டமைதியாக் கிளிகள் கேட்டுப்
பரவவாய் விட்ட ரற்றும் பண்விரு வுகர்க்கின் பாக்கும். (௪௬)

---

௪௰. திருத்தவை—உலகத்தைச் சீர்திருத்துங் கற்றறிவுடையர் கூட்டம்.

அத்திக்கு ணீளை வாரி யருமுகில் பொழிந்து மண்ணில்
வத்திக்கும் பயிருண் டாக்கு வனம்போது மினார்கண் மாயா
புத்திக்குண் மோக முண்டு பொதிவெறி தினருட் பெய்து
தித்திக்குங் காமப் பைங்கூழ் தெளிவுற வளர்ப்பர் மாதோ. (௪௭)

சுருப்பமர் கண்வாய் மூக்கு துணைச்செவி மெய்தொ ழிற்பட்
டிருப்பபோ னீங்கா தொன்று யினித்தவின் பமிழ்தா யெட்டுத்
திருப்பசி யகற்ற நாளுஞ் செயற்கையிற் காம போக
விருப்பமுட் படுத்தி விற்போர் வீதியின் சிறப்பீ தாமால். (௪௮)

## வேளாளர் வீதி.

கங்கையங் குலமு மேழிச் செல்வமுங் காவிப் பூவுஞ்
செங்கையங் கொடையு மன்புந் தெரியுமுக் காலத் தேர்வும்
நங்கையர் கற்புஞ் சைவ நப்பணு மருளு நாளு
மிங்கைய மிலாக்கொள் வேண்மா ரிருக்குவீ தியின்சீர் சொல்வாம்.

வேறு.

எல்லைகாண் பரிய கல்வியெந் நாளு மிடைவிடா மனங்கொளப் பயின்று
சொல்லையாண் முதுசீர் பெறநெறி விழைந்து துலாத்திணவெனநடுநின்று
வல்லையா ரின்பந் திளைத்துமேன் மாயை வழக்கறிந் ததைக்கடந் தேறி
யொல்லையேழ் பிறப்புந் தீவினை தீண்டா தோங்கநன் மக்களீன்றுளிர்வார்.

இல்லறம் புரிந்து பசித்தெவர் வரினு மிரக்கமார்ந் தினிதுண வருள்வார்
நல்லறத் தமர்தம் மவரலா ரிடையெஞ் ஞான்றுமே வுணவுகொண் டறியார்
தொல்லற நூல்க ளுணர்ந்துணர் வுறுப்பார் தொடர்புறும் பிறர்க்கிடர் தவி
[ர்ப்பார்
கொல்லறம் மறமென் பவர்பலி முதற்செய் குறும்பிறர்க் கொதுங்கிவாழ்
[வாரே. (௫௧)

வேறு.

அன்னநான் முகனு மாய னதனுறு சுவையாஞ் சைவ
ருன்னத மகேச னுவா ருணவுகண் சுவைநா கான்மூக்
கின்னய வார்த்தை காது வேற்றதோ லுணவெண் ணீலக
மன்னறு காணந் துய்க்கும் வணந்தரல் வேண்மார் சீரே. (௫௨)

இவனிவர் சார மெல்லா மேற்பவன் சிவனே யாவா
னவனிடை யுயிரி ரண்டற் றமர்தலிற் குறையொன் றின்றாய்ப்
புவனியா கமவே தங்கள் புகறிரு நெறித்த வங்கூர்ந்
தெவனினு மெதினு முற்றீ யிறையருள் பெறுவார் வேண்மார். (௫௩)

---

௪௭. பொதிவெறிதினர் — பொதிந்த மூடத்தையுடையவர். ௪௮. எட்டுத்திருப்பசி — ஆசையாகிய அழகியபசியை.

வேறு.

சிறிய வெற்பென நறுஞ்சுவை சிறந்தவா லன்னம்
பிறிய வாய்ந்தபல் குன்றெனப் பலசுறி பிறங்க
நெறிய மைத்துநன் னெய்யொழு காறென நிறைய
மறிய வூற்றியூட் டுவரறக் கிழவருண் மகிழ்ந்தே. (௫௪)

திருவு ருச்சிவ வேடமார் சைவரைத் தேடி
மருவு றிற்களித் திறைஞ்சிநல் லடிகழீஇ மலர்தூ
யொருவு றும்புகை தீபமேந் துவர்துதித் துகந்தே
குருவு ருச்சுவை யுணவிட லருள்பதி குறித்தே. (௫௫)

விருந்தி யைந்துசெல் லடியர்பின் னேழடி மேற்போய்
யருந்தி னித்தசொல் லாடுவர் வத்துவந் தடியார்
பெருந்தி ருத்திகொண் டுண்ணவூட் டுவாருள் பெருகித்
திருந்தி வாழிளங் கோக்களாள் வளத்தெரு சிறக்கும். (௫௬)

வேறு.

பசுகினர் மகிழ்ந்து செல்லப் பருகுகின் றுரு மாங்கே
வருகிவ ணெனவ ழைப்ப வருநரு மினிப்ப நாளும்
பெருகிள முலைப்பா லுண்ணப் பேர்ந்திவ ரான்கன் றேபோ
லுருகிய வுளத்த ராயே வூட்டுதா ளாளர் வாழ்வார். (௫௭)

நண்ணிய கல்வி ஞானம் நல்லொழுக் கங்க ளோங்கிப்
புண்ணியக் குடிப்பி றப்பும் புகழுமா முழவு பேணி
யெண்ணிய வணிகஞ் செய்தே யிறையமைச் சாய்ப்பார் காத்து
துண்ணிய நூல்க ளாக்கி நோன்மைவே ளாளர் வாழ்வார். (௫௮)

வருகவென் றழைக்கு மோதை மனதினித் திடப்பே சோதை
யுருகுநெய் யடிசி லூட்டி யுகந்தருண் முகம னோதை
பெருகமுத் தமிழ்கொ ளோதை பெருஞ்சொ லூர்க் குதவுமோதை
மருகற்கு மகணல் கோதை வானிடி யடக்கு மோதை. (௫௯)

குருவுரை தவறு நட்புங் கொடையுமன் னவர்செங் கோன்மைத்
திருவுய ரமைச்சுந் தேவ பத்தியுந் திரிலோ கம்போய்த்
தருவுமெய்ப் புகழு நாளுந் துணைப்பயிர் காக்கு மாபோன்
மருவுமுத் தமிழ்பெண் பற்று மானமுங் காப்பார் வேண்மார். ()

௫௯. பெருஞ் சொல்—பிரசங்கம்.

## வணிகர் வீதி.

நாற்றிசைப் பண்டங் கொள்வார் நயந்துகேட் பவையின் றாயின்
வேற்றிசை பொருளைக் கூறி வேண்டிடிற் றருது மென்று
தேற்றிசைந் தவையுண் டென்னிற் றிடமென வெடுத்துக் காட்டி
யாற்றிசை யளவி லாப மடைவணி கரின்சீர் சொல்வாம். (௫௧)

வேறு.

மதிக்கு நீலமே னித்திலம் புனைசுவர் வகுத்துப்
பதிக்குஞ் செம்மணிக் கானிறீஇ வயிரமீப் பரப்பி
விதிக்கு வெண்ணிலா வெறியொளி வீசுபொன் மாடங்
கதிக்கு மாலைபோற் பெறுந்தெருத் தெற்றியேர் காட்டும். (௫௨)

உடுத்த வாவியின் சாயைகாட் டுவவொளி யாடி
கொடுத்த காந்திகன் னிலைக்கத வங்களின் குமிழ்கண்
மடுத்த வொன்பது கோளிரா சிகள்புகு வான்போ
லடுத்த பலவளக் கவினவிர் தருமணி மாடம். (௫௩)

இரவி ரித்தகார்க் கம்பலம் விரித்தசி னைம்போற்
பரவி வெண்மணி செம்மணி பொன்மணி பசுங்கல்
தரவி லாநவை டூரிய வைரமே தகசகல்
திரவி லைக்கொணீ லமபவ ளமமுறல் சிறப்பே. (௫௪)

குரும ணிச்சுடர் கிளங்குகண் ணாடிநீர்க் குடஞ்செவ்
வுரும ணிக்கொடி யாழிசேப ரிசைகுடை யுருவந்
திரும ணிக்கொளிவ் வட்டமங் கலஞ்சிறந் தயல்சூழ்
வரும ணித்துள பீடிகை மணவரை மானும். (௫௫)

பருத்தி பட்டெலாம் பரிதியின் விளங்குநூல் பயக்க
விருத்தி செய்சிலம் பிகளினம் பரிதிகண் மிகக்காண்
குருத்தி கழ்படி கங்களிங் திரவிலாங் குருந்த
முருக்கி றத்துடுக் கணமிவா றொளிருமவ் வீதி. (௫௬)

---

௫௩. கொடுத்தகாந்தி—ஒளிகொடுப்பன. கொடுத்தவென்பது எதுகை நோக்கிவந்த காலமயக்கு. ௫௪. பசுங்கல்—மரகதம். ௫௫. அட்டமங்கலம்—எண்வகை மணப்பொருள். இதன் ௩௧-ஆம் பாட்டிற் கூறியதினின்றும் சாமரம், இணைக்கயல், தோட்டி என்னு மூன்றனைத் தள்ளி ஆழி, குடை, உருவம் (சிவற்சம்) என்னும் மூன்றனை இதிற் சேர்க்கப்பட்டமை காண்க. இதனால் அட்டமங்கலப்பொருள் இருவகையாக வழங்கினமை கண்டுகொள்க. ௫௬. சிலம்பிகள்—பட்டுப்பூச்சிகள். குருந்தம்—குருந்தக் கல். (வச்சிரக்கல்.)

நீலக் கல்லினு லம்மிக ணெடும்பொனு லுலக்கை
சாலக் கல்வயி ரத்தினு லுரலது சமைத்து
மேலக் கம்புனை வெண்பொனின் கலத்துமுத் தரிசி
யேலக் கற்பமர் சிறுமியர் சமைப்பர்சிற் றிலினே. (சுஎ)

சிறந்த வெள்ளியின் சுவர்நிலை வயிரமாச் செழித்து
புறங் யங்குபொற் கதவுபொற் சீப்புறு பொலிவி
னிறந்த ணந்திடா வளகைநன் னிதியமெண் மடங்குற்
றறந்த ழைத்தவை சியர்தெரு வளந்துரைப் பரிதே. (சுஅ)

மடுத்த பேரொளி மரகதஞ் செம்மணி வயிர
மடுத்த முத்துதுப் பாதிய குப்பைக ளலகிட்
டெடுத்த ரிப்பவர்க் காண்டுதோ றும்பொனு யிரங்கைப்
படுத்த லாற்பிர புவெனவாக் கிடுந்தெருப் பண்பே. (சுகூ)

சூரி யன்றரு மொளியினு லுலகுயிர்த் தொகைகள்
காரி யப்படு மிங்கணுர் பயனெலாங் கருதி
வாரி யிக்கரை யக்கரைப் பொருளெலாம் வணிகர்
கோரி வைத்தருள் கடைத்தெரு பலவளங் குலவும். (எய)

வேறு.

தாதியன் மலர்தே னல்கத் தனித்தனிப் பலதே னுண்டு
காதியன் றினிதி ரைச்சல் காட்டலிற் கடல்க ளார்ப்பி
லோதிய பதினெண் சொல்லோர்ந் துகந்துரை யாடு மிப்பர்
வீதிய தொனிகல் யாண விழாவொலி யேய்க்கு மாதோ. (எக)

அவரவர்க் குடைபூ ணூணந் தற்குமீ சுவைப்பண் டங்கண்
கவரழ கியக லங்கள் கமழ்பல பொருள்கண் முன்னு
விவரலா லறுபா னுங்கு கலையருள் குரவ ரேய்ந்துந்
துவரணி கணிகை யொத்துந் துலங்குமவ் வணிகர் வீதி. (எஉ)

வேறு.

பன்ன கச்சடைப் பரம்பர னருள்விசு வேசன்
றென்ன கர்வட காசியுந் தொழுததென் காசி
பொன்ன கர்க்கிறை யைந்தரு மலர்வனம் பொருந்தி
மன்ன கன்மணி வளத்தது வணிகரா வணமே. (எங)

---

சுஎ. அக்கம்புனை—பொன்பூசிய. சுஅ. சீப்பு—தாழ்க்கோல். சுகூ. பிரபு—நூறுயிரம் பொன்னுடையவன். (லட்சப்பிரபு) எஉ. ஊணந்தற்கும்—விழுங்கல், குடித்தல், கடித்தல், நக்கல், உறிஞ்சல் எனவழங்கும் உணவுப்பொருளைந்தனுக்கும். துவர்—பவளமாலை, செவ்வுடை. தாம்பூல வழகினையுடைய.

## அரசர் வீதி.

பரவு விண்ணிரு ளொதுக்கிநீள் பான்மதி பரிதி
வரவு வரவினா லெண்டிசை விளக்கலின் வயவ
ரிரவு போக்கியே முலகமுங் காக்கவீற் றிருக்கு
முரவு வேலுடைப் புரவலர் வீதிமாண் புரைப்பாம். (எச)

இலக வீசிய செங்கதிர் வெண்கதி ரிமைப்பப்
பலக வின்றரு விளைச்சலுஞ் சுவையுமாம் பாரின்
றிலக மாமன ரோச்சுசெங் கோலினெண் டிருவா
முலக மின்புற வாழ்தலை யுறையுமென் காசி. எரு)

உரசு மாடகக் கூட்டுடை வாளிருப் புலக்கை
யரசு மார்வில்வேல் வாளெறி யாயுத மீட்டி
சிரசு சூழ்கவண் முதலவன் றடிமுதற் சிலம்பம்
பரசு சக்கர முதலவும் பயிலிடம் பலவால். (எசு)

வலைய நாவிரு துளையவாய்ச் சுற்றிரு வட்டச்
சிலைய ணிப்புயஞ் சுற்றுரத் தடிதிண் டுருணி
ணிலைய தண்டமுன் பலவுமல் லாடலு நேர்ந்தாற்
றுலைய விட்டிடு குத்துமோ ரிடம்பல தொகையால். (எஎ)

பிடிகள் பூட்டுக டட்டுக ளடிகளைப் பிடிக்குட்
படினு நீக்குதல் பூட்டுகட் கழற்றுதல் படாது
கடித றட்டுக ளடிக்கிடங் கொடாதுகான் மாறல்
மடிபொ றித்தட்டு விலக்குண ரிடம்பல வயங்கும். (எஅ)

நிலம்பு கழ்ந்திடு நீலவொண் மாடமு நிலவாற்
செலம்பு ரிந்தெறி சிலைபுனை மாடமுஞ் செம்பொன்
கலம்பு னைந்ததென் காசியாங் கன்னியங் கான்மே
லலம்பு நூபுர பாதிக ளணிந்ததொத் தனவே. (எகூ)

---

எசு. அரசுமார்—இளவரசன்மார். (யுவராஜர்) எறியாயுதம்—பிண்டிபாலம். ஈட்டி—குந்தம். (கைவேல்) வன்றடி—வலியகம்பு. பரசு—மழு. எஎ. வட்டச்சிலை—வட்டக்கல். உரத்தடி—மார்பிணைத்துநிறுத்தித் தோள்களைச்சுற்றி வீசுஞ் சுற்றுத்தடி. (சுவடி) தண்டம்—தண்டாயுதம். எஅ. பொறித்தட்டு—வருமத்தட்டு.

வேறு.

நெஞ்சிய லளக்கொ ணாத நெறியகற் புயரின் மார்தம்
மஞ்சிய லுளம ளக்க வலாரளக் கரிய துண்டோ
வெஞ்சினத் தொளுசெ திர்த்து மேலிடின் வலிய ளந்து
மிஞ்சிய வலிமை காட்டு வீரரார் வாரவ் வீதி. (௮௰)

நடுதிற லாளர் கண்ண ணுணிட வெழுந்த தள்ளி
யடுதிறன் மணிகள் கட்டி யார்த்திடுங் காற்றோட் டத்தின்
சடுதியுங் கடந்தெட் டொண்ணுத் தனிமன வேகங் கொண்டே
திடுதிடென் றோங்கு செல்வஞ் சிறந்தகீர் நடாத்து வார்கள். ()

எல்லினைத் துதிக்கை நீட்டி யெடுத்தெறி பணமாய் வான
வில்லினைப் பிடுங்கி வீசி வெங்கய வலார்மாற் றார்மேற்
கல்லினை நொறுக்கு வன்காற் கழலராய் விழிதீக் காலூறு
செல்லினை நிகரார்த் தேறுஞ் செருக்களி றூட்டு வார்கள். (௮௨)

ஆடவர் மார்பிற் சாந்து நாவியு மாரத் தென்றல்
கூடவந் தெறிம ணத்த பொடிகளுங் குளிர்பூந் தோட்டிற்
பாடவண் டினமி றைக்கும் பராகமு மார்தூள் வான்றோய்
மாடவண் சிகரம் போர்ப்ப வாம்பரி நடாத்து வார்கள். (௮௩)

தாந்தரஞ் சுவடாய் மற்போர் தாம்புரிந் தறிவார் வென்றி
யுரந்தரச் சிலம்ப வீசி யுளங்களி துளும்பி நிற்பார்
புரந்தர ணுண வில்வாட் போர்த்திற னுடிக் காண்பார்
நிரந்தர னருள்கூர் சைவ நிருபரின் மக்க ளம்ம. (௮௪)

அமையறன் மான நீத்திங் காடவ ரெனத்த மைப்பேண்
சுமையமெய் யெதற்கோ விப்பார் சுமக்கநாண் கொளுமென் றெள்ளி
குமையவேல் முனையின் வெற்றி கொளுங்குறிக் கொண்ட வீர
ரிமையசே வலைக்க டாவை யிகலவிட் டுணர்த்து வார்கள். (௮௫)

உருப்பகை யெனுஞா னிக்கு முடம்புவேண் டுவதே யாங்கிங்
கிருப்பமெய் காப்பா மென்பார்க் கெண்படா தறினன் றென்ன
விருப்பமா னவர்நி லைத்து விமலனு ரருள்சை லங்காத்
தொருப்படு மொழுக்கங் காத்தூர்க் குவப்பரு ளாக்காண் பிப்பார். (௮௬)

---

௮௰. இன்மார்—மனைவிமார். ௮௨ வெங்கயவலார்—வெம்மையை யுடையயானைவீரர். களிறூட்டல்—யானையை நடப்பித்தல். ௮௬. ஞானிக் குமுடம்பு வேண்டுவதே யென்பது:—

"அறிவி லறியாமை யற்றறிவாய் நின்று
பிறிவறவா னந்தமயம் பெற்று—குறியவிழ்ந்தா
லன்றைக் குடல்வேண்டே னையாயிவ் வாக்கையையே
யென்றைக்கும் வேண்டுவனே யான்". —எனத் தாயுமானார்

திருமொழியாலு முணரக் கிடந்தது.

ஆண்டலை தகரி னம்போ ராற்றவிட் டடல்காண் வீரர்
மாண்டவொன் ஞர்பான் முட்டி வாகைசூ டுவரே தில்போ
னீண்டமின் களைப்பி டிக்கு நீசரா காரங் நீசர்
சோண்டனு யினுங்கீ ழென்றார் குறிக்கொள வதுகாட் டாட்டே.

சித்திர மன்ன கன்னிச் சிறுவியர் குழீஇத்தா மாடச்
சித்திர நதிதான் வீசு தெள்ளொளி முத்தை வாரிச்
சித்திரப் படக்கட் டிப்பேண் சிற்றிலைச் சிறுகு றும்பாற்
சித்திரச் சிதைவு செய்வார் சிறுவர்தே ருருட்டு வார்கள். (அஅ)

பெருகுமின் கொடிந்து மூவும் பெருமதி விடப்பாற் கங்கை
பொருகுமி ழியினீர் மாறுப் புணரிநேர் வலஞ்சூழ் நாப்பண்
முருகுகொப் புளிக்கும் போந்து மாருமுன் பிருபா னிற்பச்
செருகுவேம் பலர்த்தார்த் தென்னர் திருமணிக் கோயிலோங்கும்.

## வேதியர்வீதி.

கருமமும் பொருளு மின்புஞ் சார்புறு வீடுங் நான்குங்
கருமமு மின்றென் பார்கா வறுத்தெறி கத்தி யேபோல்
மருமநூல் விதிவ ழூக மானவை திகமே பேணூல்
திருமறை யவரை வேள்விச் செயல்வளர் வீதி சொல்வாம். (கூ0)

மருக்குலா நளினக் குஞ்சி வயங்குநூன் மார்பு மின்ன
திருக்குநா ணிறுக்கி முஞ்சி யிடையுடைத் தானே சேரச்
சுருக்குமுன் றூனை நாலத் தொழூபுர சக்கோல் கைக்கொண்
டிருக்குமு னூல்மேவ தந்தே ரிலங்தொறுந் தீமூன் றேங்கும். ()

இரவைபு மகற்றுந் தீவேட் டியன்மறைச் சிறுவர் வேதப்
புரவையுட் கொளுங்காற் சந்து புகன்றுறும் பூவை கேட்டவ்
வரவையுற் றறிந்து மன்றி னெய்தலின் வழுத்தி வைகப்
பரவையும் புளினங் கிறிப் பாப்பியே படிக்கு மாதோ (கூஉ)

---

அஎ. ஏதில்—அயல். (பிறர்) கோண்டனுயினும்—கீழ்மகனுகிய சுனகனிலும். அஅ. சிறுகுறும்பு—பாலசேட்டை. கூ0. மருமநூல்—இரகசியமறை. ஐவேள்வி—யாகங்களினுலே தேவர்களையுஞ், சந்ததிகளினுலே பிதுர்களேயும், வேதாத்தியயனங்களினுலே முனிவர்களேயும், அன்னங்களினுலே அதிதிகளேயும், பூதபலி கருமங்களினுலே பூதங்களையுந் திருப்தி செய்தல். கூக. குஞ்சி—குடுமி. முஞ்சி—முஞ்சம்புல். புரசக்கோல்—தீக்கடைகோல்.

சுருதியு மங்க மாறுஞ் சொற்கலை யறுபா னுவு
மிருதியுந் தெரிந்து மந்தோ புறமத வெலற்கெட் டாமை
கருதியுத் தரிக்கு வாய்பா டுடையவாய்க் கசடு தீர்ந்து
தருதிற லுடைவ ளத்துச் சார்குழா முடைத்தவ் வீதி (௯௩)

வேறு.

துதிக்கை யேந்தலிற் றாபலர்க் குண்டிகைக் கையர்
வதிக்கை செங்கரேய் துகிலினர் தண்டுகோ வணத்தர்
கதிக்கை யிச்சையை யெறிமழு வாந்தவர் காண்போர்
விதிக்கை வல்லியர் மாதவ ருறையுளவ் வீதி- (௯௪)

அடுக்க லேப்புகை மினார்குழ லகிற்புகை யளாயோங்
குடுக்க லேக்கறை செயுமகப் புகையொளிர் விந்த
மடுக்க லேப்படி மஞ்சௌக் கருத்தது வாரி
கடுக்க லேத்தர வணிகளக் காட்சிய தன்றே. (௯௫)

## ஆதிசைவர் வீதி.

தறைவி ளங்கியஞ் செழுத்தெணித் தூயவெண் ணீற்று
நிறைவி னன்பரேழ் பிறவியாழ் வினைக்கட னீந்திக்
கறைவி ரிந்தகண் டனதடி யின்பவாங் கனிவி
னுறைசை வோத்தமர் திருமட வீதிவாழ் வுரைப்பாம். (௯௬)

வேறு.

நேசவான் மார்த்த பூசை நிமலனு லயப ரார்த்தந்
தேசமுய்ந் திடப்பூ சித்தல் செய்துவந் திடுவார் நானு
பேசனு கமங்க ளோர்வா ரிறையுயிர் மலங்கண் மூன்று
மாசற வுணர்ந்து ணர்த்தி மலங்கழீஇ வாழ்வார் மாதோ (௯௭)

## சைவாசிரியர். (வேறு)

பதியி னுண்மைஞா னத்தராய்ப் பகர்சைவா கமங்கண்
மதியி னுய்த்துணர் சாதகர் போதகர் மைந்தர்
விதியி னுள்ளவ ராய்ச்சிவத் தவவிளக் கத்த
நதியி னர்தவ யோகியர் சூழிடம் பலவால். (௯௮)

வேத வாகம விருமுத னூலையு மிகத்தேர்
போத வாசகின் புறவிடை பிங்கலை புகுதும்
வாத வாசர ணைவநு வாசராய் மனுவா
ராத வாதராய்ச் சித்தம ரியோகிய ரநேகர். (௯௯)

---

௯௯. வாதவாசரணைவநு வாசர்—வாசிதாரணையை அநுட்டித்து நீட்டைகூடி யிருப்பவர். மனுவாராதவாதர்—மன்றூட்டுடன் வணங்கிமுறையிடுபவர்.

## எட்டுத் திருமடங்கள்.

அரசருக்கு முடிசூட்டிப் பண்ணவராய்ச் சந்ததியுற் றேகமங்கள்
சாசருக்கு முதன்முழுதோர் சிவபாத மூருடையா சாறு தீனம்
பரசருக்கு முடியோனிற் நீக்கைகல்கத் தென்கிழ்பாற் பதிந்தஞ் ஞானச்
சிரசருக்குந் திறற்சாமி தேவநபி ஞாகோர தேவா தீனம. (ள)

தென்பால்வித் தவவேம்பத் தூர்மடமாந் திருவாசா தீனந் தென்மேற்
கின்பார்பெள ராணிகமெய் தேற்றனந் தக்கூத்த செழிலா தீனம்
மின்பாண்டி யற்கிறையைக் காட்டுதத்வப் பிரகாசர் மேற்கா தீனம்
மன்பாற்சித் தாந்தசைவந் தரவதன்பால் மெய்கண்டார் வளரா தீனம். ()

வடதிசையிற் கவிப்பரையா ஞமையொருபா சக்குரவன் வதியா தீனந்
திடமருவீ சானதீதி னிடிவலஞ்சூழ் பாஞ்சோதி தேவா தீனம்
மடமிவெட்டும் பராக்கிரம னேகிலையிட் டுயர்சைவம் வளர்க்க வேண்டித்
தடமலிமா னியகிரம்பக் கொடுத்தோங்குஞ் சிறப்பதின்பந் தனைதென் கா
[சி. (ளஉ)

## சிவன்கோயில்.

பொருந்து தும்புரு நாரத ரியாழிசைப் பொலிவா
லிருந்து தான்செவி வழிக்கொள விசையவெள் ளன்ன
மிருந்து வீசவே ழிசைக்குழற் பண்ணொடு மெதிர்நின்
றருந் து மும்முரா சறுதநா ரருட்சிவன் கோயில். (ளங)

இடங்க லந்தவள் கொழுநர்தா மெட்டுரு விஜைசந்தாங்
கடங்க நீண்டவ ரவர்தபா லயநடு விந்தாய்த்
தடங்க வோங்கிய மேருவாய்ச் சுற்றுடைத் தாகி
மடங்க லர்ழ்புவி தாங்கவி ன்மைந்தரோர் வனப்பே. (ளச)

## செண்பகப்பொழில்.

பலவ ரம்பெற சிரும்பினை வென்றுயும் படிமுன்
வலவ ஞதியோர் வந்துசெய் தவத்தினு வரமாக்
குலவ நாளெலாஞ் சண்பகங் குளிர்மலர் தூவல்
புலவ ரின்புறப் பொன்பொழி வள்ளியோர் போலும். (ளரு)

---

ளங. வெள்ளன்னம்—சாச்சொதி. ளச. எட்டுரு—மண்ணிற்பவர், நீரிற்சர்வர், கனலிலுருத்திரர், காற்றில் வீமர், வானின் மகாதேவர், சூரியனிற் பர்க்கர், சந்திரனிற் சோமர், ஆன்மாவிற் பசுபதி என நின்றருளுஞ் சிவத்தினது எட்டுநிலை. விந்து—சிவக்குறி (வட்டம்). மேரு—சத்திபீடம் (பெருவரை). சுற்று—மதில். மடங்கலாழ்புவி—உகமுடிவிலாழுகின்ற வுலகை. ளரு வலவன் —விட்டுணு.

கொடையி ஞால கடக்கிய வேந்தரிற் றுளிர்பூங்
கொடையி னீள்கமழ் மலர்சொரி செண்டகச் சூழ
லிடையின் மாங்குயி லம்பலர்த் தேனமிழ் தெடுத்துப்
பெடையி னப்பசி தீர்த்தணைத் தின்பமே பெருகும். (௯௬)

## விமானங்கள்.

சுரிகம் புள்ளொலி திரையொலி தொனிக்குமே ழாழி
யிரிக விட்டவரைந் தெழுந்தசித திரையுடுத் தெயில்சூழ்
புரிக வின்றர கடுப்பொருப் போங்கலிற் பொலிந்து
கிரிக திர்ப்பரி தியினொளி பரப்பின விமானம். (௯௭)

## கோபுரம்.

அரவு வாசுகி முதலவை ராவக முதல
வரவு மந்தர முதலவெண் மாடமோ ரெட்டும்
பரவு மேற்கொடு துர்க்கைமா ரெண்மரும் பார்க்கப்
புரவுத் தண்மதி தவழவோங் கியதுகோ புரமே. (௯௮)

## இருபொருள் வளம்.

சொயந்த பங்கொளிக் காமதே னுவின்முலை சொரிபா
லயந்த னிற்சூழூஉம் பெருக்கிலாந் தாமரை யாளு
வியந்த பாரதி யுங்குழீஇ யுலகுபெண் மேன்மை
நயந்த ழைத்தமாண் வளத்ததென் காசிமா நகரம். (௯௯)

## பொது.

உணநி றைந்தபாற் கலங்கடல் பெய்சுளை யோங்கல்
வணநி றைந்தெதிர் மழலையுற் றுகந்தள வளாவிக்
குணநி றைந்துணுங் குடிகடல் கடைவதிற் காண்வான்
கணநி றைந்துகண் ணிமைத்தில வளத்ததென் காசி. (௱)

அருத்தித் தேத்துதன் கயவுருத் தீர்ந்தது மசல
முருத்தி ரற்பணிந் தருமிற கடைந்தது மோங்கு
விருத்தி வேந்தனேர் குளிகைபெற் றுகந்ததும் விமலை
யொருத்தி யால்விணோ ருய்ந்ததும் படைத்ததென் காசி. (௱௧)

---

௯௯. அயம்—நீர். ௱. பாற்கலம்—பாற் பொங்கல் வைத்துண்ணும் வள்ளம். சுளை—பலாச்சுளை. ஓங்கல்—மந்தரமலை. ௱௧. அருத்தித்தேத்துதன்—இரந்து போற்றிய கயமுகாசுரன்றனது. ஓங்கு விருத்திவேந்தன்—செண்பகமாறன்.

செவிக்கு ணுவமிழ் தாயபண் முறைநெறி தெளிந்தோர்
கவிக்கு மாகம சுருதிக்கு மிருதிவிள் கரும
புவிக்கு ணுற்றிசை போற்றற்கும் புண்ணியப் பொலிவுற்
பவிக்கு முத்தமிழ் கற்றுநாட் கழிகுழாம் பலவால். (௱௨௨)

வேறு.

பனியவிழ் மலர்க்கொம் பன்னார் பாதமு மிசையும் வேட்டு
மனியகண் செவிநி றைத்து வயங்குமா னந்த மூழ்கி
யினியகண் ணமிழ்தன் னுரை யிங்கிதத் துறையாற் றோய்ந்து
கனியவா யூற லுண்டு களிமணம் பெருகிற் றன்றே. (௱௨௩)

தலம்பக விரிநீர்ச் சென்னித் தலைவனைக் கண்டுந் தாழ்ந்து
மூலம்பக வுருக்கு பாட லோதியுங் கதைகள் செய்துங்
கலம்பக லிசைவா சித்துங் கனிபெருஞ் சொற்பு ரிந்தும்
நலம்பக ரன்ப ராகி நாளெலாங் கழிப்பார் பல்லோர். (௱௨௪)

கற்றது கருத்தி ருத்திக் கதைபல பெருஞ்சொல் சைவர்
சொற்றது கேட்டுத் தேறித் தூரமா னவர்பி தற்றுள்
ளுற்றது மறுத்தொ துங்கு முானுடை யோராய் நாளும்
பற்றது சிவன்றாட் காக்கிப் பல்கிவாழ் வுறுவோர் பல்லோர். ()

இந்நகர்ப் பெருமை சொல்லற் கெளியதோ வெழிற்செஞ் சூட்டுப்
பன்னகத் தவனு மன்னப் பதுமனு மளக்க லாமே
யென்னக மெம்மட் டம்மட் டிசைத்தன னென்றான் சூதன்
மன்னக முனிவர் கேட்டுண் மகிழ்ந்தன ரோங்கன் பார்ந்தார். (௱௨௬)

நகரச்சிறப்பு முற்றிற்று.

ஆகப்பாட்டு ௨௨௮.

---

௱௨௩. மணம்—கூட்டம். ௱௨௪. தலம்பக—பூமியைப்பிளக்க. உலம்பக—திரண்டகல்லையு முடையும்படி. கலம்பகலிசை—யாழினின்றம் பிரிந்தியலுமிசையை.

# மூன்றாவது தலவிசேடம்.

தலவி சேடமேல் விழைதவர் மகிழமா தவன்று
னிலவி யப்புறச் சொல்லுவா னீடுதென் காசி
பலவி சேடமு முள்ளது பரம்பரன் மகிழ்வாய்க்
குலவி வாழ்வது கயிலையி னுயர்ந்ததாங் குறித்தே. (க)

ஆதி யாகிய சிறப்பெலா விவரமா வறியப்
போதி யாமறை வியாதனே சொலவல புலவ
னோதி யாமெனவ னுரைப்பலென் னுணர்வுண ரளவி
னீதி யார்ந்ததென் காசிமா தலப்புக ணெடிதே. (உ)

எண்ணி லாவுயிர்க் குயிரதா யிருந்தரு ளிறையைத்
தண்ணி லாவமிழ் தைத்தனில் வைத்ததிற் றணவா
துண்ணி லாவுற வைத்ததே லோங்குதென் காசி
மண்ணி லாம்பிற சிறப்பெனே சொலவது வலிதே. (ங)

வென்றி தேவிகொள் வானருள் விமலர்தென் காசி
நன்றி தேர்ந்துதோய் பவர்மலங் கழீஇயரு ளல்குந்
தென்றி தேன்மலர் வீசுசித் திரைப்புன றினமாட்
டொன்றி தேர்நலோர்க் காக்கநல் கிலிங்கமொன் றுளதால். (ச)

சச்சி தானந்த புரமுக்துத் தாண்டவ நல்லூர்
மெச்சு மானந்தக் கூத்தனூர் மிளிர்சைவ மூதூ
ருச்ச தென்புலி யூர்குயின் குடிசித்தர் வாசஞ்
சொச்ச செண்பகப் பொழினறுந் தொல்சிவ மணவூர். (ரு)

சத்த மாதரூ ரோங்குசித் திரமூலத் தானம்
பைத்த நன்மயி லைகுடி பலாலிங்கப் பாடி
சுத்த மார்வசந் தக்குடி துலங்குதென் காசி
யதர் கோசிகை சோடச நாமவைப் பாமால். (சு)

வார ணாசியோ வரணையு மசியுமா ராதி
தார ணாபிதா னத்தது தயங்குதென் காசிச்
சீர ணவிய சித்திரை பாலொடு தேன்சேர்
நீர ணரியை யநாதியித் தலப்புக ணெடிதே. (எ)

---

க. குறித்து—குறியை (அடையாளத்தை) யுடையது. உ. புலவன்—அறிவன். எ. பால்—பாலாறு. (கௌரி.) தேன்—தேனாறு. (செங்கோட்டையாறு.) நீரணரியை—நீர்பொருந்தியவழகிது.

அநாதி யாகவீன் டலர்ந்தசண் பகநிழ லமர்ந்து
மனாதி மானவர் வானவர் மாதவர் வணங்கி
யெனாதி யென்றுபோற் றிடவொரு சிவக்குறி யென்றுந்
தெனாதித் தாடளிக் குழலுமை பாலதாய்த் திகழும். (௮)

சாலி வாகன சகமொரா யிரத்துநூற் றெழுபான்
மேலி வர்முத லாண்டினிற் சண்பக வேந்தன்
வேலி யாயுல காண்டுமாண் விந்தையி லிருந்தெக்
காலி னுஞ்சிவ குமாரனட் புடையனாய்க் கதித்தான். (௯)

ஓங்கி லஞ்சிவாழ் குமாரனவ் வேந்தனை யுகந்து
பாங்க கத்தியர்க் கருளியாங் கொருமணி பயந்தா
னாங்க ருள்குளி கையின்றுணை யாலவன் காசி
தாங்கண் டுண்ணுநோன் பாற்றின னாடொறுந் தழைத்தான். (௰)

வழுத்து சண்பக மாறனப் பராக்கிர மன்னான்
கழுத்துக் கார்த்தவெம் பிரான்வழி பாடுகள் கழித்துட்
பழுத்துக் காசிகண் டுண்ணுவா னொருதினம் பனணி
யழுத்த மாத்தொடர்ந் தனளழைத் தேகின னபம. (௰௧)

நாலு நாளிடை யாலவாய் தங்கினர் நயந்தப்
பாலு கந்தெழீஇ வந்தனர் விந்தைபாண் டியன்செங்
கோலு தாரமேத் திற்றவன் பூசைகொண் டருள்கோன்
மேலு யர்ந்தவிதன் காசியின் சீர்விளக் கிட்டான். (௰௨)

மகிழ்ந்தெ மானருள் வழியெறும் பொழுகுபின் வந்து
திகழ்ந்தெ மான்வளர் சண்பகம் பலாநிழல் தேடி
நெகிழ்ந்தெ மானையங் குணர்த்துவார் கேடின னிருந்தான்
புகழ்ந்தெ மானொரந் தணனில்வந் திறைக்கிது புகல்வான். (௰௩)

அரச விவ்விடை யநாதிலிங் கம்பெரு காறு
சரச மாவகழ் மடுவிதி னுளதனைத் தானான்
பாச வேயுயர்த் தருளருந னெனவெளிப் படுத்தான்
பிரச நிமபனுங் கண்டுகண் டின்பமே பெருகும் (௰௪)

---

௮. தெனாதித் தாடளிக்குழல்—அழகிதாக வொலித்தாடும் வண்டுகள் மொய்க்குங் கூந்தலையுடைய. ௯. விந்தை—விந்தநல்லூர். ௰. மணி—குளிகை. ௰௨. உதாரம்—மகத்துவம், வீரம். ௰௪. சாசமா—இனிய குணமுடையதாக.

கண்டெ ழுந்தரு ளிலிங்கத்தி லதனைமுன் காட்டிக்
கொண்டெ ழுந்தவந் தணன்புகுந் தனன்கண்ட கோமான்
வண்டெ ழுந்திரை குழலியோர் பங்கனை வந்திக்
குண்டெ னத்தெரித் தழைத்துயர்த் தருளிற்றென் றோர்ந்தான்.

ஆடிப் பாடின னடுத்தநல் லோரைத்தேர்ந் தருணீர்
சூடி வாழ்திருக் கோயிலைக் கட்டினன் றெழுகான்
பீடி லங்கவூர் புதுக்கின னகரமும் பெரிதா
நாடி யாக்கின னதுபெரு நலத்ததென் காசி. (௰௬)

வளப்ப ராக்கிர மன்னெனுஞ் சண்பக மாற
னுளப்ப ரன்விசு வேசனு முலகநா யகியு
மளப்ப ருந்திரு வருள்பொழி யாலயங் கண்டான்
இளைப்பக் காகிகாண் பராக்கிர மன்னவன் றனை. (௰௭)

ஊன்று சாலிவா கனசக மாயிரத் தோடு
மூன்று நூற்றறு பானெட்டின் முதுமதிக் குலத்துத்
தோன்று மாணரி கேசரி தேவனுத் துலங்கிச்
சான்று காண்பராக் கிரமனன் றெடுத்ததித் தலமே. (௰௮)

அம்ம னையபொன் னின்பெரு மாளுசி தன்றன்
செம்ம லார்கன வினிலரு ளியபடி திகழு
மிம்ம னாண்டறு பானெட்டி லிருந்தெண்பா னன்கு
பொம்ம லாண்டுமட் டும்பதி னேழனுட் புதுக்கும். (௰௯)

ஈச னாலய மீசொரி யாலயஞ் சகத்தி
ரேச னாலயந் தரணிபீ டாலய மிடப
தேச னாலயந் திருத்தொண்ட ராலயம் விமானம்
வாச வன்பதி தொடுமகா கோபுர முதல. (௨௰)

சொக்க லிங்கமா சத்திபீ டத்தளி தொடர்பாப்
பக்க மாரரி கேசரி நங்கைநாம் பரவு
மூக்க ணாரி கேசரி முன்னவ னாராட்
டுக்க மைந்தமண் டபமுத லமைத்தன னுவந்தே. (௨௧)

---

௨௧. ஆராட்டுக்கு—தாலாட்டுக்கு.

நித்த முன்விழாப் பூசனைக் காயநன் னிலங்கள்
பைத்த வாடைபொன் பணிவிளை பொருள்கணுட் படிக்காஞ்
சுத்த மாரரி சருக்கரை முதலிய தொகுப்பா
முத்த ரத்தவேற் படுத்தினன் பெருகளி முதிர்ந்தே. (உஉ)

உஉ. நாட்படிக்காம்—அன்றாடகப் படித்தரத்துக்கு ஆகவேண்டிய. முத்தாத்த—மூன்றவகைப் பட்டனவாக. அவை தேவஸ்வம் தேவதாத்திரவியம் நைவேத்தியம் எனப்படும் கிராமபூம்யாதிகளும், வெள்ளி பொன் மணி பணி பட்டு பாத்திரபண்டங் கன்றகாலிகளும், அர்ப்பணமாகாத நிவேதனப் பொருள்களுமாம். இவற்றினின்றும் அர்ப்பணமாகிய போக்கலாதிகட்கு நிவேதிதமென்றும், சண்டாதிக்ருதமென்றும், பஹிக்ஷிப்தமென்றும்மூவகைப்பெயர்கூறுப. முன்னையமூன்றம் தொடத்தகாதனவும் அறிஞானைவராலும் பாதுகாக்கத்தக்கனவுமாம். பின்னையமூன்றள் மூலத்தான நிவேதிதப்பொருள் சைவரே பெறுதற்குரியதாம். அதுவும் "எவன் சிவத்துவிஜோத்தமர் (பட்டர்) கொடுக்கப் பெறுமல் தனக்குத்தானேயோ அதீக்ஷாவான்களாகிய பிறராலேயோ சிவநின்மாலியத்தை யெய்தப்பெறுவானோ அவன் நரகத்தையடைவான்." என்ற பொருள்தரும்,

"சிவாக்ரே சிவநின்மால்யம் க்ரஹித்வா சிவத்விஜாத்
ஸ்வயமேவா ததாஞ்ஸ்ரேத் நரகம் ப்ரதி பத்யதே." —என்னும்

இலிங்க புராண வசனமும் பிறவுங்கண்டு சைவாசிரியரிடமே பெற்றுக்கொள்க. அங்ஙனம் பெறும் சிவநின்மாலியம் புசிக்குஞ்சைவர் "சிவநின்மாலியத்தை எவன் புசிப்பானோ அவன் சகலார்த்த வேத்தாவாகிச் சக்ரேசுவரனுவான், அவனுக்குத் திரிகால ஞானமும் நித்திய பூபாலத்தவமும் விசேஷ சௌந்தர்யமும் உண்டாகும்" என்று பொருள்படும்,

"மஹ்யமந்நம் ப்ரயத்நேந நிவேத்யாச நாதியஸ்ததா
ஸயூபாலஸ் ஸர்வவேத்தா பவித்யேவ ஹிதா ஸர்வதா".
"அதீசாநாம் கதம்க்ஞாநம் பூபாலத்வஞ்ச சாஸ்வதம்
ஜாதீஸ்ம ரத்வம் சௌந்தர்யம் அந்நவேத் யஸ்ய பக்ஷணாத் "

என்றற்றொடக்கத்த பிரமாண்ட புராண வாக்கியங்களின்படி பெரும்பேறடைவரென் றுணர்க. அடுத்த சண்டாதிக்ருதமும், பஹிக்ஷிப்தமும், சுத்தசைவருக்காகா. போலிச்சைவரும், அசைவருமே அவற்றிற்குரியவராவார். இவ்வளவில் உண்மைச்சைவருக்கு முன் மூன்றும், பின்னுள்ள சண்டேசுரப்பிரீதிகரம். பிசாசப்பிரீதிகரம். என்னும் இரண்டும் ஆக ஐந்துமே விலக்கப்பட்டன எனவும், நாலாவதாகிய சிவநிவேதிதம் விதிக்கப்பட்டதெனவும் அறிவார் மேலோர். ஆனால், "அநர்ஹம் மமநைவேத்யம்—எம்முடைய நின்மாலியம் புசிக்கத்தக்கதன்று." என சைவ ஸம்ஹிதையில் சிவபெருமானே திருவாய்மலர்ந்தருளிய தென்னை? எனின், அதனையே முன்னொருக்கால் சைமினியார் எடுத்துக்கூறி உண்மையை வினவியபோது வியாசபகவான், "தேவதேவஸ்ய வடஸோவிஷயோயம் நபைமினே॥
ஏ வீரபத்திர ஸபிதா சிவபக்தி பாராங்முகா॥"
"ஸம்போ ரந்யத்ர தேவேஷு ஏபக்தா ஏநதீக்ஷிதா॥
தேஷாமநர்ஹ மீஸஸ்யம் தத்பிரஸாத சதுஷ்டயம்॥"

(வீரபத்திர மூர்த்தியாற் சபிக்கப்பட்டவர்களும், சிவபக்தியிற் பராமுகமாயிருப்பவர்களும், சிவபெருமானைவிட்டு வேறுதெய்வங்களிடத்துப் பற்றுவைத்துள்ளவர்களும், சிவதீக்கை பெற்றுக்கொள்ள மாட்டாதவர்களுமா

இறைதென் ஞறுநாட் டினியதென் காசியே யிலஞ்சி
நறைதென் குன்றைதென் புலிநகர் பாட்டநற் குறிச்சி
யுறைதென் வீரபாண் டியனலூர் முதலிய வுரக்கா
னிறைதென் பண்ணையூ ரெலாந்தெய்வ தானமா நிறைத்தான். ()

அடர்ந்த காடெறிந் தகன்றகா லணைகுள மமைத்துத்
தொடர்ந்த யாண்பராக் கிரமபாண் டியனலூர் துளிர்த்துப்
படர்ந்த சீர்விசு வநாதநல் லூரம்மேல் பத்திற்
றடந்த ஞச்சக வீரரா மன்பதி தந்தான். (உச)

தஞ்சைக் காத்தவழ் வள்ளைமுட் டம்பன்றி முட்டம்
கஞ்சத் தண்ணமை கற்றுச்சே றைமுதற் பத்தும்
மஞ்ச தார்குறு மரைநாட்டு மாண்டுவ ரங்காட்
டெஞ்ச வில்லிடை தவணைமுன் வயலெலா மீந்தான். (உரு)

---

கிய அநதிகாரிகளுக்குத் தமது நின்மாலியங்கொள்ளத்தக்க தில்லையென்று சிவபெருமான் அருளினர்) எனக் கூறிய வாக்கியத்தைக்கொண்டு மெய்யறிவுறுத்தமையால் கண்டு கொள்கவென்க. இதனால் சிவப்பிரசாதத்தைத் தீண்டத்தகாதவர் பிறரெனவறிக.

உங. தென்குன்றை—தெற்கேயுள்ள குன்றக்குடி. தென்புலிநகர்—தெற்கேயுள்ள புலியூர். வடக்கேயுமிப்பெயருள்ள ஊர்கள் வேறுளவென்றறிக. உரு. சஞ்சைக்காத்தவழ்—தஞ்சாவூர்க்காடேறும். பத்தும்—பத்துக்காடும். இது, வயற்காடுகளில் இறைவனல் அமைக்கப்பட்டுள்ள நாற்றமும் (செந்தியும்), கரும்பொன்னும் (இரும்பும்), காக்கைப் பொன்னும் (கறுப்பு நிமிளையும்), சுக்கான்கல்லும் (சுண்ணக்கருவும்) என்னும் பெயரினவாய், பயிருணவுகளாய், பிறவுணவுகளையிழுக்கும் வலிமையைப் பயிருக்கு வேர்வழியேற்றி நிற்கும் இயற்கை யுரங்கள் நான்கு, நீர்ப்பாய்ச்சலால் வந்துகூடிப் பயிருக்கு உயிரை நிலைபெறச்செய்யும், நீர்க்காற்று உயிர்க்காற்று என்னும் காற்றுரங்கள் இரண்டு, எருழவாலும் நாங்கள் முதலியவை கிளைத்துச்செல்லுதலாலும், நிலத்தினுட் படிந்து செடியையுந் தழையையும் வளர்க்குங் கரிக்கால் (மலவாயு) சுவையைத்தரும் உப்புக்கால் என்னும் சேர்க்கைக் காற்றுரங்கள் இரண்டு, தாள் தண்டுகிளைகளைச் செழிப்பாகக் கிளைக்கச் செய்து பயிரை நிலைபெறச்செய்யும் குழை சாம்பல்களிலுள்ள காரமேற்றுதலாகிய வைப்புரம் ஒன்று, பாய்ச்சற்காலமெல்லாம் உயிர்பெற்றெழுந்து, காய்ச்சற்காலத்தின் மடிந்துபோம் நண்டு நத்தை ஊமச்சி முதலியவற்றின் ஓடுகளுடன் நீர்ப்பாம்பு தவளை மீன் முதலியவற்றின் பொடியெலும்புகளும் நொறுக்குண்டு தூளாயதினின்றும் பயிருக்கு மணிபிடித்தலாகிய வளந்தரும் முறுகலுரம் ஒன்று ஆகப் பத்து உரங்களைக்கொண்டு விளைவு செய்யப்படுதலின் பத்துக்காடெனப் பட்டது. அறியாதார் பற்றுக்காடென்பர் சாட்டுப்பத்து, கோயிற்பத்து, பிராட்டிபத்து, குறுங்காட்டுப்பத்து, காமக்குறப்பத்து, காருகுறிச்சிப் பிள்ளையார்பத்து, வீரசிகாமணிப்பத்து, மேல்பத்து, கீழ்பத்து, தென்பத்து வடபத்து, என வழங்கலறிக.

குருமை ரைப்பொழிற் குழுங்கடப் பத்தினிற் றிருத்தித்
தருதென் காசிக்கு வாய்த்தபே ரேரியுந் தழைத்து
வருக மக்குறப் பத்திற்றென் காசிக்கு வாய்த்த
பெருந ஆருநீ டாறனுட் டிறைசங்கப் பேரி. (உசு)

இன்க ணூர்வித ரணவினே தவளகா டென்னு
நன்கண் ணுற்றதாம் விசுவநா தப்பெயர்க் குளமுந்
தென்க ரைக்காரு குறிச்சியைக் கரன்குளப் பத்தும்
மன்க ளித்தரு ளினனினு வழங்கின பலவே. (உஎ)

செப்பக் கல்லக நாட்டுள வீரசி காம
ணிப்பத் திற்றுட்ட ராயர்கா ணேரியுந் தருவேந்
தொப்பத் தாவிறைக் குடியென வுதவலும் பதிவுங்
குப்பப் பட்டடைக் குடிகளாட் கொருபணங் கொடுப்பும். (உஅ)

ஆயத் துக்கொரு பணவரி யாதிகற் பித்துக்
கோயிற் பூசனை முட்டின்றி நாடொறுங் குலவப்
பாய சீர்ப்பதி னெட்டுநாட் டுள்ளவேண் மார்பா
லேய செப்பிதழ் தந்துகல் லெழுத்துநாட் டினனே. (உகூ)

ஆண்டுப் பாண்டிபன் னெட்டுநாட் டரசிளங் கோயார்
வேண்டு பத்திர வழியேயை விதப்புரி வார
ரீண்டு நிற்பத்தென் காசியா லயம்புரந் திறைபல்
வாண்டு நல்கவாழ் வாரவண் சிறந்ததத் தலமே. (௩0)

முன்னர் காசிகாண் பராக்கிர மன்கண்ட மூதூர்
பின்ன ரோங்குபொன் னின்பெரு மாள்கண்ட பேரூர்
தென்ன ராண்டது சண்பையூ ராயதென் காசி
நன்ன ாருமத் தலப்புகழ் நான்சொலற் பாற்றோ. (௩க)

காசிக் கண்ணுள கல்லெலாஞ் சிவலிங்க மாந்தென்
காசிக் கண்பலாக் கனியெலாஞ் சிவலிங்க மதன்மேன்
மூசிக் கான்குறு முள்ளெலாஞ் சிவலிங்க மதனுள்
ளாசித் துண்கொட்டை யனைத்துமே சிவலிங்க மாமால். (௩உ)

---

௩0 ஐவிதப்பரிவாரம்—பூசகர், தமிழ்மறையோதுவார், வேதபாராயணர், புரோகிதர், மணியகாரர் ஆகிய கோயிற்றொழிலாளர்.

வளர்ந்த தெங்கருள் முக்கணூர் காயெலா வளமாக்
கிளர்ந்த நீள்கமு கருள்பழுக் காயெலாங் கிளைத்துத்
தளர்ந்த வாழையின் மலரெலாங் காயெலாந் தழைகா
விளர்ந்த பூவெலாஞ் சிவலிங்க மாமன்பு விரிந்தால். (௩௩)

அருத்தி யார்தலந் தீர்த்தமூர்த் திகழ்சிறந் தவிரும்
விருத்தி மிக்கது சித்திரை வளத்தது விரிந்த
கருத்தி னூர்விழை யூற்றுள நிலத்தது கார்சூழ்
திருத்தி கழ்ந்தது நலந்தரு வளத்ததென் காசி. (௩௪)

எத்த லத்தினுந் தருமமே மிகுதல மேற்ற
மத்த லத்தினுஞ் சைவமா தலமதே யதிக
முத்த லத்தினும் பொழினதி வளத்ததே யுயர்ச்சி
முத்த லத்தினுஞ் சிறந்ததென் காசியே முதற்றூல். (௩௫)

தலங்க ளெண்ணில வாயிரத் தெட்டுமா தலமே
யிலங்க வற்றிரு நூற்றெண்பா னைந்துமே யேற்றந்
துலங்க வற்றிரு நூற்றெழு பானன்கு தூய்தா
லலங்க டத்திடு மவைதிகழ் நாடுபத் தாமால். (௩௬)

வடபொ ழிற்கணைந் திரண்டிழந் துளுவமொன் றுமால்
குடம லைக்கணொன் றேழ்கொங்கு தொண்டையெண் ணன்கு
திடபொன் னித்துறைத் தென்கரை நூற்றிரு பானே
ழிடவ டக்கறு பத்துமூன் றிடைபன்னொன் றிரண்டே. (௩௭)

நெடிய பாண்டிபன் னன்கிவை யாலவாய் நெல்லை
கடிகொ ளாப்பனூ ரிராமேசங் கானப்பேர் புத்தூர்
குடிகொ ளேடகம் பரங்குன்று கொடுங்குன்றஞ் சுழியல்
வடிகுற் றாலமா டானைபூ வணம்புன வாயில். (௩௮)

இப்ப னன்கினுட் சுழியனீக் கிருந்தசம் பந்தர்
செப்ப லாயிரு பத்துமுப் பதிகமேற் றிகழு
மப்ப ரைந்துசுந் தரரைந்து பதிகமு மமைந்த
தப்ப லாதநன் னகரமும் பாடலார் தலமே. (௩௯)

௩௫. உத்தலத்தினும்—அந்தத்தலத்தினும்.

சண்ப கம்பலா வுந்தழைத் தோங்குதென் காசி
வண்ப திக்கடங் தன்றிமாண் காழியர் கோமான்
பண்ப ழக்குறும் பலாநிழ லுதர்முன் பாடற்
கொண்ப தம்பிறி தில்லையான் மெய்மையுய்த் துணர்க. (சம)

## பொன்னிவடகரைப் பெருந்தலம்.

ஓங்கு தில்லைவெண் காடுமாண் பெரும்புலி யூர்நற்
பாங்கு றும்பனந் தாள்சிர புரமழ பாடி
தாங்கு சீர்கொளை யாறுவெண் ணுவலூர் தமினு
மீங்கு யர்ந்ததென் காசிமா தலமதே யேற்றம். (சக)

## பொன்னித்தென்கரைப் பெருந்தலம்.

பசுப தீச்சாஞ் சத்திமுற் றஞ்சிராப் பள்ளி
சிசுவுங் கன்றுநேர் பார்க்குமா ரூர்திருக் கடவூர்
வசும யூரமா வடுதுறை திருமறைக் காடு
விசுவ நாதர்தென் காசியே யிவற்றெலா மேலாம். (சஉ)

## நடுநாட்டுப் பெருந்தலம்.

அதிகை நாவலூர் முதுகுன்ற மருணையா மாத்தூர்
பதிவெண் ணெய்நலூர் பாதிரிப் புலிநகர் கருவூர்
துதியி வற்றினுந் தளுவமீ ழங்கொங்கு மலைநா
டுதித லத்தினுஞ் சிறந்ததா முயர்ந்ததென் காசி (சங)

## தொண்டை நாட்டுப் பெருந்தலம்.

மயிலை வான்மியூ சொற்றியூர் கழுக்குன்ற மாற்பே
றெயிலை யார்கச்சி காளத்தி யாலங்கா டிவற்று
மொயிலை யாள்வட நாட்டிலைந் தலத்தினு முயர்சீர்
பயிலை தார்ந்ததென் காசியே வுயர்வெனும படித்தே. (சச)

## பாண்டி நாட்டுப் பெருந்தலம்.

பாண்டி யிற்பதி னுன்குமேம் பட்டமா தலமே
யீண்டி வைக்கிலாத் தென்முடி சூடிய வியல்பால்
வேண்டி னுர்க்குவேண் டுவவெலாம் வேண்டியாங் கருள்சீர்
பூண்டி லங்குதென் காசிமாண் புணர்வராண் புலவர். (சரு)

---

சக வெண்ணுவலூர்—திருவானைக்கா. சஉ. வசுமயூரம்—ஒளியை யுடைய மயிலாற் பூசிக்கப்பட்ட தலமாகிய மாயூரம். செல்வம் பொருந்திய மாயூரமெனினுந் தகும். வசு—ஒளி, பொன், பசுமையென்னும் பண்பினடிப் பிறந்த மரூஉவே வசுவென்ப.

முப்ப திற்றிரண் டினும்பிற வற்றினு முதுதெற்
குப்ப னுன்கவை கழைக்குழை யடியினிப் புறல்போ
லிப்ப திப்பிறந் திடினெண்ணி னேக்கிடி னிறப்பின்
செப்ப முத்தியெய் தலாமன்பு செயினன்றூங் திறத்த. (சசா)

வேறு.

தெக்கண காசியே தருமத் தேட்டதாங்
தெக்கண காசியே தேக சித்தியாங்
தெக்கண காசியே சிவன்றூன் மைத்தலங்
தெக்கண காசியே சிவைநன் னேக்கதாம். (சஎ)

உத்தர காசியோ வுயர்தென் காசியோ
வெத்தலை முதிதெனி னிருந்த மிழ்ப்புவி
யத்தன்மக் களேமுத லாக்கு நாடெனு
முத்தமிழ் வலாரதை முதிதெ னுரென்க. (சஅ)

காசியி னுளிநடு வணதி ஞட்டமு
மூசியி னெருவிர லூன்றி நிற்றலு
வாசியி னிடகலே மறித்தி ரேசகங்
தேசியி னிசைத்தவை திகத்தின் சித்தியும். (சகூ)

வேறு.

சிசுவ ரத்தவம் பேறவாய்ச் செயுந்திற னதுவும்
பசுவ தைத்திடு முறைமையாற் செயுமகப் பலனும்
விசுவ சித்துவேள வியா லுறு பெரும்பலன் விளேவு
மசுவ மேதமே யாற்றலின் வரும்பல னனைத்தும். (ருய)

தரைக்கு ளோங்குமா சுவாகத மகந்தரு பலனும்
நிரைக்கு மின்புறு மிராசசூ யப்பல னிறைவும்
புரைக்கு றுதியல் சவுத்திரா மணிமகப் பொலிவு
முரைக்கு மாதிக வேள்வியா லுதவுநல் வளனும். (ருக)

வெருட ராதியல் சதுரயா கத்தினல் விளேவுங்
கருட வேள்விநன் றூற்றலால் வருபல கதியும்
வருட மானுமோம் பிடுபுண்ட ரீகத்தின் வாமுங்
திருட கற்றிடு நல்லங்கி யாற்றியாங் திருவும். (ருஉ)

மனுவ ழுத்திடு மிந்திராத் தீகமா தவமு
முனுவ தற்புத வாசிபெய் தீர்த்துளார்த் துரமும்
பனுவ திற்றெளி பிரமமே தப்பலப் பாங்குந்
தனுவ சித்திடு முயிர்நர மேதத்தின் றகவும். (ருங)

வேறு.

விரதவின் னவையு வேறு மிகுதவப் பேறு மோங்கு
மரதனு கரத்தென் காசி யதிற்புரிந் திடுதல் வேண்டா
வுரதய வொடுபி றர்க்கோ ருறுகணுற் றுது வாழ்ந்தா
விரதமார் கலங்க டாமே யிலையுமீ தன்மை யாமால். (ருச)

மறுவறுங் காசி முத்து வயிரமா ணிக்க நீல
முறுவயி டூயம் புட்ப ராகமே தகமொண் பச்சை
பெருவணப் பவள மின்ன பெருமணி வகையுங் காஞ்சி
தெறுவமே கலையுந் தானஞ் செய்பலங் காண்பார்க் கியும். (ருரு)

மின்னவ வொளிக்கல் லாலே மேனிகொள் கணேசன் கந்தன்
பொன்னவள் புணரு மாலீ னரிகர புதல்வன் வீரன்
சொன்னவை ரவன்மாண் டுர்க்கை தொழுமன்பர்க் கருளுமாக்கம்
மன்னவிற் பொன்பூ ணுடை வயற்றுனம் புரிவெற் றிற்கே. (ருசு)

வேறு.

ஒகன மெவர்க்குமே யுதவு தானமும்
மாதகை தீர்தணீர்ப் பந்தர் வைத்தலுந்
தீதறு மாணவர்த் தேற்று பள்ளியும்
வேதமேதன் காசியில் விளைவொன் றுயிரம். (ருஎ)

வேறு.

உத்தர காசிக் கங்கை முதற்கும ரிவரை யொன்பான்
வித்தர நதிக ளோடு விளங்குமற் றுளவு மின்ப
நித்தரங் தலமார் தீர்த்த நித்தமா டுநர்கொள் பேறோர்
சித்தான் றுடையா னந்த தீர்த்தமுங் கொளுந்தென் காசி. (ருஅ)

சுத்தலங் கனமே யாதி தொடங்கிய விரத சிலர்
நித்தலங் கடையும் பேறோர் நாளிலிங்கடைய நீட்டும்
முத்தலங் கருகா நந்த தீர்த்தமுந் தியுமே னல்கு
மித்தலந் தீர்த்த மூர்த்திக் கிணைநம்பற் குண்டே லுண்டால். (ருகூ)

---

ருரு. காஞ்சி—எண்கோவைமணி, ஒருபண். மேகலை—எழுகோவைமணி.

தெக்கண காசி சூழுந் திடனுறு காலே காலாந்
தெக்கண காசி நாதர் சீர்சொலு நாவே நாவாந்
தெக்கண காசிக் கோன்பாற் சிவையைக்காண் கண்ணே கண்ணுந்
தெக்கண காசிக் காதை வினுஞ்செவி செவியா மென்முன். (சுO)

கேட்டலு முனிவ ரின்பக் கிளர்ந்துநன் மக்கட் கன்ன
மூட்டலு மம்மை யப்பர்க் குறுகடன மக்க ளன்பு
காட்டலு மாணை நாளுங் காத்தலுங் கடனு வுள்ளார்
கூட்டலுக் கருளு மன்புங் குலாவவூழ் வேண்டு மன்றோ. (சுக)

ஆதலி னெம்பா லன்பாய்ந் தரனரு ளைக்கு பார்ந்து
காதலி னெழுந்த நீதென் காசிமா தலச்சீர் சொற்று
மீதலி னினித்தற் காகூ ழிருந்ததே யிதன்மே லெங்கட்
கோதலி னறன்வே றின்றென் றெழுகின்பக் கண்ணி ராழ்ந்தார். (சுஉ)

## தலவிசேடம் முற்றிற்று.

ஆகப்பாட்டு உகூW.



# நாலாவது தீர்த்தவிசேடம்.

அடியவர்க் கெளியன் காதை யவாம்பசி மிகுந்தன் பார்ந்து
கடியடைப் பிலாக்கா தங்காந் திருகணீர் கான்று வேண்டும்
படியறி வார்த வத்தர்ப் பார்த்திலே யெனுத வள்ள
னெடியகு தன்றென் காசி நிறைந்ததீர்த் தச்சீர் சொல்வான். (க)

நிருமல வண்ண லார்தந் நியமத்தை முடித்தற் காகப்
பெருமகிழ் வொடுகும் பாதி முனிவரர் பிரியத் தோடு
திருமலர் நறுந்தே னூற்றுஞ் செண்பகா டவிவந் தன்றைக்
கருமமு முடித்து மாயோ கணைந்துபின் கண்வி ழித்தார். (உ)

தடங்களின் மழைபெய் யாதே தகைவளங் குறைந்து மற்றை
யிடங்களின் வறந்து மாக்க ளிருந்தவர் வருந்தல் கண்டு
விடங்களத் தமைத்த வையர் விரிமலர்த் தாளேத் திட்டிங்
கடங்கலுந் தழைக வான்பெய் வானருள் கென்றி ரந்தார். (ங)

## ஆனந்த தீர்த்தம்.

அரவநீர்ச் சடையெம் மண்ண லவனொழுந் தருளி வேண்டு
முரவரின் பார வான்பெய் துலகெலா மகிழச் செய்தான்
பரவவர் தடமொன் றிங்கே பணித்திட வேண்டு மென்றார்
கரவரோ ரான்கைச் சூல மோச்சினன் கார்பொங் கிற்றே. (ச)

பொங்குநீர் வானத் தாறே பொருமெழு கடலோ வேழு
மங்குலோ சிரமீ னைஞ்ஞா றுளவர நதியோ வென்ன
விங்குள முனிவ ரஞ்சி யிஃதொரு தடத்து ளாக
வங்குளக் கண்ணுசெய்திவ் வவனிகாத் தருள்கென் றூரால். (ரு)

கடமுனி முதலோர் வேண்டு கருத்தமைத் தமலன் சூல
மிடமுகிழ் கங்கை நீத்தத் தினையருட் கண்ணாற் பார்த்தீண்
டடமுறே லிவனோர் பாலா யருந்தவர்க் கமிழ்த மாகித்
தடமுறு முதன்மை நீராய்த் தயங்குகென் றபய மீந்தான். (சு)

அன்னவா றுணை நல்க வாயிர முகத்தா ளொன்றாய்த்
துன்னவா வியளாய்த் தண்டேய் சுனையிலே யமைந்தாள் சொல்ல
முன்னவாக் கொடும ஞதிக் கநாதியா முதல்வன் வாவி
மன்னவா ளிலிங்கத் தூடு மறைந்தன னிருந்தான் மன்னே. (எ)

பெருமையிற் றனக்கொப் பின்றிப் பிறங்குநல் வளத்தென் காசி
யொருமையுற் றறமெண் ணன்கு மோங்கவே வளர்க்கு நீரா
லிருமையும் பெறுமு ரத்த திறைவிசு வேச னன்பா
ரருமையம் மகவ ளர்க்குஞ் செவிலிபோன் றதேயவ் வாவி. (அ)

அருவமா யுருவ மாகி யருவுரு வாகித் தாமே
யிருவகை யுருப்பெண் ணு யெவற்றினு மிசைந்து காட்டு
மொருவராம் போல நின்றே யுத்தம குணங்கண் மன்னித்
திருவளர் வாவிக் கூவற் சிறப்பியா னளக்கற் பாற்றோ. (கூ)

காணினும் பாவம் போக்குங் கங்கையா மந்நீர் தோய்காற்
பூணினுந் தீங்கு நீக்கும் புன்றுளி படினன் றூக்குஞ்
சேணினுங் கொடுபோ மந்நீர் தீண்டிடிற் புலமை யுண்டா
மாணினும் பெணினுந் தோய்வார்க் கருள்வருமுனினின் பார்வார்.

முந்திய பிறவி தோறும் முயன்றநற் றவத்தி னாலே
பிந்திய பிறப்பிற் றுய்க்கப் பெறுநல மனைத்து மாமா
னுந்திய நல்லூ ழாவின் குறிதொருக் காவிர் தோய்ந்தாற்
சிந்திய தீமை வேண்டுந் திருவெலாம் பெறுத லாமால். (௰௧)

தேவரு முனிவன் மாருஞ் சித்தரும் பூத ராரு
மேவரு மித்திர்த் தத்தி லெள்ளுநீ ரும்மி றைத்துத்
தாவரும் பவித்தி ரத்தாற் றருப்பண திகளாற் பெற்றோர்க்
காவரும் பேறி வாரா லறிந்திதை மதிப்பார் மேலோர். (௰௨)

பிறபுனற் சந்தி பண்ணிற் பெறுவதி னூறு பங்கும்
பிறபுன லாடு நோன்பாற் பெறலினு யிரம டங்கும்
பிறபுனற் றருப்ப ணாதிக் குதவுபே றயுதங் கூறும்
பிறபுன னுண நல்கும் பிறங்கிதே விசுவ தீர்த்தம். (௰௩)

போதக மாறித் தீண்டாப் பூவையைப் புணர்தல் கோறற்
பாதகஞ் செயல்கள் ளுண்ணல் பார்பொருட் களவு செய்தல்
சேதகக் குருவை யெள்ள லிவற்றினுந் தீமை யெல்லாம்
வேதகர்த் தரின்றென் காசி விசுவதீர்த் தந்தான் றீர்க்கும். (௰௪)

## சகத்திர நாம கங்கை.

சகத்திர நாம கங்கை தழைபெய ரொவ்வொன் றிற்கும்
பகத்திரி தளமார் வில்வ பத்திர மொவ்வொன் றிட்டு
முகத்தினீ ராட்டன் மூழ்கன் முற்றுடன் மூழ்கொண் ணுகாற்
சுகத்தினுக் கிரும்பை கொண்டு தோயலா மறைநூற் றெட்டே. ()

வேறு.

விமலை காந்தி கலியாணி விசையை விந்தை விபூதியொளி
யமலை யமுதோ தயைய துலை யநந்தை யனுதை யபிராமி
கமலை கவுரி கந்தவதி கங்கை காயத் திரிகருணை
நிமலை வாம தேவிசுதி நிதியை நியதி நிமித்திகையே. (௰௬)

இரதை யுதாரை யோங்காரை யீசு வரிவல் லபைதாரை
விரதை யேகை யானந்த வல்லி வியாசை பராநந்தி
வரதை பாகீ ரதிசீலை வதிப வானி விப்ரவதி
சரதை சாந்தை குணநிதை சாசா சாரை சானுவியே. (௰௭)

---

௰௪. போதகம்—நூல்கள் போதிக்கும் நெறிதேர்ந்த அகமானது. சேதகம்—செம்மையாகிய உள்ளத்தையுடைய.

சித்தி ரரூபை தவரூபை சிற்பிரசா ரூபை சிதாகாசை
முத்தி கூடை வேதமுகை முனிசை குடிலை சுமுகைபரை
பத்தி சைரமா திருபோக வதிபா பகாசை தவசித்தி
மித்தி ரகையை மனப்பிரியை வேக வதியம் பிகைசோமை. (௧அ)

ஊனுண் மருவுஞ் சிவைசை சருவோத் துங்கை புத்தமையே
தேனுண் மதுர விரம்மியையே சிறந்த திரிப தாகைசுதை
சானு மதிய வசுதாரை தரும ரூபை நிராலம்பை
பானு மதிரூ பினிதேவை யகோரை தவையே பராசத்தி.(௧௯)

வேறு.

சருவ மூர்க்கு மப்பல தாபை சருவாங்கை
சருவ. தாயினி சருவயோ கினிசர் வப்பிரியை
சருவ சோபனை சருவமா சுசியை சர்ச்சரையே
சருவ மங்கலை சகளைசாம் பிராச்சி யைசலசை. (௨௦)

சருவ வீடிதை சருவவா கினிமன் சருவவெக்கை
சருவ கத்திரு சருவமோ கினிசா விடாகினியே
சருவ பத்திரை சருவகந் திரைமான் சருவவம்சை
சருவ வெதிதாயி வரமிது சகச தாசிரையே. (௨௧)

சருவ காமிய கோசையே சருவோத் தாரணையே
சருவ பூடணை பூசிதை சகத்ர முக்தாபை
சருவ பூரண வாகமாச் சரியை யென்றிவற்றை
சருவ மாக்தருஞ் சொல்லியே மூழ்கிற் றவமாமால் (௨௨)

வேறு

இப்ப டிச்சகத் திரஞ்சத மெனுமறை யியம்பி
யப்ப டிக்கடத் தெடுத்துநீ ருச்சைசெய் தாடின்
செப்ப டிச்சரோ ருகவாயி யேமகா திவ்யே
முப்ப டிச்சிவே காவென மூழ்குக மூழ்கின். (௨௩)

இட்ட காமிய மெளிதினி லுலைவிலா தெய்துங்
கட்ட காலமுந் தீர்ந்திடுங் கங்கையின் பெயரை
வட்ட காதலால் வரையினு வரைந்ததைத் தொழினுந்
திட்ட காமமாந் தறிவுநா லறிநெறி தெரிவார். (௨௪)

---

௧அ. முத்திகூடை—முத்திரகசியை. சோமை—சந்திரி. ௧௯. இரம்மியை—நிறைய மகிழ்ச்சிதருபவள். இலப்பியையெனவும் பாடம். ௨௧. சருவ ஈடிதை—எல்லாப்புகழு முடையவள்.

ஞ்சவ வாசிரி யாபிடே கஞ்செயந் தணராந்
தெய்வ தேசிக ரின்னமந் திரஞ்சொலித் தீர்த்தம்
பெய்வ ளக்குட மாட்டிடப் பெறுதவர் தோயிற்
கைவ ரும்பல னவளவிற் கோடியாக் காண்பார். (உரு)

வேறு.

போற்றிருக் கோதித் தேர்ந்த புனிதர்கண் மாதந் தோறும்
பாற்றிருக் கங்கை தீர்த்தம் படிந்துசந் தியுஞ்செய் தாற்று
மேற்றிருஞ் சிருக்கி ஞேடு சிருவநெய் பூர்ஞெ மத்தா
லேற்றிருந் தசத்த ரந்தண் கயிலைவிற் றிருப்பா ரென்றும். (உசு)

## காசிக்கிணறு.

கூவலி னுருவங் காட்டிக் கொடியபா வங்க டீர்ப்ப
மேவலி னிலயத் தின்மீ சுரந்திரி வேணி வாணி
பாவலி னிறைதென் காசிப் பரமருத் தாத்து தீத்தம்
பூவலி னிஃதொன் றென்னிற் புராரிநேர் பிறர்க்காண் சிரே. (உஎ)

இச்சகத் தோர்க ளுகை ரிமையவர் முனிவர் சித்தர்
மெச்சவெத் தனைபேர் மூழ்கி மேன்மையிக் கடைந்தா ரிந்நீ
ரச்சனச் சிருயாழ் வல்லார்க் கறிவரு ளிதுபோ னுண்டோ
முச்சகத் தினுமி தன்பேர் முதியதென் காசிக் கூவல். (உஅ)

## வயிரவ தீர்த்தம்.

வயிரவ தீர்த்த மொன்று கோயிலின் வடகீழ் பால
துயிரவ நெறியிற் சேரா துணர்வெழுப் பிடுமஃ தாடின்
செயிரவர் சாந்த ராவா ரொளியவர் செல்வ ராவா
ரயிரவ னையந் தீர்வா ரரசுவல் லரசா வாரே. (உகூ)

என்றவர் மகார்த்தி ருத்தற் கிரக்கமேன் மறைத்தொ றுத்தே
யான்றவ ராக்கு மாப்போற் செருக்குறி னயன்மா லேனு
மூன்றவன் சூலங் கைக்கொ ளாயதோத் தார ணன்கார்
மான்றவர்ப் பிணிக்கு வந்தா டிடிற்குணந் தருமருந் தாம். (௩௰)

உடம்புநோ யெல்லாந் தீரு மொளிபெறு நலங்கள் சேரு
மடப்புகு மூட மாறு மகந்தெளிந் தறிவ தேறுந்
தடம்புரள் கவலை நீங்குந் தழைத்துவாழ் வின்ப மோங்கும்
மடம்புகா மக்க ளுண்டாம் வடுகதீர்த் தந்தோய் வார்க்கே. (௩க)

உஎ. மீசுரம்—மேலான. ௩௰. மான்றவர்—மயங்கிக்கிடப்பவர்.

## அன்னபூரணி தீர்த்தம்.

திகழ்மடைப் பளிப்பா லன்ன பூரணி தீர்த்த மொன்றுண்
டகலதின் மூழ்கி னின்பம் பொருளறங் கிடைக்கு வீடுந்
தகவுரு மதன்கண் சைவர் வைதிகர் தாந்தோய் வார்மே
னிகரிலா லயமூர்த் திக்கந் நீரபி டேக மாமால். (ந௨)

அன்னபூ ரணிதீர்த் தத்தா லாக்கமிழ் தொருபி டிக்கு
மன்னரா வாரே லந்நீர் மாண்பளந் துரைப்ப தாமோ
மென்னலிங் கிரந்துண் டோரந் நீராடி னானை யீசற்
குன்னத தோழன் போல்வா ருஞற்றுவா ரறமெண் ணுன்கும். (

## ஐந்தகத் தீர்த்தத் தொகை.

சிவைமுனு னந்த தீர்த்தம் பின்சகத் திரமா தீர்த்தம்
நவையிலுத் தரத்துக் காசி நனீரதன் கீழ்பா லெட்டுச்
சுவையருள் வடுக தீர்த்தஞ் சுவைமடைப் பள்ளித் தீர்த்த
மிவையைந்துங் கோயி லுள்ளா மினிவெளித் தீர்த்தஞ் சொல்வாம். (ந௪)

## ஈசான தீர்த்தம்.

அதிகனு விசுவே சன்றென் காசிநா யகற்கீ சானம்
பொதிகளார் பலர்க்காத் தென்றற் புதுமணந் தவழூர் தீர்த்தந்
துதிகம ழராவு மாவித் துணைப்பெயர் நெடில்சேர்ந் தோமின்
பதிகண்மூன் றுடையான் பேராற் பயிலதே யிராம தீர்த்தம். (ந௫)

சைவனு மயோத்தி மன்னன் றயரதன் வசிட்ட னாணை
கைவரச் சிவன்பேர்த் தேர்ந்து கண்டுகொ ளிராயப் பேர்சேய்க்
குய்வருள் வான ளித்த தோக்குபப் பெயரார் தீர்த்தந்
தெய்வதீர்த் தம்மத் தீர்த்தஞ் சிவன்சிவை வடிவ மாமால். (ந௬)

---

ந௫. பொதி—பொதியமலைக் கண்ணுள்ள. ஒமின்பதி கண்மூன் றடையான்பேர்—பிரணவ சத்தியாகிய உமாபதி என்னும் முக்கட்பெருமானது பெயர். இதனை, "ராமாபிராமாம் சௌந்தர்ய சீமாம்" எனவும், "ராமந்திரி நேத்ரம்" எனவும் முழங்கும் ராமரகஸ்யோப நிஷத்து ராமதாபினியுப நிஷத்துகளாற் றெரிந்து கொள்க. ந௬. அயோத்திமன்னன் சைவன் என்பதை "த்யாத்வா ரகுபதிம் க்ருத்தம் காலாநல மிவாபரம்— பீதக்ருஷ் ணாஜிநதரம் பஸ்மோத்தூளந விக்ரஹம்" எனவரும் இராமாயண ஸ்லோகத்தாலுமறிக.

உயிரெலா மிரமிப் பிப்ப துமாபதி குணரா மேசப்
பெயரனீ சானப் பொய்கை பிறங்குமா னைந்திற் றேனிற்
றயிரிள நீர்பால் சாற்றிற் றயிலமைந் தமிழ்தின் மேலா
னபிடேக தீர்த்த மானுடு மதுமாண் சீர்த்தே. (௩௭)

அகத்தீர்த்தம் ஐந்தின் முதலாகிய ஆனந்ததீர்த்தம், புறத்தீர்த்தம்
ஐந்தின் முதலாகிய ஈசானப் பொய்கை இவற்றின் பெயர்.

முன்னதைச் சூல தீர்த்த முனிதீர்த்தம் விசுவ தீர்த்தம்
பன்னரு மின்ப தீர்த்தம் பாதல தீர்த்த மென்ப
வின்னதை யிராம தீர்த்த மிலங்குமீ சான தீர்த்தம்
பொன்னுமா பதிதீர்த் தங்காண் புதுமணத் தீர்த்த மென்ப (௩௮)

நித்திய மாவெங் கோமா னிருமல விசுவே சற்குப்
பத்திமஞ் சனமெ டுத்துப் பரம்பரை யபிடே கிக்கு
மித்திருக் தத்தின் மூழ்கி னிம்பரு மும்ப ராருஞ்
சத்திய முத்த ராவார் சஞ்சல வினைக டீர்வார். (௩௯)

அரவணி சிவன்வெண் ணீற்று நிறத்துமைப் பசுமை யார்ந்து
விரவலா லைய மின்றி விளங்குமா பதிதீர்த் தத்தை
யிரவகற் றிரவி யுச்சிக் காலையிற் றெரிசித் தேகுங்
கரவறு மதியு டுக்கோள் களுந்தெரி சிக்குங் காண்மின். (௪௰)

சிவனென வங்கை யள்ளிச் சென்னியிற் றெளித்துக் கொண்டாற்
பவமொழிந் துலகி லெட்டுப் பாக்கியம் பெறுத லாகுந்
தவமுயர் சந்தி யாதி தருப்பணா திகளித் தீர்த்தத்
திவரவாற் றிடினெ வற்று மிவைபலத் திலக்க மேலாம். (௪௧)

## சித்திராநதித் தீர்த்தங்கள். (நவகங்கை.)

சித்திரா நதிதென் னாற்றிற் றீர்த்தமோ பலவ வற்று
ணத்தியல் காசித் தீர்த்த நவமவை சித்தி ராங்கை
கந்தினை மயேசை பத்மை மணிகன்னி கைபி ராமி
சத்திகௌ மரிவ ராகி சமுண்டியிந் திரையா மென்ப. (௪௨)

---

௩௭. இரமிப்பிப்பது—மகிழச்செய்வது. ௩௯. பத்தி—அன்பாக, நட்பாக, வழிபாடாக. ௪௨. கௌமரி—கௌமாரி. சமுண்டி—சாமுண்டி. மாரி—மரியெனவும், சா—சவ்வெனவும் நின்றமைகுறுக்கல் விகாரம்.

## நவ கவுசிகை.

சிவகங்கை யாமிவ் வொன்பான் றீர்த்தமு மின்ன போராற்
றவமுறல் வரலா றோர்காற் றழைதரத் தோன்று மற்றோர்
நவகவு சிகையா ழோன்கா ணாரதை மான்முன் னோர்முன்
னிவர்சிரும் பனைவெல் வான்றோப்ந் தெழுந்ததா மகாக யந்தான்

மும்மடிக் குடிலைத் தோற்ற மூலெழுத் தாகி முன்னோன்
றம்மடிக் கவினா தாந்தக் தன்மய மேயாய் நின்ற
வெம்மடிக் கனுக்கு மேலா .யிலங்குமா மேருக் கிர்த்திக்
சம்மடு மூன்றுங் கின்ன வருளிலை யிவை மே லாமால். (௪௪)

குலவுசொக் கேச° தீர்த்தங் குடிஞைபந் தீர்த்தங் கோதி
ணலவுரை கபத்தின் றீர்த்தம் நாரணன் றீர்த்தங் கீர்த்தி
கலவுயர் சரப தீர்த்தங் கவினர சிங்க தீர்த்தம்
புலவுகுஞ் சூல பாணி புரந்தரு ளிவைபொன் பானே. (௪௫)

## சோடச தீர்த்தம்.

பிரமனார் பிரம தீர்த்தம் பிறங்குசித் திரைமா தீர்த்தந்
திரமலி முனிவர் சூழ்வந் தாடகத் திபதீர்த் தஞ்சீர்
வரமணக் கணேச தீர்த்த மகிழமச் சுவாத தீர்த்தந்
தரமதி நந்தி தீர்த்தந் தாளவெண் சலசை தீர்த்தம். (௪௬)

கருமலக் குமிதீர்த் தந்தாய் தருசத்தி வேலோன் றீர்த்தம்
பெருமணா நடேச தீர்த்தம் பிறங்குசங் கரமா தீர்த்தந்
திருமனும் பதஞ்ச லிப்பேர்த் தீர்த்தமாண் புலியார் தீர்த்த
மருமலி கால கால வயிரவி தீர்த்த மாதோ. (௪௭)

இபப்புசார்த் னாலதோலர் கணபதி தீர்த்த மென்றும்
வயப்புகு வாலிதீர்த்த மாண்புறு மிவைபன் னாறே
விபப்புகன் றளவு மன்றி விண்டுதொட் டறுபா னாறு
நயம்புனர் துறைவே றுண்டா னடுமுக் கோடி யாடும். (௪௮)

## கோமளா தீர்த்தம்,

சாமளை யமுனை பென்னத் தானுவி லுதித்துத் தாரு
பூமழை சொரியப் போகிப் புனலலை திவலை வீசி
யாமளை யவள்முக் கோணத் தம்முனைச் சூலத் தாய
கோமளை தீர்த்த மந்தர் வாகினி கோடித் தேதும் (௪௯)

---

௪௭. பதஞ்சலிப் பேர்த் தீர்த்தம்—புலியூருக்குத் தெற்கிலுள்ளது.
௪௯. கோமத்து—கோஷித்து.

## திரிவேணி சங்கம்.

சித்திர வடிவ மான திரிவேணி சங்க மாத
லத்திர தேவ னென்ன வருபவ மழிப்ப தால
பத்திரன் பொருந்தி நின்றுன் பவனமேல் பாலா மந்த
முத்திர வளத்தீர்த் தத்தின் மூழ்கினோர் முதன்மைத் தாவார்.

## திரிவேணி மூழ்கினோர் பெறும் பலன். (வேறு.)

முருகுமொய் தடந்துறை யதனின் மூழ்கினோர்
பெருகுகட் டங்தொலேந் தின்பம் பெறறுய்வா
ருருகுமன் பொடுபவித் திரத்தந் நீருளோ
பருகுவோ ரனைவரும் பலனன் கார்வரே. (ருக)

மாகமா மதியிலே வளங்கொள் பூரணை
யாகமா மதிகளி னறைக சங்கற்பம
பாகமா றிலாதுவாய் பாடித் தேயுளச்
சோகமாற் றிடுநதி தோய முத்தியே. (ருஉ)

வேறு.

சகத்தி லேதமே தீர்ந்திட வெளியவர் தாழ்விற்
சுகத்தி லாபமே தருதிரி வேணிநீர் தோய
வகத்தி லெண்ணிய மனுவொடு தருப்பிக்கு மவரே
யிகத்தில் வேந்தராய்ப் பின்சிவ னுலகமெய் துவரே. (ருங)

## அந்தர் வாகினி கவுரிதரும் பலன்.

குச்ச கன்படிந் துய்ந்தகோ மளப்புனல் குளித்தா
லச்ச கட்டமேல் லாமறுங் கவுரிநீ ராடிற்
றுச்ச கத்திதீர்ந் திடுமண மங்கலந் துய்ப்பா
ரச்ச கத்தினு மேற்றமாங் கதியுமெய் துவரே. (ருச)

## கங்கைதரும் பலன்.

கங்கை தேன்றுறை யாயசெவ் வியதாங் கணிநன்
மங்கை யோங்குதென் காசியின் வந்துசேர் துறையி
னங்கை நம்பியோ டுயிர்த்ததம் மகார்குழீஇ நயந்தே
யிங்கை தன்பொடா டிடினற வாழ்க்கையா மின்பாம் (ருரு)

---

ருக. ஆலபத்திரன்—சிவபெருமான். (விடத்தைப் பத்திரப்படுத்திய வன்.) திரிவேணி—தடந்துறை. பவனமேல் பால்—கோட்டைக்குமேல் பக்கம். ருஉ. மாகமாமதி—பெருமை பொருந்திய மாசித் திங்களில். ருச. கோமளப்புனல் —அந்தர்வாகினி.

## அறுபத்தாறு தீர்த்தப் பலன். (வேறு.)

அறுபதோ டாறுதீர்த்த மநாதியென் றூறு சென்னி
பெறுபனி ரண்டுகண்மணம் பிரான்வழு திக்குச் சொற்றூன்
மறுவறு மதுதோர்ந் தன்னோன் மகிழ்ந்தவை பேணியாடி
யுறுபல னனைத்தும் பெற்று னுலகெலாம் புரந்தின் பார்ந்தான். ()

ஆதரந் தருமத் தீர்த்த மறுபதோ டாறுங் கூறின்
சீதரன் றீர்த்த மைந்து திருநந்தி தீர்த்த மொன்று
மாதர மாதே வற்கைந் தீர்த்தமான் மகற்கோர் தீர்த்தம்
பூதரப் பொறிக்கோர் தீர்த்தம் புகழ்கலை மகட்கோர் தீர்த்தம். ()

கன்னிய ரோன்பான் பேராற் காண்டீர்த்த மொன்பான் சேய்க்கு
மன்னிய தீர்த்த மேழு வயிரவன் றீர்த்தம் பத்து
தன்னிய கணேசற் கைந்து தீர்த்தமா சாத்தன் றீர்த்தந்
துன்னிய பன்னொன் றேனைச் சுரர்தீர்த்தம் பத்தே யாமால்.(ருஅ)

சிறந்தவித் தீர்த்த மெல்லாஞ் செறிந்துசித் திரைமா தீர்த்தம்
பிறந்தநிக் காசித் தீர்த்தம் பிறங்குமேற் குங்கி ழக்கு
மறந்தழைத் தருனை ராடற் களவையோ சனைநா லாமீங்
கிறந்தவர் பிறந்தோர் தேவ ரிறைவராய் நலந்துய்ப் பாரே. (ருகூ)

## சோடச தீர்த்தப் பலன்.

சோடச தீர்த்த மாடிற் றென்மறைப் பொருள்வி ளங்குங்
கேடறு மழகு டம்பாங் கிளற்றுமெண் சித்தி யுண்டாங்
கூடலர் நடுங்க வென்றி கூடிடு மாண்மை மீறுந்
தேடதி கார மோங்குந் திருத்தகு கற்பார்ந் தேறும். (சூ0)

நிறைந்தசெல் வங்க ளுண்டா நீடுல கேத்து வாழ்வா
மறைந்தவா றுலகஞ் செல்லு மணியணி மணவாழ் வுண்டா
முறைந்தவன் போங்கு மீசன் றொண்டெலா மொழுங்கா மன்னு
மறைந்தடன் மறனு டாத வாழ்வுகை வருமின் பாமால் (சூக)

---

ருஎ. பொறிக்கு—இலக்குமிக்கு. ருஅ. கன்னியரோன்பான் பேர்—பிராமி, இங்கிரை, கவமாரி, சாமுண்டி, நாராயணி, மகேசுவரி, வராகி, சித்திராங்கி, மணிகன்னிகை என்னும் ஒன்பதின்மர். தன்னிய கணேசற்கு—செல்வக்கணபதிக்கு. சூக. அடன்மறன்—வலிய எமன்.

## நவகங்கைப் பலன்.

பகருமட் டாங்க யோகம் பலித்திடுந் தூய்மை யுண்டாம்
நிகருயர் விலாத்தென் காசி நிமலர்தீர்த் தப்பே றீதே
சுகருறொன் பதுகன் னித்தாய் மார்தீர்த்தஞ் சுகமே நல்கு
நகருமெண் டிக்கு மாடி நலனெலாம் பெறுவ வாமால். (௬௨)

## நவ கௌசிகைப் பலன்.

கௌசிகை சாம கானஃ் கதுவெமா னருள தாமால்
கௌசிக நார தைதோய் கண்ணியர் சுரந்தோர் வாரால்
கௌசிக மகாக யந்தான் கலுழிடர் தீர்த்தேத் தியும்
கௌசிக முக்க யம்மோங் கணிப்பவர் பெறுஞ்சீர் நல்கும்.(௬௩)

ஒங்குசொக் கேச தீர்த்த முயர்சிவ ஞான நல்கு
மாங்குடி னைக்கா ரின்ப மளிக்குநா ரணனீர் கீர்த்தி
தாங்குா னுதவு வீரந் தருமெழிற் சரபத் தீர்த்தம
பாங்குறு நரசிங் கக்கார் பதப்படுத் துயர்த்து மாலோ. (௬௪)

மதகய தீர்த்த மின்பு வழங்கிடுஞ் செருக்கொ ழித்தே
பதகருந் தோயிற் றூய்மை பயக்குமொன் பதன்சீ ரீதால்
சிதகனுங் குருவுந் தோரச் சிறப்புறுந் தீர்த்த மெல்லா
மதகமாம் பிறவி நோய்க்கே யமிழ்தமா முயிர்த்தொ கைக்கே. ()

வேறு.

கூதன் மாரி நுண்டுளி தூங்குங் குளிராட்டி
வேதண் டத்து முதுகுற் றல விரிநீர்தோய்ந்
தீதல் வடிவா மெம்முல கம்மை யிடப்பால்வாழ்
நாத னுறையு நன்னகர் காண்பார் நல்லாரே. (௬௬)

பழங்குற் றல நின்றழ காறு பாய்ந்தேறி
முழங்குந் திரைக்கை யால்விளை செய்பார் முளைபேணி
வழங்குங் கடைவா யூர்வளங் காத்து மகிழ்சங்கம்
புழக்கும் நலனுர் சித்திரை கூடற் புகத்தென்றுன். (௬௭)

# தீர்த்தவிசேடம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௩௱௭.



# ஐந்தாவது மூர்த்திவிசேடம்.

தெக்கண காசித் தீர்த்தச் சிறப்பினைக் கேட்ட மெய்ய
ரக்கணத் தமிழ்தந் துய்த்த வமரரிற் சிறந்தா ரின்ப
மிக்கண மூர்த்தி சீர்த்தி யியம்புகென் றிறைஞ்சச்சூதன்
முக்கணம் பிரானி லிங்க முதன்மையா தியசீர் சொல்வான். (க

வேறு.

செகத்தின் முச்சுட ருளவவற் றுள்ளொளி திகழு
மகத்தி னின்றெளிர் வதுபிர தானமா மிலிங்க
மகத்தின் மற்றவற் றடங்கலு நிறைந்தமாண் சோதி
யிகத்தி னிற்றெழு விலிங்கியென் றிருந்தன னருளால். (உ)

தூல சூக்கும காரண மாகியே சொருப
மூல காரணா தீதமாய் நிற்குமோர் முதலு
ஞல மார்களத் தெந்தையா யருள்வினை யாடற்
கோல னியெழத் தொழுமெய்யிவ் வருவுருக் குறியே. (ந)

வேறு

இவ்விய லிலிங்கந் தானு மிசையுமைம் புலனே யின்றி
நவ்விய வுணர்வே யின்றி நவில்கரு விகளே யின்றிக்
கவ்விய வகில முற்றுங் கவர்ந்தறிந் தனுப வித்தந்
திவ்விய விமல மேயாஞ் சிவமிதே விசுவ லிங்கம். (ச)

வெல்லியற் சமட்டி நாதன் விசுவமே மூவைதா மாயால்
புல்லிய பிராண னென்று புகலுயந் திரமி ரண்டு
செல்லிய னடி மூன்று திகழ்பிரா சாத நான்கம்
மெல்லியற் சத்தி யைந்து காலமா றேழு தத்வம். (ரு)

எழுவித விசுவ மான விவற்றொரு பிராண னுக்குத்
தழுவிய மனமே சீடன் றானுமான் மாவு மொன்றாய்க்
கொழுவியு மிரண்டின் றூய வயிக்கியக் கூட்டுட் பட்டே
வழுவிலா வியற்கைத் தாயோர் மார்க்கமுற் றிருப்ப தாமால்.(சு)

மந்திர விசுவ மூலா தாரத்து மனுப்பிரா சாத
மந்திர மிரண்டுந் தீர்க்கப் புலுத்த தானத்து மன்னி
யந்தர வான்மா வோடு மயிக்கமா யகார மாதி
யந்தர விந்து மட்டும் நான்குமார்ந் தப்பா லாமால். (எ)

---

எ. தீர்க்கப்புலுத்த தானத்தும்—நிலைறயும் பத்தாகிய தந்தானங்களி லும். அந்தரவான்மா—இடையில் சாக்கிரத்து நுதலினும், சொப்பனத்துக் கண்டத்திலும், சுழுத்தியில் இதயத்தினும், துரியதுரியாதீதங்களில் வேறிரண்டிடங்களிலும் தங்குமுயிர்.

அருத்தசந் திரனி ரோதி நாதநா தாந்த நாற்கோவ்
வொருத்தல மாக வோது மிருதயங் கண்டத் தானு
புருத்தனி நடுவி தன்மேல் பிரமரந் திரமபோய் மீண்டே
யிருக்தனு மாததான் போய்மீண் டிலங்கிடு மிதன்சீ ரீதே. (அ)

சூடிய விசுவம் வீணை தண்டொடு துவாத சாந்தங்
கூடிய பத்துத் தானக் கிரந்தியுங் கூறு வேறு
யூடியற் படுத்துப் பேதித் தடலொலி பிரவே சிக்கு
முடிய பத்துத் தான நிறைவினை மொழிவல் கேண்மோ. (௯)

ஏற்றிய மூலங் குய்ய மிருங்கிழங் கிதைய மேற்கம்
போற்றிய கண்டத் தானு புருவங்கள் ளாறு நாரஞ்
சாற்றிய நிராதா ரம்மீ தானமேற் பிரம ரந்த்ர
மாற்றிய துவாத சாந்த மாகவிப் பத்தே தானம். (௰)

ஆகிய முடிச்சுப் பத்து மூலமந் திரகூ லத்தாற்
போகிய வாப்பே தித்துத் தசநாதம் பொலிவித் தந்தப்
பாகிய நாடி யோடுங் கூடுத லாகப் பண்ண
வாகிய பிராசா தந்தான் விசுவமே யுரைத்து நின்றே. (௰௧)

அகரமே யுகரத் தோடு மகரவிந் தருத்த சந்த்ர
னகரமைந் தாமதி ரோதி நாதநா தாந்த மூன்றும்
பகரவொன் றுயா றகும பதிவிட்டங் கேழாந் தானம்
நிகரசை தன்னி யாக்யம் பணித்துமிந் தியங்க ணிகதி. (௰௨)

---

௯. சூடிய விசுவம்—தலையாகிய புகழையுடைய விசுவம். கிரந்தி—முடிச்சு. ௰. கிழங்கு—கந்தம. இது ஆயிரத்தெட்டு நாடிகளாற் சூழப்பட்டு எல்லா நாடிகளுக்கும் வேர்த்தானமாகக் கோழி முட்டையைப்போன்ற ஒருகிழங்கு வடிவாயிருக்கும் மணிபூரகத்தானம். கண்டத்தானு—அடிநாத்தானம். (விசுத்தி.) நிராதாரம—தலையுண்ணடுவிலுள்ள சத்தித்தானம். மீதானம்—அர்த்தநாரீசுவர சிவநிலை. சத்தித்தானத்தை விந்துவட்டமென்றும், சிவநிலையை நாதத்தான மென்றுங் கூறுவாருமுளர். ஆதாரம் ௬. நிராதாரம் ௧, மீதானம் ௧, ஆக எட்டுத்தானமே பிறரெல்லாங் கூறுநிற்பவும் இவர் பத்துக்கூறுவாராயினர். ௰௨. நாதநாதாந்த மூன்றும்—பரநாதம், அபரநாதம், நாதாந்தம் என்னும மூன்றனையும். பரநாதசிவமே அறிவென்றம், பரவிந்து சத்தியே மனமென்றும், அபரநாதம் பிங்கலையாகிய சூரியன் என்றும், அபரவிந்து சத்தி இடைகலையாகிய சந்திரன் என்றும், நாதாந்தம் சுத்தசிவநிலையாகிய வெளியென்றும் ஒரு சாரார் கூறுப. நல்லாசிரியர் பால் வினவி உண்மையறிக. ஏழாந்தானம்—

"வட்டங்க ளேழு மலர்ந்திடு மும்முளே
கிட்ட விருப்பிடஞ் சேர வறிகிலீர்
ஒட்டி யிருந்துள் ளுபாய முணர்ந்திடக்
கட்டி யிருப்பிடங் காணனு மாமே." திருமந்திரம் 768-காண்க.

சத்தியி னடுவே நின்ற நாதமா னதுமேற் சார்ந்து
பொத்தியல் சமனை தன்னி னளவாக யாதொ ருக்கா
லெத்திய செல்லா நிற்கு மியங்குமேற் சத்தி யன்ன
முத்திற காலப் பேரான் மொழிபடு விசுவ முன்னின். (௰௩.)

தானமன் சத்தித் தானந் தனின்மிசை யிருந்து நாத
மானது சமனை தன்னி னளவதா யைம்பத் தொன்றும்
போனது மிமைகொட் டாமற் சைதன்யம் புகுஞ்சஞ் சார
மீனமில் கால மான விசுவமென் றிசைக்கு மம்ம. (௰௪)

முன்னிய சத்தி யோடு வியாபினி சமனை மூன்று
மன்னிய தானத் திரெட் டிமைக்கொட்டிற் சத்தி மன்னும்
பன்னிய வியாபி னிக்கோ விமைக்கொட்டுப் பதினே ழாகு
மன்னிய சமனைக் கான விமைக்கொட்டுப் பதினெட் டாமால். (௰௫)

இயங்கிய வைம்பத் தொன்றே யிமைக்கொட்டுத் தொகையா மீதி
னுயங்கிய காலம் போல விசுவமோர் பதினு றேழுதுந்
தயங்கிய விவா கால மிமைத்தட்டுப் பதினே ழேயா
மயங்கிய பரகா லப்பே ரிமைக்கொட்டீ ரொன்பான் மன்னோ. ()

தத்துவ விசுவ மான துன்மனை முடிவி லேதா
னெத்துறிற் சூனி யத்தின் முடிவிலோர் பராப ரத்தி
னத்திசை சைதன் யப்பேர் விசுவம்யோ சிபப தாமான்
முத்தியிற் சிவானு போக விசுவமே விசுவ மூர்த்தி. (௰௭)

வேறு.

அயனு மாயனுந் தம்பொரு ளெனவளப் பரிய
வியனு றுந்தம மதியினால் வீம்புகள் பேசி
புயனு னுக்குற வடித்துடன் பொருதன ரவர்க
ணயனு வன்றிட வனலுரு வாமிறை நடுவே. (௰௮)

அளவில் சோதிகண் டஞ்சின ரிகலலை விடுத்தே
களவி லாமெனி வடிவதை யளப்பது கணித்தார்
துளவி னான்கிடி யாயடி துறுவுவ னென்று
னிளவி ரிஞ்சனோர் குவன்முடி யெனுமன்ன மானான். (௰௯)

---

௰௪. தானமன் சத்தித்தானம்—கொடைநிலைபெற்ற சத்திமண்டலம்.
"மேலாந் தலத்தில் விரிந்தவ ராரெனின்
மாலாந் திசைமுகன் மானந்தி யாயவர்
நாலா நிலத்தி னடுவான வப்பொருள்
மேலா யுளாரந்த மின்னுடை யான்களே." -திருமந்திரம் 810-காண்க.

றிப் போயமால் குறைமுக மாயினன் கிளர்ந்தான்
மீறி யன்னமா னவன்சிறை யிழந்தனன் மீண்டான்
தேறி லாவள வினன்சிவ னென்றனன் றிருமான்
மாறி மான்மகன் கோயிலிங் கிழந்தனன் மன்னோ. (உ0)

அகந்தை யாரளக் கொணுதவ னடியவர்க் கெளிய
னுகந்தை யன்மகார்க் குதவலின் வேண்டிடா தருளாற்
சுகந்தை வங்கடா மேதர லோர்கிலார் துணிகோ
ளிகந்தை காக்கிர மாத்தொழு துய்ந்தன ரிப்பால். (உக)

வேறு

ஒன்றவன் றனே யிரண்டதாய் மூன்று யோதரன் காயைந்தா யாறாய்
நின்றவ னேழா வெட்டதா யொன்பா னிலையதாய் நிறைந்தமை யறிய
நன்றவ னிருக்கு நான்கொடு மேலா மயத்தவாகமமெழு நான்குஞ்
சென்றவர் தெளியி னிதழிசூ டிறையே சிவலிங்க காரண னெனுமால்.()

இலிங்கமே புவியு மிலிங்கமே புனலு மிலிங்கமே கனலுமா ருதமு
மிலிங்கமே வானு மிலிங்கமே கதிரு மிலிங்கமே யிலிங்கமே மதியு [வோ
மிலிங்கமே யுயிர்வா மூடம்புமாக் காணி னிலிங்கமாண் பளந்துரைப் பது
விலிங்கமே முளைக்கு முளையெலா முகைக ளெலாமெளி னதுபெருந்
[தகைத்தே. (உங)

வேறு.

இலிங்க மேமலர் தொறுநடு விருந்திலங் கிடுமே
விலிங்க மானவ ருணவினுக் குருக்கொடுத் திலகு
மிலிங்க மல்லறுத் தெளிவிளக் கினுக்குரு வீயு
மிலிங்க மேனியே யுயிர்தொறு நண்ணுடம் பென்ப. (உச)

விசுவ முற்றுமி லிங்கமெப் கொளுமறை விவேகித்
தசுவ தகநிரா விசுவலிங் கத்தையே யன்பார்
சிசுவ ளர்ப்பவர்த் தொடர்கலிற் றொடர்ந்திடிற் றினமும்
பசுவ ளக்கொடி யாமெடுத் துச்சுமப் பானல். (உரு)

---

உங சுகந்தைவங்கள்—இன்பமும் செல்வங்களும். தாமேதரல்—"தா மேதருமவரைத் தம்வலியி னாற்கருதலாமே யிவரா ரதற்கு." என்னுந்திருவருட்பயனறிக. ஐகாக்கிரம்—ஏகாக்கிரம். (ஒர்ரநோக்கம்) உரு. பசு—விடை. எடுத்துச் சுமப்பான்—"கிடைக்கத் தகுமோநற் கேண்மையர்க் கல்லா—லெடுத்துச் சுமப்பானை யிங்கு." என்னுந் திருவருட்பயன்கொண் டுணர்க.

ஐந்தொ ழிற்செய விடைக்கொடி யுயர்த்தரு ளமல
சுந்த ரன்விசு வலிங்கவெம் பிரானடி தொழுவோர்க்
கிந்த மாநிலத் திந்திர போகமு மேலைக்
கந்தண் டாணிழ லுந்தர வுமையொடு மமர்ந்தான். (உசு)

அம்மை யப்பனு வுலகநா யகியொடு மமர்ந்த
செம்மை யின்புரு விசுவநா யகனையாழ்ச் செல்வன்
மும்மை யங்கணு முதியதென் காசிவாழ் முதல்வா
வெம்மை நாளுமா ளுடையவா வெம்பிரா னென்று. (உஎ)

வேறு.

தலைவணக்கா மோருறுப்பாற் றலைவ லக்கை
சார்த்திறைஞ்சு மீருறுப்பாற் றலைமேற் கைகள்
குலைமலரிற் குவித்தேத்து மூன்று றுப்பாற்
குவின்முழங்கால் கைதலைதா ழைந்து றுப்பான்
மிலைகைமுட டு தலையுரங்கண் செவிவாய் மூக்கு
மேதினிதோ யெட்டுறுப்பா லடியு யர்தது
நிலைதுறிசா ரதுதொழு மெறுழு றுப்பா
னிறையளியாற் பணிந்துகண்டான் புகழ்பா டுற்றான்.()

ஏழிசைநா ரதன்பாட லமிழ்தெங் குங்கா
தெனநிறைதென் காசிவிசு வேசன மாந்தி
யாழிறுக மெழிலியின்மின் னெனவெ பூந்தின்
பருளினனு லவனடங்கா மகிழ்ச்சி பொங்கி
வாழியவென் றருளியவெம் பெரும வென்றும்
மங்காதிவ் விலிங்கமன்னி வாழ்கென் றேற்றான்
போழிளவெண் கதிர்சூடி யாங்க பர்ந்தான்
புகழ்முனிமேயம் நாளிருந்தேத் தினன்சென் றனல். ()

வேறு.

அவ்விலிங் கத்தி னடியினு வுடையா ளடியினேங் காரமா மதனிற்
செவ்வியின் பருளு மத்திய கண்டஞ் செப்பிய வகாரமாஞ் சிரத்தி
னுவ்விய வெழுத்தா மதனினுன் வட்ட மகாரமா மதனினு வோங்கும்
பவ்வினிக் கலைபோல் விந்துவக் குழிதான் பரவிலிங் கமபர நாதம். (நய)

வேறு.

தேவிதலை தெற்கடி வடக்கது திருத்தாட்
பூவிசழ்கள் கோமுகி புயாந்தமவை மத்தி
பாவிதனுட் சக்கரம பயப்புறு மிலிங்கந்
தாவிதஞ் சதாசிவம மேனுன்மனிய தாமால. (நக)

உஅ. எறழ்—தண்டம். நய. வட்டம்—விந்து. (குழி) பவ்வு—பவ்வமாகிய. இன் இக்குஅலைபோல்-இனியகருப்பஞ்சாற்றுக்கடலொலிபோல். (நாதம்.)

வேறு.

ஒரோரு தலத்தி லேரொரு வருக்கா வுகந்தவர்ச் சனொடாங் குகந்தா
ஞெரொரு விளையாட் டாச்சில வுய்த்தா னுய்த்தவவ் விலிங்கமார்ந்துறைவா
ஞெரொரு பொருளா யொளிர்சவ பேதத் துள்ளொளி மாதமா யகிலத்
தோரொரு படிவத் துயிர்க்குயி ராய்நின் ருேங்கினன் விசுவமா மொருவன்.

வேறு.

பொருந்திநின் றெவருந் தேராப் பொருளவன் றுனை முன்னி
யிருந்தினி தாடல் செய்தோர் வழுதியுள் ளிசைவி னாலே
வருந்திய காலு திசிக் காசிநீ மறந்தி தென்பாற்
றிருந்திய னுறைவல் காண்டி யெனசசிவ லிங்கஞ் சேர்ந்தான். ()

அவந்திகை துவாரை மாயை யயோத்தியா மதுரை காஞ்சி
நவந்திகழ் காசி யேழு நகருறை சுயம்பைக் காண்கைக்
குவந்திவர் தென்கா சிக்க ணுறுதிகொள் விசுவ லிங்க
சிவத்திரு முன்போய்க் காணின் சேர்நலம் பெரிதாந் தேர்மின் ()

உத்தரங் கிழக்கு தெற்கு மேற்கென வெளிர்நாற் பாலும்
குத்தரந் தாம்போய்ச் சூழ்காண் குறிபெலா மெம்பி ரற்கு
முத்தர மாவே தோன்று மவற்றுளுத தமமா மூர்த்தி
வித்தா தென்கா சிக்கோ விசுவலிங் கந்தா னம்மா. (௰௫)

சித்தம தொருமைப் பட்டோர் தெளிந்திடு முருபா ரூப
வுத்தம விசுவ லிங்கங் கண்டவ ரூழிப் பாவந்
தத்தம திடன்விட் டேகி தனைப்பிடும் பஞ்சிற் போகச்
சுத்தமன் சிவபு ரம்போய்ச் சுகந்திளைத் திருப்ப ரம்மா. (௰௬)

உரகியற் கருட னாலே விடம்பட மொடுக்கு மாபோல்
பரவுமா ருதத்தி னாலே முகிறிசை பறியு மாபோ
லிரவிகா லொளியி னாலே யிருளிம மிரியு மாபோல்
வரவிசு வலிங்கர் நோக்கால் வல்வினை நடுங்கிப் போமே. (௰௭)

கற்றுளி கலைஞா னத்தாற் கருண்படந் திரு மாபோற்
பற்றுளி வீர ராலே பகையெலா மழியு மாபோற்
சிற்றுளி பெரிய கல்லைச் சிதறுதண் டாக்கு மாபோற்
சுற்றுளி விசுவ லிங்கங் கண்டிடிற் றுயரம் போமே. (௰௮)

விதிவினை யாசான் பார்வை வீட்டிநன் றருளு மாபோற்
பதிவினைப் பேண்கற் பின்மார் பழிபடா துவக்கு மாபோன்
மதிவினை யுடையார் சீற்ற மாறியுட் குளிரு மாபோற்
றுதிவினைப் பெருக்கித் தீமை தொலைத்திடும் விசுவ லிங்கம். (௰௯)

உலகுயர் விசுவ நாத னுலகம்மை தவனே சேயோ
விலகுறு தந்தை யோமுன் றினையுமுற் றொளியா ரெல்லா
யலகுகட் டற்கின் றிப்பா லமரவ ளோடி ருந்தும்
நலகுணத் திரண்டி லர்த்த நாரீச னெனுநிற் பானல். (சயி)

அருளவ ளருளா ளன்று ளுமுல கம்மை பாகன்
மருளவ ரெனினுங் காணின் வல்வினை யொழித்தின் பீவன்
பொருளவ னெனத்தேர்ந் தேத்தும் புலவரோங் கறிவு தேர்வார்
தெருளவ ராறு காலந் தெரிசித்துச் சிவமா வாரே. (சக)

இருட்சிதை காலை காணி னிடரொழிந் தின்ப மெய்தும்
மருட்சிதீ ருச்சி காணின் வரமகப் பேறு வாய்க்கும்
வெருட்சிதை மாலை காணின் வேண்டிய செல்வ முண்டாந்
தெருட்சியா ரர்த்த யாமஞ் சேவிப்பி னிருமை நன்றும். (சஉ)

குலனுயர் பள்ளிக் கேழல் கும்பிடி னறஞ்சி றக்கும்
நலனுயர் துயிலெ ழுச்சி நற்குடிப் பிறப்பா வைக்கும்
வலனுயர் திருமுன் பார்ந்தைந் தெழுத்தெணின் கதைவா சிக்கின்
பலனுயர் கதைகள் கேட்பின் பாடிடின் பெரும்பே றுண்டாம்.()

விசுவமா மிலிங்கங் கண்ட விழிமூடித் திறக்கு முன்னே
பசுவதி யாகப் பேறு பலிக்குமன் பவிழ்ந்தா லோர்நாள்
சிசுவழக் குரைப்ப வேமற் செற்றது செந்தீ தீவிழ்
கெ சுவதிற் செமித்தான் கூற்ற னேற்றமுங் குறைந்த தோர்மின்.

தருமசொ ரூபி காசித் தலத்தரன் றிருநா மத்தைப்
பெருமகிழ் சிறப்பக் காதிற் கேட்பவர் பிறவி தீர்வார்
மருமலர்க் கொன்றை யானை மனத்திடை யுறுதெண் ணன்பர்
கருமவெம் பிணிக டீர்ந்து கடவுளர் போற்ற வாழ்வார். (சரு)

---

சயி. "வாயு மனமுங் கடந்த மனோன்மனி
பேயுங் கருணைப் பெரிதுடைப் பெண்பிள்ளை
யாயு மறிவுங் கடந்த வானுக்குத்
தாயு மகளுநற் றாரமு மாமே."—திருமந்திரம் 1178-காண்க,
ஒளியார் எல்லாய்—செங்கதிர்போலுமாகி. (கதிர்—சத்தி, கதிரோன்—சத்திமான்.)

வேறு.

காசி நாயகன் கழலிணை வணங்கவேண் கதித்தால்
பேசி னுன்முது தீமைக டொலைந்திடும் பெட்பாந்
தேசி னுயலஞ் சூழ்வரின் மனக்கவ நீரும்
நேசித் தேத்திடி னமரர்கோ னுகுத னிசமே. (சகூ)

புழைக்கை மால்வரை சுரரொடும் பொன்னுல கேகித்
தழைக்கை நல்கிய விசுவநா யகன்றெரி சனத்துக்
குழைக்கை மானவர் பரிமக மாயிர முஞற்றன்
மழைக்கை யாத்தால் சிறப்பரில் வான்புரப் பாரால். (சஎ)

வேறு.

அடியலம் பிடவி லாமிச் சறுகுவெண் கடுகு சந்திவ்
விடிகொணீர்ப் பாத்தி யத்தோ டிவர்முக மலம்ப வேலஞ்
கடிபுலின் கிழங்கு சாதிக் காய்பளி தங்கி ராப்பு
வெடிமுகைச் சண்ப கத்துள் விராயவா சமனநீரும். (சஅ)

அரிசிபால் புனற ருப்பை வரியவங் கடுகெள் ளார்நீர்
விரிசிரங் கழுஉமர்க் யத்தோ டியன்முநீ ரமைத்து வேதப்
பரிசிலைஞ் சுத்தி செய்து பசுபதி பூசை யாற்றின்
றுரிசிலாத் திருமாற் பேறு துய்த்துமேன் முத்தி சேர்வார். (சகூ)

நரந்தமும் புழுகுங் கூட்டு நறியசந் தனச்சே றூட்டிற்
பரந்தநா னிலத்தி ராச பலந்தரும் பசும டிக்கண்
சுரந்தபால் பவநோய் தீர்க்குஞ் சுகந்தருஞ் செல்வ நல்குஞ்
சிரந்தழை மாலை சாத்திற் றிருவொடு மாலூர் வாழ்வார். (ருய)

சிறந்தகண் பன்னீர் சாந்த மத்தர்செய் தயில மாட்டிற்
பிறந்ததன் னுடனன் றுகிப் பெண்டவா மழகும் பேறும்
புறந்தரா திகல்வென் மாண்பும் பொலிந்துமன் வாழ்வுண் டாமா
லறந்தனை வளர்க்கு லோகாம் பிகைதவ னன்பே செல்வம். (ருக)

போனக நிவேதித் திட்டார் பொம்மலொவ் வொன்றுக் காண்டு
வானகத் தொளிர்கை லைக்கண் வாழ்வது திண்ணந் திண்ணம்
கானகக் கனிவெவ் வேறு கடவுளுக் கருப்பித் திட்டோர்
தேனகத் தமிழ்த முண்ணுஞ் சிவயோகி யாதன் மெய்யே. (ருஉ)

சுருதிகண் முழங்கு காசிச் சோதியம் பரமற் கிடு
தருதிருக் கலசங் கும்பஞ் சங்குகள் சகத்ர தாரை
விருதிசை மிருகக் கொம்பு வேதிகை யிவைக ளீய்ந்தோர்
பருதிவா ழுலகி லேறும் பாக்கிய சிரேட்ட ராவார். (ருங)

தூபக்கா லொன்றே தீபஞ் சோடச மவைதாம் புட்ப
தீபமே நாக வாண்மா திண்டிபுண் டரீக மன்னஞ்
சோபன வாசி பத்ரஞ் சூலமே கும்ப மேறு
தாபரங் குருக ழுங்கட் சரஞ்சத்தி தீப மாயால். (ருச)

சோமனு மாடி தர்மங் குடையுமை சுருட்டி வாணி
சாமரம் விசிறி வாயு சாற்றிவை தூப தீப
மாமனைத் தினுந்தத் தம்மா லாமளா விறைகோ யிற்கு
நேமமா வாங்கித் தந்தோர் நீடுழி வாழ்வார் மாதோ. (ருரு)

முரசங்க ணிருத்தங் கீத முழக்கல்பூ சனைகொண் டாடல்
பாசங்க வோசை யார்த்தல் பரன்றிரு விழாக்கள் செய்தல்
வாசரோ ருகமே யாதி மாலைகள் சூட்டல் செய்தோ
ராசராய்ப் புவியில் வாழ்வா ரதற்குமேன் முத்தி சேர்வார். (ருசு)

தத்தமா லுழைத்த தேட்டந் தம்முனோ ரறத்தா றீட்டி
வைத்ததேட் டிவற்று லேது வழங்கினும் பலன்கை கூடு
முத்தமர் குடித மைத்தற் குறுதியி தாமான் மற்றீங்
கத்தனன் பினராற் செய்விப் பதுபொரு ளிலார்க்கே யாமால்.()

---

ருங. வேதிகை—பீடப்பலகை. ருச. ஆண்மா—புருஷா மிருகம். திண்டி—கஜம். புண்டரீகம்—வியாக்கிரம். ஏறு—ரிஷபம். தாபரம்—விருக்ஷம். குருகு—குக்கிடம். அழுங்கு—கூர்மம். இது மகுடாகமமுறை. இதனின் வேறுசப்புட்பதீபம், ஏகதீபம், கேதுதீபம், கஜதீபம், வியாக்கிரதீபம், அம்ஸதீபம், வாசிதீபம், சிம்மதீபம், சூலதீபம், பூததீபம், ரிஷபதீபம், புருஷாமிருகதீபம், குக்குடதீபம், சிருக்குதீபம், அட்சர தீபம், சத்திதீபம் எனப்பதினாறு கூறவாருமுளர். இதில் விருக்ஷதீபம், கும்பதீபம், கூர்மதீபம் என மூன்றுந் தள்ளப்பட்டுப் பூததீபமும், சிருக்குதீபமும், கேதுதீபமும் மிகையாயின. சிருக்கு மலராகலின், அதேபத்திரமெனவும், பத்திரம் வாகனமாகலின் அதே சிம்மதீபமெனவும், வழங்குவர். சத்திதீபம் 1, 2, 3, 5, 7, 9, நாளங்களை யுடையதாய் முறையே கலைமகள் அசுவினிதேவர்கள், இச்சையாதி மூன்றுசத்திகள், பஞ்சகலைகள், சப்தமாதாக்கள், நவக்கிரகங்களின் வடிவாமென்பாருமுளர். புட்பம்—பூமி, நாகம்—சேடன், ஆண்மா—ஆசிரியன், யானை—ஐங்கரன், புலி—ஐயனார், அன்னம்—பிர்மா, வாசி—இந்திரன், பத்ரம்—இலக்குமி, சூலம்—அஸ்திரதேவர், கும்பம்—அகத்தியன், இடபம்—நந்தி, விருக்ஷம்—கற்பகம், குருகு—முருகன், கூர்மம்—அரி, அட்சரம்—சாசோதி, சத்தி—ஏகாட்சரி எனப்படுதலின் இந்நாமமந்திரத்தால் தீபங்காட்டுக.

விள்ளரும் பலாமா வாழை விளவுமா தழைப்ப ழங்கள்
கள்ளவிழ் தமரத் திந்து நாரதமுந் திரிகை கொய்யா
வுள்ளநற் பழங்கள் தேங்கா யுறுமணப் பொருடாம் பூலம்
வெள்ளரிக் காய்க ளேட்டின் விமலனு ரருநீணுக் குண்டாம். (ருஅ)

காசியின் வாசி பேசித்தென் காசியீ தெனக்க ளவின்
வீசியிப் படித்தென் ஞரீ காண்கென விளம்பி நன்றுப்
பேசியிங் கிலிங்கங் கண்டு பிறங்கிட வருளெம் பெம்மாற்
காசியின் றெட்போ லீந்தா லவன்றரு மேருச் செல்வம். (ருசு)

இன்னவ வடிவ னெண்ணி லிலிங்கமித் தரையி லுண்டா
முன்னவ னிருவர் முன்பு முளைத்தவன் காசி நாதன்
றென்னவன் கண்டா னந்தந் திளைத்திட வருள்பு ரிந்த
மன்னவன் வலஞ்சூழ் வேழ வாழ்வித்த விசுவ லிங்கன். (சுo)

செண்பக விலிங்க மாதி தெக்கண காசி லிங்கம்
நண்பகத் துளமை நாகேச் சுரலிங்கம் நந்தி போற்றும்
பண்பக லகில லிங்கம் வாலியும் பணிந்த லிங்கம்
விண்பக வெழுந்த சோதி விரிந்தமா விசுவ லிங்கம். (சுக)

பாதல மூலங் கீண்டு முளைத்தவிப் பரம லிங்கன்
மாதல மாந்தென் காசி வந்தருள் சிறந்தா னென்று
னீதலஞ் செவிசாய்த் தேற்ற விருந்தவர் களிது ளும்பி
யாதலன் பாயு ரைத்தீ ரடுத்தது மளித்தி ரென்றார். (சுஉ)

## மூர்த்திவிசேடம் முற்றிற்று.

ஆகப்பாட்டு சஙசு.

---

## ஆறுவது நாரதன் தென்காசி மான்மியங் கேட்ட படலம்.

மூர்த்தியின் விசேடா மிழ்த முகந்துளங் களித வத்தீர்
பூர்த்தியி னினிக்கு மோர்மாண் புலவன்றென் காசிச் சீர்தேர்
கீர்த்தியிக் கதைநீ ரன்பாக் கேண்மினென் றிடவுந் துள்ளி
யார்த்தினி தறைமி னென்று ரருந்தவ ரறைவான் சூதன். (க)

மிசைதிரே தாயு கத்தின் வெறிமலர்த் தருநீ ழற்க
ணசையமிழ் தருந்திச் சாவா நலத்தவிந் திராணி யோடு
மிசையவா ழிந்தி ரன்முன் பிசைவலான் வந்து பாட
வசையரி மித்தி ரன்செய் வஞ்சஆழ்த் தீர்வீ தாமால். (உ)

வேறு.

உருகுமன் புடையசி ருள்ள மெய்த்தவன்
பருகுகான் றுழாயினன் பாலும் பற்றினன்
றிருகுறு வஞ்சமோர் சிறிது மற்றவன்
பெருகுகந் திருவன்யாழ் பெரிதுங் கற்றுளான். (௩)

சீரதன் முறையினே ரடக்கஞ் செப்பினும்
வாரதன் மையிற்பல வலார்க்குஞ் சொல்லுவான்
சாரதந் தியின்னிசைச் சமத்தின் வல்லவ
னாரத னெனுந்திரு நாம மாமுனி. (௪)

போயினன் பொன்னகர்ப் புலவர் சூழ்சவை
வாயினர் சங்கமின் பதும மாநிதி
வேயினு மின்னிசை விழைய ரம்பைய
ராயினர் பாடல்கொண் டாடவ் வேளையே. (௫)

அரியவெண் சாமர மசைப்பர் வீசிறி
யுரியபீ லியுமினு ரொசிதல் செய்குவார்
பெரியகற் பகமலர்ப் பிணைய னூற்றிடும்
விரிமரி யாசன மிளிரு நாப்பணே. (௬)

நிரந்தர மிடைந்திடு வயிர நீடொளி
தரந்தரந் தெரிந்திடு சரங்கள் போலணி
பரந்தபன் னிருகதிர் பரப்பும் பொன்முடிப்
புரந்தரன் றவிசதிற் போலிந்துற் றுனரோ. (௭)

இந்திரன் கொலுமுகத் திருப்ப வின்புறு
மந்திரத் தலைவர்கள் வரிசை யாய்நிற்பத்
தந்திரந் தேர்முனி முகப்பிற் றங்கலே
வந்திரஞ் சிதப்பட வழுத்து மேவலன். (௮)

முனிவரன் வரவவா முகரி மைவலார்
கனிதவ னிருப்பது கடாயெ ழீஇவர
பனிவளர் முகையவிழ் பாக சாதனன்
றனியகங் களித்தெழீஇ யழைப்பச் சார்ந்தனன். (௯)

---

அ. தந்திரம்—யாழ் நரம்பு, கூ. முகரிமைவலார்—மிக்கறிவினை யுடைய தேவர்.

சிறந்தமா தவமுனிச் செல்வ வின்றுதான்
பிறந்தது யோகமுள் ளெழுக பேரியாழ்
கறந்தபா லமிழ்தமுங் கைப்ப வுண்டுவா
னறந்தழைத் திடுமென வழைத்து வந்தனர். (௰)

திரைக்கட லமிழ்தருந் தியவ லாரிநன்
றுரைக்கனு முகமனன் குளுற்ற லுங்கொடு
சிரைக்கல மெடுத்துளே சென்று ராசனத்
திரைக்கடை கொண்டன னின்ப மார்ந்தரோ. (௰௧)

மருத்துவர் வந்தித வாய்மை கூறலாற்
றிருத்துயாழ் முனியிசைத் தேன்றெ விட்டுறப்
பொருத்தத லெண்ணியுட் புனித னுகிமெய்க்
கருத்துகந் தகாரமுன் கனிந்தெ ழுப்பினுன். (௰௨)

செவ்வியா ழிடந்தழீஇத் தெறித்துத் தாக்கியல்
வுவ்விமா டகந்திரீஇ திவவி னூர்தலாய்
நவ்விதே ஞெழுக்கினுர்த் தெழுப்பி நற்சுதி
மூவ்விர லூசலின் முயலப் பாடுவான். (௰௩)

சீரத னெறிச்செலுந் திறப்ப ரீட்சண
நாரத விருடியாழ் நரம்புங் கண்டமும்
மாரத மாமந்த மதுரந் தாரமோர்
சாரதந் தியின்முறை சமைவ ரித்தரோ. (௰௪)

வேறு.

களரியில் ஆஈ ஊஎ ஐஔள கார மேழும்
வளரிரு பானி ரண்டு மாத்திரை குரலே துத்த
முளரிசைக் கைக்கி ளைமா னுழையொடு மிளியே மற்றை
விளரியே தார மென்ன விளங்கிசை யேழிற் காட்டி. (௰௫)

மருவிய குரன்மி டற்றில் வயந்தருந் துத்தம் நாவிற்
பொருவில்லைக் கிளையண் ணத்திற் புகழுழை யுயர்சி ரத்தி
லருவிளி நெற்றி யின்மா னூர்தரு விளரி நெஞ்சிற்
றிருவியற் றூரம் மூக்கிற் றிகழுமே ழிசைசி றப்ப. (௰௬)

---

௰௧. சிரைக்கலம்—நரம்புக்கருவி. இரைக்கடை கொண்டனன்—இருப்பிடங்கொண்டான். (இரை-இருப்பு, கடை-இடம்.) ௰௩. அவ்வுவ்வி—அத்தலை. திரீஇ—திரித்து. திவவின்—வீணைவலிக்கட்டின். ஊர்தல்—பரத்தல். மூவ்விரல்—பயிற்சியின் மூத்தவிரல்.

இசையமிழ் தொழுக்க வும்ப ரியக்கர்கந் தருவர் சித்தர்
வசையிலேழ் கோள்க ளெட்டு மாசுணம் மதக யங்கள்
திசையிலெண் வசுக்க ளேகா தெசவுருத் திரர்க டேனு
பசையினு ரின்ப வெள்ளம் படிந்தனர் செவிசாய்த் தம்மா. (௰எ)

மண்ணது முருக கானன் மணலது முருக மங்குற்
றண்ணது முருக சாந்தத் தருக்களு முருக தாமப்
பெண்ணது முருக பேசாப் பெருமலை யுருக வின்பப்
பண்ணது பொழியாழ் வல்லான் பாடினன் றேவ கீதம்.(௰அ)

இன்னின தெனவீ ழுள்ள மேதொரு செயலும் பற்று
துன்னிசை மயமே யாய்ச்சித் திரமென வொசியா தற்று
நன்னிலம் நிற்ப தானல் நல்லிசை முனிவன் பாடற்
கென்னினி யொப்பா மொப்பி லிசைவலான் சிறப்பேபோங் கிற்றால்.

அவையினி லிருந்தோர் கீத மதிகமீ ததிக மிந்தச்
சுவையையஞ் செவியா லுண்டு தூயவின் பார்ந்தோம் வல்லூழ்
நவைபெலாந் தீர்ந்தோம் மெய்கொ ணலமெலாம் பெற்றேம் முன்
கவையயில் சிவனி சைக்கா டும்பிரா னெனற்கண் டேமால. () [று

ஆடின வரம்பை மாத ரதிசயித் தாடல் விட்டுள்
வாடின ரெனினுங் கீதம் மாந்திமா மகிழ்ச்சி பூத்தார்
சூடின வாகை வேந்தன் துய்த்ததே வமிழ்தங் கைப்ப
நாடினன் சசியோ டார்ந்து நல்லிசை நலந்தி ளைத்தான். (உக)

கரியவல் லிருள்வி ரட்டிக் கதிரொளி காட்டு மாபோற்
பிரியவுண் டாமூ டற்றீர்த் தருள்பெறும் புலவ ரேபோ
லுரியசொற் பொருள்வி ரித்தின் பூட்டுமாண் கவிஞ ரேபோ
லரியவின் னிசைவீ ழும்பர்க் காசிலின் பளித்தான் யாழோன். ()

கன்னலம் பாகி றுக்கக் [illegible]டியா மதற்குந் தீவேட்
டின்னெய்யுன் வேவ விக்[illegible] மினிப்புள கண்டா ரேனும்
பின்னது சிலர்க்கே யாமாற் பிறங்குமுன் னதுவெல் லார்க்கும்
நன்னயந் தருமா லன்ன நலத்தயாழ் முனிவன் பாட்டே.(உ௩)

பாவருஞ் சீர்த்தி யெங்கும் பரந்திட மகிழ்ச்சி பொங்கி
யோவருஞ் சபையோ ரெல்லா முகந்தினி திருக்குங் காலை
மேவரும் பொறுமை நீடு விழுத்தரி மித்தி ரன்று
ஞவருங் கொடுமை செய்ய நாடின னென்செய் வானே. (உச)

நன்னயம் பேசான் கோட்டி நாவடங் கிடயாழ் பாடு
மின்னவன் வலிகுறைத்தற் கென்செய லாமென் றெண்ணி
பன்னத ரந்து டித்துப் பன்னெறு நெறுவெ னப்பேச்
சுன்னவின் முணுமு ணுப்போ டொருவழி துணிந்தான் மன்னோ.

அடந்தனி லாய்க்க ளத்தூஉ வார்த்துயிர்த் தெழீஇப்பாற் சிந்து
கிடந்தமா லிடம்போய்த் தாழ்ந்து கேசவா யாழோ னீதி
கடந்தனன் வலாரி தோட்டிற் கலனிடந் தழீஇக்கார் வண்ணு
குடந்தரா வரியே மாலே கோபதீ யெனப்பெட் பேற்றி. (உ௬)

பாடினன் மகிழ்வித் தும்பர் பரவுத னிரப்புற் றுனு
னேடியே பொருட்ப டுத்த நினைத்தினம் பாடு மன்னோ
னீடிலிந் திரனை நின்னி லிசைத்தியாழ் பாட லென்னே
கோடினன் போலு மென்றுன் கொண்டல்வண் ணன்க னன்றுன்.()

ஒப்பிலா வெனின்வ லாரி யொத்ததா முகமன் காட்டித்
தப்பிலாழ்ந் தவன்யாழ்க் கானந் தவறுபட் டிடப்பி டித்தி
கொப்பிலாச் சாபமென்ன நொடித்தரி மித்தி ரன்றுன்
வெப்பிலா தேற்றின் பார்ந்தான் வெம்மையா ழவற்பற் றிற்றே.

மாயவன் றிறந்தா னென்னே மாயவன் பாலன் பார்ந்த
தூயரி மித்தி ரன்வன் றுப்பெனே சாப நல்க
லாயவல் லமைதா னென்னே யபலது பெறுஞ்சீ ரென்னே
போயதார் தருமாண் பென்னே புலவரோர் புதுமைத் தாமால். ()

சாபமே விட்ட தோரான் றன்னிழல் கருத்தி லார்க்கும்
நீபமுன் மாங்க ளுக்கு நிறைநன் னெய் திரியிட் டேற்றுந்
தீபமுன் பலவற் றுக்குந் திரிதராப் யுறஞ்சார்ந் தாற்போற்
கோபமாற் கெதிரி யாழோன் கோலொலி வசையாக் கிற்றே.(௩௰)

சவித்தரங் குறைந்து போதல் தகையநா ரதன்க ணித்துப்
பவித்தவிக் கெடுதி யாரே பண்ணின ரிஃதோ ரேனேற்
குவித்தமண் ணுவேன் றீர்த்துக் கொளாவிடிற் பிணையா வேனென்
றவித்தவைம் புலனோ னுய்கின் றமலயோ கமர்ந்தா னன்றே.(௩௧)

உண்மையோர்ந் தனன்மீண் டானீ துஞற்றினோ ரபிசா ரத்தீ
வண்மையோ ரல்ல ரெட்டுக் கருமமோர் வல்லா ரல்லர்
திண்மையொன் பான்கோ ளல்லர் தீவினை வழிய தல்ல
வெண்மையோ னரிநண் பன்கோ ளியானினிக் கவலே னென்றுன்.

௩௧. சவி—அழகு, வலி. ௩௨. அரிநண்பன்—அரிமித்திரன்.

வேறு.

இன்னண நாரத னிசைத்தெ ழும்பொழு
துன்னவை தேரமா னுவன்சொன் மெய்யென
நன்னரூழ் வழியெண னம்பி வன்மொழி
சொன்னதீ தெனவிணிற் றேன்றிற் றோர்சொலே. (௩௩)

எழுந்தசொற் கேட்டபின் னிதுநன் றென்றுமேற்
றெழுந்தக வுடையவென் றுயர நீங்கிட
வழுந்தவே றென்னையுண் டரிய யன்பணி
கொழுந்தணிப் பிறைமுடிக் கோன லாதென. (௩௪)

சிதவலா னெழுந்தனன் றேவ வேந்தனற்
புதமகிழ் கொளவிசை பொழிநன் றோர்ந்தியாழ்
விதாணன் மானகர் மேவ வீழ்தாற்
கிதமுடன் வழியனுப் பினன்வை குற்றனன். (௩௫)

மானகர் வந்தனன் மாத வற்பணிந்
தினயாழ் தழீஇயிசை யிறங்கப் பாடினன்
கானவா னிமிர்ந்திவண் கம்ம லென்னெனக்
கோனரி கேட்பயாழ்க் கோனி தோதுவான். (௩௬)

மதகரி காத்துமுன் முதலை மாய்த்தவா
பதகனே துதல்பொருட் படுத்த தென்னைநீ
சிதகன்கண் குறைந்தறந் தேற்ற னேரிதா
னுதகவான் மாறினு முலக யர்க்குமோ. (௩௭)

யாவனேனும் நமோநா ராய ணாவென
வாவலோ டுரைப்பினு மவனைக் காத்தரு
ளீவலோ னொடாறு நிகழ்த்து மென்னினுங்
காவலோய் கோளனைக் களன்கொண் டாடினாய். (௩௮)

சாத்திர மறைகளுஞ் சார ணப்பயன்
றோத்திரம் புரியெனைத் துயர்ப்ப டுத்தசற்
பாத்திர னீயெனப் பழிச்சற் கேட்டவம்
மாத்திரங் கேட்டவன் மகிழ்ந்து கூறுவான். (௩௯)

அழுக்கரி மித்திர னடைந்து கோட்சொலப்
புழுக்கமா வவனுளம் புகுந்த தீவினை
யிழுக்கதொன் றுனக்குள தெணியுந் தேர்ந்திலாய்
வழுக்கலி காலிவண் வந்த தோர்திமேல். (௪௰)

---

௩௩. எணன்—எண்ணுணகி. ௩௫ விதாணன்—விவேகி. ௩௮. களன்—உள்ளம்.

கோளனை நோகிலை குரல்குன் றற்கிவண்
மூளலை நோகிலை முக்க ணெம்பிரா
னுளலை யென்னிடத் தமைத்த நீரதாற்
சூளலை யேற்றது தொலைத்தி யென்றனன். (சக)

தருமகன் ஞோர்ந்தியாழ்த் தவமெனம் மாதவ
கருமமீ தொழிவழி காட்டு கென்னலுந்
திருமறு மார்பினன் சிந்தை செய்தொரு
மருமமீ தன்பொடு வாங்கென் றோதுவான். (சஉ)

மனோவதி நமதுவை குண்டம் வான்மலை
மூன்றுமா தலங்களின் முதன்மை பெற்றதாய்ப்
பனேன்மைய தாய்த்திரி கூடப் பான்முதி
தெனேர்திருத் தலமுண்டஃ தெழிற்றென் காசியே. (சங)

ஓங்குதென் காசியி னுலக நாயகி
பாங்குறை விசுவநா யகனைப் பார்த்திடிற்
றீங்குக டீர்ந்திடுந் திருத்த மாடியே
யாங்குகந் தருந்தவ மழைப்பின் வாழ்வதாம். (சச)

நீயுடன் சென்றரு ளிரிற் றேய்ந்தல
காயுட னப்பனை யருச்சை செய்திடின்
காயுமென் சாபமுங் கழிந்தி யாழிசை
யேயுமுன் னினுஞ்சிறந் தென்று ணர்த்தினன். (சரு)

மாலருள் வரஞ்செவி வாங்கி யின்பமாய்ச்
சீலயாழ் முனியுடன் றிருத்தென் காசிபோய்
ஞாலநா யகிதவ னனேக்க மெய்திடச்
சாலவன் புடனடந் தானென் றோதினன். (சகா)

## நாரதன் தென்காசி மான்மியங் கேட்ட

## படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு சகாரு.

---

சக. சூளலை—சாபத்தை. சங. வான்மலை—வெள்ளிமலை. சச. அழைப்பின்—செய்தால்.



# ஏழாவது நாரதன் வரம்பெறு

## படலம்.

கார்வண ஞேங்குதென் காசி மான்மிய
மார்வண நாரதற் கருள லீதுமேற்
சீர்வண யாழிசை திறம்ப டப்பிரா
னேர்வணங் கிப்பெறு வரநி கழ்த்துவாம். (க)

என்னநை மிசத்தவ ரின்ப மார்ந்தியா
முன்னமா தவமிக முயன்று ளேங்கொலோ
மன்னருள் சுரந்துநீர் வழங்க வென்றனர்
நன்னபார் சூதன்மே னவிற்று வானரோ. (உ)

பாவினர் கலியினின் றெழுந்த பண்ணவன்
மேலிவர் வான்வழி விரைந்தி மாசலம்
மோவிநான் முகன்பதி முகுந்தன் வைகுண்டஞ்
சூலிவாழ் கைலையுந் தொழுது போந்தனன். (ங)

காசிப யோத்திமா யாவ வந்திகை
மாசிலா மதுரைது வாரை காஞ்சியிங்
காசிபா டிடவெண மாயோண் ணுமையிற்
கூசினுன் கண்டனன் கும்பிட் டேகினுன். (ச)

காஞ்சியி னின்றிடைக் காண்சை வத்தல
வாஞ்சைநீ டொறுமன மடக்கி யார்குவ
லேஞ்சுதென் காசிபோ யிசைவ ரங்கொடிங்
காஞ்சரி கமபத நிசுர மார்த்தெனு. (ரு)

ஆலவாய் பரங்கிரி சுழிய லாதிவிட்
டேலரு ணெல்லையுங் கடந்தி யாழ்முனி
சாலநன் றூர்ந்ததென் காசிச் சண்பகக்
கோலமா மலர்ப்பொழிற் குளிரக் கண்டனன். (சு)

காலையன் றூடகக் கடன்செ யற்கெணி
வாலையன் னங்களார் மலர்த்த டத்துறை
மேலைய திற்படிஇ வெணீறிட் டேகிமான்
சோலையில் விசுவநா யகன்முன் றுன்னினுன். (எ)

வேறு.

முன்புகுந் தொன்றி ரண்டு மூன்றைந்தெட் டுறுப்பாற் றாழ்ந்து
மன்புகுன் றாது தண்டா காரமாப் பணிந்து மேத்தித்
துன்புகுத் துளங்க னிந்து துள்ளிநீ டலையா தோன்றோர்ந்
தின்புகுப் பெனக்கொண் டாடி யெடுத்தனன் மலர்க்கை யாமே.

தழுவிமா டகமு றுக்கித் தடவிணை கிளேப கைநட் [தார்த்
பெழுநரம் புகளைத் தேர்ந்தாங் கெழுதன்பாத் திரையு மோர்ந்
தொழுகதா வுயர்ந்தி ழிந்தின் னுசையா ராய்தன் முன்னு
விழுமுதற் றெழில்க ளாற்றி வீணைமீட் டினன்பாண் செய்வான் ()

காகுளி மதுரந் தாரங் கணக்கமைந் தேழ்சு ரப்பால்
வாகுதேன் கிழானெய் யேலம் வாழைமா துளப்ப ழம்போன்
றாகுமின் னிசைப்பான் கேட்டெம் மம்மையா முலகா ளோடும்
பாகுறு மிசைக்கா டும்பாப் பணிப்பான் விடைமேல் வந்தான். (௰)

இன்னிசை பாடு மன்ப வினிதுவா ழியவு னக்கிங்
கென்னது வேண்டுங் கேட்டி யெனத்திரு வாய்மலர்ந்தா
னன்னதோர்ந் தளவி லின்பார்ந் தரக வரவென் றூடி
யென்னையா ளம்மை யப்பா விலங்குதென் காசி நாதா. (௰௧)

வாமமா ரம்மை யோடான் மிசைமகிழ்ந் திவரெங் கோனை
கோமகார் வேண்டி யேதுங் கொடுப்பதில் லாவ ழக்கா
வூமையாழ் குழதொண் டைக்கு முரந்தரு திருமுன் றந்து
மாமணு ளன்கொ டுஞ்சொல் வலியழித் தடறந் தாயால். (௰௨)

மாயவ னறிந்து ரைத்த வாய்மையுங் கண்டேன் மேனி
நேயவா ழியவென் றீந்த நிறைமொழி சிறப்பாப் பெற்றேன்
றாயனு யினன்வே றொன்றேன் றொன்றிமேற் றரற்கு முண்டே
னுயனல் கியதென் றேற்று நயப்பலென் றேத்து வானல். (௰௩)

வேறு.

செஞ்சு டர்க்குளே சிவஞ்சு டர்ந்தவா
நஞ்சு டற்றுநா ணவையொ ழித்தவா
வெஞ்சு டங்கின்மூப் புரமெ ரித்தவா
வஞ்சு டம்புயிர்க் காத ரத்தவா. (௰௪)

அடிமு டிக்கள வறியொண் ணுதவா
படியன் பர்க்கெளி தாய பண்ணவா
மிடிய றுத்தருள் வெணீற்று மெய்யவா
கொடிய ணைந்தபாற் கொண்ம ணத்தவா. (௰௫)

வேறு.

சோதி யானசொ ரூபவி யாபக
மாதி யானம ஞேகர பாபல
நீதி யானிறை நின்மல நிட்கள
வேதி யாவர வெள்விடை யாய்நமோ. (௧௬)

கால காலக பாலகங் காதர
பால லோசன பத்தச னப்ரிய
நீல கண்டதி ராமய நிர்த்தன
சூல பாணிசு போதநம் பாநமோ. (௧௭)

எண்ணி வந்நதி ரக்குமுன் னீந்தவ
பண்ணி னேழிசைப் பாகமு ணர்ந்தவ
நண்ணி வாழிய வென்றந லத்தவ
கண்ணி னிப்புறங் காட்சிதந் தாய்நமோ. (௧௮)

கங்க ராவிடை யாழ்கயங் காத்தவ
வெங்க ராசல வித்துரி போர்த்தவ
வங்க ராமடை யார்க்கறி வார்ப்பவ
சங்க ராவர சம்புசி வாநமோ. (௧௯)

ஏல மார்குழ லெம்முல கம்மைகண்
ணீல மாமலர் நித்தம லர்ந்தவிங்
கால மார்களத் தப்பு வெனக்கருள்
கோல மிவ்விடைக் கொண்டமர் வாய்நமோ. (௨௦)

ஆசித் தெய்துநர் வேண்டுமுன் னுவுணர்ந்
தேசித் தக்களி செய்பவ பாடிடி
னேசித் தான்மிசை நீடுல காளொடும்
பேசித் தான்வரு பிஞ்ஞக னேநமோ. (௨௧)

ஆத்தி சூடிநன் றூரருள் கூருவே
யேத்திப் பூசைபண் ணற்கருள் செய்தெனைக்
காத்தி யென்றிரு கைதலை கூப்பினன்
றேத்தி ரஞ்செவிக் கொண்டிறை சொல்லுவான். ()

கொத்த லர்ந்துகு ளிர்பொழில் சூழ்ந்தொளிர்
முத்த கம்புமு மூங்குநன் னீர்கிளர்
சித்தி ராநதித் தீர்த்தம தாடிநீ
பத்தி யால்வழி பாடுசெய் யென்றரோ. (௨௩)

தோன்று தும்புரு வோடுதொ டர்ந்தெனக்
கென்று மின்னிசை பாடியின் பாக்குவா
ளென்று மன்பினெ ரீஇச்சிறு தேவனை
நன்று பாடிந யந்தனை யாகலின். (உச)

அழுக்கு றுத்தரி மித்திர னுடினன்
வழுக்கு றைத்தனன் மாலது தீர்த்தரு
ளொழுக்கு றுந்தடத் துள்ளது வன்மைமேற்
பழுக்கு ளன்பொடு பாடிநன் குர்ந்தனை. (உரு)

முத்த லத்துமு யன்றநல் லூழ்ப்பய
னத்த னென்றிரு முன்வரி னுர்ந்திடுங்
கத்தி ருத்தவ மோங்குதென் காசியா
மித்த லத்தினெய் தாதநன் றில்லையால். (உசு)

வேண்டு நல்வரம் வேண்டிடு முன்றரு
மாண்ட கையினை யன்பொடு பாடினை
மாண்ட நல்வா முற்று வழங்கினே
னீண்டு வாழ்சென்றி விங்கத்து ளாயினன். (உஎ)

வேறு.

கங்கையஞ் சடையுந் திங்கட் கதிருட னரவி ருப்புங்
கொங்கையார் களப நாறுங் கோமளை பங்கின் வைப்புஞ்
சங்கையொத் தியல்வெள் ளான்மேற் சார்தலு மாவந் தெம்மான்
செங்கையாழ் முனிக்கு நல்குந் திருவர மேற்ற மாமால். (உஅ)

ஈசதிக் கிலங்கும் பொய்கை யினிலொரு காலை மூழ்கி
நேசமா விசுவ நாத நிமலலிங் கம்ப ணிந்து
மாசறு கீதம் பாடி வரம்பெரி தாகப் பெற்று
விசருஞ் சீர்த்தி யாழோன் மேல்வனஞ் சூழ்வ தானன். (உகூ)

பூறுச்சுடைந் தெழிற்றே னூற்று முருகவிழ் சண்பகத்தை
வெறுக்குமா விருப்பி யாட மேற்கொடி படர்ந்த தோற்றம் [ர்ந்
பொறுக்குமா வெனச்சி றுத்துப் பொறைநடாங் கிடைச்சி பாற்சே
திறுக்குமெம் பிரானே போன்ற தெண்ணிலா தனகண் டானல்.()

வுத்தனை யருட்க ணேச விறையைமா மருது கந்த
சாத்தனை வடகீழ் பால்வா ழாசரு ணங்கை தன்னை
மாத்தழை வராகி நாரா யணிமகே சுவரி காளி
காத்தவின் திராணி வாணி கௌமரி யெழுவர்க் கண்டான். (௩க)

பவுரிகொண் டிடுசிற் றூற்று வீரியைப் பதும வர்விக்
கவுரியைக் கருணை பூத்த நெடுங்கயத் தையன் றன்னை
செவுரியைப் போர்த்த கோனைத் திருநதிப் புறத்தின் மேவுஞ்
சவுரியைப் பிறதெய் வங்க டாழ்தலைச் சிறப்பாக் கண்டான். (௩௨)

கண்டுநன் முகம லர்ந்திக் கமழ்தரு செண்ப கக்கா
மண்டுதிக் கெல்லாஞ் சூழ்காற் சேடனார் மணிகொள் சென்னி
விண்டுமுன் மேரு வைச்சூழ் மிளிர்ந்தது போலச் சுற்றிக்
கொண்டுயர் மாந்தொ றும்பூங் கொடிமல ருடுக்கள் போலும். ()

வேறு.

திகைத்த சிந்தையுந் தெளிவுறத் தென்றிவந் துலாவல்
குகைத்த டங்கரை யிகனுமாக் குழீஇமகிழ்ந் திருத்தல்
பகைத்த வின்றிமஞ் ஞையினொடு பச்சோந்தி பயிறல்
முகைத்த லர்ந்தபூக் களிற்பல வண்டுகண் மொய்த்தல். (௩௪)

பலசத் தோப்பிடைத் தமரத்துங் கொழுமிச்சும் படர்தல்
குலச மன்பெறு மெனுமிச்சு நாரத்துங் குழைத்தல்
கலச மானுமா துளத்தொடு பப்பளி கலத்தல்
சலச மேற்றுகள் பெய்முண்ட கங்கரை தழைத்தல். (௩௫)

கனியு மாம்பழ முதிர்கையி னுடைபலாக் கவிழ்தே
னனியு றுங்கத லியின்கனித் தேறலு நதியிற்
றனியு றழ்ந்தெழீஇ மலர்நற வளாய்பல தடம்பாய்ந்
தினியு ளைத்திவர் பெருக்குகள் சித்திரை யேய்தல். (௩௬)

வண்டு பாண்மிழற் றிடமயி லாடவா னரங்கை
கொண்டு மாவருக் கைப்பழ மத்தளங் கொட்ட
கண்டு பூங்குழ லிசைக்குயின் முறையொத்துக் காட்ட
வுண்டு நட்டுவ னெனக்கிளி தலையசைத் துவத்தல். (௩௭)

வேறு.

சாகையு மதினுயர் தருவின் மந்திகள்
போகையுங் குயில்புறுப் பூவை வேறுவே
றூகையுந் தொழவரு மமரர் போற்றிசெய்
வாகையு முனிவரர் வசிக்கை யும்பெறல். (௩௮)

வேறு.

சித்தி வன்மையார் சித்தகோ டிகள்பன்ன சாலை
நித்தி யத்தவ ருறைவிட முத்தர்க ணிலயம்
பத்தி பத்தியா வயங்கலிவ் வளனெலாம் பார்த்துப்
புத்தி யாழ்முனி சித்திரைத் துறைக்கணே புகுந்தான். (கூசு)

வேறு.

விடுக்கணை போலவான் மீது வெண்ணிலா
வடுக்கழை நிழறரு மருகிற் றுமரை
யொடுக்கமழ் குவளைசே தாம்ப லோங்கிவாழ்
நெடுங்கயச் சார்பிலே நீடி வந்தனன். (சய)

மாலையிற் செய்கடன் வயக்க வாற்றினன்
சோலையங் குழலுமை தொடிக்கைப் பற்றியோ
னாலயந் தனிலமர்ந் தன்றி ராகழி
காலயி னாத தீர்த்தங் கண்டனன். (சக)

ஆசையொ டாடின னருச்சை நாடொறு
மீசனுக் காற்றியங் கிருந்து ளானிசைத்
தேசிகன் கௌசிகற் றேற வென்றனன்
மாசிலா மிசத்தவர் மகிழச் சூதனே. (சஉ)

**நாரதன் வரம்பெறு படலம் முற்றிற்று.**

ஆகப்பாட்டு ௩௭௭.

# எட்டாவது நாரதன் பூசித்துக்
## கவுசிகனுபதேசம் பெற்ற படலம்.

அருந்தவ யாழ்முனி யரியின் சாபநீக்
கிருந்தடம் படிந்துதென் காசி யெம்பிரான்
தருந்தனி வரம்பெற விதுசி வார்ச்சையுந்
திருந்தருட் கௌசிகன் றேற்று போதுவாம். (க)

நைமிசத் தந்தணீர் நம்ப னாணையிற்
கைமிகு மன்பினுற் சித்தி ரைக்கணே
செய்மிழற் றியாழவன் றேர்ந்த வோர்துறை
யைமினத் தோய்ந்தனுட் டான மாற்றினன். (உ)

ஆந்தரம் பாகிய மாமி ரண்டனுண்
மாந்தருக் காந்தர மான பாவனை
மாந்தரி னியோகியின் வாய்மைக் காட்சிகொ
ளாந்தர பூசைசெய் வான மர்ந்தனன். (௩)

வேறு.

இன்பொடைஞ் சுத்தி யாற்றி யிதையநற் கமலத் திங்க
ணன்பொடு மனுபா வதநா லமைத்தமா மாயை யின்பேன்
மன்பொலி தவிசி னும்பர் வளர்விளக் கொளிபோன் மேனிப்
பொன்பொது விசுவ நாதற் போற்றியுட் கருதி னனல். (ச)

எண்ணியே யழைத்தா வாகித் தெழூந்தருள் வான்று பித்திண்
டண்ணிய சந்நி தான மடைந்துநன் றுத்த நித்தல்
பண்ணிடுஞ் சந்நி ரோதம் பயின்றமுத் திரையாற் செய்தே
புண்ணிய விசுவ நாதற் பூசனை செய்வான் மன்னே. (ரு)

மானத சுத்தி யாநன் மலரிட்டுப் பொறுமை யாய
நானநீர்ப் பாத்தி யாதி நல்கிநன் னிலைகொள் புத்தி
யானகுங் குமங்கற் பூரஞ் சந்தமுன் னனைத்தும் பூசி
யீனமின் மனத்து பக்கா லெரியுயிரப் பகம்பு கைத்தே. (சு)

சத்திதீ பங்கள் காட்டித் தகையகந் தாதி யைந்தும்
புத்தியிற் றிருத்தி செய்யும் போக்கியப் பொருளா நல்கி
யத்திசார் மண்முன் னைந்து மநாதிபோச் சியமாக் கண்டு
பத்தியூன் குடிமுற் றும்முண் பருகுவத தாகத் தேர்ந்தே. (எ)

டிமுன் னெலாப்வி ளக்கு மவைகளாம் விசிறி யாதி
சூடியல் சிரம நீக்கும் பொருள்களாத் தோத்தி ராதி
யீடில்கேள் விகளாப் பாவித தினித்தகத் தாற்பூ சித்தே
நாடியுள் ளியற்றி யாங்கு நாபிகுண் டத்தீ வேட்பான். (அ)

மீண்டுமா னதயோ கத்தால் விதியினு வாக னுதி
நீண்டுகுண் டத்த மைதந்த சிவாக்கினி யினுமேம் மானை
யாண்டுளே பூசித் தாற்போ லருச்சித்து விந்துத் தானங்
காண்டுரு கமிழ்த நெய்யைக் கனிந்திடைச் சிருவத் தாலே. (சு)

முகந்துமா குதிநூற் றெட்டு முடித்துமே னடுச்சி ருக்கா
லுகந்துமா குதிபூ ரித்தன் புடன்சிவன் பாற்பொ றுக்க
வகந்துமித் திரந்த பெற்றூற் றருச்சனைப் பயனைப் பிதமே
பகந்துணை ரப்ப டாத்து வாதசாந் தப்ப திந்தான். (ய)

---

சு. நன்மலர்—ஊறுசெய்யாமை, ஐம்பொறியடக்கம், பொறுமை, அருள், அறிவு, தவம், வாய்மை, நல்ல நினைவு என்னும் எட்டு மலர்கள். எ. போக்கியம்—அனுபவிக்கப்படும் பொருள். போச்சியம்—போஜ்ஜியம். அது அன்னாதிகள். (நைவேத்தியாதிகள்.)

அங்கிலை மூல மாதி துவாதசாந் தாந்த மட்டுஞ்
சின்னிலை யேகா கார சிவத்தியா நச்ச மாதி
யிங்கிலை யிதையப் பூவி னிலஞ்சிகுண் டத்தீ யின்க
ணன்னிலை யவாய்ப்பூ சித்து நயச்சமா தியின்வாழ் சீரே. (யக)

இங்கணம் புருவ மத்தி யிற்சாற் காலந் தோன்றுந்
திங்களி லொளிரி லிங்கந் தெரிந்தெணிப் பிராண னுள்ள
மங்கடைந் தொடுங்கு யோகி யானவன் றன்மயத்தாய்ப்
பொங்கக முனையா தாக்கிப் பொலிசிதா னந்தந் துய்ப்பான். (யஉ)

வேறு.

இத்தகைச் சிவவழி பாடி யற்றிய
பத்தரி யாழ்முனி பதிவி னின்றெழீஇ
யத்தனெம் விசுவநா யகன்ற னாலய
சித்தனுத் தெரிசனை செயமுன் வந்தனன். (யங)

கண்டனன் பணிந்தனன் கனிந்தி யாழ்கரங்
கொண்டனன் பாடினன் கோதை பாகனூர்
விண்டனர் நாரத விளங்கு கூகையொன்
றுண்டதை மானசோத் தாஞ்சென் றோர்கென. (யச)

கேள்வியின் வீழச ரீரி கேட்கவே
யாள்வினை கொண்டிறை யாணை யாறிரு
தோள்விமித் தேனுவின் சுவையொ டைந்தரு
வேள்விடு தேன்சுவை விராயு ணின்பனுய். (யரு)

வேறு.

ஈச திக்கினி லெய்தின னங்ஙனே
வாச சத்திக ளேழ்வரும் வாவியிற்
றாச ழுக்கறத் தோய்த்தனர் மூழ்கினர்
வீச மஞ்சள்வி ளங்குமெய் பூசினர். (யசு)

காரி னுன்றக ருங்குழற் கன்னிமார்
போரி னுண்மலர் போனெடுங் கண்கயற்
சீரி னுடிய தாமரைத் தெண்டட்
நீரி னுடினர் நீள்கரை யேறினர். (யஎ)

காத்தி ரத்துடை கட்டினர் மாற்றியே
மாத்தி ரத்திரு நீறுவ ணைந்தனர்
சாத்தி ரத்தசெந் தூனுதல் சாத்தின
ரேத்தி ரத்தினக் கச்சிறுக் குற்றனர். (யஅ)

யஅ. காத்திரம்—உடம்பு. மாத்திரம்—பெருவலி.

பரிய வாய்க்கொய்து டுத்தபட் டாடைமே
லரிய மேகலை யார்த்தனர் பொற்றொடி
யுரிய பீலிகா லாளியொண் மோதிரம்
பெரிய பாடகந் தண்டைபி றங்கவே. (௰௯)

சிலம்பு பாதச ரங்கள்சில் லென்றிட
வலம்பு ரிக்களன் வாழ்மணிப் பல்பணி
நலம்பு ரிந்தொளி நாற்றிசை வீசிடப்
புலம்பு ணர்முகப் பூண்பல மின்னவே. (௨௰)

முருகு நாண்மலர் மொய்குழ லுக்ககிற்
றருகு ணப்புகை யூட்டினர் தண்ணருள்
பெருகு கன்னியர் பேணுநன் மக்களைக்
கருகு ருவழிக் காக்கவி ருந்தனர். (௨௧)

வேறு.

காலையிற் செய்கட னாற்றியெங் கண்ணுதன்
மேலையி யம்புவி திப்படி கூகையைச்
சோலையிற் காணவ ருந்தவன் றாயவிம்
மாலையி ருங்குழன் மாதரைக் கண்டனன். (௨௨)

முனிதனி யேவா முண்டகப் பொய்கைமாட்
டினிதமர் கன்னிமா ரியாழ்வல னென்றின்பாய்ப்
புனிதவிங் கமர்கெனப் போற்றின னம்மைமீர்
மனிதார ரீண்டுநீர் வதிவதென் னென்றனன். (௨௩)

வேறு.

கச்சி ரத்தது கின்மணி காலவே
மெச்சி ரத்தக பாலம்பி நாகவின்
முச்சி ரத்தவிர் சூலியெம் முக்கண்ணி
வச்சி ரத்தம யேசைநல் லம்மையே. (௨௪)

ஆட கத்தம்பு யத்திரு வத்தமேற்
சூட கத்தள் சுதரிச னத்தினள்
வாட கத்தவர் வன்றுயர் தீர்ப்பவள்
பாட கப்பதப் பத்தினி நாரணி. (௨௫)

---

௰௯. மேகலை—எழுகோவை மணி. ௨௰. முகப்பூண்—தலையணிமுற்றம். ௨௫. சுதரிசனம்—சக்கரம்.

நிலவு கோடிநி ரந்துதித் தாலன
வுலவு மேனியோ ளிர்புத்த கக்கரம்
நலவு ரைச்சுவை நல்குநல் வாக்கருள்
குலவு கண்ணபி ராமியாங் கோமளே. (உசு)

இரும்பு போனுவன் னெஞ்சருள் ளஞ்சவும்
சுரும்பு போலடி சூழ்ந்தன் பா பற்றவும்
கரும்பு பாசாங்கு சஞ்சத்தி கைக்கொடு
வரும்பு கல்சின மல்குகொள மாரியே. (உஎ)

சீய மேறிடு செவ்வியள் பல்வகை
மாய மேவிய பேய்வாக னத்தினள்
நேய முக்கண்ணி நீலிநெ டுஞ்சூலி
காய தாருகற் செற்றகங் காளியே. (உஅ)

முரிக்கு நீள்புரு வச்சிலை மொய்கணு
லெரிக்குந் தீமொழி னேயிக லாருட
னுரிக்குந் தோல்கொழுப் பூடறுத் தூர்ச்சிதம்
விரிக்கு நாஞ்சிலண் மீறுவ ராகியே. (உசு)

கற்ப கங்காம தேனுசிந் தாமணி
பற்ப கட்புல மெய்தல்ப வித்தெழில்
வெற்ப கச்சிறை வீட்டிடு வச்சிரம்
பொற்ப ணிக்கைப்பு லோமசைப் பூவையே. (௩௰)

ஏறு புள்ளர சன்னமெ ழின்மயின்
மீறு பேயரி வேழமே ழின்முறை
சாறு கொண்டிவண் டங்குந மேழ்வரும்
வேறு ளாரிரு மின்கணீ ாரவர். (௩க)

மோக ஞத்திர முண்டகக் கையினுள்
பாக னுண்மொழி பன்னுசெவ் வாயினுள்
சோக ஞாதஞ் சூழ்ந்திகல் சாய்ப்பவாழ்ந்
தாக னுடிநல் காய்சித்தி ராங்கையே. (௩உ)

பதத்தி னென்றுபற் பத்தலை யூன்றியொன்
றிதத்தி னேமடித் திட்டுமுட் டிற்கைசேர்
விதத்தி னுசிவி ளிம்புகண் மேவிமாண்
சிதத்தி னுர்மணி கன்னிகைத் தேவியே. (௩௩)

---

உஎ. சத்தி—வேல். புகல்—அடைந்தாருக்குப் பற்றுக்கோடானமொழி யும். சினம்—அடையாருக்குச் சீற்ற மொழியும். ௩க. நீரார்—தீர்த்த மாதர். ௩உ. பாகன்—புதன். சோகு—பிசாசம். அனுதாம்—எப்பொழு தும். ஆகல்—ஆகுதலை. ஆய்—அம்மை.

ஆய கன்னிய ரேழிரு நீரணங்
கேய வொன்பது சத்திக ளாயியாம்
நேய மாயுல கம்மையி னீடருட்
சாய லுற்றிவ ணுணையிற் றங்கினோம். (௩௪)

தவத்தை நாடிய மாதவர் சைவனுஞ்
சிவத்தை யர்ச்சனை செய்யவ ருந்தவர்
பவத்தை யஞ்சித்து றந்தவர் பற்றறி
னவத்தை நீத்தவர்க் காக்கவ மர்ந்துளோம். (௩௫)

ஈச தீர்த்தமி தன்கண்கு ளிப்பவர்
வாச நீறிடு மானவ ராய்விசு
வேச ரன்பராய் மேவின வர்க்கியாம்
பாசந் தீர்த்துநற் பாக்கிய நல்குவோம். (௩௬)

கோவ தைத்தனு மூணரும் கோக்களிற்
சாவ தைத்திசைண் டாளரு நீறுவர்த்
தூவ தைக்கொளு டம்பர முங்கடே
வாவ தைப்பரு மாடின்வ ருந்துவார். (௩௭)

தியர் திண்டினத் தீயரை வாட்டுமித்
தூய தீர்த்தநாந் தோயுநண் ணிரிதிற்
பாய சீர்விசு வேசரன் பர்தினந்
தோய நாமவர்த் துன்பறுத் தாளுவோம். (௩௮)

தருமம் வேண்டினர் சந்ததி வேண்டினர்
திரும ணஞ்செய வேண்டினர் செய்தகு
கருமம் வேண்டினா காசுபொன் வேண்டினர்
பெரும கார்க்கனே போற்றந்து பேணுவோம். (௩௯)

எழுது சித்திர கூடத்து மேம்புவி
முழுது மோடிமு ழக்குடன் மீளுவோம்
பொழுது திக்குமுன் பூம்புன லாடியோர்
பழுது றுதிவண் பார்க்குந மென்றனர். (௪0)

கன்ன லின்வரி கற்றுயர் நாரத
னென்ன விந்தநன் னீர்படிந் தென்னுடை
யின்ன தீர்ந்ததெம் மீசனைப் பாடியா
னன்ன ரெய்தநீர் நல்கரு ளென்றனன். (௪௧)

தேவ ருக்குவப் பாக்குமைத் தீதெனே
யேவ ருத்திய தென்னவி னுயினர்
பாவ ருக்கம வாஞ்சுரர் பாற்புகுந்
தேவ ருக்குமின் பாவிசை பாடினேன். (சஉ)

இசையி லாச்சொலி ழுக்கற வின்புறத்
திசையி னேழ்வருந் தேவரு மூவரு
நசையின் விழுந லந்தினைத் தோங்கரீ
வசையின் மாலென வாழ்த்தினன் வேந்தனே. (சங)

பாடி னேன்சவை பாட்டிசை கேட்டுகந்
தாடி சைமிக வாங்கழுக் காறுகூர்ந்
தோடி யேயரி மித்திர னேதுகோ
வீடின் மால்வினை யிட்டதோர் சூளலால். (சச)

திருத்தி யாமொடு கண்டமுஞ் சீர்கெடக்
கருத்தி னுன்கவன் றேகவுங் கார்வண
னிருத்தி யோங்குதென் காசியி னேற்றமெற்
கருத்தி யிங்கணுய்த் தான்வர லாயினேன். (சரு)

வந்திவ் வீசம லர்த்தட மூழ்கினேன்
சிந்தி மாய்ந்ததத் தீயவெஞ் சாபமே
முந்தி சைத்திறன் முற்றுநி ரம்பலா
னந்தி தாள்பராய் நல்வரம் பெற்றனன். (சசு)

லாவ லத்துமுன் வாய்த்ததுங் காட்சியென்
றூவ லத்தொரு கூகையிங் குள்ளதாய்ப்
பாவ லத்தன்ப கர்ந்ததின் மானசோத்
தாவ லத்தடை தற்கெழல் சாற்றினன். (சஎ)

ஓது கௌசிகற் றேடியு மூல்கலே
யீது வேலையி லிங்கவ னெய்தவன்
போது மாய்த்தெனப் பூங்குழற் கன்னிமார்
சாது வாமவர் வந்திழிந் தார்தடம். (சஅ)

ஒறுக்கு மூண்டிய னுற்றுள கூகையாய்
முறுக்கு டைந்தம லர்த்தட மூழ்கினன்
பொறுக்கு வன்சிறைப் புள்ளுரு நீங்கியே
யிறுக்கு வெங்கதி ரேய்மெய்கொண் டேறினன். (சகூ)

மாத வத்திரு மேனிவ யங்கவன்
காத ணிந்தகு ழைகவின் வீசவே
பாத முட்டினுண் மாறல்ப யின்றுநன்
ஞாத ரத்தொட மர்ந்தன னுதனம். (௫௰)

கூறி டுங்குதிங் கால்குதங் கோசக்கீழ்
மாறி டக்குடங் கைவளர் சானுவி
னூறி டவ்விழி நாசிநு னிப்பட
வாறி யங்கண யர்ந்தன னிட்டையே. (௫௧)

முக்கு ணம்புல னைந்துமு ணக்கியே
யெக்க டிக்காலை மூப்பியி ரண்டடைத்
தக்க ஞேர்வழி யைத்திறந் தாடொலி
பக்க லாயைந்தெ ழுத்தொர்ப ரற்பராய். (௫௨)

சோதி யுள்ளுறை மேகஞ்சு ழல்வபோ
லாதி யெண்டிசை போயடங் காதகால்
வீதி யுட்புக மின்னொளி கோடிநே
ரோதி யுன்மனு தீதமு கந்துறீஇ. (௫௩)

சிற்ப ரானந்த வாரிதி ளைத்திதப்
பொற்ப ராயவர் கூகையிற் போதவே
நிற்ப ராயினன் கௌசிக நிற்கென
முற்ப ராவிசை மாமுனி வந்தனன். (௫௪)

வருக வென்றனர் கௌசிகர் மாநலம்
பெருக நென்னனீ சண்பகம் பெய்மலர்
முருக தாடுல கம்மைமு திர்மண
மருக லாத்திரு முன்னிசை யாடினை. (௫௫)

போதி னப்பிழி தேனொடான் புண்ணுகர்ந்
தூதி னத்தொடெ ழுந்துநல் லார்தொடைத்
தாதி னங்களிற் றுழ்ந்தும ணந்துறீஇத்
தீதி னட்புறச் செய்ததவ் வின்னிசை. (௫௬)

---

௫௨. முணக்கி—அடக்கி. எக்கடிக்கால்—ஏறவல்ல மூலவாயுவை. ௫௫. முருகதாடு—தேனூறுகின்ற. மணமருகலாத்திருமுன்—நித்திய கலியாண சந்நிதியில். ௫௬ ஊதினம்-ஆரவாரக்கூட்டம். தாதினம்—பூவிதழ்க்குழாம்.

கோது நீக்கெனை யுங்குளிர் வித்ததின்
போது புட்களு மூர்வவு மாக்களு
மேதுந் தன்வய மற்றிசை யார்ந்தன
நீது லக்கதி றீஇயினை வாழ்கென. (ருஎ)

தவத்தி னேங்குகோட் டானுருத் தாங்கிமேற்
சிவத்தி னற்றின மேனிகொள் கௌசிகன்
சுவத்தி னீண்டுநீ துன்னலென் னென்றனன்
நவத்தி யாழ்முனி நன்றுகந் தோதுவான். (ருஅ)

பொறுமை யாரரி மித்திரன் போர்த்துமாற்
கறுமை யாக்கின னன்னவன் சாபமோரன்
றுறுமை செய்தியா மேழாசைசெக டுப்பினும்
மறுமை யாலவன் மாட்டடைந் தேற்றனன். (ருகூ)

இத்தென் காசியி னேற்றமு ரைத்தனன்
ஒருத்தெத னுவனுந் தோய்ந்துல கம்மைபா
லொத்தெத னுளுமு றும்பர மேசனை
நத்தெத னக்கவ னல்வர மீந்தனன். (கூ0)

இன்றுன் பாலெலை யேகநல் காணையா
னன்றுன் சேவைந யந்துவந் தேனென
வொன்று ளன்பொடு னக்கரு ளெம்பிரான்
மன்று வெல்லுரன் வாக்குத வென்றனன். (கூக)

ஓதி னன்மறை யுட்டெரி குத்திரச்
சூதி னற்சொனுஞ் சாபந்தொ லைத்திடு
வாதி னவறுத் தோட்டிடு வாகையாங்
காதி னடுவேங் கற்கென நல்கினன். (கூஉ)

மந்தி ரத்துயிர் மாணிக்க மீதொனர்
தந்தி ரத்தைநொ றுக்கிடுஞ் சங்கரன்
சிந்தி ரத்திந சிவனெ ளத்தரு
வெந்தி ரத்தது மேலதென் றேறுதினன். (கூங)

வேறு.

பெரியவர் வாக்கதே பிசகி லாமறை
பெரியவர் வாக்கதே பிழையி லாகமம்
பெரியவர் வாக்கதே பெருங்க லாதிகள்
பெரியவர் வாக்கதே பிறங்கு மந்திரம். (கூச)

---

ருஅ சுவம்—செல்வம்.

விரிபலா ழிளைபவளி மிக்க கத்திய
னுரியவா யுண்டுமிழ்ந் தாமு ணர்த்தலெற்
கரியவே னும்மருந் தவமு ஞற்றிவாழ்
பெரியவர்க் கண்டயான் பெறுத தென்னையே. (சுரு)

கண்ணினாற் பெரியவர்க் காண்ட லும்முயர்
பண்ணினாற் சிவன்புகழ் பாட லுஞ்சிவ
மெண்ணினா லுந்தவ மியற்ற லுந்தரு
மண்ணினார் பயனெலா மெனுமெய் வாய்த்ததால். (சுசு)

தாழ்ச்சியோட் டியவருட் டாமோ நின்முகக்
காட்சியோ வெற்றியே காணா ரங்கொளா
மீட்சியோ தலம்புனல் விசுவ நாதர்மும்
மாட்சியோ வுறைதவர் மாண்பொ பெச்சுவேன். (சுஎ)

நவையிலாக் கவுசிக னயமுன் னர்ப்பராய்க்
கவையிலா நாரதன் கானம் பாடினான்
சுவையிலாழ் கௌசிகன் றன்மை யிற்பெரி
தவையிலாம் பேறென வறைந்தின் பார்ந்தனன். (சுஅ)

அரனரு ளோக்கமா டரிய மந்திரத்
திரனருள் கௌசிகற் சேரக் கூறலவ்
வரனருள் வானருள் வழங்கன் முற்றுமோர்க்
தானருள் பதிமுனி விடைகொண் டேர்ந்தனன். (சுகூ)

நாடொறும் பூசனை நயந்தங் கேழுநாள்
பாடொலி நாரதை பகரி ராமநீர்
பீடொளி னாந்தகப் பெருந்தி ருத்தமு
மாடொருப் பாட்டமர்ந் தான்பின் சென்றனன். (எ௰)

சைவமா தலந்தொறுஞ் சைவ னுஞ்சிவன்
றெய்வமென் றறிமுனி தெரிசித் தேத்தியே
மெய்வர மார்ந்தான் விண்டு வேதனார்
மைவன வேந்தனார் வாழ்வ னென்றனன் (எக)

நாரதன் பூசித்துக் கவுசிகனுபதேசம் பெற்ற

படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ருஎஅ.



# ஒன்பதாவது புரந்தரன்

## மலையின் சிறகரி திறல்பெற்ற படலம்.

ஆத ரந்தனக் காவன பிறர்க்குமா வனபோன்
மாத ரம்பெறு கௌசிக னறிமறை தரக்கங்
காத ரன்பகர்ந் தியாழ்முனி பெறவிது காரி
பூத ரத்திற கரிதிறல் பெறலினிப் புகல்வாம். (௧)

நல்ல காதைகேட் டென்றுநாட் போக்குநை மிசத்தோ
ரல்ல றீர்தர வெங்களுக் கிறைகதை யமிழ்தஞ்
செல்ல நற்செவி வழியருத் திடவருள் சிறந்தோய்
சொல்ல வேண்டுந மென்னமேற் சொல்லுவான் சூதன். (௨)

அத்தி ரத்தவா யிறகவாய் மலையெலா மகிலத்
தெத்தி ரத்தருங் கடப்பரு மிடர்ப்பட வெழுந்து
மைத்தி ரத்தமா லையுமதி யமுமுதை யத்து
முத்தி ரத்தகா லமுமழி வாற்றுதன் முயன்ற. (௩)

வேறு.

சிறையடித் தெழுதலிற் சீறு காற்றினாற்
குறையவூர்க் குடியெலாங் குழீஇச்சி தர்ந்திடும்
பொறையவண் கோபுரம் புரிபன் மாளிகை
மறையவந் திருந்துபின் வானெ ழும்புமே. (௪)

அவனியெண் டிசையினு மந்த ரத்தினுங்
கவனிரப் பிரவிகள் கறங்கு காற்றினாற்
சிவனிய மத்தவர் குகையுந் தேளத்துவர்
நுவனிலை யையுமொரீஇ நுழைவர் சோலையே. (௫)

அடங்கலும் பறந்துபோ யலைக்க ழித்திடத்
தொடங்கலைக் கண்டுளந் துடிக்கு வேந்தெலாந்
திடங்கழிந் தெழுந்துவச் சிரப்ப டைக்கையா
னிடங்கலந் தொருவழி யியற்றப் போந்தனர். (௬)

கூடிய வரசரின் வரவைக் கோபதி
நீடிய மகிழ்வுள னிறைவொ டேற்றழைத்
தாடிய முகமனோ டவர்வ ருந்திற
னாடிய ளாபினா னவிற்றி னாரரோ. (௭)

௧. பூதரத்து—மலைகளின். ௩. அத்திரத்தவாய்—நிலையில்லாதனவாகி.
௫. இரவிகள்—மலைகள்.

சந்திரன் மறுவகன் றணையுந் தன்மைபோன்
மந்திரத் தலைவரு மன்ன ரேவரும்
புந்திர மணிபமே பொருந்தத் தாணியி
னிந்திர னிருந்துளத் தெண்ண லாயினான். (அ)

சங்கிவர் பதுமமைமந் தருக்க ளார்பொழில்
பொங்கிவண் டுணுமதுப் பொழியுந் தொங்கலா
னிங்கிதத் தொருவழி யெண்ணிக் கண்டதுங்
கங்கிலின் பார்ந்துளங் கனிந்து கூறுவான். (௯)

குருதியி னொளிபடி குலிச பாணியான்
பருதியிற் பகையிருள் பாற்று வேனெனக்
கருதியிங் கடைந்தநங் கவலை தீர்த்திடத்
திருதியிப் பொழுதியான் செய்வ லஞ்சலீர். (௰)

வேறு.

வெற்பெலா மிறகு பெற்ற வீறுகொண் டுயிர்க்கி ரக்க
மற்பமு மின்றி யந்தோ வலைக்கழி வாற்று நின்ற
சிற்பர னுறைதென் காசிச் சிவனரு ளிறக ரிந்தாற்
கற்பமட் டினுமச் சின்றுங் கட்டளை யதற்கு வேண்டும். (௰௧)

நாளையா மங்குச் சென்று நாயகன் விசுவ நாதன்
றாளையா ராதித் தன்னோன் றன்னிடை யுணர்த்தி யுள்ளக்
கோளையாய்ந் தலதுய் தற்குக் கூரருள் வடிவன் றேற்றுஞ்
சூளையான் கொடுவந் தன்னை துணித்திற கொழிப்பே னென்றான்.

புரந்தர னுரைத்தல் கேட்டுப் பொங்குகப் பார்ந்த வேந்தர்
தரந்தரம் புகழ்ந்தி ருந்தார் சசிபதி தனைம தித்தோர்க்
குரந்தர முறவைந் தாரு வூழ்க்குதேன் மலர்மை பெய்யும்
பரந்தசீர் வசந்த மண்ட பத்தினுக் கழைத்துச் சென்றான்.(௰௩)

எண்ணின ரிடுக்கண் டீர்ப்பா னீரைஞ்ஞூ றுடைய கண்க
ணண்ணின வருளும் பாங்கி னன்மருப் புவாவாழ் சீரும்
விண்ணின தம்ப யின்று விஞ்சையர் பாண்செய் மாண்பும்
மண்ணின தருமை கண்டோர் மதித்திடக் காண்பித் தானால். ( )

---

அ. அத்தாணி—அரசிருக்கை. (சிம்மாசனத்தமர்கை.) ௰௩. வசந்த மண்டபம்—இளவேனிற் காலத்தில் இந்திராணியோடு இந்திரனமர்ந்து தேவர்சூழத் தேவப்பெண்களாட்ட பாட்டங்கண்டு களிக்கு மாளிகை. இந்திரன் மாளிகைக்கே வசந்தமென்ற பெயருண்டு. ௰௪. விண்ணினதம்—விண்ணுலவி.

பஞ்சவாத் தியத்தி னோசை படபடென் றொலிப்பத் தாளக்
கஞ்சவார் கவிக லிப்பக் காலச மசையத் தூம
மிஞ்சவால் விளக்கு மின்ன விளங்குச்சைச் சிரவந் தோன்ற
நெஞ்சவாய் நிற்பச் சங்க நிதிபற்ப நிதியுங் கண்டார். (௰௫)

குலவுபன் மணிவெ யிற்குக் கொங்குநீர் குளிமே நல்க
விலவித ழிதழ்மின் னாரின் னிசையினா னந்த மோங்க
கலவுசா மரத்தி னாலுங் கனகபா வாடை யாலு
நிலவுற வெச்ச ரிக்கை நிகழ்த்தவாங் கியறல் கண்டார். (௰௬)

ஏறின தேவ தத்த முறைவழி யெதிரி னிற்ப
மீறின கணங்க ளெல்லாம் பென்கரங் குவித்து நிற்ப
சீறின வடைய லார்கள் செங்கைவாய் பொத்தி நிற்ப
கூறின வமைச்சர்க் கெல்லாங் குளிர்விடை கொடுப்பக் கண்டார்.

விருந்தமிழ் தளித்தா லன்ன மேனகை யுருவ சிப்பெண்
டிருந்தணி யரம்பை மேலாந் திலோத்தமை நால்வ ரந்நாள்
பொருந்தவே யாடல் பாடல் புரிந்தசிங் காரம் பார்த்தாங்
கிருந்தவிந் திராணி போகி யிவர்வள மெலாம்பார்த் தாரால் (௰௮)

கண்டவ ரிதுது றக்க கதியிவண் வாழ லாமேன்
மண்டம ராகோன் றானம் வழங்குமோ வெனநி னைக்கை
விண்டவ னறிவிற் றூக்க வேந்தர்கா ளியானு ரைத்தாங்
கெண்டகப் புரிவ னாளை யேகுமி னீவி ரென்றான். (௰௯)

வந்தன ருலக வேந்தர் மஞ்சிவ ரரியெ ழுந்து
சந்தமார் வளத்தென் காசித் தலத்திறங் கினன்ம கிழ்ந்தான்
கொந்தவிழ் கருமு கைப்பூங் கொடிதழூஉஞ் சண்ப கத்தி
னந்தணீ ழலின்கண் வாழுந் தணியொடாடந் தனனைக் கண்டான்.

வேறு.

ஆவிவ்வா னந்தவனத் தானந்த புரத்திடையா னந்த தீர்த்த,
வாவியும்பா லிருவாச்சி படர்தருசண் பகநிழலின் வைய மீன்ற,
தேவியுல கம்மையுடன் விசுவேசர் வாழ்வுமன்னித் தென்கா சிக்
குப், பூவியலைந் தருநாடொப் பாமோயா னதையன்றே பொரு
ளாக் கொண்டேன். (௨௧)

௰௫. காலசம்—பேராலவட்டம். ௰௬. எச்சரிக்கை—அமைதியாயிருக்கச்சொல்லுகை. ௰௭. தேவதத்தம்—அருச்சுனன் சங்கு. ௨௰. கருமுகை—இருவாச்சி.

இலங்குகுளத் துப்புளிச்சாத் தன்கோயிற் கணவாயா மிடைத்தொண் டாறே, யலங்கிவருங் கொல்லத்தார் கலிக்காற்றும் பொறைமூலி யனைத்தின் சத்தாம், நலங்கவர்தென் றலுங்கண்ணுப் புளிமேட்டி னின்றுவந்து நாளு வீசிக், கலங்குபிணி யோட்டெடுப்ப வுடற்குறுதி குடிகொளுந்தென் காசி நன்றே. (உஉ)

வண்டிசையுங் குயிற்குரலுங் கிளிபூவைப் பேச்சுகளும் வானரம்பைப், பெண்டுகளின் மொழிக்குயர்வாச் சிறந்தனவென் றிந்திரன்முன் பெரிது மெச்சி, யெண்டிசையும் பரவுநல்லா னந்தஇருத் தத்தினிடை யிறங்கி மூழ்கி, வெண்டிருநீ றிட்டுவிசுவேசன்பூ சனைதொடங்கி விதிமு யன்றான். (உங)

தனிக்கிழங்கி லிருந்துமுளை போற்கிளர்ந்த சிவாதனவா தாரசத்தி, முனிக்கிலுயர் மாயையின்மேற் சிவதத்து வத்தளவும் மொழிபீடத்தி, லினிக்கிளரத் துவாக்களின்மேன் முப்பாகங் கோமுகங்கொ ளிலிங்கா காரப், பனிக்கதிர்சூ டியின்றிருமெய்ச் சிவலிங்க மூர்த்தியையுட் பரிந்து கொண்டே. (உச)

ஆதார சத்தியனந் தாசனமே லனந்தன்சிம் மாச னக்கான், மாதாரத் தறமறிவு தறவுசெல்வ நான்கதன்மேன் மயங்கு நான்காம், பேதார காத்திரமே லகமூர்த்தச் சதனங்கள் பிறழ்கி ழங்கு, சாதார விரைமுளைதண் டிதழ்கெசாங் கருணிகைபூ தனிப்பார்த்தேத்தி. (உரு)

தாமரைமேலனந்தாதி யெண்மருடைச் சத்திகளீ சானத் தின்கண், கோமளையா மனோன்மனியா வொன்பதுதாய் யார்க்கண்டு குப்பிட் டின்பாய், வீமருகா யடியினெல்லிற் பிரமனடுத் திங்களின்மான் மேலார் தியிற், காமாரன் சத்தியிடை மகேசன்மேற் சதாசிவனைக் கடவுட் போற்றி. (உசு)

---

உஉ. அலங்கிவரும்—அசைந்து வருகின்ற. உச. தனிக்கிழங்கு—மணிபூரககந்தம். முனிக்கிலுயர்—முதலாகத் தடையின்றி மேற்பட்ட, முப்பாகம்—பிரமவிஷ்ணுருத்திர பாகமாகிய பீடத்தினடி நடு முடிகள். உரு. அகமூர்த்தச் சதனங்கள்—உள்வீடு மேல் வீடுகள். கெசாம்—கேசரம். கருணிகை—தாமரைக்கொட்டை. உசு. அனந்தாதி யெண்மர்—அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தர், சீகண்டர், சிகண்டியென்பவர். அவர்சத்திகள்-வாமை, ஜ்யேஷ்டை, ரவுத்திரி, காளி, கலவிகரணி, பெலவிகரணி, பெலப்பிரமதமனி, சர்வபூததமனி யென்பவர். வீமருகாய்—தாமரை மலரின து வாசனையையுடைய காயின். சத்தியிடை—சத்திபீடத்தின்கண்.

பாமலர்மே லெரித்தூணில் வித்தையொளி யிலிங்கதண்ட பங்கி
கண்டு, மூமுகன்கை யடிவிழியா யுதமாக்கு முண்டபங்கி மூடிமு
கங்கண், டாமமைவத் திரபங்கி கலாபங்கி நிறீஇக்கலைசத் தவம்
பண்ணாடு, சேமவரு ணம்பதமந் திரமெனுமத் துவநியசஞ் செய்தி
றைஞ்சி. (௨௭)

உலகுடைமை யுயிரடிமை யாக்கொளொரு பரசிவன்பா னாறு
மன் பார்ந்து, நலகுணத்தா வாகனந்தா பனஞ்சந்நி தானஞ்சந்
நிரோத நான்கா, விலகுறுதத் புருடோர்த்து வக்கிழக்கி லபிமுகமா
யிடவமைத்து, வலகுணனா யெழுந்தருளித் திருமுன்றந் தெனைக்
காத்தாள் வாயென் றேத்தி. (௨௮)

அவகுண்ட னஞ்செய்து காட்சிபெற்றுத் தேனுவினா லமிழ்தாக்
கற்பித், துவகையொடு பாத்தியமா சமனமர்க்கி யங்கொடுத்தே
யுயர்பூத் தூவி, யிவைபத்துந் தேவரையின் பாக்கியசு ரரைத்து
ரத்து மிலாஞ்ச னத்தாற், சிவகடனாச் செயலாவா கனாதிசெய்தர்க்
கியங்கொடுத்துச் சிரத்தையோடே. (௨௯)

சிவாங்கநியா சஞ்செய்து தேனுபத்மந் திரிசூல மகரஞ் சிர்க்
கென், றவாம்பஞ்ச முத்திரையெண் ணாற்காட்டிக் காற்கிருகா
லருளிப் பாத்பம், நவாங்கருணை முகத்திற்கா சமனமுக்கா றலைக்
கொருகா னல்கி யர்க்யஞ், சுவாங்கமஞ்ச னம்பஞ்ச கவ்விபம்பஞ்
சாமிருதஞ் சுவைம்ப லாலம். (௩௰)

கந்தோத கஞ்சுத்தோ தகமாட்டி நூற்றெட்டுக் கணிமூ லத்
தாற், சிந்தோத கத்திருமஞ் சனமாட்டி யொற்றுடை திருந்தச்
சாத்தி, தந்தோங்கு பாத்தியமுன் கலவைவிரை யிண்டைதொடை
தனிப்பூச் சாத்தி, யிந்தோங்க முடியிறையைப் பன்னொருமந்
திரத்தாலே யேத்திப் போற்றி. (௩௧)

ஆசமனார்க் கியங்கொடுத்து மனோதமா முத்திரைகளளித்தின்
பாருந், தேசிலயாங் கம்புரிந்தே பூர்த்தவமீ சானத்திற் றிசைகி
ழக்கா, மாசறுதற் புருடத்திற் றெற்காய வகோரத்தல் வடவா
மத்திற், பேசுகுடக் காஞ்சாதத் தவ்வத்தே வரைவாங்கிப் பெரி
தார்ச் சித்தே. (௩௨)

---

௨௭. மூ—முதன்மையையுடைய. (மூர்த்த) பண்ணாடு—224-புவனங்கள். நியசம்—நியாசம் (கிரியை.) ௨௮ அபிமுகம்—நேர்முகம். ௨௯ இலாஞ்சனம்—முத்திரை. (முத்-மகிழ்தல், ரா-போதல்.) ௩௰. சுவாங்கமஞ்சனம்—நன்றாகவலங்கரிக்கப்பட்ட கானநீர். சுவைம்பலாலம்-நல்ல ஐம்பழச்சாறு. ௩௨. மாமுத்திரை—மகாமுத்திரை. இலயாங்கம்—இலயாங்கபூசை.

இருதயத்தை யீசானத் தங்கிசிர நிருதிசிகை யிலங்கு வாயு
வொருகவசங் கீழ்த்திசைநேத் திரமக்கீழ் திசைமுதலா வொளிர்
நாற் றிக்கிற், றெருளுமத்தி ரம்போற்றி முகங்களுக்குத் தேனு
பத்மங் கிரிகு லத்தோ, டருமகரஞ் சிருக்கெனுமுத் திரையைந்து
மடைவருளி யகம லர்ந்தே. (௩௩)

திராசனிமுத் திரையங்க தேவருக்கிட் டனந்தாதி சிவபெண்
மர்க்கும், வராசனங்கண் டடைவேகீழ்த் திசைமுதலெண் டிசை
யுமர்ச்சை மரபினுற்றி, யுராசனியா முமைமுதலெண் மருக்குவடக்
காதிவல னுற்றெண் டிக்கும், பராசயமின் றருச்சித்திந் திரன்
முதற்பன் மரைப்பத்தம் பரத்தும் போற்றி. (௩௪),

வச்சிரமாண் சத்திதண்டு கட்கம்பா சந்தோட்டி வளர்கதைகூர்
முச்சிரவேல் பதுமஞ்சக் கரமிப்பத் தாயுதமு முறைவ ணங்கி
யச்சனுக்கா சமனமர்க்கி யங்கொடுத்து நிவேதநியஞ்செய் தவிர்
பாத் யாச, மிச்சருணீ ரருளித்தாம் பூலமுற்டன் னறுமுகமன்
விதியா னல்கி. (௩௫)

மூலஞ்சங் கிதைசெபித்துச் செபபலனை வரதசிவ முதல்கைச்
சேர்த்தி, ஞாலம்பின் வணங்கிப்போ காங்கமுற்றி யெழீஇயங்கி
நனிவ ளர்த்தீ, யேலம்பூ ரித்திடையா லுட்கொடுபோ யுதரவிந்து
வெரிகட் கூட்டிக். காலங்கி மூன்றுமிரே சகவலத்தாற் பாத்திரத்
திற் கண்டெண் ணிட்டே. (௩௬)

சங்கிதையா னிரீக்கணாதி களாற்சுத்தி செய்துமுற்றுஞ் சரியா
வாற்றி, யங்கியின்பூ சனைப்பலனைச் சிவன்பாலொப் புவித்தேத்து
மக்கா லன்ப, விங்கிதமுன் பூசனைநீ வேண்டிவந்த வாறுலகத்
திடுக்கண் டீர்ப்பான், பொங்கியெழும் பொறைகளிற கரிதிறலை
யுனக்களித்தோம் புரிதி யென்றான. (௩௭)

வானிலச் சீரிபினைம் பிரான்விசுவ நரபகனிவ் வாறு கூற
நானிலமின் பெய்சவரி நபந்துதுள்ளி மெய்ம்மானே நாயி னேனைக்
கோனினரு ளாற்பொருளாக் கொண்டனையே வென்றேத்திக
கொண்டா யபேபாய்க், கானிலவுங் கிரிகளைவன் சிறகரிய வச்
சிரத்தைக் கைக்கொண் டானால். (௩௮)

---

௩௩. சிருக்கு— ஓமசாதன பாத்திரம். ௩௪. உமைமுதலெண்மர்— உமை, சண்டன், நந்தி, மகாகாளன், இருஷபன், கணேசன், பிருங்கி, உமாசேனன் என்பவர். பராசயமின்று—தோல்வி யில்லாமல். இந்திரன் முதற்பன்மர்— இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, சோமன், ஈசானன், பிரமன், விஷ்ணு என்பவர். பத்தம்பாம்—பத்துத்திக்கு. ௩௫. பன்னறுமுகமன்—சோடசோபசாரம். அவையாவன — தாம்பூலம், பாத்தியம், ஆசமனம், அர்க்கியம், கந்தம், புட்பம், தூபம், தீபம், ஆராத்திரிகம், தாப்பணம், சத்திரம், சாமரம், நிருத்தம், கீதம், வாத்தியம், தோத்திரம் என்பனவாம். ௩௬. காலங்கி மூன்றும்—வெளிவிடும் பூதஉகாவிந்து எரிகளும்.

வேறு.

பேறி னன்பெரும் பூதா யக்கிர
வீறி னண்மைவி லக்கவி ரைந்துமுன்
னேறி வன்பகை சாய்க்குமி ரும்படை
தேறி யுய்த்தனன் சென்றன வார்த்தரோ. (௩௯)

மானுச் சைச்சிர வத்திவி வர்ந்தரி
தானு முற்றுந டுங்கிடச் சார்ந்தனன்
கானு முன்னவை கண்டகண் டவ்விடை
யேனு ரத்தொடெ ழுந்துமெ திர்ந்தன. (௪0)

உலவை வேகவுச் சைச்சிர வத்தொடுஞ்
செலவைக் கொண்டதெய் வேந்திரன் சிறியே
பலவை கற்பட ராற்றுப ருப்பத
மிலவைப் பஞ்சென வாகவெ திர்ந்தனன். (௪௧)

முரச திர்ந்திட முன்செல்கொ டிப்படை
யரச னேவலி னன்மலை யைவளைந்
திரச தத்தெரி தாரைகள் சிந்தநின்
றுரசம் பங்கொடு ஞற்றினர் நீடுபோர். (௪௨)

வீசி னன்வலஞ் சுற்றிவி ரைந்திகன்
றூசி னகமன் வச்சிர மத்திரி
பேசி னர்த்தன பேழ்சிறை பற்றிவீழ்
தூசி னகநி மிர்ந்துது ணித்தனன். (௪௩)

எந்த வெந்தவெற் பெங்கிவர்ந் தேகினு
மந்த வந்தவெற் பைத்தடுத் தங்ஙனே
முந்த முந்தநின் றூர்த்துமு ரட்சிறை
வந்த வந்தவா றீர்ந்தும டக்கினன். (௪௪)

வச்சி ராயுதம் பாய்மலை பிஞ்செழு
மச்சி ராய்ப்புணீ ராறுக ளாயின
வுச்சி ராப்பக லாகவு தைப்பிசின்
பிச்சி ராதபெ ரும்பொறை யில்லையால். (௪௫)

தெரும ரற்பட வீழ்ந்தசி றைப்பொறை
பெரும ரத்தொடும் பின்னவு லங்களாய்க்
கரும ரத்தங்க லந்தகண் ணார்பிசின்
வரும ரத்தலத் தெய்திவ யங்குமால். (௪௬)

௪௨. இரசதத்தெரி—இரத்தம்போலுமனலை. தாரைகள்—கண்கள். சம்பம்—இடி, வச்சிரம். ௪௩. பேசின்—இடியேற்றின். பேழ்சிறை—பெரிய இறகுகளை. வீழ்தூசின்—உதிருந்துகள்போல. ௪௬. பெருமரம்—பெரியமரங்கள், பீநாறிமரம். கருமரத்தம்—பெரியமாத்தமணி. மரத்தலம்—மரத்தினிடை.

சூழ்ந்த மாண்டசு டர்க்குலி சத்தினல்
வீழ்ந்த பட்டவி றகரி வெற்பெலா
மாழ்ந்த துன்பொரீஇ யாருயிர் முற்றவும்
வாழ்ந்த தாழ்ந்தமை நாகம லையெழீஇ. (சஎ)

மேக வாகன வெஞ்சிறை கட்டுணித்
தேக லாயினை யெங்கட்கி ருப்பிட
மாக வெற்புக ளங்கங்கு நல்கியெஞ்
சோக வாரிதொ லைத்திடு கென்றலும். (சஅ)

முப்ப டிக்குழு தன்மைகொ ளிந்திர
னப்ப டிக்கப யங்கொடுத் தன்புட
னிப்ப டித்திசை யெட்டினு மேற்றமா
வைப்ப வெண்குல வெற்புகள் வாழ்ந்தவே. (சகூ)

உருத்தி ரிந்தவெற் பொக்கவி றக்கையிர்ந்
திருத்தி னரி யீதசிட் டர்த்துயர்
வருத்தி டாவழி மாநிலத் துட்டரைத்
திருத்தி டுந்திறன் வேந்தறச் செய்கையே. (ரு0)

மறந்த யங்குவேல் வாட்கையோன் னர்களைப்
புறந்த தரும்படி போக்கச னிக்கான்
பறந்த கன்றமை நாகப ருப்பதந்
திறந்த ரித்திடச் செல்விடந் தேடினன். (ருக)

அடுத்த தூதா நேகா லந்தலை
யுடுத்த பூவியின் றென்பது ணர்த்தினர்
வடுத்த மாதும றைத்துவிண் ணேறின
னெடுத்த வென்றியொ டிந்திர னென்றனன். (ருஉ)

வேறு.

உளங்களி துள்ளி யைய வொருமலை யெழீஇப்போய் வாழ்வான்
விளங்கரி விடுத்த தென்னவ் வெற்பெவண் டாழ்ந்த தென்றூர்
களங்கமில் லீர் தன்றோ கதைவின வழகஃ தாழி
துளங்கலுற் றமிழ்ந்த தோடிற் றாத்தொணுத் திறனிஃ தென்றான். (ருஙு)

புரந்தரன் மலையின் சிறகரி திறல்பெற்ற

படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு கூகூக.

## பத்தாவது

# மைநாகம் வாழ்வுபெற்ற படலம்.

இந்திரன்ம லைச்சிறைக ளீர்திறல்கொள் காதை
முந்திரச மாப்பெறமொ ழிந்தனமு ரண்பட்
டுந்திரகி தத்தமர்மை நாகமது கந்து
வந்திரமி யத்திறைவ ரம்பெறல்சொல் வாமால். (க)

கானமயி லன்றில்கிளி பூவைகுயில் காடை
நானமுயல் பன்றிவரை யாடுமரை நாகு
வானவைக ளெங்கணும ணங்குநிலை யாவே
வானமுழு துங்குலவு மாவலிமை நாகம். (உ)

அந்தமலை மீதுபொழி யாற்றருவி கோடி
யுந்தமலி வார்தடமொ லிப்பவுரை சாந்தக்
கந்தமது வேயெழுதல் காதவழி போகிச்
சிந்தமது வூற்றலர்சி லைதொறும ணப்ப. (ங)

அம்பரம டைக்குமுல வத்தழைப டர்ந்த
கொம்பரவை மூசுபல கோகிலமி ழற்ற
விம்பரத னுக்கிணைப லில்லையினி மேலா
மும்பரவர் தன்னகரு மொப்பிலைய தற்கே. (ச)

வானமதி னூடரவு வேணியவ னானோர்
வானமதி மாமுகிகள் வேடரைம ணப்ப
கானமதின் வீசுசிறு காலுலவி யேற்றீ
கானமதி யேலமில வங்கமழ்வ தான. (ரு)

நாகமலை வெண்ணிலவு ஞாயிறுக ளங்காய்
நாகமலை வுற்றகவ நாணிமைநல் லார்சூழ்
நாகமலை யாளியளி நல்லொலிகள் கூர்மை
நாகமலை நின்றமைந விற்றமுடி யாதே. (சா)

---

க. உந்திரகிதத்து—கிளம்பி நீங்கியிருத்தலின். வரம்—விருப்பம். உ. கானம்—வானம்பாடி. அன்றில்—கிரவுஞ்சம், அன்றிற்பறவை. நானம்—கத்தூரி மிருகம். நாகு—இளங்கன்று. அணங்குநிலையாவே—அச்சுற்று நிற்பனவாக. ச. உலவம்—இலவமரம். ரு. அரவவேணி—நாகப்பணிமுடித்த சடை. வானமதி—அமிழ்தம் பொழியுமழகிய சந்திரன். கானமதி—வாசனைநிறைந்து. இதில்வரும் அமதி—அமைதி யென்பதின்மரூஉவாம். சா. நாகம்—வானத்து. களங்கு—அடையாளம். நாகம்—பாம்புகள். அகவ—ஒலியாநிற்ப. நாகம்—யானை.

இன்னவகை யானமலை யெண்டிசையு மோடி
மன்னவச மின்மையின்ம ருக்கொணறை யூற்றித்
துன்னவளர் செண்பகவ னத்தினிடை தோயி
னன்னருறு மென்றெணிந டுக்கடல்கி டந்த. (௭)

வேறு.

வருத்தி டாதும றைந்துகி டந்துள
விருத்தி மிக்கமை நாகவி சும்பெழீஇத்
திருத்தி கழ்ந்துள செண்பகப் பூம்பொழில்
கருத்தி ருத்திவந் திட்டது கண்டதே. (௮)

மறைந்தி ருந்தமை வாசவன் கேட்பினு
நிறைந்த மாண்விசு வேசனெ டுந்தலத்
துறைந்தி டிற்பிடித் தாறுசெய் யான்செயிற்
குறைந்த காலமென் றுட்கொடங் குற்றதே (௯)

நன்ன யத்தமை நாகம கிழ்ந்தவண்
முன்ன வன்றனை முன்னிமுன் னின்றினிப்
பின்ன விந்திரன் பீடையி னீங்கலாய்
மன்ன லங்கொடு வாழவிஃ தாற்றுமே. (௰)

மறைந்து மேவட கீழ்த்திசை மன்னிநெஞ்
சுறைந்து கந்தசொ ரூபமொன் றுற்றது
நிறைந்து கொண்டவச் சங்கம நீடுரு
பறைந்து சொல்லிடும் பான்மைய தில்லையால். (௰௧)

தென்ன ருக்குர சேகரஞ் சூட்டிவாழ்
மன்ன ருக்குவ னைந்தருள் வேணியான்
முன்ன ருக்குதற் கில்லென முன்னிவந்
தின்ன ருக்குற வேத்துமை நாகமே. (௰௨)

அஞ்சி லோதியென் னம்மையோர் பங்கனை
மிஞ்சி யிந்திரன் வெற்பிற கீர்ந்துளான்
வஞ்சி யாதும றைந்துன டைக்கலத்
துஞ்சி டற்குவந் துற்றனன் காத்தியே. (௰௩)

---

௰௧. பறைந்து—குறைத்து. ௰௨. உரசேகரம்—வயிரமுடி. மன்னருக்கு—நிலையுள்ள எருக்கமலர். உக்குதற்கு—பயப்படுதற்கு. இன்னருக்குற—துன்பம் நடுங்கும்படி. (இன்னல்-இன்னரென நின்றது.) ௰௩. அஞ்சிலோதி—அழகிய சில்லென்னும் வண்டுகளினொலியமைந்தகூந்தலையுடைய. அல்லது பின்னிமுடிக்குஞ்சுருளாகிய பனிச்சை, சுருட்டிமுடிக்குங்குழல், பக்கன் முடித்தலாகிய கொண்டை, உச்சியின் முடித்தலாகிய உச்சிக்கொண்டை, செருகிமுடித்தலாகிய செருகு கொண்டை என்னும் ஐம்பாற்கிடமாகிய கூந்தல். வஞ்சிடற்கு—நானீடேறுதற்கு.

சாமி யென்றடி சாரவ ருட்சிவ
காமி பாகன்க ணிந்துமை நாகனே
நேமி யந்தரை நிற்றிவி ணுவனக்
காமி தத்தையென் றுனச ரீரியாய். (௰௪)

கோட்டி னுகமுற் றுஞ்சிறை கொய்தரி
வீட்டி னன்குலி சத்தின்வி றற்கொடு
வாட்டி னூற்குவ லத்தைவ ழங்கினை
யீட்டி னார்சிறை யெற்கரு ளென்றனன். (௰௫)

கம்ப லைவிடு கண்ணுத லாமெமை
வம்ப ரூமல ரால்வழி பட்டரி
யிம்பர் வெற்பிற கீர்திறல் பெற்றதி
னெம்ப தம்பணி யீதுமென் றுனரோ. (௰௬)

என்ன லுந்தமி யேற்கிவை யெப்படிப்
பன்ன லாகுமப் பான்மைதெ ரிக்கென
நன்ன ரோர்குரு வாகமை நாகனோர்
சின்ன யன்குறீஇத் தேற்றிம றைந்தனன். (௧௭)

இதையங் கண்டமி சைவுறு தானுமே
லுதையச் செங்கதி ரோடுநி லாவுகு
சுதைய பாலத்தி லைச்சுழி னைமிசை
விதைய தற்பர மின்னைவி ழிக்கொடே. (௰௮)

தங்கு மாதவந் தான்றவ றுதென
வெங்கு மாங்குரு நாதனி சைத்தவா
றங்கு மாபதி யர்ச்சனை யாற்றிடக்
கொங்கு மாப்புன லேந்துகொ ணர்ந்தனன். (௰௯)

மலையச் சேற்றைம ணத்திட வள்ளியத்
தலைய தைச்சம ளுத்தள பாக்கியே
நிலைய மன்னநி ரைத்துமி லிங்கமாச்
சிலைய நேகமுஞ் சேரவ டுக்கினான். (௨௰)

ஈச னைச்சொயஞ் சோதியி லேயெழு
தேச னைமனந் தேர்ந்துகொண் டேவெளி
யோச னைக்குரூ பா[illegible] மூர்த்தியாப்
பூச னைசெயப் புந்திகொண் டானரோ. (௨௧)

௰௮. விதைய—பெருமையையுடைய.

புத்தி ரஞ்சித மாப்புதுப் பூவிரைப்
பத்தி ரங்கள்ப றித்தனன் பானநீர்
சித்தி ரப்பட வட்டகை தேய்த்ததின்
முத்தி ரத்ததூள் பெய்துமுன் வைத்தனன். (உஉ)

திருவு ருசம ஞர்க்கிய பாத்தியத்
தொருவு நீரையு கந்துநி ரப்பியே
குருவு ரைப்படி சந்தனங் கோவினெய்
மருவு நீடளிர் பூவளர் தர்ப்பையும். (உங)

எள்ளு நீறு கடுகுசெந் நெல்லிவை
கொள்ளு நீண்மனு வைந்துடன் கூட்டங்க
மள்ளு ணீடிய வாசன மூர்த்தியுந்
தெள்ளு நீரிடை மூலமுஞ் சேர்த்தரோ. (உச)

அருக்கற் கோமெனு மர்க்கிய நல்கிநற்
றருக்க ணீடலர் சந்தனந் தத்துவப்
பெருக்கப் பீடவா வாகனம் பெட்புயர்
திருக்க திக்கபி டேகமுஞ் செய்தரோ. (உரு)

துகிலி னூற்றுவர்த் தித்துக டீர்புகை
யகிலி னூற்சந்த னத்தவிர் தூமமே
மிகிலி தூற்கிணே வேறிலே யென்னபூ
முகிலின் கூட்டமெ னச்சுற்றி மொய்ப்பவே. (உசு)

சந்த னூட்சதை தூர்வைசிரீ புட்பங்
கந்த மீறுக வின்மலர் மேகலே
யெந்த நாளுமி லங்கொளிப் பூடண
முந்த நாயக மேவுமு கிழ்முடி. (உஎ)

நிலவு மங்கையர் நிற்பவி ரண்டுபா
லலவு கோட்களு கந்தணி மாலேயாய்க்
கலவு தண்டியும் பிங்கலே யுங்கனங்
குலவு மைங்கா னுங்குரு வுங்கொடு, (உஅ)

---

உச. அள்ளுள்—உள்ளே பொருந்திய உஎ. தூர்வை—அறுகு. சிரீ புட்பம்—வில்வம். உஅ. நிலவு மங்கையர்—ஒளிவடிவாய உஷாதேவியும், பிர்த்துஷாதேவியுமாவர். பிங்கலே—பார்வதி.

பருதி கோடிப ளிரென வந்ததி
லொருதி றத்துரு வப்பிர காசமாக்
கருதி யுட்குகைக் கண்ணுறு காட்சியிற்
சுருதி யார்கடோற் காயசு வாவென. (உகூ)

புகைக்குந் தூமமும் பொன்விளக் கும்பல
வகைக்குண் டாயவ ளத்தபொங் கல்களுந்
தகைக்கு ணத்தசிற் றுண்டிகள் சாலவு
மகைக்கும் பல்பழ வர்க்கமு மாக்கியே. (௩0)

சூரி யார்ச்சனை செய்துது வாரமாள்
வாரி னர்ச்சனை மாடிய ருட்கொடு
நேரி ழைக்கொரு பாகனை நீடளி
கூரி தத்தொடு கும்பிட லாயினன். (௩க)

தூப தீபநை வேத்தியந் தூமனந்
தாப ரித்தத கைக்கொட ருச்சனை
கோப திக்கருள் கூரவி யற்றியே
மாப றம்பன்ம கிழ்ந்துது தித்தனன். (௩உ)

ஒன்றி டப்புறத் தோங்குமை வைத்தவா
வென்றி டக்கண ஞைரவாழ் வித்தவா
மன்றி டக்கலி வல்லியன் காலிலி
யென்றி டப்படு மன்பரை யேற்றவா. (௩௩)

தோத்தி ரங்கொடு தூவருள் செய்பவா
சாத்தி ரத்தத னிப்பொரு ளானவா
நேத்தி ரத்துநி லாவொளி யாயவா
காத்தி ரத்துயி ராய்நின்ற காரணா. (௩௪)

மங்கு லம்புவி நீரனல் வாயுவான்
கங்கு லற்றிடக் காண்கதிர் வைத்தவா
வெங்கு லத்தவர் போலிட ரெய்திடாப்
பொங்கு லச்சிறை நல்கெனப் போற்றியே. (௩௫)

கார ணாசின் மயகரு ணாநிதே
யார ணாதித வானந்த வம்பரா
பூர ணாசிவரேசக பூரகே
வார ணாசிதென் காசியின் வாழ்பவா. (௩௬)

௩0. அகைக்கும் = செலுத்தும். ௩க. மாடி = செய்து. ௩உ. கோபதி = சிவன், சூரியன், விடை. ௩௩. கலி = வலிய.

உன்னை யொப்பவ ரின்றுல கத்திலே
மன்னை யொப்பநன் மக்களை யாளுவோ
யன்னை யொப்பவ ராரம்மை யப்பனே
யென்னை யொப்பவோ ரேழையிங் கில்லையால். (௩௭)

இழிய னென்றெனு ரைக்கிரங் காயெனின்
மொழிய வேறிலை முற்றுமொர் தாபரம்
பொழிய ருட்கட்பு ராதன காத்திலை
பழிய டுக்குமுன் பக்கலென் றேத்தினன். (௩௮)

விழுந்து நான்முறை வேண்டிவ ணங்கினன்
முழுந்து மன்புயர் மூரிமை நாகனைக்
கொழுந்து மாபதி கோட்டிலிங் கத்தினின்
றெழுந்து னர்ச்சையு மேத்துமு கந்தனம். (௩௯)

மாமை நாகநீ வன்சிறை யோடுறற்
காமை யூர்தென்க டற்கண மிழ்திமான்
மீமை யூர்ந்தச னிப்படை வீசுவான்
பேமை நீத்துனைப் பேணுது மென்றரோ. (௪0)

அந்த லிங்கம திற்கரந் தானரன்
வந்த நாகன்ம கிழ்ந்தெழீஇ வச்சிரஞ்
சிந்தல் வென்றுபோய் முத்தெறி தென்கடல்
சொந்த மாக்கொடு துன்னிவாழ் வானரோ. (௪௧)

வெருவ றீர்ந்துவி ளங்கின னவ்விடை
யொருவ வேனுமு யிர்க்கிடை யூறுறச்
சருவ வேனுமெண் ணமையிற் சக்கிரி
மருவ லின்றிம கிழ்ந்ததென் றூனரோ. (௪௨)

# மைநாகம் வாழ்வுபெற்ற படலம்

முற்றிற்று

ஆகப்பாட்டு ௯௭௩.



## பதினோராவது,

# வச்சிராயுதம் கூர்மை பெற்ற படலம்.

உடலி னெஞ்சிறை யோடுமை நாகந்தென்
கடலி னின்றமை யோதினங் காணரி
யடலி னார்ப்பரித் தாண்மைசெய் வச்சிரம்
விடலி னூற்றிய வீறினி யோதுவாம். (க)

மாத வேசமை நாகமுன் வாயுவி
னாத மேற்கொட ரிக்கொளித் துய்ந்ததா
வோத லுண்மையன் றேலென நற்றவர்
சூத னோகைது ளும்பியி தோதுவான். (உ)

பண்டைக் கேள்விம ருதுள பான்மையீர்
கண்ட துண்மைநா சன்னொலி யின்றுணைக்
கொண்டி லாலெழல் கூடுமோ பிற்கதை
விண்ட திஃதென வேண்டினர் கூறுவான். (ந)

மந்தி ராகமத் தார்ந்தம னுக்களுஞ்
சந்தி ராதவர் சார்புள யோகரு
மெந்தி ராக்கர ரேதவரு மேவரு
மிந்தி ராதிப னேத்தினன் றீவரே. (ச)

வீறி னற்பல வெற்பினி றக்கைகள்
கீறி நாற்றிசை கீழ்ப்பட விட்டபின்
மாறி னுலொளித் தோடுமை நாகமே
சீறி நாஞ்செயித் தேமெனச் சென்றதால். (ரு)

புலவ ருக்கர சுப்பர்பு குந்தபி
னிலவ லர்த்தரு நீழலி னுற்றெணிக்
கலவ வச்சிரங் கைக்கொடு கொண்டனூர்ங்
துலவங் நாக னெடுக்கிவெல் வானிற்ப (சு)

பாயக் கண்டடை யார்கள்ப கிரென
வேயப் பார்விளை வென்னையோ வென்றுட்க
மேயக் கார்ப்பரி வேந்தன்று ரீஇயினன்
ஞேயக் கன்மகிழ் நீடியெ ழுந்தத, (எ)

உ. மாதவேச=சூதமுனிவரே! ஆதமேற்கொடு=துணையைமேற்
கொண்டு அரிக்கு=இந்திரனுக்கு. நற்றவர்=நைமிசத்தவர். ந. கண்டது
=நீவிராராய்ந்தறிந்தது. ஒலி=வாயுதேவன். ச. மந்திராகமத்து=வேதாக
மங்களில். சு. கலவ=ஃபார்த்தொழிலையுடைய. நாகன்—மைநாகனை,

எடுத்து வீசினன் வச்சிர மேறிவெற்
படுத்துக் கொய்சிறை யார்த்தெதிர்த் தாடலிற்
படுத்துக் கூர்மழுங் கிப்பறிந் தோடிமா
னடுத்த ளங்கரி நாணமுன் வந்ததே. (அ)

சுற்றிப் பார்த்திதென் சூரமை நாகனும்
வெற்றிப் பான்மை வெட்கவே திர்த்தனன்
மற்றிப் பாங்கெவன் வந்தது நண்பரார்
சற்றிப் பாலுறை வார்தமி வில்லையால். (கூ)

அருக்க னேரொளி யாரச னிப்படை
கருக்க லியந்து கண்ணிமை யாரிறைக்
கொருக்க லான்மதிப் பின்மையு முற்றது
பெருக்க மென்னினிப் பேசிடற் குள்ளதே. (ய)

ஊட்டி வைத்துறக் கத்துவீழ்த் தூக்கியாங்
காட்டி யூழ்வழி யாருயிர்க் காவது
கூட்டி யின்பதுன் பங்கொளக் காண்சிவன்
சூட்டி தேற்பிறர்த் தூற்றலென் றுய்ப்பதே. (யக)

வேறு.

ஈசனை யருச்சைசெய் திருந்தி றற்கொடு
வாசவன் மலைச்சிறை மடிப்ப வோர்கலவ்
வீசனைப் பூசைசெய் திருஞ்சி றைக்கொடு
வாசவ னசனிபை மழுக்கிற் றூர்வலார். (யஉ)

இல்லையென் பவர்க்கர சீத னுள்ளவர்க்
கல்லலென் றொழித்தலுட் குதல்செய் தன்புமோர்
முல்லைநக் கலிற்கொலை வன்பு முன்னிநல்
கெல்லையிந் தெரிக்கவெணம் மிறைய ருட்செயல். (யங)

இம்மியும் பிழைத்திடா விறைய ருட்செய
னம்மிடைப் பிழையெனி னகைவி ளைக்குமால்
விம்மித மிதனிடை விளங்கல் வேண்டுமன்
றம்மிட வத்தெனென் றருச்சைக் கேகினன். (யச)

---

அ. மானடுத்தளங்கரி—மேகத்தினடுவிலே விளங்குமிந்திரன். ய. ஒருக்கலால்—ஒரு மலையால். யஉ. ஓர்கல்—மைநாகம். யங. உட்குதல்செய்தன்பும் என்றது இராவணேச்சுரனுக்கருளிச் செய்ததும், எர்முல்லை நக்கலிற் கொலைவன்பும் என்றது முப்புரமெரித்தருளியதுமாமெண வறிக. ருச. அம்மிடவத்தெனென்று—அழகியவுலகத்திலே எளிமையாமென்று.

சித்திரை யாற்றரி தீர்த்தங் கண்டுதோய்ந்
தத்தினக் கடன்முறை யாற்றி ஞனவண்
புத்திகொ ளேவலர் போய்க்கொ ணர்ந்தருள்
முத்திறப் பொருள்கொடு முயல்வன் பூசையே. (௰௫)

பரந்தநன் மணங்கமழ் பாரி சாதமுன்
சுரந்ததேன் மலர்பல தொடையிண் டைசரந்
தரந்தரங் கட்டியுஞ் சந்த னதியும்
நிரந்தரற் காதிவேத் தியமுங் கண்டனன். (௰௬)

தாமரை யலரிமத் தம்மந் தாரநற்
பூமயிற் கொன்றைபொற் கொன்றை பூஞ்சர
மாமத லைதள வம்மை வில்லுவங்
காமரார் நீலம்வெள் ளெருக்கு காந்தளே. (௰௭)

புரசுசெவ் வந்திமுட் சிவந்தி புன்னைநீ
டரசுதும் பைபனீ ரறுகு குல்லைமா
வரசுகந் தத்திரு வாட்சி மல்லிகை
திரசுகந் தருகுட முல்லை செண்பகம். (௰௮)

செருந்திமான் பிச்சிமுன் றிரும லர்க்குலம்
பொருந்திவந் தவற்றரீற் போக்கி வைத்துமே
தருந்தில செய்பயந் தயிர்ம துக்குடந்
திருந்திள நீர்குழை திரவி யங்கொடு. (௰௯)

ஐங்கனி யாதிய வமைத்த ருச்சனை
யிங்கித மாவரி யியற்று வான்முறை
மங்கல மாவபி டேக மாடிமெய்
யங்கமா ரணிகொளொற் றுடை சாத்தியே. (௨௰)

பொற்கலை யுடுத்துநற் பணிகள் பூட்டியே
பெற்கதி ரார்முடி யிலங்கச் சூட்டியே
முற்கநற் பருப்புமுன் முதிர்ந றுஞ்சுவைப்
பற்கவின் பொங்கலும் பாற்பொங் கன்முதல். (௨௧)

---

௰௫. முத்திறப்பொருள்—மலர்தழைகள், சந்தனமுதலியவைகள், நைவேத்தியாதிகள் என்னு மூவகைத்திரவியங்கள். ௰௬. நிரந்தரன்—கடவுள். ௰௭. காமரார்—அழகிய ஆத்தி. ௰௮. பனீர்—பன்னீர்ப்பத்திர புட்பங்கள். ௰௯. பயம்—பால். குழை—சந்தனக்குழம்பு. ௨௰. ஐங்கனி—வாழை, பலா, மா, மாதளை, எலுமிச்சைப்பழங்கள். ஆதிய—பஞ்சாமிழ்தம், பஞ்சகௌவியமுதலியவை. மாடி—செய்து. ௨௧. முற்கநற்பருப்பு—நல்லபாசிப்பயற்றம்பருப்பு. பாற்பொங்கல்—பயசானம். (பரமான்னம்.)

விதவித மாயனை வேத்தி யங்களு
மிதமித மாம்பழ வினங்கண் முற்றவும்
நிதநித மூட்டலி னிறைய வூட்டியே
மதமத மருச்சனை யாடி னனரோ. (உஉ)

பூசனை முற்றியப் பூச னைப்பய
னேசனைக் கொள்கென நிகழ்த்தி நல்கியெம்
மீசனை யருளுல கேசை பேண்விசு
வேசனை யன்புகூர்ந் திரந்து வேண்டினன். (உங)

ஒருவரு மறிகிலா துளப ரம்பரா
குருவருட் கோலமாக் கொண்ட மூர்த்தியே
யிருவரு மறிகிலா தெழுந்த பேரொளீ
யுருவரு வுருவரு வுறீஇயப் பாலவா. (உச)

மதியினி லமிழ்தமாய் மலரின் வாசமாய்த்
துதிமதுச் சுவையதாய்ச் சுருதி யுண்மையாய்ப்
பதிசொலிற் பொருளதாய்ப் பண்ணி ஞேசையா
யெதினுமாய்ப் பயன்கொளா விறைவ போற்றியே. (உரு)

வேரறி யாப்பலீ விளைத ராக்கனீ
காரறி யாச்சொரீ கடலி லாமனீ
யூரறி யாவிலே புடம்பி லாருயிர்
போரறி யாத்தவா பெரும போற்றியே. (உசு)

முக்கண நாற்புய முதல்வ நின்மல
வக்கண பங்கமா வகிலம் நாட்டியோய்
தெக்கண காசியா தேசி காசிவா
மக்கணன் மழலைவீழ் மனத்தை போற்றியே. (உஎ)

சயிலவெள் ளியங்கிரிச் சம்பு வேதியா
மயிலன வுலகவம் மனைம ணாளனே
யயிலவ னைங்கர னப்ப வன்புளார்
பயிலர சங்கர பாத யாளுவே. (உஅ)

உனதுதா பரமலா லொருதிங் கில்லையான்
மனதுகந் தருளென வாச வன்றுதி
சொனதுகண் டிரங்கிய சூலி வச்சிரீ
நினதுபூ சனைதுதி நிறையன் போர்ந்தனம். (உகூ)

---

உஉ. மதமதம்—சமயத்துக்குச்சமயம். உங. அருளுலகேசை— அருள் வடிவாகிய உலகேச்சுவரி.

கொத்தலர் சண்பகக் குளிர்வ னக்குறோ
சத்தம ரித்தலந் தனினு யிர்க்கரு
ளத்தனு மியான்பணிந் தவர்வி ருப்பெலாங்
கைத்தல நெல்லியங் கனியி லீகுவோம். (௩0)

ஆகையான் மலையிற கரிதி றற்குநீ
யோகையாற் றொழுதநா ளுகந்து பெற்றவா
றீகையார் தரப்பணிந் திறக டைந்தனன்
வாகைமை நாகனும் வாகை நின்னதே. (௩௧)

என்னெனி னுனக்குல கிடர்த விர்ப்பதொன்
றுன்னென லறிகுவே முவன்சி றைக்கொடுந்
தென்னெடுங் கடலினுட் சிறைப்பட் டான்வெளித்
துன்னெனின் றன்னமெய் துணிந்து கோடியால். (௩௨)

உனக்கட னுண்மையை யுணர்ந்தி லாயவன்
றனக்கருள் வரபலந் தனைம தித்திலாய்
மனக்கவ லாதெயுறி வச்சி ரங்கரீஇப்
பனக்கரு திணைநகைப் பணிந்துய்ந் தாயரோ. (௩௩)

வலிமிக வொளிமிக வயிரங் காணுனர்
கிலிமிகத் தந்தனங் கேடின் றேகென
வொலிமிக வுரைத்தன னும்பர் வேந்துதன்
குலிசநோக் கினனுளங் குளிர்ந்து மெச்சினான். (௩௪)

பொன்னகர்க் கிறைபிறை பூசை யாற்படை
மன்னகக் கூர்மையார் வளங்கண் டேகினான்
கன்னகம் பூசையாற் கடனுள் வாழ்ந்ததென்
றுன்னகந் தீர்தவ னுரைத்தின் பாக்கினான். (௩௫)

குளிர்ந்திரு செவியுளங் குளிர்ந்து டம்பெலாங்
குளிர்ந்திரு மையும்பெறக் கோன்க தைச்சுதை
குளிர்ந்திரு தயமெனக் குளிர்ந்திட் டாயெனக்
குளிர்ந்திரு ணைமிசர் கும்பிட் டாரரோ. (௩௬)

வச்சிராயுதம் கூர்மைபெற்ற படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு எ௱௬.



## பன்னிரண்டாவது அகத்தியன்

# திருமணக்காட்சி பெற்ற படலம்.

வச்சிரா யுதங்கூர் மிக்க வளம்பெறு கதையு ரைத்தாம்
மெச்சிராப் பகலொ விக்கும் வெண்டிரைக் கடல்கு டித்துக்
கச்சிரா நீர்கான் மைபோற் கான்றரு ளகத்தி யன்று
னுச்சிராக் கதிர்பி றைவே யுமைமணங் காண்டல் சொல்வாம். (க)

இறையவ னொருகா லத்தி னிமையமீன் றெடுத்த தெய்வப்
பிறையவிர் நுதலி தன்னைப் பிரசமா லிகைசூட் டற்கா
மறையவன் மான்மற் றுள்ளோ ரிமையமேன் மணச்சா லைப்பா
லுறையவை யகஞ்ச மன்விட் டொருவட தலைசாய்ந் திற்றே. (உ)

அன்னது தெரிந்து மாயோ னயன்மக வான்மற் றுள்ளோர்
துன்னது கொண்டோ கும்பன் றாயதென் பால்வ ரற்கோ
தென்னது மணங்காண் டற்கோ தென்றலை யுயர்ந்தென் றீசன்
முன்னதுற் றுரைத்தார் கேட்ட முற்றறி வினனுய்த் தோர்வான்.

திடமுற வலங்கா ரித்துத் திருமிகப் பொலிவி மானத்
திடமுதற் பந்தர்ப் பார்த்தாங் கிருக்குமா தவர்தே வர்க்குட்
சடமுயர்ந் தோர்ப்ப ருத்தோர்த் தள்ளியோர் குள்ளற் கண்டோ
குடமுனீ வருக வென்றான் குளிர்ந்தெழீஇத் தொழுது வந்தான்.

கொங்கலர் புனைகல் யாணக் கோலமார்ந் திருந்த பெம்மான்
றங்கணிப் பீடத் தின்முன் றாழ்ந்தெழீஇ நிற்பக் கும்ப
மங்கலம் நாப்பண் டாழ்ந்து வடாதுதெற் குயர்ந்தாற் பூமி
பொங்கயர் வறநீ தெற்குப் போய்ச்சமன் செயல்வேண் டாவோ.()

கலையமா கனவா னேநீ கந்தமால் வரைய டுத்தா
னிலையக விடந்தா னெத்த நிலைபெறு மதுசெய் கென்றான்
வலையநீ ருண்டோ னென்னே மறமியான் செய்தே னீதென்
றலையதி லெழுத்தோ மன்றற் சாறுகண் டிடல்வேண் டாவோ. (சு)

அகத்திய னிலாக்கல் யாண மாவுமா பதிக்கின் பாய்த்தென்
முகத்திரு விழிம ணங்காண் முதுதவ மில்லா தாய்த்தோ
சுகத்திரு மணங்காண் கில்லாத் துரத்தலென் னென்று ணேர்ந்து
சகத்திவர் குப்ப சன்றான் றாழ்ச்சியாற் றற்கோ வென்னே (எ)

---

சு. கந்தமால்வரை—வாசனையையுடைய சந்தனமடர்ந்த பெரிய பொதியமலை.

மாற்றமும் பிறிது தேறேன் மறுத்துரைத் தலுமா காதாற்
கூற்றமுன் புதைத்தோற் கீது கூறுவ லெனவுட் டேர்ந்து
தேற்றமுற் றெம்பெம் மானே திருமணங் காண்ட லொட்டா
தாற்றமுன் னியதென் னேநின் னடிமைகை விடலை யென்றான். ()

என்னலு மீச னன்ப வியானுனை வெறுக்க கில்லை
னுன்னலுன் போலு வல்லா ரொருவரு மிலாமை யாற்றான்
பன்னலுட் கொடு போய்த் தூக்கிற் பார்நிலைப் படுத்தென் மன்றன்
மன்னலுற் றிடநீ செய்தான் மணநடப் பித்தோ னுவாய். (௯)

கமையவி ரிமைய மீன்ற கன்னியா முலகத் தாயை
நமைமற வாநீ செய்பிந் நன்றிமே னன்றி யின்று
லெமைமணப் பித்தற் காத்தெற் கேகிநீ பொதியில் வாழ்தி
யமையமா மணக்கோ லங்காட் டற்கவண் வருது மென்றான். (௰)

காதனல் லுரையீ தாயி னவிற்றவே றென்னை யுண்டே
போதனன் றெனக்கொண் டொன்று புகலுவான் றமிழ்நாட் டின்க
ணூதன மெனது செல்கை நுவலிரு மொழியுந் தேர்ந்தோர்
சோதனத் தொருசொல் வல்லேன் றேற்றிடா தருடி யென்ன. ()

தண்டமி ழிலக்கி யத்தைத் தகுமிலக் கணத்தை யெண்ணெ
மண்டமிழ் தினிற்பு கட்டி மகிழ்வரு ளினனு யாங்குக்
கண்டமின் னெழுவ ருள்ளோர் காவிரி தனைய ளைத்திவ் [ன்.
வொண்டமிழ் முனிபின் போய்த்தெற் குலகுவாழ் வித்தி யென்று

வரநதி குமரி கோதா வரிநரு மதைகா வேரி
சரசோதி யமுனை யென்னுஞ் சத்தமா தீர்த்த 'மாதர்
மரபினி லொருகா வேரி வள்ளலி னுணை யாறே
பரசகத் திபன்பின் போந்தாள் பழந்தமிழ் நாடுய் தற்கே. (௰௩)

போந்துநித் தியகல் யாணப் புதுமணத் தாய்பாற் பொன்னி
மாந்துமா மலர்த்தாள் போற்றி வரங்கொடு மகத்தி யன்றான்
காந்தனித் தியகல் யாணன் கழன்முறை வழிபட் டேத்தி
யேந்தபல் வரம்பெற் றுஞ்சீ ரியல்வழிக் கொளலா னால். (௰௪)

அவ்விடைப் பரவி நின்ற விருவருக் கருள்வ ழங்கிச்
செவ்விடை கொடுத்துய்க் குங்கால் சிவன்றிரு முனரி யாழோன்
வெவ்விடை யூர்தி யாயோர் விந்தமோங் கியமே ருத்தாழ்த்
தொவ்விடை யிருசு டர்க்கு மூரதர் தடுத்திற் றென்றான். (௰௫)

விடைத்துகி லுயர்த்தைந் தாற்று விமலனங் கதனைக் கேளா
விடைத்தடை செயின்விந் தத்தை விடவமட் டாத்தாழ்த் தாறுங்
கொடைக்கரத் தருளி யுய்த்தான் கும்பமா முனிதெற் கேக
நடைத்தகக் கொண்டான் வேட்ட னடந்துநன் குலக முய்ய. (௰௬)

முனிவரு வழியி லாறு முரட்பரல் குவடு சோலை
நளிவளர் கழனி வாவி நறியபூங் கமலக் காடு
பணிவதி குறிஞ்சி முல்லை பலவுதண் கதலி தேமாக்
கனிவள மிகுதி காட்டிக் கமழ்வன கண்டு வந்தான். (௰௭)

எல்லையில் வனங்கள் கான்யா றிவைகடந் தேகும் போது
முல்லையி னடுத்த பாலை முதிர்சுர மதனோர் பாலாக்
கொல்லையி னெருங்கு தீங்காய் கொழுங்கனி குலைத்தார் தேங்கள்
வல்லையி னிறைக்குந் தன்ம மடமதோர் சாலை கண்டான். (௰௮)

அங்கணம் முனிவ னன்று டகக்கடன் செயற்கு வைகித்
தங்கருத் துவப்ப வாற்றுஞ் சந்திக டருப்ப ணாதி
செங்கனல் வளர்க்கு மோமஞ் செய்வன செய்தி ருப்பத்
துங்கநா ரதன்விந் தப்பாற் றுன்னியீ தியன்ற தக்கால். (௰௯)

மருவிய தறிந்த விந்தன் மாதவ விவணீ வந்தாற்
பெருவியப் பேதோ வுண்டால் பிறங்கதை யுரைத்தி யென்ன
விருவியத் திறைஞ்சி வேண்ட விராசவெற் பியானே தேவர்
துருவிய துருவ னானே யென்றுமா மேரு சொற்றான். (௨௰)

உமையவள் குலந்தா னென்று மொப்பிலாச் சூர பன்மன்
கமையவா யிரத்தெட் டண்டங் காத்தவ னவனு ளுந்தான்
குமையது செயவொண் ணாத குலகிரி யெட்டுந் தாழுஞ்
சிமையபொன் மலைய தென்றுஞ் செங்கதிர் மதிசூழ் மாண்பும். ()

சுற்றிய முடிக ளோரா யிரமுள தோற்றச் சால்பும்
பற்றிய புகழோ னென்றும் பகர்ந்திடு மாத்த லன்றிச்
சிற்றியல் விந்த மென்ன திறத்ததென் றிகழ்ந்த துன்பான்
முற்றிய வன்பாற் சொற்றேன் முனத்திரீஇக் கோடி யென்றான்.

---

௰௬. ஐந்தாற்றும்—ஐந்தொழில் (பஞ்சகிருத்தியம்) செய்யும். ௰௮. இறைக்கும்—அள்ளிச்சொரியும். ௨௧. குமையது—அழிவது. சிமைய—குடுமியையுடைய.

நாரத விந்தவாறே நவின்றதம் மேரு வக்கற்
சீரதப் பியநீ தேர்வாய் திரிபுராந் தகனகை வில்லாய்ப்
போரதற் குதவா தாகப் புரநகைத் தெரித்தான் முன்னோன்
பாரத மெழுதற் கோலே படிப்பவ ரதன்கண் ணோரே. (உ௩)

வெட்கமு மின்றி மேரு விண்டதற் பெருமை யெந்தப்
பக்கமுஞ் சிரிப்பா மென்று பரந்துயர்ந் தெழுந்த விந்த
முக்கமுற் றிலாம றித்தங் கோங்கியென் சீர்தேர் கென்ன
துக்கமுற் றிரவி திங்கள் சுழன்றில மறுகு மாலோ. (உ௪)

வானவர் செயலோ மாயை மக்களின் செயலோ விஞ்சைக்
கானவர் செயலோ வேற்றுக் கருடரின் செயலோ சித்த
ரானவர் செயலோ தைத்தி யரின்சொடுஞ் செயுலோ வாகா
வீனயஞ் சகமீ தாரே யியற்றலென் றலக மேங்கும். (உ௫)

அகலிய விந்த மேரு வதனையெள் ளித்தா னேங்கற்
கிகலிய செய்கை யீதா லீதுநா ரதன்கோ ளாலே
நகலியல் பாய்த்தே னும்பார் நடுங்கிதற் கெதிரி யாரே
புகலிப கோளுட் கொண்ட பொருப்பதே பொறுப்பாய்த் தம்மா.

நல்லவர்க் குற்ற தீதுந் தீயவர்க் குறுநல் வாழ்வும்
மெல்லவற் றூற்று நீர்போற் போய்விட விழப்பார் மேற்பா
ரெல்லவ னுதிப்ப நாழி யொன்றிரண் டேமெட் டுப்பத்
தொல்லமு வைந்தென் றெண்ணி யொழித்தலிற் றுய்க்குந் தானே.

ஆதலி னியாழோன் விந்தத் தகந்தனி யடங்குங் காலங்
காதலி னிறைவன் மன்றற் காலமாம் போலுந் தெற்கே
போதலி னினிய கும்ப முனிவனும் புராரிதானே
யோதலி னிதுநன் றூமே லுறுவது காண்பே மென்றும். (உ௮)

ஆபத்தை மாற்றிப் பாரி னறனிறீஇ யருளுங் கும்பன்
றீபத்தை மலைமே லேற்றுந் திருப்படு தெற்கே குங்காற்
கோபத்தை யுயர்ச்சி தானே கொளவள ரிவ்விந் தத்தின்
றூபத்தைத் தாழ்த்து மென்றுந் தவனுற வடுத்தா னன்னோன். ()

---

உ௩. அக்கற்சீரதப்பியம்—அப்பறம்பினுடைய சிறப்பானது சபைக் கடாத சொல்லாகும். உ௪, உக்கம்—இடைவெளி. உ௬. நகலியல்பாய்த் தேனும்—சிரித்தற்றகுதிய வாயிற்றுயினும். எதிரி—உத்தராவாதி. உ௭. எல்ல—எள்ள. (மெல்ல—பைய) ஒல்ல—பொருந்த. உ௯. கோபத்தை—விந்தத்தின் சினத்தையும், தாபத்தை—அதனுடைய ஆசையையும். தவன்—நாரதன். அன்னோன்—அகத்தியமுனிவன். 14.

அடுத்தமா தவன்செ லற்கு மதரிலே யாக விந்த
மெடுத்ததன் னுயர்ச்சி காண்கைக் கிவர்ந்திறு மாந்து நிற்ப
கடுத்தலின் றினிய வார்த்தை கழறிவேண் டினனவ் வேண்டுட்
படுத்தவெற் பச்சோர் பாலோர் பாற்சமழ்ப் பார்ந்தி தோதும். ()

கோதிலாய் வேண்டி யானுட் கொடுவழி விடினென் சீரை
யேதிலார் பழிப்ப ரன்றோ விசைவிடேன் பசிதீர்க் கின்றேன்
வாதிலார்த் தெழின்வெல் வேனி மடங்கியோர் கரையாச் சேரிப்
போதிலா றிரத்தல் வேண்டா போதியென் றிசைத்திட் டானல்.

எமக்குநீ வழிவி டாயே லிக்கணத் தெங்கை நீட்டிச்
சமக்கிடக் கையினுட் டாழ்த்தித் தானியாஞ் செல்வே முட்கோண்
டிமக்குல கிரிவி னென்று யிருக்கநோக் கென்றான் கும்பன்
சுமக்குமண் குவட்டோ னேதுஞ் சொற்றிலன் வாளா நின்றான்.()

ஒன்றலுன் னியமுனீச னுயர்ந்தய னூர்மட் டோங்கி
நின்றவிந் தத்தைத் தாழ்த்த நினைந்தொரு கையை நீட்டி
மன்றவ னுணை யாறே பாநிலத் தமிழ்த்தி விட்டான்
சென்றதற் கிரங்க லென்னே சிலம்பது புகல்வே றின்றி. (௩௩)

புலம்பியிப் படியோ தாழ்ந்தேன் பொருட்பெருக் குடற்கோ ழுப்
நலம்பிறழ் காற்பெட் பாக நயப்பவர் இளைப்பாய்த் தெற்கென் [பை
றலம்பிறந் தழுங்கு விந்த மாறுத லடைவான் மேலோன்
சிலம்பியான் சொலல்கே ளாய்மேற் சிந்தையா னைத லேனே. ()

உருவரைச் சிறக ரிந்தா னும்பர்கோ னனையான் றாழ்த்தே
னருவரை நிலமா றுமை யாலிசை பெறுந்தி ரும்பி
வருவரை யிவண்வாழ் கப்பான் மதிப்பரு ளுவனென் றேகி
யிருவரை யறவோர் போன்முன் னிருப்பக்கண் டார்நீ ரென்றான்.

என்றலும் பெரியீர் நீவி ரெதிர்வரக் கண்டேம் பூவு
மன்றலும் போல மேலோர் மாதவ மெமக்குண் டாய்த்தால்
கொன்றலுங் களவுங் கள்ளுங் காமமுங் குருத்து ரோகந்
துன்றலுந் தொலைக்கு மன்னந் துய்த்துநீர் செல்வீ ரென்றான். ()

---

௩௨. சுமக்குமண்குவட்டோன்—மண்சுமக்கு முச்சியையுடையோனு
கும் விந்தம். ௩௩, மன்றவன்— சிவன். ௩௪. அலம்பிறழ்கால்—அழியாமை
மாறுங்காலத்து. சிந்தையால்—வருத்தத்தால். ௩௫. இருவரை—வில்வலென்
வாதாபி என்னும் இரண்டசுரரை.

குழைத்தபா கூட்டல் போலுங் குளிரிதம் பலவும் பேசி
யழைத்தவண் கூட்டிப் போயோ ராசனத் திருத்தி யன்பாற்
பிழைத்தவா தாவி யென்போன் பின்னொரு பாலா டாகித்
தழைத்ததா வரமுன் னோனுந் தருவவில் வலன்பி டித்தான் (௩௭)

அன்னியன் போலம் மாவென் றலறிட வறுத்து ரித்துப்
பன்னிய வூன்வெவ் வேறு பகிர்ந்துபல் சுவையா வாக்கித்
துன்னிய வமுது துய்ப்பச் சுசிருசி யுபசா ரத்தோ
டின்னிய மத்தான் போற்போ யிரந்துகும் பனைக்கொ ணர்ந்தான்.

பெரியபீ டிகையின் வைத்துப் பெருகளி யுளான்போற் பூசை
யரியவாச் செய்திவ் வேளை யன்பிலே னளிக்குஞ் சோற்றை
யுரியவாக் கொள்கென் றன்புத் துருக்குநெய் நிறையப் பெய்தான்
பொரியலா திபகூட் டெல்லாம் பொதியிலான் சுவைத்தேர்ந் துண்
டான். (௩௯)

உண்டிடு முனிவ னுள்ள முகந்தினி திருந்தா னக்காற்
கண்டிடு குடில னுமுன் கருத்துமுற் றிற்றென் றின்பாய்
மண்டிடு கைநொ டித்து மந்திரஞ் சொலிவா வென்ன
மிண்டிடு பின்மே டீர்ந்து வெளிவா முயன்றான் நேர்ந்தான்.(௪௰)

களம்பிற ரறியா ரந்தக் கபடவில் வலன்வா தாபி
யுளம்பிழைத் திவண்வந் தோருக் கூட்டிமாய்த் தாளுறன் றின்பார்
குளம்பிறழ் மகா மாமை குதித்தெனப் புரளுங் கர்லைத்
தளம்பிய தகடு கண்டான் றடங்கடல் குடித்த கோமான். (௪௧)

அகத்திய முனிவன் குக்கி யதைக்கலக் கிடுவா தாபி
மிகத்தியங் கிடவே செங்கை விரித்தனன் றடவி னான்மேற்
சுகத்தியல் வரச்சே மிப்பச் சொனான்சீர ணுத்தி யென்று
சகத்தியன் றிடுமித் தீமை தாளற வவனீ றிட்டான். (௪௨)

அன்னது வில்வ லன்கண் டகமிகச் சினந்தெ ழுந்தின்
றென்னது பின்னோற் கொன்று யினியுனைக் கொல்வே னன்றீ
றுன்னது கைபாற் சாவே னுறுதிரியன் றுடன்வில் வாங்கி
மன்னது தாங்கி யப்பு மழைபொழிக் கிட்டான் மன்னோ. (௪௩)

௩௭. தருவவில்வலன் — அசுரவில்வலன். ௩௯. பொதியிலான் — கும்பன். ௪௰. மண்டிடு — மிகக்குடிக்கிற. மிண்டிடு — மதத்தாற்பிழை செய்கின்ற.

தூர்த்தன கணைக ளங்கி தொடுத்தவை யவியச் சாபம்
போர்த்தன னனைத்தும் பொன்றிப் போகவின் முறிந்து வீழப்
பார்த்தனன் முனிவன் றெவ்வோன் பதறிவீழ்ந் திறைஞ்சி வாழா
தார்த்தன னின்றெ திர்த்தா னுயுண்முற் றியதென் செய்வான்.

கெடுதலி னெண்ண மெண்ணிக் கெடுதொழிற் செய்த பாவி
யடுதலி னிடைவி டாமல் லாடுதற் கவாய்முன் னின்று
விடுதலில் லாமை கண்டு வெகுண்டொரு சொற்றீ யேவிச்
சுடுதலின் மடிந்தான் வின்மற் றாயவர் சொற்கீ டாமோ. (சரு)

வில்லினுன் மல்லாற் றெவ்வை வெல்லுவில் வலனேர் மேலோன்
சொல்லினுன் மடிக லோர்ந்தோர் தூயமா முனிவர் தொண்டர்
மெல்லினு வலர்பா வல்லோர் மெலிந்தமை குறித்தெதி ரில்லார்
வல்லினு லெதிர்த்தாற் சாவார் வலிமைவாய்ச் சொல்லி னுண்டே.

வாழ்கவென் றக்கால் வாழ்வார் மாய்கவென் றக்கான் மாய்வார்
போழ்கதிர் பிறைவேய் வேணிப் புண்ணியன் றமிழ்தேர் மிக்கோர்
தாழ்கவென் றசலந் தாழ்த்திச் சாய்கவென் றிருவ ரைச்சாய்த்
தேழ்கட முனிவன் வந்தா னிருந்தமிழ் நாட்டின் மாதோ. (சஎ)

காவிரி நங்கை யைப்பார் காக்குமா றுச்சோ ணாட்டின்
மேவிவாழ் கெனவைத் தான்றென் விசும்புறு பொதியச் சார்பாப்
பூவிரி செண்ப கக்காப் புடைவர விதுபோ லுண்டோ
நாவிரி தமிழ்ம ணக்கு நல்லிட மெனவ மர்ந்தான். (சஅ)

குமுகுமென் றிருவாய்ச் சிப்பூங் கொடிதழூஉஞ் சண்ப கத்தின்
சமுகநல் குலகாள் பாகன் றங்குமா லயங்கண் டின்பார்
சமுகனுய்ச் சித்தி ரைக்கண் டோய்ந்துநா டொறுப்பூ சித்து
விமுகமாத் திரும ணங்காண் விழைவொடாங் கமர்ந்தான் கும்பன்.

அங்ஙன மிருக்குங் காலை யவாசியின் மெலிவ டக்கின்
பங்கமார் வலிதீர் வானுன் பாரது தாழ்ந்த பார்க்குச்
சங்கடந் தீரச் சற்றே தணிந்தது சமனுய்த் தீது
துங்கமோ டுச ரில்லார்த் தூக்கிவாழ் வித்தற் போலும். (ருய)

நடுவிகந் தொருபாற் கோடி நலிபவ ருளம்போ லாழ்பார்
கொடுவிதி வரினு மோர்பாற் கோடாமை பேண்சான் றோருள்
வடுவிலா நடுநிற் றற்போல் வளர்த்தபார்ச் சமனு நிற்றல்
கெடுவிரு வினையொப் பென்றுங் கிளத்தலாந் தகைத்து மாமால் ()

உலகெலா மவர வர்முன் புஞற்றிய வினைதி ளைப்ப
விலகெலாம் படைத்துங் காத்து மிறுதிசெய் வித்து மீண்டு
மலகெலா மவ்வா றேசெய் தணிமறைத் தருளி நிற்போன்
விலகெலா மெனுதெல் லாமும் விதித்தலிற் சமனுய்த் திப்பார். ()

கண்டனர் முனிவர் தேவர் களிதலை சிறந்தெம் பெம்மான்
மண்டருட் கழல்வ ணங்கி மணுளனு யிடவ னைந்தார்
கொண்டலைப் பழித்த கூந்தற் கோமளக் கன்னித் தாயைப்
பெண்டன ஆர்தி மாமுன் பிராட்டிமார் புனைதல் செய்தார். (ருங)

நித்திய கலியா ணிக்கும் நித்திய கலியா ணற்கு
மொத்திய வியற்கைக் கோலத் துடன்செயற் கையும்பு னைந்த
பத்தியின் மகிழ்ந்து மாவும் பரமனு மெல்லெல் லோனிற்
சத்தியின் சத்தி மானின் றரன்விடா தொருப்பா டுற்றே. (ருச)

அம்மையா யப்ப னுகி யறன்வளர்த் துலகம் பேணுஞ்
செம்மையே விளையாட் டாய திருமணம் புரித லானுன்
மும்மையோர் பணிய நாதி முதலருட் பெருக்கா லன்ன
வெம்மையா ளுடையோன் மன்ற லியன்றதுத் தாமீ னத்தே. (ருரு)

பங்குனி யுத்த ரத்துப் பரமனைக் கும்பன் பூசித்
திங்கனே யெனக்குக் காட்சி யீவதா யருளிச் செய்தாங்
கங்கயற் கணிவ லப்பா லமரவெம் மான்ம ணப்பான்
மங்கல மியான்கண் டன்றி வாழ்கிலே னெனவெண் ணுங்கால்.

உலகநா யகிவ லப்பா லுலகநா யகனி டப்பா
விலகநன் கிருப்ப வேத னியன்மணச் சடங்கி யற்றப்
பலகட வுளர்த வத்தர் படைத்தகண் களிப்ப மன்றற்
றிலகமா நடக்குங் காட்சி சிவன்முனி வனுக்கிங் கீந்தான். (ருஎ)

இமையமீ தியல்கல் யாண மியலுமக் காலை தானே
கமையசெண் பகக்கா வாங்தென் காசியிற் பூசித் தோங்குஞ்
சுமையபசை வச்செவ் வேடத் தூய்த்தவன் காணப் பெற்று
னுமையொரு பாக னெங்கு முளானென றேற்ற மன்றோ. (ருஅ)

கண்டனன் திரும ணத்தின் காட்சிகெஞ் சகங்கு ழைந்து
விண்டளி களிசி றந்து விழிகுளிர்ந் திருகை கூப்பித்
தெண்டனிட் டெழுந்தெம் மானே சிவையொரு பாகா தாட்காட்
கொண்டனை யோநா யேனைக் குறியனும் பொருளா னேனே (ருகூ)

அண்ணலே போற்றி போற்றி யயனொடு மாலுந் தேராப்
பண்ணவா போற்றி போற்றி பரையொரு பாகா போற்றி
புண்ணியா போற்றி நித்தா போற்றியென் மதிதி யாமுக்
கண்ணனே போற்றி மூல காரணு போற்றி போற்றி. (௯௦)

மெய்யறி வின்பா போற்றி விடையிவர்ந் துயர்த்தோய் போற்றி
துய்யனே போற்றி யன்பார் தொண்டர்க்குத் தொண்டா போற்றி
செய்யனே போற்றி சைவத் திருவனே போற்றி மானோர்
கையனே போற்றி வானோர் கடவுளே போற்றி போற்றி. (௯௧)

கடுவமிழ் தாக்கொ ளேல கண்டனே போற்றி நக்குச்
சுடுபுர மூவர்க் காத்த தூயனே போற்றி நாளு
மிடுமறம் பொருள்ளின் பம்வீ டியம்புநான் மறையோய் போற்றி
படுசிவா கமங்கள் கூறும் பரசிவ ஞானு போற்றி. (௯௨)

மாலயன் முனிவர் சித்தர் வானவ ராருங் காணிக்
காலருண் மணக்கோ லந்தென் காசியி லெனக்குங் காட்ட
லாலணித் திமய யோயா னறிதனீ யறிவாய் முப்பார்க்
கேலவிக் காட்சி யன்ப ரியாவருங் காணல் வேண்டும். (௯௩)

என்றிரந் தனன்கண் டாடிப் பாடின னிறைஞ்சி னுன்காண்
வென்றிவெள் விடையு கைத்தோன் வேண்டுளங் கொண்டு கும்ப
நன்றிது நீகொள் பேறு நாடெலாம் பெறவ வாமுன்
முன்றிரு மணக்காட் டிந்த மூதுல கறிந்துய் வானே. (௯௪)

இன்றுமீ னுேத்த ரத்தி லியாந்தரு காட்சி யேபோ
லென்றுமே துலோத்த பத்தி லியாருமோர் தரவு னக்கு
நன்றுவந் திங்ஙு நல்க நயந்தன மொவ்வோ ராண்டு
மொன்றுளன் பொடுவந் தேத்தி யுகப்பவர்க் கருளுேக் கீவோம்.

எனவருள் செய்து விண்ணி லெழுமினின் மறைந்தா னெம்மா
னனவருட் காட்சி பெற்ற வகத்தியன் மனத்தக் காட்சி
யுனவர வமைத்துக் கண்டே யுகந்தவண் வைகுற் றுனுல்
பனவனக் காட்சி யேயைப் பசியினுத் தாத்துங் கண்டான். (௯௬)

மானவர் கண்டார் சித்தர் மாதவர் முனிவர் கண்டார்
கானவர் கண்டார் வான்வாழ் கடவுளர் கண்டார் நாகர்
தானவ ரரக்கர் கண்டார் தமிழகப் பறைமா வூர்வ
வேனவுங் கண்ட வெம்மா னெழின்மணக் கோல மாதோ. (௯௭)

அனைவரு மனைத்துங் காணு மைப்பசி யுத்த ரத்துப்
புனைவரன் மணக்கோ லத்தைப் போற்றுதென் காசி புக்கு
மனைவளர் மக்க ளோடே மகிழ்ந்துகாண் பவர்க்கின் புண்டா
மினைவனைத் துந்திர்ந் தெண்ண லெண்ணியாங் கெய்து வாரால். ()

வந்திகள் மக்கட் பேறு வறியவர் செல்வப் பேறு
நந்திய பிணியர் நோய்தீர் நலமுடற் றிறனி லாதோர்
செந்திற லுடம்பு மூடர் திருந்திய கல்விப் பேறீண்
டுந்திய வெலாநன் கார்வா ருமைமண விழாக்காண் பாரேல் (௬௯)

ஓங்குசீர் மணவி ழாக்கா ணொருகுறு முனிதென் காசிப்
பாங்குசீர் பெறவி ருந்து படோமார் பொதியி லாய
தாங்குசீ ரிருகா தத்தார் தவக்கருஞ் சித்த ராருந்
தேங்குசீர் கொடுசூழ்ந் தென்றுந் திகழ்தர வாழ்வா னென்றான்.

கேட்டன ருகந்தா ரன்பு கெழீஇயனை மிசத்தோ ரைய
வாட்டமில் சண்ப கக்கா வரம்பிரு காவ தத்துங்
கூட்டமா தவர்மா யோகர் குகையுறை முனிவர் சித்த
ரீட்டமெவ் வளவி ருக்கு மென்றனர் சொல்வான் சூதன். (௭௧)

மக்களூற் றிருப தாண்டு மற்றதிற் பதின்ம டங்காண்
டக்கமொன் றுருங் காக்கை யதிற்பதின் மடங்கு கூகை
மிக்கதிற் பதின்ம டங்கா விடவரா வாணு ளாங்குத்
தொக்கமா தவர்முன் னோரின் றொகையள விடற்பாற் றன்றே. ()

மாக்களா யிருப்பார் பல்லோர் மரங்களா யிருப்பார் பல்லோர்
வீக்களா யிருப்பார் பல்லோர் விடவராப் போல்வார் பல்லோ
ரீக்களாய்த் தேன்சேர்த் தாட்டி யிறையருட் காளா வாரேன்
மோக்கமே யவாய்வாழ் மேலோர் முழுத்தொகை காண்ப தாமோ.

பிணிகளை யறியார் மாலைப் பிரமனை யறிவா ரீசன்
பணிகளை மறவார் மக்கட் பதடிகள் செயன்ம றப்பார்
குணிகளை நட்பாக் கொள்வார் கொடியருக் கெட்ட மாட்டா
ரணிகவ ரியையூர் கூற்றுக் கஞ்சிலார் வாழ்வார் பல்லோர். (௭௪)

மூலமு ணுறு கோட்டை முயற்சியாற் கண்டு கந்தே
மேலவொவ் வொன்றுந் தாண்டி யேறிநி ராதா ரங்கண்
டாலமீ தானஞ் சேவித் தமிழ்தமே நுகர்ந்து நாளுஞ்
சாலமா யோகஞ் செய்யுந் தகவின ராயி ரம்பேர். (௭௫)

---

௭௧. ஈட்டல்—நெருங்கல்.

தலம்புனன் மூர்த்தி மூன்றுந் தாத்தவா மனுதி யென்னும்
நலம்புலப் படலா லாங்கு நயக்கிருந் தாடிப் பூசித்
திலம்புற மாவி லங்கா வெனமா நிழற்புல் லால்வேய்ந்
தலம்புபொற் றொடியோ டுற்ற வருந்தவ ராயி ரம்பேர். (எசு)

அறம்பொரு ளின்பு வீடு மறைமுது மறைநான் கோதித்
திறம்பொரு ளுணர்ந்தா சான்பாற் சிறந்தநல் லன்ப ராகிப்
புறம்பொதுங் காதா ராய்ந்தே பொழுதெலா மோட்டி ஞான
மறம்பொலி யறமே பேணி வாழுவா ராயி ரம்பேர். (எஎ)

சைவவா கமங்க டேர்ந்தே சரியையா தியநான் காற்றூற்
கைவரும் பயன்கை மேலே காண்பவ ராய்வாழ் வாரும்
பொய்வளர் மூன்று லோகப் போகமு முவர்த்தோ டம்பொன்
மைவரை யெனுஞ்சிரப் பாக்காண் மனத்துற வாய்வாழ் வாரும். ()

மாயனிற் பிலவு கங்காண் வலவராய் வாழ்கின் றாருந்
தூயநற் சிகையு நூலுந் துறக்கிலாத் துறவுற் றாருந்
தாயகப் பெத்த கேசித் தவத்தருஞ் சடைகொண் டாரு
மேயமுண் டிதமே லோரு மெத்தனை பேரோ வுள்ளார் (எகூ)

கரும்பொனைச் செம்பொ னாக்கிக் கிழவனைக் காளை யாக்கி [லோர்
யரும்பொரு ளுடையோ ராய்ப்பொன் னனுருடன் வாழ்வார் சில
பெரும்பொலி வருளெண் சித்திப் பெரியராய் வாழ்வார் சில்லோ
ரிரும்பொதி யத்திற் பன்னெண் சித்தரு ளிவர்மே லென்றான். ()

## அகத்தியன் திருமணக்காட்சி பெற்ற படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு எஅகூ.

---

பதின் மூன்றாவது

# குலசேகரபாண்டியன்

## மகப்பேறடைந்த படலம்.

திருமணக் காட்சி கும்பன் றெரிசனை செய்தல் சொற்றும்
வருமணக் காட்சிக் கேது வாய்க்குல சேக ரப்பேர்ப்
பெருமணப் பொதிய வெற்பன் பெறுமகப் பேற டைந்த
வருமணக் கதையி னிப்பா மதையினி யறைகு வாமால். (க)

---

எஅ. மை—பற்றியமுந்து. வரை—தள்ளு.

களிதலை சிறந்து நேமிக் காத்தவ ரிருடி கேச
தெளிதமி ழகத்துக் காதை செவிக்கினித் துவர்ப்பில் லாம
லளிதலை சிறந்து கேட்டற் கவாமிக வரவ ரக்கார்
நளிதரப் பெயலி னுய்த்தா னவில்கென நவில்வான் சூதன். (௨)

வயக்குமா றோக நாட்டின் மாறன்மங் கலத்தை நாளும்
வியக்குமோர் தலைப்பே ரூரா விரும்பிமீ னம்பொ றித்தேர்
பயக்குமாண் கொடியு யர்த்துப் பாண்டியாண் டுலகை வென்ற
சயக்குல சேக ரன்றான் றனியர சாற்றி னானல். (௩)

நரேந்திர னெனப்பா ராளு நற்குல சேக ரற்குஞ்
சுரேந்திர னெனவின் னாளுந் துச்சவன் றனக்கு நட்பாய்ப்
புரேந்திர ரிருவ ரானார் பொலிந்தவந் நாண்ம லர்ந்த
மரேந்திரன் சயந்தற் பெற்றான் வரேந்திரன் மகவேட் புற்றான். (௪)

ஓங்குமுந் நக்க ரெற்கிவ் வுலகெலாம் வெலமுன் னின்று
ரீங்குயர் செல்வ மெல்லா மிந்திர னாணத் தந்தார்
பாங்குறு மகப்பே றென்றே பயந்தில ரவரொல் லாந்தங்
தாங்குசேய்த் தால்கேட் பானன் றருந்தில னிலங்கி டந்தான். (௫)

அன்பனுண் ணானைப் பூம்பஞ் சணைவிடுத் திறைபொற் றாளி
னன்படுத் துறங்கா னாய்ப்பா ருழிக்கிடை நோன்பு கொள்ளற்
றென்பழை யோர்வ ழக்கத் திறந்தெரி வானி வற்கின்
றின்பரு ளிலையே லேச லெழுமென விரைந்தெ ழுந்தான். (௬)

இந்திர வாழ்த்தி யுன்னி னேற்றமார் மகப்பே றார்நாள்
வந்ததான் மகிழ்தி நீநின் மலையனாங் கரிற்றென் னாறார்ந்
துந்துசெண் பகக்கா வுங்கண் டுகந்துபூ சித்து வாவென்
றந்தணன் போல்வந் தாடி னான்றென னறிந்தெ ழுந்தான். (௭)

கண்டில னெம்பெம் மானே கண்வள ராவெ னக்கிங்
கொண்டிரு மேனி யேய்ந்தந் தணனில்வந் துரைத்தொ ளித்தாய்
மண்டிய வருடா னென்னே மாண்பதென் றுருகி யன்பு
கொண்டினி தேத்திப் பாடிக் கூத்தனாய் மகிழ்சி றந்தான். (அ)

நங்கையா ரெனுமா தேவி நரேந்திரற் கிறைக னாளி
னங்கையி னெல்லி போல வருள்வரங் கொளவ டுத்துக்
கங்கைநா யகன்றா னென்னே கழறின னென்றாள் சொல்லச்
செங்கைமேற் கூப்பி யின்னே செண்பக வனஞ்செல் கென்றாள். ()

தொடர்ந்தனள் வழுதி யோகை துளும்பின னமைச்சர்க் கோதிப்
படர்ந்தனன் றேவி யோடும் பாடளி யாடா நாறுஞ்
சுடர்ந்தபொன் மலர்க்கா நண்ணித் தூயசித் திரப்பூங் கங்கை
யடர்ந்தனர் வளனெல் லாஞ்சூழ்ந் தாய்ந்தனர் களிசி றந்தார். (௰)

வந்திவண் காண மாட்டா வாளுளெத் தனைக ழித்தேஞ்
சிந்தனை சிவன்பால் வைத்த சித்தரா தியரின் பந்தய்த்
தெந்தநா ளினும் ருப்ப வியாமெனே யறியா துற்றே
மந்தணன் கயிலை தானு மழுகிவா றமையா தென்றார். (௰௧)

அத்தலைத் துணைவி யோடாங் கமருமா முனிவ ராரு
முத்தமிழ்க் கோன்வந் தானென் றெழீஇவர முடிமன் றாழ்ந்து
கைத்தலை மேற்கொண் டன்னோர் கழறுவாழ்த் தருளப் பெற்று
மெய்த்தவ வலீரீண் டுள்ள விபப்பெனை யென்றான் சொல்வார் ()

முனிவரர் பெருமை சித்தர் முதுதிறன் மாத வத்தோர்
நனிவளர் சீர்த்தி யோகர் நயம்பெறு காட்சி மாப்புள்
தனிவள மாம ராமுன் கண்டபல் லுருவந் தாங்கித்
னிவனக் கழல்சிந் தித்தார் தவத்தர்மாண் பெலாஞ்சொல் லிப்பின்

தண்ட
மாண் பனைத்துஞ் சொற்றார் செண்பக நிழலின் வாழான்
தீர்த்தனைச் செண்ப கத்தை யவர்ய்ப்பட ரிருவாய்ச் சிக்கீழ்ப்
மார்த்வர்க் கிரங்குந் தாயைப் பற்றிவிண் டனரின் பக்கண்
பார்த்தனி தனியு திர்த்து நிறைதரக் கேட்டு கந்தார். (௰௪)
ணீர்த்தல

காட்டுமி னெங்க ளெம்மை யப்பனைக் கண்டி யாமுந்
தாட்டுணை பெறுவே மென்னத் தவமுனி வரர்கோன் பானு
மாட்டுறை முனிவர் பன்னி மாரா சியின்பா லுஞ்சூழ்ந்
தீட்டுவல் வினைதீர்த் தின்ப மீயுமா றணைந்து மூழ்கி. (௧௫)

ஆனந்த தீர்த்த மாடி யன்றுடக் கடன்மு டித்துத்
தானந்த மாதி யில்லாத் தனிவளர் திருமுன் புக்குக்
கோனந்த மாவில் லோடுங் கும்பிட்டர்ச் சனைபு ரிந்து
கானந்தன் கனிவிற் பாடிக் களிதலை சிறந்தா னக்கால். (௧௬)

அரசியோ டாச னங்கா ரருந்தவ ரவரின் மார்கள்
பரசிடு மெவருங் காணப் பானிலிங் கத்திற் றோன்றிப்
பிரசின நங்கை யார்கைப் பிடித்தவிந் திராவு னக்கோர்
வாசிசு வெம்பேர் கொள்சீர் வலியனுத் தந்தோமென்றான். (௧௭)

கரந்தன னிலிங்கத் துள்ளக் காட்சிகாண் வேந்து மில்லுஞ்
சுரந்தபே ரன்பி லாழ்ந்து துதித்தனர் களிசி றந்தார்
நிரந்தர னருட்கா ளாமந் நெடியமன் மனைசீர் சூழ்ந்தோர்
பரந்தமா தவரின் ஞெரென் பார்பரா வுவர்பே றுற்றார்.(௰அ)

பழந்தமிழ் நாடு காக்கும் பாண்டியர்க் கருள்பெம் மானைத்
தழந்தயிர் பஃறேன் கன்னற் சாறுசந் தனக்கு ழம்பு
குழந்தைநீர் முதலா வாட்டிக் குளிர்நறுந் தழைபூத் தூவி
யிழந்திலா விதியாற் பொங்க லின்கனி வகைக ளூட்டி. (௰௯)

அன்பொடு பூசித் தேத்தி யாறுநா ளிருந்தே ழாநா
ளின்பொடு விடைகொண் டண்ண லில்லொடும் போந்து வந்தான்
மன்பொதி யிறைபாற் கொள்சீர் மாறன்மங் கலத்தார் தேர்ந்து
துன்பொழி தரநா ளும்போய்த் தொழுதுயத் தொடங்கி னால்.

அருள்பெறு நங்கை யார்சூ லாயினர் மூன்றுந் திங்கள்
பொருள்பெற வலமுக் கினகட் பொழிமருந் தூற்றி யாசான்
றெருள்பெறு புஞ்ச வன்னஞ் செய்முறை செயவின் பார்ந்தா
சுருள்பெறு மலர்விரிந்த தோற்றமார்ந் ததுமாண் பாண்டி.(௨)

தமிழக வரசி னத்துத் தருமகன் னெறிவ ழாவாழ்
விமிழகந் திகழ வாறுந் திங்களி னிறைவி யுச்சி
சிமிழறன் மயிர்ச லத்தாற் றிருந்தவார்ந் தியல்சீ மந்த
கமழ்தரக் குருவந் தாற்றக் களிசிறந் ததுமன் பாண்டி. (௨௨)

மதிதிகைந் தீன்றுண் மேலோர் மகிழுநன் னாளிற் றென்றற்
பொதியிலா ருலகம் மைபாற் புகழுவா ழுலக நாத
பதியெனும் விசுவே சன்பேர் பரித்துல காள வந்த
துதிமகப் பிறந்தான் வானஞ் சொரிந்தது பொன்பூ மாரி.(௨௩)

பெற்றவர் மகிழ்ந்தார் சைவப் பெருந்தவர் குரும கிழ்ந்தார்
நற்றவர் மகிழ்ந்தார் பாண்டி நாடெலா மகிழ்ந்த வார்த்தார்க்
கொற்றவன் மகிழ்ந்திக் கோமான் கொடைக்கரம் பிடிக்கப் பெ
பற்றலாய்த் தவமு யன்றுன் பானடி துதித்தான் சேரன்.[ண்ணின்

௰௯—தழம்—தயிலம். குழந்தைநீர்—இளநீர். ௨௨—இமிழகம்—இனி
தாகிய உள்ளம். சிமிழறல்—கட்டமைந்த கருமணலையொத்த. சலம்—பன்
றிமுள்ளால். வார்ந்து—வகிர்ந்து

முத்தமிழ் நாடு மின்ப முதிர்தரப் புறநா டஞ்ச
வுத்தமேஎ் திரன்சேய் தோன்ற வுகந்தெழீஇ யுடுத்த தூசோ
டெத்தலத் திருத்த முந்தாழ்த் திவர்தமிழ்ப் பொருநை யாடி
யத்தனைக் கெணிப்பொன் வெள்ளி யரியநெற் றானஞ் செய்தான்.

கதிர்மகற் கண்டு தேனெய் கலந்துபொன் னுரைத்தி ழைத்து
மதிகுலந் தழைக்க வந்த மைந்தனுக் கூட்டி வேட்டுப்
பிதிரரை மகிழ்வித் தாற்றும் பிறங்கியற் சாத கன்ம
மெதிரிலா சிரிய னாலே யியற்றவின் பாய்த்துப் பார்க்கே. (உசு)

அறநெறிப் படுத்து நன்மை யாக்குமிச் சாத கன்மம்
மறநெறி யுவர்த்துத் தூய்தே வயாக்கொளுத் தாப னந்தான்
பிறகுபத் தாநாள் வீடு தொடுஞ்சுசி பிறங்கச் செய்தா
ருறவொடீ ராறு நாளி னுலகநா தன்பே ரிட்டார். (உஎ)

அவாவுமா ணையுமாய் நாம காணநல் காக்கங் கொண்டு
தவாமறை வடிவா லூட்டிச் சருகுகாய் கனிமு லாதி
யெவாறுண வாலுந் தீதின் றியையனப் பிராச னந்தா
னெவாறுதிங் களிற்செய் தார்முன் றுலகமு முவக்க மாதோ (உஅ)

ஆண்டதொன் றாக வந்த வாண்டுதொட் டெந்த வாண்டுங்
காண்டகு தோடந் தீரக் கடவுளா லயத்திற் காய
நீண்டநல் விழா வெடுத்து நிருபனை யெடுத்துப் போகி
யீண்டருட் சேவை செய்வித் தியல்பிர வாசஞ் செய்தார். (உகூ)

பிணிதடுத் தொளிமு கத்துப் பிறங்குவித் தடனன் றாக்கித்
திணிதரும் பிண்ட விர்த்தி செய்முறை புரிந்தா ரப்பாற்
கணிதமார் மூன்று மாண்டிற் காவல னெனக்காண் பிக்கத்
துணிதரு சிகைகாண் சௌளத் தூவினை முறைசெய் தாரால். (௩0)

அறிவுநோக் காக்குந் தீக்கை யாமுப நயனஞ் செய்தார்
நெறியின தூவ தாண்டி னெஞ்சினூற் காதிற் பூண்கள்
செறிதர வணிந்தார் வன்மை திகழ்தரச் சிவஞான் போங்கக்
குறிகுரு விடைகாண் மோபக் கிரமணங் கொளுத்தச் செய்தார்.

---

உசு.—கதிர்மகன் — சந்திரகுலமகனை. (செல்வப்புதல்வனை.) உஎ—வயாக்கொள்—ஆசைப்படும். உஅ —அவாவுமாணையுமாய் — தன்காதலும் இறைவனாணையுமுண்டாய் ௩௧—கொளுத்தல்—கலைசற்பித்தழுத்தல்.

சைவநற் குரவ னெல்லாக் கலைகளுந் தகவாத் தேற்றித்
தெய்வநல் கிருமு தற்சொற் றிருந்தவாய்க் திருக்குங் காலை
கைவரு தவத்தின் சோழன் கன்னிபொன் மாலை தன்னை
மெய்வள ரன்பாற் பேசி வேட்பது குறித்தார் மன்னே. (௩௨)

ஒருமையிற் கற்ற கல்வி யெழுமையு முரஞ்செய் நீர்த்தா
லருமையா வுலக நாத வரசுவா சாந்தி பாடங்
குருதிரு முனர்மு டித்துத் தக்கனைக் கொடைக்கி றத்தாற்
றருநலா சீரார் காண்ட மோசனந் தகவா வாய்த்தே. (௩௩)

ஆசிநன் குறப்பெற் றோர்க்கே யதிசயப் படநா னுண்மை
பேசிடத் தோன்றும் வெற்றி பிறங்கிடு மப்பான் மன்னன்
தேசிக னிடத்தொ ழுங்காத் தேருநா ளெல்லா நோற்ற
வாசிகொள் பயன்சி வார்ப்ப ணச்சமா விருத்தம் மாடி, (௩௪)

மணமக னாகித் தந்தை மனமகிழ் தரமா லீன்ற
குணமக டன்னைம ணந்து குவலய மதிப்ப வாழ்ந்தான்
பணமக னுப சேடன் பதுங்குமா ணறிவார் தந்தை
தணமகற் காட்சி நல்கித் தவவனஞ் செலல்கு றித்தான். (௩௫)

ஞாலபா ரத்தை மைந்த னறுமலைத் தோள்சு மத்திக்
கோலமா மணிக்கி ரீடங் குளிர்ந்தநிம் பத்தார் செங்கோல்
சேலவிர் கொடிகொ டுத்துச் சிறப்பமா முடிசூட் டாற்றிச்
சாலவுண் மகிழ்வ தானுன் றனிக்குல சேக ரன்றான். (௩௬)

மற்றவன் மைந்தற் கன்பா வழுத்துவா னெந்தா யிப்பார்க்
கொற்றவ னாவெற் குன்னைக் கொடுத்தவ னுலகம் மையா
வுற்றவோ ருலக நாத னேங்குமவ் விசுவே சற்கண்
டெற்றவ முலகா ளின்னே யென்னொடும் புறப்படென்றான்.( )

தந்தைசொன் மந்தி ரத்தைத் தலைக்கொடில் லுடன்கோ மானுந்
தந்தைதா யரும மைச்சுந் தகைப்பரி சனமு மின்பார்
சிந்தைய ராகிப் போந்தார் தென்மலைச் செண்ப கக்கா
வெந்தையார் வழிபா டாற்றி யின்பமிக் குடைய ரானார். (௩௮)

மாறன்மங் கலத்தை நோக்கி வரத்தொடங் குங்காற் றந்தை
சறனன் றெந்தா யிந்தச் செண்பக வனந்தேன் பூக்கார்
றலர் மணிபொன் பூக்க ணடொறுந் தூவற் றென்ற
லறவீ சிடன்முத் தங்க ளிரவிலா தொளிர்தற் காண்டி. (௩௯)

௩௪—மாடி—செய்து. ௩௮—தென்மலை—பொதியவரை.

சுவைவருக் கைப்ப லாமா வாழைமா துளங்தென் னங்கா
யிவைமுதற் கனிவ ளங்க ளிலங்குமிங் கியோகர் சித்தர்
நவையிலா முனிவர் செய்மா தவரெலா நாளும் வாழ்வர்
சிவையொரு பாகன் பூசை செயற்கிது தகுவ தாமால். (சு0)

ஆகலி னியானிங் கேயே யமர்ந்திறை வழிபா டாற்றி
யோகயர்ந் துறவுட் கொண்டே னுகந்தருள் விடையென் றிட்டா
னீகவ லலையெங் கட்கிங் நிலைதா ரூன்சேய் பெற்றோர்க்
கிகையென் றனடன் முயு மிதுதடுப் பரிதா லொத்தான். (சுக)

வேறு.

குலசேக ரேந்திரன்மா தவச்சாலை யென்றழகாக் குயின்ம டத்தின், குலசேக ரேந்திரன்றன் மனைவிநங்கை யாரொடுந்துக் குயிற வத்தர், நலசேக ரஞ்சூழ விசுவேசர் வழிபாடே நாளு மாற்றல், வலசேக னயமர்ந்தா னதேகுலசே காமுடையார் மன் னுங்கோயில். (சுஉ)

நற்றவப்பெற் றவர்த்தவச்சா லைக்கணுற வைத்துலக நாத மாறன், மற்றவர்தம் விடைகொண்டு சிவைபாகன் விடைகொண்டு மகிழ்ந் திவர்ந்து, கொற்றமுயர் தருமாறன் மங்கலத்தெய் தரித்த விசிற் கொலுவீற்றிருங்கிப், பற்றலரெல் லாந்தாழப் பசுவறத்தர்ப் பதியறத்தர்ப் பராய்நா டாள்வான். (சுங)

ஒங்குலக நாததென்னன் பொதுநீக்கி யுலகாளு முறுதி தேர்ந்தூர், நீங்குகுல சேகரன்சென் பகவனத்துத் தவச்சாலை நிறீ இப்பன்னாளத், தாங்குலக நாயகிபால் வளருலக நாயகன்றன் றுள்பூசித்தே, யாங்குநவ வடிவிறந்த சிவனருளாற் சிவனுலக மடைந்தான் வாழ்வான். (சுச)

குலசேகரபாண்டியன் மகப்பேறடைந்த படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு அகங

---

சுஉ —நலசேகரம்–நல்ல கூட்டம். ஆற்றல்வலசேகன்–ஆற்றலாகிய வலியசெயலிற்சமர்த்தன்.



பதினொன்காவது

# குழல்வாய்மொழியம்மை திருமணப்படலம்.

வழுதிகுல சேகரன்ம கப்பெறுவ ரங்கொள்
பழுதில்கதை யீதவன்ப யந்தமக னின்பா
ருழுவல்குழல் வாய்மொழியெ னும்மகளு டைத்தா
யெழுதவுல கம்மைதிரு மணமினியி சைப்பாம். (க)

என்றனும ருந்தவரி ரண்டுகைமெ டுத்தன்
பொன்றலொடி றைஞ்சினரு வந்தருண்மு னீச
மன்றலிது கேட்டுயர்வ ணந்தவமு ளேங்கொ
னன்றறைகெ னப்பரவ நல்கிடுவன் சூதன். (உ)

பேரற்றுலக நாதசெழி யன்புவிபொ றுத்தாண்
டேற்றுயர்கொ டிப்பானி லங்குமுள ளுகி
நீற்றுநெறி முத்தமிழ்நி லம்பரவ வாழ்நாள்
கூற்றுளக டுங்குமெனின் கோன்சொலள வைத்தோ. (ங)

மானுலக நாதமெதன ளுட்சிவலி யாலே
காணுலக நூற்றிருப தாண்டுகழி யீற்றிற்
றுணுலக நாதனடி சாருமிடை சாவா
பேணுலக மெச்சுமிவன் பெற்றிபெரி தாமால். (ச)

முப்பொழுது மீசனேமு தன்மையளி யார்ந்தவ்
வப்பொழுது பூசனைய முக்கறவு ளுற்றி
யெப்பொழுது மைந்துபய மில்லெனமண் காப்பான்
றுப்பொழுது போக்குவன்க லைத்தொகைது ணிந்தே. (ரு)

பெற்றவர்ம கிழ்ந்தருள்பி றங்குதவ மாற்றி
யுற்றபொதி யத்தருகு யர்ந்தபொன்ம லர்க்காப்
பொற்றலம டிக்கடிபு குந்துவழி பட்டுந்
தற்றலமுந் நக்காடி தாழ்ந்துமுறை செய்வான். (சு)

---

ங—கோன்சொல்—அரசனதுபுகழ். சு—தற்றலம்—தன்னுடையமாறன் மங்கலம்.

ஈன்றவர்மு திர்ந்துலக நாதனுல கெய்த
லான்றவுல காண்டவன றிந்துமகிழ் வோர்பா
லேன்றபிரி வாற்றலிய லாமையொரு பாலாய்ச்
சான்றவர்கு ழாத்தமர்த லாற்றணிவ தானான். (எ)

நாளுமொரு தீதுலக நாதனறி யாது
யாளுமவ னோர்குறைய டுத்தறித லாமோ
வாளுமுறை யிற்கிடைகொள் வானெதிரி யின்றே
சூளுமுல கெங்குமவன் சொன்னபடி செல்லும். (அ)

இங்ஙனமி ருக்கவுமொர் மைந்தனிலை யென்றில்
லங்ஙனம யங்கிடல றிந்தனனன் மாற
னெங்ஙனமு னக்கவணெ னக்குமெண முண்டாய்த்
துங்ஙனம தக்கினியவ் துள்ளுதுகொ லென்றான். (கூ)

தேவியென தையமொரு செல்வனில னாகிப்
பூவினெடு நாட்பினொரு போக்கிலுல கேச
னீவிலினி நல்கியதெ டுத்தறைத லோர்வா
யாவியன மேயவணி யாமடைவ மென்றான். (ய)

இருவருமி வாறுதனி யெண்ணினரெ ழுந்தார்
திருவருள்வ ளங்குலவு செண்பகம லர்க்கா
வருவதுது ணிந்துதனி வந்தனர்வ சந்த
மொருவலில வண்வழுதி யுற்றமட முற்றார். (யக)

வேறு.

முத்தோடு பொன்னுங் கொழிக்கு முதுதென் னாறடி
நத்தோடு மானந்த தீர்த்தத்து நயந்து மூழ்கிப்
பத்தோடு நித்தப் படித்தரங் கழித்தான் மார்த்த
மத்தோடு மாற்றி யுலகம்மை கோன்முன் பணிந்தான். (கஉ)

வேறு.

தாப்புற மணத்த மூந்தூத் தழநன்மாக் காப்பு மஞ்சற்
காப்புநெல் லிக்காப் பைந்து கவ்வியஞ் சுவைச்சா றைந்து
தோப்புறு பலச்சா றைந்து சுரைநெய்பா றயிர்தேன் கன்னல்
கோப்புய ரருணம் நாரங் கொழுமிச்சை தமரத் தாட்டி. (கங)

---

அ-சூளும்-ஆணையும். செல்லும்-நடை பெறும். கூ-உங்ஙனம்-அத்தன்மையால். யஉ- அத்தோடும்- செவ்வையோடும். யங-தழம்- தயிலம். சுரை-பசு, அருணம்-எலுமிச்சை. நாரம்-நாரத்தை.

தாடிம மிளநீர் காண்ட கத்தணீர் சததா ரைக்கா
ரீடிலா யிரதா ரைக்கா ரீகைபூ வில்வ நீர்கள்
பீடியத் தாட்டி யன்னா பிடேகமும் புரிந்து சந்தங்
கூடிய குழம்பு மாட்டிக் கும்பநீர் வளைநீ ராட்டி. (௱௪)

அருக்கியங் கொடுத்து மேலா கமவழி யனைத்துஞ் செய்து
பெருக்கிய நிவேத னாதி பிறங்குற வமைத்துப் பூசை
திருக்கிளர் தரச்செய் தேத்திச் சித்தமெஞ் சிவன்பால் வைத்து
முருக்கிதழ்க் கனிவா யோடு முனரமர்ந் தியோகம் பூண்டான் ( )

வேறு.

அரச நீயிவண் மகவு வேட்டுவந் தனையு னக்குல கம்மையே, பாச ருந்தவப் புதல்வி யாகியுன் பால டுத்தனள் காண்டிநீ, சரச மாரிவண் மணந டந்தபின் றழைபொன் மாலைவ யிற்றிலே, வாச யக்குல சேகரத்திரு வழுதி சேயெனத் தோன்றுவான். (௧௫)

என்றெ மானருள் செயலொ டுந்தென னினிய யோகதினீங் கினான், முன்றெ ளிந்தபொன் மாலையின்புற முன்பொர் கன்னிமெ ழின்மயி, னன்றெ லாந்திரண் டோர்மெய் கொண்டன நடைகொ டம்மவென் றீன்றதன், மன்றெ ரிந்தவொர் மகளில் வந்துள மகிழ வன்புகொண் டாடினாள். (௱௭)

இறைவன் வந்துகண் டறிமு னாவவ னெதிரெ னப்பவெ னம்மையோ, டுறைய றத்திரு மடஞ்செல் வேமென வுரைத்தெ ழுந்தனன்மூவருந், துறைய டைந்தன ருட்டுந் தாயறு சுவையு ணாப்படைத் திட்டன, னிறைய வுண்டனர் நாடொ றும்பயி னீர்மை யாயினர் நால்வரும். (௱௮)

அண்ண ருனறி வானக் கன்னியிவ் வகில மீன்றவ ளென்றதோ, ரெண்ண மார்மனை விக்கு மூட்டனை யினுக்குந் தேற்றவென் முற்றவாங், கொண்ண லாளுமை யுண்ட தான்மயங் குற்று றங்குவள் போன்றிறை, வண்ண மார்தவப் பாயன் மீத்துயின் மன்னி னாளது போதரோ. (௱௯)

---

எச—தாடிமம்—தாதுமாதுளம். காண்டகம் – காண்டாமிருகக்கொம்பு. ஈகை—பொன். பீடியத்து—பெரியவாத்தியத்துடன்.

தேவி யேநமைத் தொடரிக் கன்னியைத் தெரிதி யோவெ
னக் கேட்கமன், மாவி யப்பிவ ளியான்ப யந்தவொர் மகளில் வந்த
னள் பன்னரு, மாவி யன்னவிவ் வணங்கி யாரென வவன்ம கிழ்
ந்துல கம்மையே, பூவி னம்மையு யர்த்து செல்வியிற் போந்த
னண்மண மானபின். (உ௰)

நின்வ யிற்றிலெ ளைய னைதமிழ் நிலம்பு ரக்கமு ளைப்பதா,
மன்வ ளத்தநிட் டையின மர்ந்துழி வரனெ னக்கருள் செய்த
னன், தென்வ ரைப்புர வலனெ னக்கிம சிகரி மன்சம னுவல,
குன்வ ணஞ்சிவன் றிருவு ளங்கொள லுழுத வப்பய னென்
றனன். (உக)

நாளை யான்பெறு மகவ ளர்த்தவ னன்ம ணஞ்செயல்
காணவவ், வாளை மேலறி வேமின் றேயுல கம்மை யென்னை
யம் மாவென்க், கேளை யார்ந்தழைத் தாள்வ ளர்த்திடக் கிட்டி
னுண்மணஞ் செய்யவெண், காளை யூர்திநம் மருக னுவருங் காண்டு
மென்று னுகந்தனள். (உஉ)

குழலி னின்மொழிப் பரைக்கி யாம்பெயர் கொடுப்ப தென்
ளையென் றுனிறை, நிழலின் வாய்க்கவட் பெற்ற வன்பெயர்
நிகழ்த்து கென்றன டேவியாங், கெழலி னெண்ணமு மொழி
யு மொத்துவி ணிருந்து பேர்குழல் வாய்மொழி, மழலை நங்
கையென் றழைமி னென்றொரு வாக்கெ ழுந்ததின் பார்ந்தனர்.( )

அருந்துந் தாயவண் வந்திக் கன்னியை யாரெ னத்தெரி
தற்கவாப், பெருத்து ளேனெனப் பணிந்து வேண்டினள் பெரிது
மன்பொடெம் மம்மையென், றிருத்து ரைத்தன ரிறைவி யோடி
றை யேற்ற கன்றனள் கன்னியுந், திருத்து றங்கியெ ழுந்த
இன்முகந் தேய்ப்ப நீர்வர வேண்டினாள். (உச)

நீர்கொ ணர்ந்தனை முகங்க ழீஇத்திரு நீறளித்துமுன்
வைத்தவிர், நார்கொ டின்னுரை யாடி வைகினர் நயந்தக் காற்கு
ழல் வாய்மொழிப், பேர்கொ டேயழைத் துப்ப யின்றுளம் பெ
ரிது வந்தனர் நாடொறுஞ், சீர்கொ ளத்தமிழ் சைவ மோங்க
றந் திகழ வம்மைவ ளர்ந்தனள். (உரு)

புரவ லன்மக ளோடு மில்லொடும் போந்து வந்தவண்
வாழ்தரல், பரவ லாய்முனி வாரு மன்னவர் பன்னி மாரும
றிந்துவந், துரவ ளம்படக் கண்டு கண்டுசெல் லுவரவ் வாறெழு
மாதருந், தரவ ளைக்குல கன்னி மாரெனத் தாமெ ழீஇச்சகி
யாயினார். (உசா)

உருப்ப மிக்கிள வேனில் வந்தமை யுணர்ந்தி ணங்கிக ளோடமர்ந், திருப்ப வேதுழல் வாய்மொ ழிக்கிறை யெழின்வ சந்தவ ரண்மனே, விருப்ப மோடெடுத் தற்கு ளங்கொடு விளை தெ ரிந்தசிற் பர்க்கொணர்ந், துருப்ப டுத்திட மாறன் மங்கலக் கோலே யுப்த்தனன் காணவே. (உஎ)

முதல மைச்சிருங் கோம கிழ்ந்துடன் முதற்ற ரத்துள சிற்பரை, நுதல ருந்திற லுழைய ரைப்படை நோன்மை யோர் த்தெரிந் துய்த்தனன், கதழ தாப்பெரும் பொருளு முய்த்தனன் கண்டு தென்னன்ம கிழ்ந்துதன், புதல்வி யாருளங் களிது ளும் பிடப் புதுக்கி னுரொரு மாளிகை. (உஅ)

வேறு.

சூழச் சண்பகம் பவள மல்லிகை தூய சந்தனம் பாரி சாதமே, யீழக் கொன்றைபா திரிமந் தாரைவெள் ளெருக்கு நந்தியா வட்டை காந்தளே, நீழல் வெட்சிசெம் பரத்த மாத்தி பன் னீர்செ ருந்திவெள் ளலரி குங்குமம், பேழக் காஞ்சிசெந் தோன்றி மாதுளம் பிச்சி முல்லைநன் மயிலை காந்தியே. (உகூ)

இன்ன பன்மலர்த் தோட்ட மாவமைத் திலங்கு வேலி நாற் புறமுங் கோலியே, நன்ன ராரரண் செய்து வாயில்க ணுன் கி னும்படை காப்பு வைத்தவண், கன்னி கைதனை யேழு பாத ராங் கன்னி மாரொடு தாய்பொன் மாலையும், முன்னின் றேய ழைத் தேநல் வேனியின் முடிம ணுணையிற் கொடுவைத் தாரரோ.

நாளொர் வண்ணமும் பொழுதொர் மேனியு நலம்பெ றக் குழல் வாய்மொ ழிக்கரு, காளொ ரம்மையுந் தோழி மார்களு மன்பொ டேற்றனர் வளர்த்து வந்தனர், வாளொண் கண்ணியுந் தோழி மார்களு வனம லர்க்கொய்த லாற்றி னுடுதல், கேளொ டுங்கழங் கம்ம னைமுதற் கேளி யாலிரு வேனிநீர்ந்தவே. (நக)

ஆடன் முற்றவுஞ் சிவன ருச்சனே யாவி யங்குமா லான றிந்துளான், மாட மர்ந்துள தோழி மாரெழு மாத ருக்குமவ் வுண்மை தோன்றுமா, னுட னைத்துமன் மகட்கு நல்வா ணண்ண வீசனை நாடி நிற்குமால், நீட ருட்பெறு முலக நாதமன் னிறை யில் லோடிறை பணிம றந்திலான். (நஉ)

---

நக. கேளியால்—மகளிர் விளையாட்டாலே.

அரன ருட்பணி வடிவ மாகியே யாரு யிர்த்தொகை நிற்
கு மந்தனா, னுரன தாகவே யாட்சி மந்திரி யுழிவி டுத்திறை
மகண்ம ணந்தருள், பரன தாகவிங் சமர்ந்து செல்வியின் பணி
பு ரிந்தனன் வாழ்வ தாயினான். றரன தாவிதைத் திருவு ளங்
கொளுஞ் சிவன ருள்விளை யாட னாடினான். (௩௩)

வேறு.

சாரலுள் விடாது தூற்றத் தகைக்குளிர் வாடை வீசச்
சேரவிற் றிரகோ பங்கள் செம்மணிக் குலங்க ளேர்த
னோரவெங் கனுமி வர்ந்து நிலவமா மயின டிப்பத்
திரகே கயப்புள் ளோகை திளைப்பநற் கார்தோன் றிற்றே. (௩௪)

வேங்கைவண் கடம்பு கொன்றை மிளிர்குருந் தழகாப் பூத்த
தாங்குசெங் காந்தள் வெண்காந் தள்தள வங்கா யாப்பூத்
தோங்கெழின் மணங்க மழ்ந்த வுறுகரு விளைகூ தாளி
யிங்கலர்ந் தனவம் மைக்கிங் கிசைமணக் குறிகாட் டற்போல் (௩௫)

தாமரை முதலா நீர்ப்பூத் தரணிநீள் கதிர்க்கை நீண்டா
தேமரு தோற்ற மெங்க ளிறைவிதோ ழியராய் வாணி
பூமரு திருவு நின்றார் புதுமண மவாய்க்கை கூப்பிக்
கோமதி நின்றார் நாமுங் குவியமென் றிலங்கல் போலும். (௩௬)

அங்குமை நடைக்கு நாணி யன்னங்க ளுலாவ மாட்டா
செங்குழல் வாய்மொ ழிக்குச் செவிதருங் குயில்கூ வாவே
மங்குகார்க் கிர மைந்து வணக்கிளி வெள்ளை பச்சை
செங்கிளி யம்மை சொற்கற் றடங்குமீத் திரித ராவே. (௩௭)

இத்தகைக் காரி லம்மை யிலங்குசித் திரைத்தென் னாற்றை
யுத்தியா னத்தி னூடோ ரோடையாய்த் திருப்பி விட்டாங்
குத்தனன் பால மைத்த வழகுபூ சனைம டத்து
ணித்தியன் பூசை செய்ய நித்தியம் போய்வ ரற்போல். (௩௮)

புறப்படுங் காலை யன்றுப் புரிகடன் புரிந்து பூசை
சிறப்பமா மலர்வ னத்துச் சிவசிவ வகத்துட் கொள்கை
மறப்பிலா வம்மை புக்கு மலர்கொயு மொருநன் னாளாம்
பிறப்பரி ரவிக திர்நாள் பிறங்குமப் பூங்கா வின்சார். (௩௯)

---

௩௩. உரனதாக—உள்ளக்கிளர்ச்சியுடையவனாக. மணந்தருள் பரன தாக—கலியாணஞ்செய்துகொடுக்கும் பொறுப்புடையவனாக. ௩௫. கருவிளை—காக்கணம். ௩௬. தரணி—சூரியன். கோமதி—சூரிய சந்திரர்கள். ௩௭. மீ—வானில். ௩௮. உத்தியானம்—பூந்தோட்டம்.

ஒருதனி மழவுக் காளை யுருவனுய்த் தோழர்த் தூர
மருவுமொவ் வோரா டற்கண் மனங்கொடு பிரிய விட்டோர்
திருவிளை யாட ஞடிச் செல்லுநன் போல வந்து
கருவிழி யமிழ்தன் ஞளைக் கண்டனன் முக்கட் பெம்மான்.(௪0)

அயலக லாத தோழி யனைவரு மொவ்வோர் செய்கை
செயலிடைத் தலைநிற் பாராய்த் திரிந்தனர் நீங்கி நிற்ப
வியல்குழல் வாய்மொ ழித்தா யினிதுதான் றனித்து வேலி
வியலர ணுண்ணின் ேறாேர்ந்தாள் வெடுக்கெனக் கவிழ்ந்து கொண்
டாள். (௪௧)

வேலியின் வெளிநின் றுக்காண் விமலனித் தியகல் யாண
ஞலிய லணியின் மிக்க நோக்கமைந் திங்கு நிற்கு
நீலிய வுச்சி யென்மின் னிலவொளி வொசிவென் னென்றக்
காலியன் முக்கண் போலுங் காட்சியி லீடு பட்டான். (௪௨)

கண்டன னிம்மின் றெய்வக் காமரா ரணங்கோ வெற்பி
னெண்டளிர்க் கைப்பெண் மானே வொளிர்மணிச் சுடிகை நாகர்
பெண்டன மோநீர்த் தெய்வம் பெறுமிளம் பூவை போவென்
றெண்டகவயிர்ப்புற்றுன்போன்றினைந்தனனிலைதேற்றெம்மான்.

அழகுயர்ந் தறிஞுந் தெய்வ வரம்பையேற் கற்பி லாள்வெற்
புழலிள யானேற் றாய்துற் றுறைகிலா ஞக மின்னேற்
பழகியன் மாறிச் சீறும் பான்மைய னீர்வாழ் பெண்ணேற்
குழலிலா ளிவணன் காருங் கோமக ளெனத்தெ ளிந்தான்.(௪௪)

என்றனு ருயிரே யுன்னை யினிதியான் மணப்ப ஞனே
யுன்றனுட் கொளுமோர் நாத னுனக்கியை யழகன் காண்டி
தென்றலார் மாடத் துற்ற தேவியே வசந்த வல்லீ
மன்றலா ருன்கா வின்மேன் மாடக்கோ யிற்க ணுள்ளேன்.(௪௫)

என்னதே யுலக மெல்லா மென்னுடைப் பெபருன் றந்தை
நன்னரார் தரக்கொண் டென்பா னண்புமிக் குளனுய்ப் பாராண்
மன்னனு ஞனீ யென்னை மறக்கில விடைமேல் வாரா
வின்னவ ஞரே யென்றுள் ளெழுஞ்சினந் தணிதி யென்றான்.(௪௬)

உட்கருத் துணர்ந்து சொற்ற துணர்ந்துளந் தணிர்து மெண்ணங்
கட்கவர் குறிகா ரன்போற் காணிவற் கடிவே மின்றென்
றெட்கனல் காலை நங்கா யியான்விடை மீது லாநீ
வெட்கவு வருவே ஞளை விழாவது காண்டி யென்றான். (௪௭)

மேலுநீ மகிழ்வா னுடல் விழைந்துளே மின்று தொட்டுச்
சாலுமென் வடிவுட் கொண்டு தவமது புரிதி வாழ்தி
யேலுமுன் றந்தை பாற்பெண் ணினிதுகேட் டுனைமணப்பேன்
கோலுநா டேலாத்த ரந்தான் குளிர்தியென் றகன்றான் பெம்மான்.

வந்தன னம்மை பூசை மடைப்புகுந் தனண்மு கங்காண்
டந்தமென் மாறி யேழு தாயரு மேதோ நங்கை
சிந்தையுட் சினமு மின்புஞ் சேர்த்ததாய்த் தேதுஞ் சொல்லா
ளந்தணன் பூசை யாப்பின் னதைவினு வுவமென் றுற்றார். (சகூ)

பூசையாய்ந் தெழுந்தா ளேந்தல் புதல்விபுத் தமிழ்தன் னுள்பா
லாசையா வுற்றுற் றுப்பார்த் தடரிணங் கிகளை நோக்கி
யேசையார் தாத்த னித்திங் கெனைவிடுத் தகன்றீ ருங்க
ளோசைநன் றெனச்சி னந்தாங் குரைத்தனண் முறுவல் பூத்தாள்.

புதுமையாச் சினத்த லென்னே புதுமுகப் பொலிவீ தென்னே
முதுமையா வுமது தொண்டே முயறவ மெனக்கோ ணுங்கள்
வதுவைகண் டுவக்குங் காலம் வரலெதிர் பார்க்கின் றேமா
லதுவுமார் நிமித்த முண்டின் றறிந்தியா மகன்றே மென்றார் (ருக)

நல்லது பிழைத்த தூஉமென் னலங்கொடோ வெனந கைத்தா
ளில்லது சொலினு மக்கின் பேமெதனச் சகிமார் சொற்றார்
வல்லதும் பேசி னுண்மை வருமெனி யெனவ மைந்தாள்
சொல்லதுட் படநக் குற்றுச் சூழ்தலா யினர்மெய் தேர்வான் (ருஉ)

மகேசைமுன் போனு ளோர்சார் வந்தனள் பின்னே காளி
சகேசைபால் வராகி விட்டுத் தணப்பக்கௌ மாரி போந்தா
ளகேசனில் விந்தி ராணி யகலநா ரணியுஞ் சென்று
ளிகேசையா முலக மாதா விருந்தன ளுசாவி னாளால். (ருங)

ஞானகா ரணியா மம்மை ஞானமூர்த் தியின்பா லின்றுச்
சூனநான் கொய்காற் காலைச் சூரியன் போலவந்தோர்
மானவ னென்னைத் தானே மணப்பலென் றனனஞ் சாமற்
கோனவ னூர்பே ரெல்லாங் குயின்றன னியான்வி திர்த்து. (ருச)

---

ருஎ. இணங்கிகள்—தோழிகள். ஏசையார்தர—ஏசலை (வைதலை) ப்பொருந்தும்படி. ஓசை—கீர்த்தி. ருக. நிமித்தம்—சகுனம், காரணம். ருங. அகேசனில்—மருதநிலத்தலைவனாகிய இந்திரனுடைய மனைவி. (அகம்—மருதம்.) இகேசை—உலகைப்படைத்ததலைவி, ருச. சூனம்—மலர், விதிர்த்து—நடுங்குற்று.

விடைமிசை வராமை நோக்கி வெகுளவுள் ளதைய றிந்து
விடைமிசை நாளைக் காண்டி வெகுளவிற் றணியின் றென்றான்
விடைமிசைக்குறிகாரன்போல்விளங்கினன்வெகுண்டேனென் னுள்
விடைமிசை வேறு மாடல் விழைந்தனம் புரிவே மென்றான். (ருரு)

ஐப்பசி யுத்த ரத்தி லவன்மணம் புரிவ லென்று
மெய்ப்பரின் றுரைத்துச் சென்றான் விளம்பித னுண்மை சோறி
கைப்படுந் தூயா னென்னக் கனிந்தவ ளுய்த்து ணர்ந்து
துப்பறி வாற்றோர் மட்டிற் றுணைவனிற் கவன்று னம்மா. (ருசு)

அஞ்சலை விடைமே னாளை யவனுலா விழாவுங் காண்பாய்
தஞ்சமாத் தாயு மானுன் றனொரு குறத்தி யாயும்
வஞ்சமில் குறியு னக்கு வழுத்தவு வருவான் காண்பாய்
மிஞ்சலார் துலோத்த ரத்தில் வேட்டலா மென்றாள் வாளரி.(ருஎ)

பிரதம மகாசிட் டிக்கன் பெருமகேச் சுரனெங் கோமா
னுரமதி லரனே டேநீ யுதித்தவ ளன்றோ வெள்ளாய்
வானிவ னென்று மென்பால் வசந்தவல் லிமெனக் கூய்த்
தாலெனைமொழியென்றுடாய்தருமதுதிறப்பேரென்றாள், (ருஅ)

வாணிவாய் மொழிகேட் டன்னோன் வசந்தமா டத்தா ரேதுக்
காணிய துணர்க்தே சொற்றான் கட்டிநீ யென்றுற் றுடாய்
பேணிவாழ் கால்வெ ளிப்போம் பிறைகடா ணியாம கேசை
யேணிவர் குலி முன்ன றிணங்கிமார் வந்தா ரங்கண். (ருகூ)

வந்ததும் மகிழ்வான் வாணி வசந்தவல் லிக்கெங் கோமான்
சுந்தர வடிவ னுய்க்கை தொடத்துலோத் தரநாள் வைத்துப்
பந்தியிற் சென்று னென்றாள் பலித்தது தவமென் றின்ப
வுந்தியிற் படிந்தா ரன்னோ ருகந்தெழீஇ வாணி சென்றான். (சுO)

அரசிவாழ் சாலை புக்கென் னம்மனம் மம்மைக் கின்று
பரசிவன் வந்தின் னின்ன பகர்ந்தனன் சென்று ஞெஞ்செய்
வரதவம் பலித்த தென்று மறைப்பிலா தெல்லாஞ் சொற்றாள்
சரசோதி நீநல் வாக்குத் தந்தனை யினியா முய்ந்தேம். (சுக)

எனமுக மன்பல் வாறு மியப்பியா னிதோவென் னப்பை
யனமுணக் கொணர்வே னென்று ளவளுநன் றெனச்சென் றளான்
மனமுக மலர்ந்து கோமான் மாட்டடைந் திறைஞ்சி நாமே
கனமுற லானே மென்றுக் கழறினள் செய்தி யெல்லாம் (சுஉ)

ருரு. (3-ம்) விடைமிசை—அவனது எதிர்மொழியின்மேல், ருசு.
துய்ப்பறிவால்—அனுபவ அறிவால்,

கேட்டன னிருகை கூப்பிக் கிளர்ந்தெமான் கோயி னோக்கி
நாட்டமின் பக்கண் ணீர்கா ணதிபனு டினனு யெற்கோ
ராட்டநீ திருவு ளங்கொண் டனையயான் காணேன் கைமா
றேட்டடிமலர்க்காட் கொண்டீ விதோவெனப்பணிந்தேத்துற்றான்.

களவியன் முறைந டாத்திக் காட்டுவோன் போலு மீச
னுளவிநா டொடுத்தைம் பானுன் கொரீஇமண நாள்குறித்த
தளவினுப் தினிநா ளைத்தா னுன்மிசை வருவ லென்றல்
வளவிரி காண்டுமென்றுண் மகிழ்ந்தன னிருந்தான் மன்னே.()

அன்னைபொன் மாலை யூட்டு மன்னையோ டுணக்கொண் டேகி
யன்னையே வசந்த வல்லீ யமுதுகொள் ளெனப்பா லூற்று
என்னைநின் சொற்றட் டாதூ ணருந்துவ லின்று நாளை
யன்னைமார்க் குணவெற் கோவே றறைகுவ லஃதீ யென்றாள்.()

ஏதுநீ கேட்டா லுந்தா னிபர்னிலை யெனமாட் டேனிப்
போதுனீ யென்று ளுண்டாள் புதல்விதாய் மகிழ்ந்தாங் குள்ள
பாதுகாப் பனையார்க் கூட்டிப் பரிவுசெய் தெழீஇவந் தன்பற்
கோதுண வருத்தித் தானு முண்டனள் வழக்கம் போல. (௬௬)

ஈண்டிவ ளிருக்குங் காலை யினன்பிரா னுலக நாதன்
பாண்டிவி னேறி நாளைப் பவனியார் தரல்கா ணற்கா (போன்
வேண்டிமுழ் கிச்செய் தற்செய் விழைவொடு போய்மீள் வான்
மாண்டிரை குளித்தான் றிங்கள் மங்குலா ருடிற் றன்றே.(௬௭)

கதிரவ னுதிப்ப வெங்கள் கண்ணுத லமைச்சா நந்தித்
துதிபெற நிறீஇமால் வேதன் றொழரா வரச்சு ரேசன்
பதிமுத லெட்டுத் திக்குப் பாலரு மூழைய ராகக்
கதியதா வரநி னைந்தான் களித்துடன் வந்திட் டாரால். (௬௮)

வேறு.

பழகுங் காலைக் கதிர்கோடி படிவொன் றுறல்போற் றிரு மேனி, யழகி தாக்கொ ளிளங்காளை யாகி மறைக்கோ வணம சைத்துக், கழகம் பயினூற் கலையுடுத்தா கடீவல் லவாட்டு மேற்கொண்டு, குழகங் கக்கொய் சகநூற்றோள் கொடுகோ மகன்போ னின்றான்கோன். (௬௯)

௬௫. ஈவிதோ--தேவரீசைபிதுவோ. ௬௭. திரை—மேலைக்கடல். மங்குலாறு—கொண்டலாகியவானதி.

மறைமுப் புரிநூல் வலம்படக்கேழ் வயங்க மார்பிற் பதக்க மின்ன, வறையெயற் படுகுண் டலஞ்செவியுற் றசையத் தோளங் கதம்பிறங்க, நிறையொன்பதுகோணொளிக்கன்னிரையாப்பதி த்தமுடி துலங்க, வுறைபொற் சுழல்பூந் தாளொளிர வுகந்தெ ழீஇ நின்றருளிறைநேர், (எ0)

நந்திப் பெருமா னாணைவழி நலமா ரணிகள் செயப்பட்டு, வந்தித் திடப தேவனன்பா வந்து நின்றான் கண்டுவப்பாய்ச், சிந்திப் பவர்க்கின் பருள்கோமான் சிங்க வேற்றி னடந்தேற் றிற், புந்திப் பரிவி னேறினன்பூப் பொழிந்து வானோர் துதித் தனரால், (எக)

இருபாற் றோழ ரடுத்துவர வியலா ரமைச்சு முன்னட ப்ப, வொருவா துழைபோர் சூழ்ந்தியங்க வொருகோ மகன் வெள் விடையிவர்ந்து, வருவான் கன்னி மஞ்சுதவழ் வனத்தின் வளங்காண் பான்போலத், திருவார் முனிவ ரிருக்கைதொறுந் திருக்கண் சாத்திப் படர்கின்றான். (எஉ)

முனிவ ரியோகர் தவர்சித்தர் முதலாங் குளமாண் பினர் சூழ்ந்தார், நனிவெள் விடையூ ரிவனெந்த நாடா ளரசோ வென் பாருந், தனிவெண் பொடிப்புண் டரம்பொட்டாற் சைவ னிவ் வேந் தென்பாரும், பனிவெண் டிங்கட் குலக்கொழுந்தின் பதி யிம் மனனென் றறிவாரும். (எங)

உலகாள் குழல்வாய் மொழியெனப்பே ருறீஇமன் மகளாய் வளர்கின்றாள், குலவா வவள்காண் பான்விடைமேற் கொண் டா னிறையென் றுணர்வாரும், நிலவா வுலாவை யவரவர்தம் நிலைபோற் கண்டு களிகூர்வார், கலவா ரொருவர் தமையொரு வர் கண்மூன் றுடையான் செயலதுவே. (எச)

அக்கான் முனிவ ரவர்மனைமா ரண்ண லுலாக்கண் டுருகு சுற்றி, யிக்கா வின்ன வளத்ததிக்கா வின்ன வளத்த தெனச் சொல்வார், மிக்கா ரழகன் வழுதிமகள் விழைதக் கான்கண் டாலவளுஞ், சொக்கா திராளிச் சொக்கனையார் சும்மா விடுவ ரென்பர்மின்னார். (எரு)

---

எரு. சொக்காதிராள் — மயக்காதிருக்கமாட்டாள், சொக்கன் — அழகன்

ஓரா ளாவந் தானிலனே யுழைய ரமைச்சுத் தோழரோ டுஞ், சேராள் பலர்சூழ் தரவரினுஞ் செயலிலனொப்பல் வரிசையென்னே, நாரார் மணிவாய்ப் பொலிவென்னே நவிலு மின்சொற் பொழிவென்னே, காரார் மணிக்கட் பார்வையென்னே கமழ்நன் முகத்தின் விளக்கமென்னே. (௭௬)

மார்பைத் தோளைக் கைமலரை வயிற்றைத் தொடையை மணிக்கழலை, யோர்புற் றுற்றுற் றுப்பார்த்தே யெறிவார் பெருமூச் சிவனொருக்காற், சேர்புற் றின்பார் தவமிலைநாந் தினங் கண் டிடவு மீண்டிலையாற், சார்புற் றிவனுள் ளளவுமொன்றாய்ச் சரிப்பே மெனவுட் கொடுவருவார். (௭௭)

அம்பொன் வளைவீழ்த் தெடுத்தணிவா ரரைப்பூந் துகிலை யவிழ்த்துடுப்பார், செம்பொன் வரைவார் நெகிழநிற்பார் திருமுன் னிமிர்வார் தலைகவிழ்வார், வம்பொன் றியமார்ச் சாந்துகுப்பார் மலரார் குழல்சோர் தரமுடிப்பார், தம்பொற் பார்நா ணிழந்தரைநாண் டனையு மிழப்பார் வருவாரால். (௭௮)

மெய்தான் பசப்ப தோராராய் விடைமேல் வருவான் றனையுட்கண், டைதா னுளத்து மகப்பட்டா னென்மேற் கொளனு மெனையிவனெங், கைதா னென் விடுகிலமேற் கன்னி மாடத் தருகிதிங்கென், செய்தான் காண்டு மெனநின்றார் சிறிது நேர நின்றுவந்தான். (௭௯)

உலகாள் பாகன் கோயிலினை ருானார் விடைநின் றிழிந் துள்புக், கிலகா விறைவன் குழாத்தொடேற விடப தேவு முட் புகுமால், விலகா முனிவர் முதலாரு வெளிநின் றகன்றார் தொழுதேத்தி, நலமா ரரிமுன் னோர்தத்த நாடு புகுந்தார் விடை கொண்டே. (௮௦)

வேறு.

உலக நாதனு நந்தியு விடையுமங் குவந்தமர்ந் தனராகத், திலக மால்விடை மேலழ கன்வரு திருவுலாக் கண்ணுற்றாங், கிலக ருட்குழல் வாய்மொழி நங்கைதன் னிறையெழிற் றேனுண்டு, கலகவேண்மலர் வாளிதூ வாவழிக் கடிந்துள மயல் கூர்வாள். (௮௧)

---

௭௮. வார்- கச்சு. வம்பு- கச்சு. அரைநாண்- அரைப்பட்டிகை.
௭௯. ஐதான்- அழகுதான். செய்தான்-செய்வான். (காலமயங்கிநின்றது.)

வசந்த வல்லியம் மாகுழல் வாய்மொழீ வயவிடைப் பரியே
றிக், குசந்த ழைத்தமின் னார்முனி வோர்வளங் குழீஇயொரு
மழக்கோமான், புசந்த ழைத்தசைச் சுழைபர்சூழ் வரவிநோதா
போந்தன னிவனென், றெசந்த லைத்தயாழ்க் கலைமகள் சொல
விரைந் தெழீஇப்பல கணிப்பாலாய். (௮௨)

மறைந்து நின்றனள் கண்டன ளிவன் முனாள் வந்தவ
னெனவாணிக், கறைந்தி லாதுணர்த் தினளவ ளுணர்த்தலி னர
சியு மரசுந்தா, முறைந்த வில்லுளா யயலறி யாதுகண் ணுற்று
ளங் குளிர்ந்தாராய், நிறைந்த வன்பொடுற் றனரவன் வணங்கா
னோர் நிருபனைப் பிறர்கண்டார். (௮௩)

தலைவி கண்குளிர் தரவறி தற்கிவர் தலைவனார் விடையங்
குக், கலைவி ளங்குமுக் கணிபல கணிவழிக் கண்டுகண் டின்பார,
நிலைவி டுத்தெழ நடத்துவான் வியப்பவந் நிலைபெய ராநிற்ப,
மலைவி யங்குமங் கயற்கணைப் பார்த்தனன் வானவள் கவிழ்ந்
திட்டாள். (௮௪)

விடைந டந்தது வசந்தவல் லிக்குள விழைவது பெரிதா
ய்த்தொண், ணுடைநெ கிழ்ந்திலை குழல்சரிந் திலைவளை யுதிர்ந்
திலை வார்கிழ்ந்தின், றடைகு ழம்புகுந் திலையரைப் பட்டிகை
யவிழ்ந்திலை நாண்டீர்ந்தின், றிடைகு ழைந்திலை வணப்பசந் திலை
யுளத் திறையைவைத் துவக்கின்றாள். (௮௫)

கருப்பு வின்மலர்க் கணைவலாற் கண்டெடே கருத்தழிந்
திடாய்வினீ, யுருப்பு ரத்தலின் றனங்கனு கியதிற லுணர்தியா
னுன்செய்கை, விருப்பு றேனெரிந் தெழுதலி னமைதிசென்
மித்தைவாய்ப் பட்டார்ப்பார், திருப்பு கென்மன ளனையழைத்
துனேன்மணந் திகழநோற் பேனென்றாள். (௮௬)

அம்ம நீயுன விடினெவ ருண்பரு னயின்றிடா விடினும்
பாற், செம்ம னப்பழ மெனினுமுண் டுறைகெனச் சேடிய ரிசந்
தாரா, னும்ம னத்தினுக் கிசைகுந னென்றன னுவலதைப்
பொன்மாலைக், கெம்ம னத்துறை கலைமக ளுணர்த்தவாங் கியன்
றதந் நாடொட்டே, (௮௭)

---

௮௨. குசம்- தனம். புசம்-தோள். எசம்- நரம்பு. பலகணி- சாளரம். ௮௪. மலைவியங்கு-ஒத்தஒளியினையுடைய,மயக்கமுலாவுகிற,ஒத்தபெருமை பிரிவாற்குறைந்த. ௮௫. குழம்புகுந்திலை-கலவையுதிர்ந்திலை. ௮௬. திருப்புக -திரும்புக.வலித்தல்விகாரம்.

வேந்தன் செல்வியா வம்மைபோந் தகத்திபன் விழைந்தவா தமிழ்நாடுங்; காந்த ஞாழல கேசனே மணஞ்செயற் கண்டுயக் காட்டாடற், பாந்த ராகிய வம்மையப் பரினமமை பயினிலைத் தவந்தானு, நீந்த னற்படு மெழுகென வுருகுகண் ணீர்மெயன் பரின்வாழ்வாம். (அஅ)

வேறு.

ஊர்பெய ருநகுணங் குறியொன்றிலாச்சிவ னொளிர்வெண்ணீற்றுச், சீர்பெறு முப்புண்ட ரத்தமுக் கூடத்துத் தென்மலைக்கோன், நார்பெறுஞ் சித்திரை யாற்றினன் பாண்டினன் னாடன் பொன்பூ, கார்பெரு மணிபொழி கார்தவழ் பொழிலதென் காசி யூரான். (அகூ)

அறம்பொரு ளின்புவீ டாயநாற் பொருள்பக ரருந்தமிழ்ப்பார், திறம்பொலி நான்மறைப் பரியின னோமுகத் தெய்வவேழன், மறம்பொடித் தோங்கற விளவிடைக் கொடியினன் மன்றலீகை, புறம்பொதி வென்றியார்த் துறக்கமின் றோங்குமுப் புகழ்மு ழாவான். (கூ0)

தண்ணரு ணிழல்புரி திங்கள்வெண் குடையினன் சடாமுடிக்க, ணொண்ணறை வாடாத கொன்றைமாலையனின வுயர்தசாங்கப், பணணவ னடியவர்க் கடியனன் பர்க்கன்பன் பசுபதிப்பே, ரண்ணலோர் குறத்தியா வுருக்கொடு வெளிப்படலாயினானல். (கூக)

அறுபது வயதுள சுமங்கலை யாய்த்தள ராதசெய்ய, மறுவறு யாக்கையள் மஞ்சளின் பூச்சொடு வயங்கு வெண்ணீ, றுறுதிரு நுதலினள் சிந்தூரப் பொட்டின ளுபர்கண் டாங்கி, முறுகுடை யினள்சிறு மணிப்பாசி செங்குன்றி முத்தப்பூணாள். (கூஉ)

சூடிய பிறைபொரு கூடையா யிடுக்கினள் சூலந் தன்னை, நீடிய பிரம்பதா வலக்கையின் வைத்தன ணெல்வி வெற்பி, னோடியல் வானதிக் கரைக்குறக் குடியினின் றுற்ற வள்போ, லாடிய வந்தன ளுலகெலாம் பேர்பெற்ற வழகி யன்னாள். (கூ௩)

---

அஅ. நீந்து-நீத்து, நிலைகடந்து. (நீற்றென்பதன் மரூஉவெனினுமாம்.)

வசந்தமா டத்தயல் வந்துநின் றாள்வட வாயில் காப்பா, ரசந்தநீ யாரையென் றுரியா னெல்லிவெற் பழகி யென்று, ணிசந்தனைச் சொலவல குறத்தியே லென்னுள நினைத்தல் சொற்பொன், றசந்தரு வேனென வொருவனஃ தாந்துலோத் தரத்தி லென்றாள். (௬௪)

மாடமீ தமர்குழல் வாய்மொழி கேட்டுடன் வாயி லின்கண், வேடமா னிற்பினிங் கழைத்திடென் றொளொரு சேவலைக் காரி, நாடவ டனையழைத் தேகின ளோரிடை நண்ணி யாங்கேழ், சேடிய ரோடம்மை வந்தனண் முனர்ப்பசி தீர்வித் தாளால். (௬௫)

வயிறது நிறைந்தேப்ப மிட்டுவந் துட்கார்ந்து வாழ்த்தி யம்மா, வுயிருவப் பான்குறி சொல்லறப் பய்ன்கைவந் துற்ற திக்கால், வெயிலிடைக் காவத நடந்திளைத் தேன்கனை விடாய்த ணித்தல், டயிர்கரு காவழிப் பெயல்போனும் புரிதவம் பலித்த தென்றாள். (௬௬)

வயதுபோ கியமட்டுஞ் சொலிச்சொலிக் குறியுங்கை வந்திருக்கும், வயதுபோ கியவட்கு மறதியு முண்டாமுன் வலியென் னெனறாள், வயதுபோ கியளலேன் குறிகேட்பி னுண்மைதான் வயங்கு மென்னை, வயதுபோ கியளென மதித்தனென் னெனக் குறி வழுத்து கென்றாள். (௬௭)

குறத்திகள் வழக்கஞாத் தெய்வமுன் வரித்துளங் குளிர்வித் தமமை, யறத்திருக் கைமலர் நீட்டுவித் தகிற்பிரம் பமர்த்துப் பார்த்துப், பிறத்தலா முண்மையை யுளமகிழ் தரச்சொலப் பிரட்டெ னற்போற், சிறத்தலாய் மனக்கிடை சொலனிற்க வென்பெயர் செப்பு கென்றாள். (௬௮)

வேறு.

கண்ணு யிரத்தாற் காத்தவா காளி கவிழ்வா னடிப்பவா
பெண்ணு மிவள்பேர் சொல்லவா பெயரோ குழல்வாய்மொழிகனி
வண்ணார் வசந்த வல்லியா வயங்கிற் றெனவீ துரையினுந்
தண்ணார் மாடத் தினுமிளந் தலையி னுங்காண் பென்றனள்.

---

௬௪. அசந்த—அயர்ச்சியுற்ற, நகையினையுடைய. (அசதி—அயர்ச்சி, நகைப்பு. தசம்—பத்து. ௬௫. வேடமான்—குறத்தி, தன்கோலம்விட்டுவேறுகோலங்கொண்டபெண். ௬௬. காவதம்—காதவழித்தூரம். ௬௭. வயதுபோகியளலேன்—(வய + து + போகி + அள் + அலேன்) வலியஅனுபவத்தையுடையஉலகவியாபாரியல்லேன். உன்வசத்தினின் றும்பிரிந்தமையால்வேறுசுகமனுபவித்தேனுமல்லேன், தளர்ந்தவளல்லேன் ௬௯. இளந்தலை—இளமைப்பருவம். காண்பு—காண்டல்.

பக்கத் திருக்குந் துரைச்சிமீர் பார்த்தி ருங்க ளரசிசொல்
பொக்க மெனவின் றிருவரும் புகறல் சரிதான் புகலென
சொக்கக் குறத்தி வயதுசொல் சோறுங் கேண்மி னிசனே
முக்க ணுசொல் வயதுபன் மூன்றிற் கொன்று குறையென.(௰)

மணங்கோன் டின்னீர் கைப்பெரு மாளோ வப்பேர் சொற்றிலை
தணங்தோ ளானுய் பார்குறி சரியா வெனவெம் முமாபதி
பணங்தோ ளணியா பகரிரு பக்கங் கழிந்தாற் கேட்டைநீ
குணங்தோண் மணங்தே ழாந்தினங்குறிக்கிற்பிறந்தநாளென.(௰௧)

குறிநீ சொலவிவ் வளவதோ குறத்தி சிறுதெய் வங்களைச்
செறிவா வரிப்பா ணீபெருந் தெய்வ மதூஉமாண் டெய்வமே
வெறியாவரித்துசிசொனுபதால்வேடத்தியோசொல்லென்றனள்
கிறியாசொனேன்பார்துளைத்தரங்கிட்டிற்றெனவே றென்னென.

வானுய்த் தேழு முனிவரர் வருவார் நாளை மணமது
திரமுற் றிடுங்கா ணெனவிதே செப்ப நீகற் றதையலா
லுரமுற் றறிந்தின் றேவென வுனக்குத் துலங்கும் குறியிதா
விரமுண்டெனிற்சொல்லெனச்சுமாவிருந்தாள்குறததிசென்றனள்

எணங்கேதர் குறிசொல் வலானென வியான்கொ ளெணம்
பொய்த்திடாவழி, வணங்கேர்ந் தடைந்தான் வலானென மகிழ்ந்
தா ளிருந்தாள் மகளதூஉம், மணங்கேர் தவப்பெற் றோருணர்
வாராயின்புற் றமர்ந்தனர், குணங்கேதர்ந் திடினோர் வடிவிலண்
குணற்காட் டெதூஉமாம் போனுமால் .(௰௪)

வேறு.

காசிபன் கௌதமன் புலத்தியன்மார்க் கண்டனுங் கிரசன்
வசிட்டனகத். தீசனிவ் வெழுதமிழ் வல்லுநரை யிறைவனுங்
ஞடின னுடன்வந்தார், மாசிலம் மாதவர்ப் பார்த்தருள்வாய்
மலர்ந்தனுப் பினனவர் பாண்டிநன்ஞட், டீசனு முலகநா சச்
செழிய னிடத்துவந் தனர்மகட் பேசினரால். (௰௫)

---

௰ பொக்கம்—பொய், இன்று-பொய்யில்லை. சோறும்— சொல்லு
தும். ௰௧. தணங்தோள்—தப்பினவள். பணம்—பாம்பு இருபக்கம் - அமர
பட்சம் பூர்வபட்சங்கூடிய ஒருமதி. குணங்தோள் — இலக்கணமமைந்த
தோள். ௰௨ வெறியா —ஆவேசம்போல. வேடத்தியோ — குறத்தியோ,
வேடக்காரியோ, கிறியா—பொய்யா, வேறு—வேறுள்ளகுறி, ௰௩-இரம்-
இருப்பது. ௰௪-ஆட்டு—விளையாட்டு.

வந்தவ ருளமகிழ் வான்முகமன் வரிசைகள் பலபுரிந் தாசி யிடை, யந்தரங் கத்தருட் கலைமகளை யழைத்துளங் கலந்தறை திறஞ்சொலெனச், சிந்தனை மகிழ்ந்தவா றறிந்துசொலத் திரு மண வுறுதிசெய் துடன்முழுத்தஞ், சுந்தர னமைத்தமேலோர்ந் தந்தநன்னாட் டுணிந்தியன் மணவினை தொடங்கினரால். (௱௬)

வளர்கயி லாயமர் தரங்கந்த மாதன மேமகூ டம்மிமயங், கிளர்தரு விந்தநீ லம்நிடதங் கேடிலிவ் வெண்குல மலைதானுத், தளர்விலா மேருகள் சட்டமதாத் தனுதவான் பரப்புமேற் கொட்டகையா, வுளர்மழ மஞ்சுமேற் கட்டியதா வெளிர்பல நாள்களும் பதிமணியா. (௱௭)

எழுகோள் களுமெழு வான்விளக்கா யிமைந்ததிற் பந்த ரொன் றமைத்தழகாய், வாழுமைந் தருக்களா லெேன்பமொளி வளக்குலக் கற்களான் வேள்விவரை, சூழுல கெலாமகிழ் தரப் படைத்துத் தொன்மையா கமப்படி யலங்கரித்துக், கேழுறு மட் டமங் கலங்கணிறீஇக் கேடிலாச் சிறப்பெலாம் புரிந்திட்டார்.()

வேறு.

குலசேக ரத்தெனன் குயிறவச் சாலையே குலசேக ரம்மு டை யார்மணஞ்செய், வலசேக ரத்திரு மணச்சாலை யாயிட வான்றெரு காவண மமைத்ததன்கண், பலசேக ரத்தபொற் பாலிகை வாய்முளை பயிறரத் தெளித்தன ரயன்முதலோர், நல சேக ரத்துற மணிவிரிப் பிட்டனர் நடுமண வாலுறத் தவி சிட்டார். (௱௯)

வரன்றமர்க் கிருக்கையு மடுத்தமைத் தனர்நடு மணவரை மேற்கழ லியவுசற், றிரன்பெற மணிகளா லொளிர்தர நாட்டி னர் திகழிருங் கற்பகம் பொலந்துகில்பூண், டரன்பெறத் தேனு பா லறுசுவை யுண்டிசிந் தாமணி வேண்டுவ தரத்தரப்பெற், றரன்பெறு வானகர் நாணவெல் லாமமைச் சுய்த்தனன் வந்தன னிருந்துகொண்டான். (௱௰)

அண்ணனு மமைச்சனுங் கலந்தன ராய்மகட் கருங்கடி விழாமிகச் சிறப்பாகப், பண்ணனுக் கருளொடு மன்பொடும் வருபொருட் பலவுநன் கமைதர மகிழ்கூர்ந்து, ளெண்ணனுக் கிசைதரத் திருமுகத் துடனுல கெங்கணு மரசரும் பெருங் குடியுங், கண்ணனுற் றறியவீழ் முனிவரு மன்பருங் கனிந் துவந் திடமுர சமுழுப்பத்தார். (௱௧௧)

கலகமா ரியமனிங் கிடையிறப் பிலாமனுங் கடையினுஞ்
சிவனடி சேர்வானன், கிலகற நெறியர சாட்சிசெய் மாறனு
லியான்பத மிழப்பனே வெனவோச்சுங், குலகவு ரியன்கவு
ரியைமக ளாக்கொடெண் குணன்மரு கனின்வரக் குயிறவங்கூ,
ருலகநா தத்தெனன் றிருமுநங் கண்டன ருச்சிமேற் கொண்
டனர் வருகின்றார். (௱௪௨)

வேறு.

கொல்லர் சோழர் கேரளரே கொங்கர் தெலிங்கர் கருநாடர்
பல்ல வர்கன் னடர்போடர் பகர்சா வகர்குந் தளர்குடகர்
வில்லர் குலிங்கர் செஞ்சையரே விதர்ப்பர் விராடர் கல்யாணர்
வல்லவிவர்பன்னெண்மருமுண்மகிழ்வுற்றெழீ இவந்தனரன்பால்,( )

அங்கர் கலிங்கர் காம்போச ரருணர் பராடர் பப்பரரே
வங்கர் துளுவர் கௌடர்சிந்தர் மகதர் சீனர் கௌசிகரே
கொங்க ணத்தார் கான்மீரர் கோச லத்தார் சோனகரே
சிங்க ளத்தா ரெனும்பதினெண் டேய மொழிவல் லுநர்வந்தார்( )

காசர் கிராடர் குருநாடர் கரிச ரிலாட ரொட்டியரே
யாசி னிடதர் நேபாள ரவந்தி யார்பாஞ் சாலர்சகர்
மாசவ் வீரர் யவனர் மச்சர் மாள வர்கூர்ச் சரர்குருகர்
காசில் சூர சேனர்கே கயர்வை தர்ப்பர் வங்காளர். (௱௪௫)

சால வர்காந் தாரர்யுகந் தரரா ரியர்தெங் கணர்கங்கர்
வேல மிலேச்ச ரம்புலிந்தர் விதேகர் குலிந்தர் சௌராட்டர்
சில ராமுப் பதிற்றிரண்டு தேயத் தவரும் வந்திட்டார்
ஞாலப் பாண்டி பதினெட்டு நாட்டு வேண்மார் வந்திட்டார்.(௱௪௬)

வாத்தக் கார்வந் தனரோயார் வாரதா ரானு ரெனத்தெரிகா
லூரத்த கடாரர் கூவிளர்முன் னோர்வ ராமை யுணர்ந்தசைக்குஞ்
சிரத்த மைச்சன் மூன்னவருஞ் சேர்ந்தார் வந்து மகிழ்ந்தெழீ இப்
போய்த்
தாத்தரம்போல்வருவழிக்கண்டகைதீர்த்துய்ப்பார்ச்சரிபார்த்தான்

வேறு.

திலவுல கத்தி னுள்ள நிருபர்தம் டரிச னத்தே
டிலகுற வந்தா ரன்ப ரிருந்தவ ரெலாரு வந்தார்
விலகிட மிலாப்ப ரந்து விமலனு ரடிம லர்ப்போற்
பலருறற் கிடந்த ருஞ்சண் பகப்பொழி னிழறந் திற்றால். (௱௪அ)

௱௪௬. சிலர்—தருமச்சேத்திரத்தார். (குருகேத்திரத்தவர்.)

அவரவர் தரத்தின் மிஞ்சு வன்புட னமைச்சி ருங்கோ
விவர்தரு முகம னுற்றி யிடவச திகளு நல்க
நிவரவ னிருந்து ம்பாய்ப்போய் நிருபனைக் கண்டின் பாடி
நுவல்வசந் தப்பொன் மாட நோக்கியேத் தினர்மீள்வாரால். (௱௰௯)

உலகநா யகிவே ருப்வேந் தொளிர்மக ளாய்த்த வஞ்செய்
திலகலா னுலகே சன்று னுயிரெலா மிழந்த போக
மலகலாப் பெறவு ளங்கொண் டனனறி நந்தி யெம்மான்
பலகுட வுளர்வந் தாக நினைத்தனன் பரிந்து வந்தார். (௱௨௰)

மாலொடு மாலாள் கோடி மான்மக னவளுள் கோடி
மாலொடெண் டிசைகாப் போரவ் வாழ்க்கைய ரெட்டுக் கோடி
சூலொணு தியல்வ ளைக்கைத் துணைவியர் சகிமார் கோடி
சூலொணுப் பெறுந்து றக்கக் கணிகையர் கோடி சூழ்ந்தார். (௱௨௧)

புகழுருத் திரக ணங்கள் பூதமா கணங்கள் வீரந்
திகழ்குறட் படைக்க ணங்கள் பாரிடத் திறற்க ணங்கள்
நிகழ்கணத் தலைவ ரோடு நெடியபே ரன்பாய் வந்த
பகர்கண பதிசெய் வீர பத்திரர் வடுகர் வந்தார். (௱௨௨)

இருகதிர்ச் செல்வர் வந்தா ரேழுகோள் களுவந் துற்ற
குருவுடு வனைத்து வந்த குயிறவச் சனகர் முன்னோ
ரருள்வியாக் கிரபா தேசர் பதஞ்சலி யாரும் வந்தார்
வருதவ ரெலாரு வந்தார் வரன்றம ராக மாதோ. (௱௨௩)

பிள்ளைவிட் டார்பெண் விட்டார் பிரிகிலார் செறிந்து வைக
வெள்ளைய திரைப்பா லுந்தி வெளியதி லுயிர்க்கு பூஞ்சேர்
தொள்ளையிற் பூமிதேவி துயலவுய்ப் பவனு நந்தி
யுள்ளைய னம்மை யன்ன வுடைமையா னிலைநன் றுய்த்தால். (௱௨௪)

மதுக்கிளர் செண்ப கப்பூ மாணிழற் கட்பொற் கோயிற்
புதுக்கியுள் ளலங்க ரித்தோர் புதியபீ டத்திற் கோடி
விதுக்கிளர்ந் தெனப்பொ லிந்து விளங்கினன் வரனுஞ் செய்தன்
பொதுக்கமார்ந் திறைஞ்சிச்சூழ்ந்தா ருடனெழீஇ விடைமேற் கொ
ண்டான். (௱௨௫)

---

௱௨௰. அலகலா—அளவல்லாமல், ௱௨௧—மால்—விட்டுணு. மால்—இந்திரன். சூலொணுதியல்வளை — சூடைந்தாக்கப்படாமலியற்கையாகவமைந்தவளையல்கள். சூலொணு-கருக்கொள்ளாமல். ௱௨௪—வெளி—ஆகாயம், தொள்ளை—மரக்கலம். உள்ளையன்—உள்ளதந்தை. ௱௨௫—ஒதுக்கம்—ஒழுக்கம்.

திருமணக் கோலன் வந்தான் சிவைதவன் வந்தா னித்தப்
பெருமணத் தவன்வந் தானென்பெருங்கொடி யுயர்த்தோன்வந்தான்
தருமவெள் ளேற்றன் வந்தான் றனிமுதல் வந்தான் வந்தான
மருகுழல் வாய்மொ ழித்தாய் வாவெனனச் சின்ன மார்ப்ப.(௩௨௬)

பாற்கதிர் போல்வெண் ணீற்றுப் பரன்றமர் கடல்போற் சென்னி
மேற்கா ராய்வா னோர்வான் மினார்தனித தனிச்சூழ்ந் தேழக்
கோற்கா மீட்ட ரம்பை குழீஇவாச் சுராரைம் மேளஞ்
சூற்கரு முகிலி னார்ப்பச் சுபமுர சார்க்கர் கொட்ட. (௩௨௭)

விஞ்சையர் தாளந் தட்ட விறலிமார் பாடி யாட
வஞ்சலித் தருள்கொள் வான னவிர்குட முழாமு ழக்கத்
தஞ்சமாந் பாலு கம்பன் சங்கநா தம்மெமா விப்ப
நஞ்சையார் களற்பா டன்பார் நாகர்வாய்த்துதிமிக் கோங்க.(௩௨௮)

ஆற்றுமின் மாரேழ் பேருஞ் சாமர மசைப்பத் திங்கட்
பேற்றுவண் குடைகு றட்கைப் பிடித்தெழ விடிவா லன்னம்
சாற்றுபுள் ளரசு தாழத் தனிவிடைக் கொடியு யர்த்தோங்
கேற்றுறை யிறைவ லத்தெண் கனைரி யிடத்தி யங்க.(௩௨௯)

வரன்வர வெதிர்பார்த் தோங்கு வழுதியு மமைச்சு மேலாந்
தரன்வல வரசன் மாருந் தவவலா ரியோகர் சித்தர்
திரன்வளர் முனிவ ரனபர் திருநெறி யறவோ ராரும்
பரன்வழி நிற்ப வேழு பாவையார்த் தெழல்போற் கண்டார்(௩௩௦)

முழுமுகப் பொருள்வந் தானென் முகனரி யரன்றூழ்ந் தேத்து
முழுவல்கண் டருள்வோன் வந்தா னுயிர்க்குயி ராஞேன் வந்தான்
பழுதிஞன் மறைதே ரூமெய் யறிவின்பப் படிவன் வந்தா
னெழுதரு வசந்த வல்லி யிறைவந்தா னெனும்பொற் சின்னம்.()

கேட்டனர் கிட்டக் கண்டார் கெழீஇயெதிர் சென்றூர் போற்றி
நாட்டமிக் குகந்த ழைத்து நடந்தனர் வந்தார் முன்றில்
கூட்டமாத் தமிழ்ப்பார்ச் சைவ குரவர்பொற் கலச நன்னீர்
சூட்டர சிலைசேர் தர்ப்பை தோய்த்துவாழ்த் தினர்தெ ளித்தார்.()

---

௩௨௭-கோல்-யாழினரம்பு. ஐம்மேளம்-தோற்கருவி,தொளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி. சுபமுரசு— மணமுழவு. ௩௨௮—விஞ்சையர்-வித்தியாதரர்.விறலி—பாடன்மகளே.நாகர்- வானவர். ௩௨௯-இடி-இடிக்கொடி.

மங்கலப் பாட்டி மார்முன் வந்தவர் தமிலொ ருத்தி
தங்கவட் டிற்க ணீரஞ் சனஞ்சுழற் றினள்வி டுதகா
டுங்கநெய் விளக்குச் சத்தி தோட்டிசா மாங்கண் ணாடி
யங்கடம் மணிமு ழாக்கண் டவிர்சுடர் சூழப் பார்த்து. (௱௩௩)

நான்மறை யோர்சு வத்தி நயந்துரத் தோத நந்தி
கோன்மலர்த் தடக்கை பற்றிக் குணவிடை நின்றி றங்கி
மான்மல ரவனீட் டுங்கை மகிழ்ந்திரு மருங்கும் பற்றிக்
கான்மலர்ப்பாவல்வைத்துக்கவின்குடைபற்றிச்சென்றான். (௱௩௪)

திருமணப் பந்தர்புக்குத் திகழ்தவி சமர்ந்து சூழ்ந்தார்
மருமல ரயன்மால் வேந்தன் மானுருத் திரர்முன் னோரைத்
தருமவ ரவரி டத்திற் றங்கிடப் பணித்தே னோரை
யிருமணிக்கம்பலத்தென்றிறைகடைக்கணித்தானுற்றார். (௱௩௫)

வேறு.

மூவுலகத் தருமிமய முடிகவிழ வம்மையப்பர்
மேவுமண விழாக்காண மிடைந்துவந்தார் தென்மலைக்கண்
பூவுலகாய் வடாதுகும்பற் போக்கலின்றிப் பொறுத்ததிறன்
றேவுநடு நிலைச்சைவஞ் சிறந்ததமி ழகநலமே. (௱௩௬)

மணித்தவிசார் மணாளனென வந்தபரஞ் சுடர்திருமுன்
கணித்தமுன்னைத் தயத்தரெல்லாங் கண்டுபணிந் தேத்தியருட்
கணித்தவரா யினர்வதுவைக் காமோரை யடுக்குமட்டுங்
குணித்தவரம் பையராடுங் கூத்தருட்கூத் தன்காண்பான் (௱௩௭)

மேனகையூர் வசியரம்பை திலோத்தமைமான் விசுவாசி
மானகிரு தாசியலம் புடையபலை வாசபதி
பானுமதி சகசநியை பூர்வசித்தி பஞ்சசிகை
மீனனங்க திலகையனு மிலோசைபுஞ்சி கத்தலையே. (௱௩௮)

கேடிலிரம் மியைமிசிர கேசிகிரு தத்தலைமுன்
ணாடிபலோ ராமகளி ராங்கணிகை மார்நடித்தார்
நாடிமகிழ் தமிழகத்து நாடகநூற் பாடினிமார்
கூடினர்வந் தாடினரெங் கோமானுட் களிசிறப்ப. (௱௩௯)

---

௱௩௩—சத்தி—கொடி. அங்கடம்—நிறைகுடம். சுடர்—கருப்பூரதீபம். ௱௩௪—சுவத்தி—சுவஸ்திஎன்னும்வடமொழித்தத்பவம். இது ஒருவர் பின்னொருவராய் மங்களார்த்தமாகவேதமந்திரத்தைமாற்றியோதுதல். பாவல்—பாதகுறடு. குடை—பாதகுறட்டின்குமிழ். (மலர்ப்பாவல்—மலர்ப்பரப்பின் மேல். குடை—கவிகை.) ௱௩௬—தேவு—சிவபெருமான். ௱௩௭—கணித்த—அறிஞரான்மதிக்கப்பட்ட. அணித்தவர்—கிட்டினவர். ஓரை—இலக்கினம். குணித்த—இவ்வரசுகளான்மதிக்கப்பட்ட. ௱௩௮, வாசபதி—வாசஸ்பதி. மீன்—ஒளி, மீன்போன்ற பார்வை. ௱௩௯ முன்—பிரமலோசை முதலியோர்.

இருதாத்தார் நடனமுங்கண் டினிதுசிருங் காரமனு
கருதாரனைத் தொழிற்கூத்தன் கனியருளாட் டமைந்ததிது
கிருதாவ ரவர்தெரிந்த கேடினடஞ் சிறந்ததென்று
வருதாம்போ லருட்கொடையான் மகிழ்வித்தா னிருந்தானால்.()

ஆட்டங்கண் டிறையுறைகா லம்மைகுழல் வாய்மொழியைக்
கூட்டங்கத் திருத்தியின்மார் குழீஇநான மணிந்துகுழம்
பீட்டங்கை முகந்தப்பி யின்மணநன் னீராட்டிப்
பேட்டங்கத் தொற்றுடை பிறட்டநுண்பொற் கலையுடுத்தாள்.()

தென்னரினத் தாற்றிற்சை வாசிரியர் செங்கையின்கண்
நன்னருறு தானங்க ணுறுமலர்க்கை யாலருள்வித்
தன்னநடை வசந்தவல்லி யணிமணக்கோ லம்பெறுவான்
பொன்னனையுங் கலைமகளும் புரிதவத்தாற் புனைந்திட்டார். (௱சஉ)

வேறு.

குழம்புதோய் பஞ்சிமெல் லடியழுத்திக் குழன்மிசை மண மயிர்ச் சாந்தொழுக்கிப், பிழம்புகொண் ணகின்மிசைப் பனிநீயிற் பிறங்குதேஞ் சந்தனக் கலவைகொட்டி, மழம்புதுப் பிடிநடை மலரடிக்கண் வளத்தபா டகந்தண்டை பாதசர, முழம்புகிண் கிணிச்சிலம் பொளிரப்பெய் துகந்துகண் டிறைஞ்சிமுத் தாடினரால். (௱சங)

விளங்குமுப் பதிற்றிரண் டணிக்கோவை விரிசிகை யேழு மூன் றியைகலாபங், களங்கமி லேழிரண் டவிர்பருமங் கணித்த வெண் கோவைய மேகலைப்பூண், டுளங்கிரு கோவைய காஞ்சி யைந்துந் தூயதாய் நடுநிலை புகழுமண்ணி, வளங்கவின் சதங்கை கொண் டொளிப்பசும்பொன் மணியகூரப் பட்டிகை மேவிறுக்கி.()

சங்குநங் கிப்பிமீன் கொக்கருண்முத் தம்மணி யவிர்மலர்க் கரத்தாழி, யங்குலி தொறுமிளிர் தரவணிந்தோ விர்சரிகடகமொண் டொடியுமிட்டுச், செங்கதிர்ப் பவளமா லிகைபெருநித் திலச்சர மரகத மணியரித்தார், பொங்கழ குக்கழ காக்கழுத்திற் புனைந்து பாற் குடத்தொளி பொலிவித்தார். (௱சரு)

௱சங சிருங்காரம்—சிற்றின்பச்சுவை. அருளாட்டமைந்தது—பேரின் பச்சுவையமைந்தாகிய கூத்து, கிருதர்—செய்பவர். ௱சக கூட்டங்கத்து—அம்மையிருந்து நீராடற்கென்று தச்சனாற் கூட்டப்பட்டுள்ள கட்டிலி ன்கண் ஈட்டம்-திரண்ட. பேட்டங்கத்து—பெண்வடிவங்கொண்ட திரு மேனியில். பிறட்ட—பிறழ்தலைச்செய்தொற்ற. ௱சங.பிழம்பு—திரட்சி. நகில்—தனம். தேம்—வாசனை. மழம்—இளமை-உழம்பு—ஒலிசெய்யும். ௱சரு.அரித்தார்—பொன்மாலை'பாற்குடத்து—கொங்கையின்,

குருவயி ரப்பெருங் கற்பதித்துக் கோமதி நாணொளி விடு மகர வுருவபொற் றோடிரு நெடுஞ்செவிசேர்த் துயர்ந்தமுக் கினிற்றழுக் கொளிருநத்திட், டருவளக் குழன்முகின் முகம திக்கூ டாக்கிடை யரிவிலிற் பட்டநுதற், றிருவணி வனைந்து மேற் பிறைவட்டஞ் செறித்துமா மணிமயிர் மாட்டிகொளீஇ ()

தலையணி யுத்திரன் றுத்திருத்திச் சங்கிறு தொளிர்மணி யின் றுசுற்றி. நிலையணி யாவுறல் போற்கழுத்தி னீடுமுத் தலங்களுட் கட்டிட்டு, விலையணிக் களக்கொணுப் பெருமையவா விரித்தவுஞ் செவிமலர் கிராம்பலர்ப்பூண், மிலையணிப் பொடிகளும் பூட்டினர் மேல் வெணீறிடுங் கடன்முறை செய்வித்தார். (௱சஎ)

மலர்க்கரு மணிவிழிக் கழதுசெய்வான் மைமெழு தினர்பிறை நுதலினெல்லார்ந், தலர்க்கதிர் வீசலிற் சிந்துரப்பொட் டமைத் தெழிற் குயத்துநற் கலவையட்டி, யுலர்க்கரி விசிறுகா ணர்சு ழற்ற வுதுமணக் குங்கும மான்மதந்தொட், டிலர்க்கமின் னிடைச்சியென்றுய்மேனிக்கியைந்தகோலத்தொயிலெழுதிட்டார்.

மணிப்பொனு கப்பணிப் பின்னலின்மேல் வனைந்தனர் பெருந் தகை வழுதிதிரு, மணிப்பொனு லளகையோ னிந்திரனின் மடங் கியோ னலனெனல் போன்றுவெள்ளை, யணிப்பொனு ளணிதர வெடுத்தெடுத்தன் பார்ந்தரு ளினன்செல வணிந்தவர்மே, லணி ப்பொனுர் பிச்சிமுல் லைமயிலை யாதிநன் மலர்த்தொடை சூட்டி நின்றார். (௱சகூ)

வேறு.

மாணுலக நாதசெழி யன்றவம கட்கண்
டேணுறுந லன்பொடுவ லஞ்செய்திரு கண்ணுட்
காணுவகை யார்ந்தனர்க ருப்புரவி ளக்கா
லாணுறுக ணெச்சில்கழி வாற்றினரி ருந்தார். (௱ருய)

இந்தவண மெய்மிறையி ருங்கடிய ணிக்கா
னந்தவுடை யார்த்தணிந யந்துகொ டிருந்தான்
செந்தமிழ கத்தியல்சி றப்பமண வெற்பி
னந்தணசை வாசிரிய னுவதுசெய் துற்றான். (௱ருக)

௱சகூ அரிவிலின்-இந்திரனுசைப்போல. பட்டம்—நெற்றிப்பட்டம். வட்டம்-சூரியவட்டம். ௱சஎ. தலையணி - தலைக்கோலம்- உத்தி- இணைக்க முற. ௱சஅ எல்—சூரியன் உலர்க்கரி—உலர்தற்குக்காற்றுவர. இலர்க் கமின்—இல்லையெனும்படி சுருக்கமாய் மின்போலும், ௱சகூ மணிப்பொ னுகப்பணி— நவரத்தினங்களமைத்துப்பொன்னுற்செய்யப்பட்ட சடைநா கம், அணிப்பொனுர்—அணியத்தக்க அழகுபொருந்திய.(அழகிய பொன் போன்றஆத்தி)௱ருக ஆனந்தவுடை-முழுத்தவேட்டி,மணவெற்பு-மணவறை

வைத்தருண லோரைவர மாவிசைம டந்தை
யுத்தமியை மாலொடய னுத்தமனை யாங்காங்
கத்தமலர் பற்றினர ழைத்தனர்கொ ணர்வா
ரித்தலர்வி னோரினிமை யெற்றிலர்க ளுற்றார். (௱௫௨)

விண்ணவரொ லிக்குருவி யைந்துநனி விம்ம
மண்ணவர வைந்தையும ணம்பெற முழக்க
வண்ணனுறு பேரிமுர சார்ப்பமறை யேங்கப்
பண்ணமர ருந்தமிழ்ப் ராவுதொனி யோங்க. (௱௫௩)

ஆர்த்தனவ லம்புரிக ளம்பொனலர் மாரி
தூர்த்ததுவின் சாமரைது ளங்கினமி னார்வாய்
சீர்த்துதி வாழ்த்தொலிசி றந்ததுத மிழ்ப்பார்
நீர்த்தணிக லாகுரவை நீடிமிழ்த லாய்த்தால். (௱௫௪)

பைப்பயம லர்ப்பொனடி பார்மகிழ வைத்தே
யெய்ப்பறுமொர் வேழமுனி ளம்பிடிபின் போந்த
தொப்பநடை கொண்டனரொ ளிர்மணவ ரைப்பா
லப்பனிட மம்மைவல மாவணிய மர்ந்தார். (௱௫௫)

தந்தையொடு தாய்மகிழ்த ருங்கடிசி றப்ப
மைந்தனைமுன் பூசைசெய்வ ழக்குமினை காப்ப
தந்தணனு மாபதிகை யாப்புறுவ ழக்கு
மிந்தநில னுளுமிய றக்கியல்வ தாய்த்தால். (௱௫௬)

ஆங்குலக நாதரிதன னன்பொடுமெ மான்பொற்
போங்கருள்வ லக்கையினு கந்துமக ளாய்மெய்
தாங்குமை வலக்கைமலர் தந்துமறை சொல்லித்
தேங்கமழ்பொன் மாலைபுனல் சிந்தவர னேற்றான். (௱௫௭)

இக்கனிகை நாளுமு னிரும்பொருள தாவா
டக்ககன காரமொடு தானமத ளித்தேன்
முக்கணிறை நீயிவளை முன்னமகிழ் வாநல்
கொக்கலொடி யானுனல குற்றிடநல் கென்றான். (௱௫௮)

---

௱௫௨ இத்தலர்—இவ்வுலகத்தவர், இமையெற்றிலர்—இமைகொட்டிலர். ௱௫௪ இமிழ்தல்—ஒலித்தல். ௱௫௬ கடி—மணம். ௱௫௭ சிந்த—வார்க்க. ௱௫௮ தக்ககனகாரம்—தகுந்த பொன்னாபரணம்.

சம்புவிடை யிம்மறைத ழங்குகனி காதா
னம்புரிம னல்லறந யந்துயிர்கள் வாழ
வம்புலிவ ளக்குலம னைத்துமுயர் சைவன்
பம்புலக மேறவருள் பற்றுதவ னுனன். (௯௫௯)

எங்குநிறை யெம்மிறையை யேத்துகுர வன்பாற்
றங்குயிர்தன் மூர்த்தியின்மன் வித்தையெரி தண்ணீ
ரங்கமறை வேதிசிவ லிங்கமடி யார்பான்
மங்கலவர் காண்பர்மரு காமுனர்மன் கண்டான். (௯௬௰)

கவுதமனொ டாங்கிரசன் காசிபன்வ சிட்டன்
றவமுயர்பு லத்தியன்மார்க் கண்டனொடு சான்றோ
ரிவர்தமிழ கத்தியனு மின்பதுசி றந்தே
நிவரிமய வெற்புமண நேரிதுக ணுற்றார். (௯௬௧)

எண்டிசையு மும்பருமனிம்பருமடிப்பூ
மண்டிலமு மெம்மிறைம ணம்புரிபந் தர்க்கண்
மிண்டியடி வாணரின்வி ராய்ப்பிரிவி லாதே
கண்டிருக ணாமகிழ் காட்சிபெற லானார். (௯௬௨)

அவலமின்ம ருத்துவர்மூ வங்கிவளர் வான்யோ
கிவர்தவருண் முச்சுடரி லங்கபக நீட
சிவமணவ ரைக்குருசி வத்தருண செந்தீ
யுவகையின்வ லஞ்சுழிகொ டோங்கவளர் வித்தான். (௯௬௩)

சிவக்குறியு ருப்பணுறு செம்பொன்மண நாண்வா
ணவக்குளிர்வ சந்தவல்லி நங்கையின்கழுத்தெண்
டவக்குணன்ம ணப்பறைத ழங்கிடவி மிழ்த்துப்
பவக்கடல்க டப்பவர்கள் பார்க்கவருள் செய்தான். (௯௬௪)

வேறு.

சத்திமான் சத்தி யெல்லோன் றன்கதிர் போன்றான் றாவே
நித்திய மிருப்ப வேறு நின்றரு ளாடல் செய்த
லெத்திறன் சருவ சத்தி யினனெனல் காட்டல் போலு
மத்திற னெல்லோர் காமோ வாவிதாச் சரிய மென்பார். (௯௬௫)

௯௬௨. அடிவாணரின் — திருவடி சேர்ந்தார்போல. ௯௬௩. மருத்துவர் மூவங்கி—காடாக்கினி, கமலாக்கினி, தீபாக்கினி.

குறுமுனி பொருட்டிக் காட்சி கொடுப்பதோ வுலக நாத
நறுமுடிச் செழிய னுய்ய நடிப்பதோ வுலக மெல்லாம்
பெறுமுறைமணந்தில்வாழ்க்கைபிறங்கவோதனக்கென்றென்றுந்
துறுமுறா னருளாட் டாரே துணிதரத் தக்கா ரென்பார். (௱௬௬)

கைப்பிடி யாய்த்துத் தாலி கட்டுத லாய்த்துப் பெம்மான்
செப்பிளங் கொங்கை நல்லா டிருமலர்க் கைசைப் பற்றி
யொப்பிலாக் காட்சி கண்ணுற் றும்பர்கள் வாழ்த்த நின்றான்
வைப்பிலா வளர்சிவத்தீ வலங்கொடு பொரித்தூய் வேட்டான்.

உன்மணச் செய்கை யாற்கற் புறுதிறன் காட்டற் கீசன்
றென்மனை மறைக்காற் றாக்கித் துளங்கிலம் மியின்வைத்துக்கால்
கன்மிதித் தங்கை சுட்டிக் காட்டிமீ னின்று எம்மை
தன்மனங் களிப்ப வின்பாற் றனியுல கேசன் கண்டான்.(௱௬அ)

பழுதிலா வான்பால் கன்னற் பாகுதேன் புதுநெய் கண்ட
பொழுதினு மினிக்குந் தேமாப் பொற்கனி குலவ ருக்கை
யெழுதிருச் சுளைநல் வாழை யின்கனி மதுபர்க் கந்தான்
கெழுதிருமுன்வைத்துத்தொட்டருள்கெனக்கேளாத்தொட்டான்.

வேள்விமண் டபத்தி னின்றும் மிளிர்மணக் காட்சி தந்து
வாள்விழி மங்கையோடு மணவறைத் தவிசி னீங்கி
யாள்விளக் கத்த தென்ன னமர்திரு மனையுட் புக்கு
நீள்விழா மணிப்பீ டத்தி னிலைகொடு கனிபா லேற்றான், (௱எ0)

ஆறுநாட் காலை மாலை யவிர்மண வேள்வி யாற்றி
யாறுநாண் மாலை மாலை யசைதரு மூச லாடி
யாறுநாண் மலர்ப்பந் தாட்டங் காயுருட் டாதி கண்டு
யாறுநாண் மூற்று யிர்க்கு மருள்செய வமர்ந்தா னன்பால்.(௱எக)

நாடொறு மறுசு வைப்போ னகமுத லைந்து ணுக்க
ளாடொணு முகம தேடே யருளவெம் மான்ம ணங்கண்
டொளிக் கண்கு ளிர்ந்தன் பிவருளங் குளிர்ந்தோ ருள்வான்
றேடொரீஇ யுலகோ ரெல்லாந் துய்த்திறை வனைப்பு கழ்வார்.

உம்பரு மனித்த ராரு மொருங்குகூ டினர்நெ ருக்குற்
றெம்பரா பரன்ம ணங்கண் டினித்திறை கைதொட் டீந்த
வெம்பவங் கழிக்குஞ் சேடம் வீழ்ந்துதுய்த் தவருள் வானோர்
பம்பமிழ் தயின்றா ராகிப் பாண்டியன் றனைவாழ்த் திட்டார்.(௱எ௩)

௱௬௬. துறுமுறான்–நெருங்கமாட்டாதவன். ௱எ௨. தோடு–கூட்டம்.

குணப்பனி நீருஞ் சந்தக் குழம்புமே கமழ்நன் மெய்யர்
வணப்பழுக் காய்த ளிர்வெற் றிலைமணஞ் சுவைசெவ் வாயர்
தணப்பலவிரைகொண்மோப்பர்தகையரம்பையர்பாண்மின்னார்
பணப்பறை நடங்கான் கண்ணர் பாடலுண் செவிய ரானோர். ()

அனைவரு மன்பா ரின்ப மவிர்தரு நெஞ்ச ராகி
நினைவதூர் மறந்து வாழுந் நேரேமம் பெருமா னாளும்
புனைவள வுலகா ளோடும் பொற்றவி சமர்ந்தான் கண்டு
நனைமலர்த் தாடாழ்ந் தின்ப நாட்டமார்ந் தெதிர்நின் றாரால்.()

கண்ணுளங் குளிரக் கண்டு கண்டுநின் றிடுமன் னோரின்
விண்ணுளார்த் தத்த மூர்போய் மிளிர்தரக் கடைக்க ணித்தான்
பண்ணுலாந் துதிகள் செய்து பணிந்தன ரகன்றா ரப்பான்
மண்ணுளார்க் கருட்கண் வைப்ப மகிழ்ந்தனர் செல்வ ரானார்.()

செல்வரெல் லாருஞ் செல்லத் திருமுனே யுலக நாத
வெல்வளத் தென்ன னோடே விளங்குபொன் மாலைத் தாயுஞ்
சொல்வள வமைச்சுந் தாருந் தொழுதனர் நிற்பச் செல்வி
நல்வர னாக வந்த நம்பனு முலக நாதன். (௱௭௭)

தென்னரெல் லாருஞ் சைவத் திருவாளர் வழிவ ழித்தொண்
டென்னவன் னவரை யாமே யென்றுமாட் கொண்டே மன்னோர்
மன்னரா சானா ரந்த மரபினுன் றந்தை நம்பா
னன்னரா ரன்ப னுன்னை நயந்தவன் மகவாத் தந்தேம்.(௱௭௮)

உதவுநம் வரத்தா னம்பே ருடையநின் மருக னாயா
மிதவுய ராட லொன்றி னிருந்தன திடைக்கொ னோக்கற்
புதவுணர் வுளநீ தேர்வாய் புகன்றவா றுனக்குத் தந்தை
சிதவரன் மகவாத் தோன்றிச் செழியனாய் முப்பா ராள்வான்.

துளங்குமீ னுயர்த்த லோடுஞ் சுலவுதென் மலையு யர்ப்பான்
வளங்குலாம் படமொன் றீந்தோர் வரைக்கொடிக் கோவெனும்பேர்
விளங்குறத் தந்தான் மேலும் விமலையுண் மகிழ வேறுன்
னுளங்குறிப் பதுமுண் டேற்கே ளுதவுவ லென்றிட் டானால்.()

கண்முத லனைத்து மின்பக் கடல்படிந் தன்பு மெய்யாய்
விண்முத லனைத்து மெச்சு வேந்தினித் தெங்கோ மானே
தண்முதிர் மதிக்கு லந்தான் றழைப்பநீ யம்மை யோடும்
பண்முது தவமா ரெந்தை பதியிதிற் றளிகொள் கென்றான்.()

௱௭௫. நனை—தேன், ௱௭௭. தாரும்—படையும்.

வேறு.

நந்தையா கியகுல சேகர னிவ்விடை நோற்றெமைப் பூசை செய் திருந்து, மந்தநா ளிற்குல சேகர முடையவ ராய்க்குழல் வாய்மொழித் தாயாய், வந்தருள் செய்ததா லப்பெயர் கொண்டிவண் வதிகுவேங் கோயிலொன் றமைத்தி, முந்தவன் வேண்டுமவ் வாறுள தமைத்தபின் முதியநம் முலகினின் றிவர்ந்தே. (௱௮௨)

நாளைநின் மகவெனப் பிறந்துல காண்டனை நயந்துதென் மலைக்கொடிக் கோப்பேர், கோளைநேர் மகவெனப் பயந்துமீளாதநங் குளிர்நறுந் தாணிழல் வாழ்வரன், வேளையா கலினியாங் கோயிலுங் கேகுவேம் விடைகொடென் றேற்றுவின் விடைமேற், கேளையார் தாநடை கோடலிற் காட்டினன் கேடிலான் கோயிலுட் புகுந்தான். (௱௮௩)

அருளுநு நோக்கமா ருலகநா தத்தென னவிர்குல சேகர முடையா, ரொருகுழல் வாய்மொழித் தாயெனுஞ் சிவன்சிவைக் குறுதிருக் கோயிலொன் றமைத்து, மருமலர்த் தாள்வழி பட்டனன் விடைகொடு மாறன்மங் கலத்துவந் தமர்ந்தான், திருவயின் வாய்த்தபொன் மாலைநன் னுட்குல சேகர வழுதியைப் பெற்றாள். (௱௮௪)

வாழ்கவென் றுலகெலா மகிழ்ந்தன வானவர் மலர்மழை பொழிந்தனர் பண்டை, யூழ்கமழ் சைவநன் னெறிதமிழ் சிறந்தன வொத்திய லாரிய மலர்ந்த, கேழ்கனி தருதரு விளைபயிரனைத்துமே கேடிலாப் பயன்மிகத் தந்த, பேழ்கவின் கற்பிய விறையருள் செழித்தன பெற்றவர் களித்தனர்வாழ்வார். (௱௮௫)

வேறு.

விசுவனே விசுவ நாதன் விசுவேச னுலக நாதன்
பசுபதி சிவன்ம யேசன் பராபரன் முக்கட் பெம்மான்
சிசுவரந் தருவோ னம்பன் சிவைமணா வாள னேற்றோன்
அசுதையார் நீல கண்ட னநாதிதென் காசி நாதன். (௱௮௬)

விசுவையே விசுவ நாதை விசுவேசை விசாலாட் சித்தாய்
பசுபதி துணைம யேசை பராபரி யுமைமுக் கண்ணி
சிசுவரன் பனிலோ காம்பை சிவைகுழல் வாய்மொ ழித்தாய்
அசுதைதீர் வசந்த வல்லி யநாதைதென் காசித் தாயே. (௱௮௭)

---

௱௮௬. அசுதையார்—விஷம்பொருந்திய. ௱௮௭. அசுதைதீர்—விஷத்தைநீக்கிய.

சோடச நாமங் கொண்டுந் தொல்பெய ரனந்தங் கொண்டு
மேடவிழ் செண்ப கக்கா விலங்குதென் காசிக் கண்ணே
நீடரு ளுலகம் மைபா னிலைகொளு முலக நாத
னாடலாந் திருமணச்சீ ரறிந்தவா றறைந்தே னென்றான். (௨௮௮)

எத்தனை பிறப்பெ டுத்தே யிலங்குதென் காசிக் கண்ணோர்
கத்தப மேனு மீனுங் கதிக்கொரு தவஞ்செய் தில்லே
மத்தலக் கதைகேட் டேமின் றதாலது காண வாவா
ருத்தம ரானேம் போய்க்கண் டெய்குவை யெனத்த வத்தர். (௨௮௯)

மகிழ்ந்தன ராயோ ரையம் வரன்றிரு மணக்கா தைக்கண்
டிகழ்ந்த தலைதென்னென் றலெஞ்சிவன் சிவையாண் பெண்ணாய்ப்பார்
புகழ்ந்திடப் புரியாட் டத்திற் புதல்வியுந் தாயு மாயோ
விகழ்ந்தில்வே றாயோ வாற்றா தென்னெனச் சொல்வான் சூதன்.

மிக்கறி வுடையீர் கேள்வி வியப்பிதே வுலகத் துள்ளா
ரொக்கவும் பெண்ணோ வாணா முளவதா லாண்பெண் ணேயாய்
நக்கனாட் டுளதி ரண்டு நயனமு முன்பின் னாக்கோன்
வைக்கவேன் மறந்தானென்பார் வார்த்தையினி துநீர்கேட்டீர். (௨௯௧)

பகன்மதி யிராவிற் பானு படைக்கினன் றென்பார் புந்தி
மிகன்மதி சூடி மூடம் வெளிப்படத் திரும்பல் போலும்
நகன்மதிப் பினராய்ப் பேசி னலய்பெற விலையா ராய்ந்து
புகன்மதி யிறைவ னாடல் புலப்படு மறிவு ளோர்க்கே. (௨௯௨)

சிவன்சிவை தன்னைப் பெற்றுஞ் சிவைசிவன் றன்னைப் பெற்றுஞ்
சிவன் சிவை தமிற்கு ழீக்காண் செகமெலாம் பெற்று மந்தச்
சிவன்சிவைக் கப்பன் மைந்தன் றேவனும் போற்சி வைத்தாய்
சிவனது தாய்ம கள்வல் லவியெனத் திகழ்வ துண்டால். (௨௯௩)

ஒளியருள் சிவையு மாவென் றொருபொருட் குறிகோள் சத்தி
யொளியின னருளோன் சைவ னுமாபதி சத்தி மானென்
றொளியவெண் குணங்கொ ளந்த வொருவனுங்குணியே தந்தை
யொளியநற் குணங்க டாயிவ் வுண்மைதேர் சைவர் மேலோர். ()

௨௯௦. இகழ்ந்தில்—மறக்கப்படாத. ஆற்றாதென்—செய்யாததென்னை?
௨௯௩. தேவன்—நாயகன். வல்லவி—நாயகி.

தற்கிழ மையிஞனன் றுப சமவாய சத்தி யந்தச்
சிற்குண சத்தி மானிற் றீர்ந்துவே றெவாறு மென்னிற்
பொற்கன லனுற்பூ தம்முற் பூதமென் றிருநி லைக்கொண்
டுற்கம்ங் கறியத் தோன்றி யொளித்தலி னிறைபாட் டோர்மின்.

அருள்வினை யாட்டா லீச னறிந்திடப் படானே னுண்டென்
றொருமொழிக் கதையா நாலே யுரைப்பினஃ துண்மை யாமோ
திருவினை யாட்டாற் றன்மெய் திகழ்த்திநிற் றலினெம் பெம்மான்
பெருமைகுன் றுதா லன்பின் பெருக்கமே தோன்றுங் காண்மின்.

கடவுளுண் டுண்டென் றுங் கடவுளின் றின்றின் றென்றுங்
கடவுளை யிகல்வார்க் கன்னோன் கண்டிடப் படானே யின்று
கடவுளுண் டறியோ னென் றிடினெவர் கழற லுண்மை
கடவுளை நேடிக் காணார் கதையெபாத் தீர்க்க லாமே. (௱௯௭)

தாமறி தாரப்போ னுனுந் தங்குரு மார்தம் முன்னோர்
தாமறிந் திருந்தாற் போதுஞ் சதாவறி யப்ப டாதோன்
தாமறி கடவு ளென்பார் சாற்றுபொய் யேனு மன்னோர்
தாமறிதற்கிவுண் டோர் தாரா துதீத்தொடிற்சூடாய்போல். (௱௯௮)

சைவருக் கறியப் பட்டுந் தரைக்கறி யப்ப டாதுந்
தெய்வமொன் றுண்மை யாலச் சிவபெரு மான்ற மிழ்ப்பா
ருய்வதற் ககத்தி யன்பா லுயர்ந்தபா ரெனத்தேற் றிச்சீர்
கைவர மணக்கோ லங்கொள் காட்சியி தெனவின் பார்ந்தார்.()

மேலுநித் தியகல் யாண னித்திய னந்தன் விற்ற
மாலுநான் முகனுங் காணு வசன்றிரு மணத்தின் காட்சி
மாலுநான் முகனு மேனை வானவர் மனித்த ராருஞ்
சாலுமன் பாற்கண் டுய்யத் தந்தன னருளி தாயால். (௨௱)

இதினுசா வொன்ற யர்த்தீ ரேழுமா தருமன் பார்ந்து
துதிகுழல் வாய்மொ ழித்தாய் தோழிய ராய்வாழ்ந் தாரே
யதிபரு ளவருமீச னுணைபாற் கோயில் புக்குப்
பதிதா லரனுர் நாளும் பகாதூஉஞ் சொற்றே னென்றான்.(௨௱௧)

குழல்வாய்மொழியம்மை திருமணப்படலம்
முற்றிற்று.

ஆகப்பாட்டு ௩௲௰௪.

---

௱௯௫. அனுற்பூதம்—தோற்றப்படாமை. உற்பூதம்—தோற்றத்தன்மை. உற்கம்—தீத்திரள். ௱௯௬. கதை—சொல். ௱௯௯. ராவு—தேவரகை.



பதினைந்தாவது

# மிருகண்டு வரம்பெற்ற படலம்.

உலக முழுவது முடையநங் கையைபுல கேசன்
குலவு திருமணம் புரிகதை யிதுகுச்ச கன்சேய்
திலக தவமகன் மிருகண்டு செயும்பெருந் தவங்கண்
டிலகு நலனரு ளிறையருட் செயலினி யிசைப்பாம். (க)

ஒன்றினுக் கொன்றுமே லாப்பல கதைசொலி யுவகை
நன்றிபை தரவருண் முனிவவெஞ் செவியுளம் நயப்பான்
றென்றிசெதன் மலையமெதன் காசிநா யகனருட் செல்வந்
துன்றிய வமிழ்தினுந் தருகெனத் தவர்சொலுஞ் சூதன். (உ)

பிடக நூல்தெரி குச்சகன் பெருந்தவப் பேருக்
கடந கர்க்குமீன் றவர்க்குமே யுகந்தசா தலனைய்
வடக லைத்திறன் வண்டமிழ் மறைத்திறன் மலிந்து
குடக ராதியர் துதிபுரி கொள்கைமிக் குடையோன். (ங)

வேறு.

அருந்தவர் முனிவர் யோக ரறிஞரா சிரியர் மெய்ச்ச
வருந்தனிக் குழவி யாகி வளர்பயிர் போல வோங்கிப்
பெருந்தரைக் கொருவேந் தேபோற்பெட்புறுகுணத்தின்மன்னித்
திருந்தநா ளுதித்தான் வேதசிரோன்மணி கடலூர் வாழ்வோன்.

குச்சிகன் றவத்தி னாலே பெற்றிடு குமரன் காலை
புச்சிகாண் மாலை நாளு முனுற்றுவன் றருப்ப ணாதி
மெச்சியல் வழாத வந்தக் கௌசிகன் விரிநீர்க் கஞ்சம்
பிச்சிசெங் காந்தள் சூழோர் பெருந்தட மருங்கு சார்ந்தான்.(ரு)

கானத்திற் பிலத்தி னெய்திக் கடியதோர் தவசு காட்டா
ஞானத்தி னனுவுஞ் சாரா னொழுக்கமே யுபர்வாக் கொண்டான்
மோனத்தி னாட்டம் வைத்தான் முழுதுமோர் குறைவில் லாத
தானத்தி னியதி பூண்டான் றவந்தலைக் கிடைப்ப தோர்ந்தான்.()

---

ங. பிடகநூல்—வைத்தியக்கலைகள். (பிடகன்.பிடக்கு,பிடாரன்என்பனவயித்தியற்குப்பெயர்.) குச்சகன்—சிற்றில். (குடில்) வாழ்வினன். ரு குச்சிகன்—குடிலையிருப்பவன்.உடம்பின்வாழ்க்கையைத்தாண்டுபவன். (பிறவிதீர்பவன்)

வேறு.

குச்ச கன்றவக் கொள்கையுங் கோசிகன் றவமு
மிச்ச கத்திராப் பகலென வியங்கலி னிளவன்
முச்ச கத்தினு முதன்மைய சிவதவ முயன்று
துச்ச கற்றுவ லெனவுளந் துணிந்தன னூழால். (எ)

வேறு.

இருந்தபோ திருந்த சூழ்கொண் டிமயவெற் பீசன் வில்லா
மருந்தனக் கிரிமெய் யனைப ரகங்களைத் தசையா வன்பு
தருந்திரு வருள்ப திந்து தனியகந் திருந்தித் தேவர்
விருந்தமிழ் தூழ்த்துந் தாரு மென்சினை வீழ்வீட் டுள்ளே. (அ)

காலினை மடித்து மூக்கி னுனியதிற் கண்க ணாட்டி
னாலினை யிழுத்து வாங்கி நுனைக்கதி ரேற்று வார்போ
லாலினை விழுதி னேழ்பத் திராயிர நாம்பி னைய
பாலினை தாச்சேர் நாடிப் பகுதியாம் பத்துந் தேர்ந்தான். (௯)

பிரிவுறு மிடையி னோடு பிங்கலை சுழினை மூன்றிற்
றெரிவுறு பூர கப்பன் னாறுயாத் திரைபூ ரித்து
விரிவுறு கும்ப கந்தான் விளங்கெனான் குறக்கும் பித்தே
யிரிவுறு மிரேச கம்மெட் டேகவிட் டெளிதாத் தேர்ந்தான். (௰)

சரியையின் மூற்றி யேறிச் சான்றபூ ரகமெட் டேற்றி
யரியதும் பதமெண் ணான்கி னமைந்திரே சகப்பன் னாறுய்க்
கிரியையின் முற்றி யேறிக் கிளத்துமெண் ணான்கு பூரித்
துரிபதும் பகமெட் டெட்டி னுறீஇபிரே சகமபன் னாறுய். (௰௧)

---

௯. பாலினைதா—பகுதியினழகினாக. பத்தும்—கண்ணினிற்கும் அத்தியும், மூலந் தொட்டு இடதுகாதளவுமேறிநிற்கும் அலம்புடையும், நாபியிற்றோன்றிக்கண்டத்தினேறிநிற்கும் ஏழுசுரநாடியாகியகாந்தாரியும், குய்யம்பற்றிநிற்குங்குகுவும், குறிபற்றிநிற்குஞ்சங்கினியும், செவியுற்றிருக்கும்புருடனும், நாக்கினிற்கும்சிகுவையும், இடமூக்கினிற்கும்இடையும், வலமூக்கினிற்கும்பிங்கலையும், மூலாதாரத்தினின்று உச்சித்தொளையளவுமேறிநிற்கும்நடுநாடியாகிய சுழினையுமாகப்பத்துநரம்புகளும். ௰. மாத்திரை—கையினாலேமுழங்காலைச்சுற்றிமூன்றுசிட்டிகைபோடுங்காலம்,

யோகதின் முயன்றெப் போது முயிருளை நிறாஉநி ருத்தம்
பாகமா ரிவைமுன் முற்றும் பயின்றுபல் காலு மூக்கா
லேககா லீர்த்த டக்கி யிருந்தசு ணாடிக் கேற்றி
வாகதா மீட்டிப் பூரு மத்தியி ளுக்கி யெண்ணி. (௰௨)

கபாலத்தி னின்றும் பின்னே சென்றெடுங் கலினுட் கண்ணிக்
கபாலத்தி னிவ்வா றேற்றி வாயுவை நிறைத்தல் கற்றுச்
சுபாலத்தி னிற்ற றேர்ந்து தூயயோ கமர்ந்தான் றேர்ந்த
சுபாலத்தி னின்று னந்த தூயவா ரியின்மூழ் குற்றான். (௰௩)

உடலினைச் சிதலின் புற்றுங் கொளித்திடத் தருத்த மையூ
மடலினைத் தெனும றைப்ப மற்றதிற் கூடு கட்டிக்
கடலினை நிகராப் புட்கள் கலைத்துறப் பல்லாண் டாத்தன்
னடலினை யோகத் தாக்கி யமர்ந்தனன் கௌசி கன்றான். (௰௪)

சிரத்தையிற் பிராண வாயுச் சிவாக்கினிக் கிடைவி டாமல்
விரத்தியா வுச்சிக் கீழே வெண்கதி ரமிழ்தூற் றாழ்த்தாற்
பிரத்தியா காரத் துற்றுப் பிறக்குறின் பருந்தி வாழீ
தாத்திரு லீதேன் வைத்துண் டமர்தலின் வாழ்வே யாமால். ()

வேறு.

இப்படிக்கொ ளுஞ்சமாதி யின்கணுற்ற தன்மையான்
முப்படிக்க ணும்முன்வைக்கு மொய்த்தவக்கொ ழுந்தனுன்
கொப்படித்த ருக்கணிழல் கொண்டிவாற மர்ந்ததி
னப்படித்த வத்தனென்ற றிந்திலாப்புள் ளாதிய. (௰௬)

வல்லியங்கு டாவடம ரைமிளாக லைக்குலஞ்
சல்லியஞ்சி றுத்தைமான்கத் தைப்புலிகொ டிப்புலி
செல்லியங்க லிக்குவேழஞ் சிங்கமாதி மாக்கணம்
பல்லியங்கு மங்குனைஞ்சிப் பற்றுமூற றீருமே. (௰௭)

---

௰௨— பூரு—புருவம். எண்ணி—தியானித்து. ௰௩—கண்ணி—தியானித்து. சுபாலத்தில்—நல்லபிரபையின். ௰௪—இனைத்தெனு—இத்தன்மைத்தெனப்படாது. ௰௫·பிரத்தியாகாரத்து-உபாதியைநீக்கியுண்ணோக்கமுறுதலின் வாழீ து—வாழ்ந்துகொண்டிருக்கும் இந்நிலை. அரத்திருல்—குகையின்கணுள்ள தேன் கூடு. ௰௭—குடாவடி—கரடி. சல்லியம்—முட்பன்றி. சிறுத்தை-சிறுபுலி. கத்தைப்புலி—கழுதைப்புலி. செல்லியம்—மேகத்தொனிபோல. பல்—பல,

தேறிலாப்ப சுக்களுள்ளொர் தீபனுத்த மன்னரி
யேவறிலாது சித்தமுற்ற விசுவனாத ஞானியாற்
பேறினுன்ற கௌசிகன்பி றங்கியோக நிந்துகாப்
பாறிவர்ந்திவ் வுலகவாழ்வி னறிவைநாட்ட வந்தனன். (௧அ)

அருகுசென்று முனிவகௌசி காவனேக மாக்களும்
பெருகுமான வருமுடப்பு பேதமுற்றி ருப்பவு
முருகுசிந்தை யோடுயிர்க்கு ரைஞ்செசார்கலின் றாணமாய்
வருகுணங்கொ ளுன்றவத்தின் மாமகிழ்ச்சி கொண்டுளேம்.(௧௯)

முருகுயிர்க்கும் பூம்பொழிற்புன் மூடுபன்ன சாலையுட்
பெருகுநற்ற வஞ்செயன்ப பெற்றவன்கு டிக்கியைந்
தொருகுழந்தை வேண்டிநோன்பு ளுற்றியுன்னைப்பெற்றனன்
வருகுடிப்பி றப்புயர்த்து மாதவம்முன் செய்திலாய். (உ௦)

மணமுடித்து மகவையீன்று மகிழ்ந்துபற்றை விட்டுநீ
குணமுறப்ப யின்றுவிட்ட குறைமுடிக்க லாகுமாக்
கணமுரைஞ்சு தூணமாயோ கத்திருத்த லிங்கெனப்
பணமுறங்கு பாயலான்ப கர்ந்தனன்றெ ளிந்தெழீஇ. (உ௧)

வேறு.

சீதரா கேசவா வாசு தேவனே
பூதரா மாயவா வுந்தி பூத்தவா
மாதவா நீளமெ ணுள வாமனு
நாதமா லச்சுதா கண்ண நாரணு. (உஉ)

உவணமூர் கார்வணு வுவண கேதனு
வவிர்தரு நறுந்துழா யலங்க லாயரீ
தவறில்பஞ் சாயுதா தாம ரைக்கணு
விவரரா வணிவள ரீச விண்டுவே. (உ௩)

ஓதிய வாறுற வுளநி டுங்குதே
நீதிய வின்னிலை நெடிய துன்பிதிற்
பீதிய தகற்றிவைக் கென்னப் பேணுமால்
வேதிய மிருகண்ட வேதந் தள்ளிலாய். (உ௪)

காக்குமா லென்னுரை கடந்தி லாய்மது
வாக்குதென் மலையடி வாத்தென் காசிபோ
யாக்குல கம்மைகோ னடிப ணிந்தரு
டேக்குறக் கொடுமணஞ் செய்கென் றேகினன். (உ௫)

---

உக-பணம்—பாம்பு.

கவுசிகன் மான்மிரு கண்டெடன் றுடிய
வவுடத முண்டலா லரும்பி றப்புநோய்த்
தெவுகடப் பரிதெனத் தேர்ந்து பெற்றவர்
நவுமன மகிழமுன் னண்ணிக் கண்டனன். (௨௬)

தாயடி தாழ்ந்தரு டந்தை தாள்பணி
சேயனைத் தழீஇயருள் சிறந்தெ னப்பனே
நீயரு மியோகிடை நின்ற தோர்ந்தியான்
காயலா யினன்குடி காத்தி யென்றனன். (௨௭)

உச்சிகான் முரண்டவ முஞற்றி நீபெறு
மிச்சிறி யேன்றவ மியற்றற் கண்டுமான்
மெச்சிவந் திவைசொல விட்டு வந்துளேன்
சச்சிதா னந்தனார் சாற்றென் றுன்மகன். (௨௮)

வேறு.

நவில்சச்சி தானந்த புரமாய தென்காசி நன்ன கர்க்கண்,
புவிமெச்சு முனிநாதர் தவராசர் சிவயோகர் பொருவில் சித்தர்,
கவிநச்சு தமிழ்வாசர் சிவநேசர் மிகவாழ்வர் கழற வண்டோ,
யவிர்குச்ச கன்யான்முன் பிடகர்க்கு ளுயர்வாய தறிதி மைந்தா.()

உலகம்மை தவஞப விசுவேச னருண்மல்கி யுறைதென்
காசி, யலகம்மை முதன்மும்மை புரிநன்மை யொவ்வொன்று
மளவிலாதா, யிலகம்மை யாரின்ப மீயுஞ்செய் தீதாற்ற லின்றி
மாயுங், கலகம்மை பற்றுறாது வயமோங்கு மதைவந்து காண்டி
மைந்தா. (௩௰)

அறிவோங்கு மனையாட்டி மணமாக்கு மகவாக்கு மறமன்
பாக்குஞ், செறிவோங்கு மொருமைக்கண் வரமாக்கு முரமாக்
குஞ் செல்வ மாக்கும், முறிவோங்கு பிணிநீக்கும் முனைநீக்கும்
வெருளிக்கும் மூட நீக்கும், பறிவோங்கு மிடிநீக்கு மியல்பார்
தென் காசிக்கண் பார்த்தி மைந்தா. (௩௧)

---

௨௬-தெவு-தெவ்வு (பகை) நவு-நவ்வு. (நன்மை) ௩௰ அலகம்மைமுதன் மும்மை—எண்ணப்பட்ட முற்பிறப்பும், இப்பிறப்பும், வருபிறப்புமாகிய மூத்தோற்றத்தும். இலகம்மையாரின்பய்—விளங்காநின்ற அழகுநிறைந்தவின்பம். கலகம்மைபற்றுறாது—கலகமும் இருளுந்தொடராது. ௩௧-முனை—பகை, பறிவு—ஓட்டுகை.

குலசேக ரத்தென்னன் மகவீன்ற தவன்மைந்தன் நுழைவி
யாவந், தலகாளொர் குழல்வாய்மொ ழிப்பேர்கொ டவிர்மன்ற
னுற்ற தத்தாய், வலதாதை யைப்பற்கைப் யனுமாய தவன்மைந்தன்
மைந்த னுய, ;தலகில்மன் வழிபட்டு வரம் பெற்ற தென்காசி
யதிக மைந்தா. (௩௨)

தலமாயி ரத்தெட்டின் முதன்மைத்து முச்சீர்த்தி தழை
தென்காசித், தலமாம வதக்காணின் வினைதீரு நீராடிற் றகுமெய்
நன்ருந், தலமாம திற்றங்கி னறிவோர்க்கு முலகம்மை தவற்ப
ணிந்தாற், றலமாமெ தன்கண்ணு மாண்டொன்றி னுறலன்று
சாரு மென்ருன். (௩௩)

வேறு.

ஐயனன் பார்ந்து சொற்ற தனைத்துமின் பாகக் கேட்ட
மெய்பனுன் றென்கா சிக்கு மேவுவ லெனவி யாமுஞ்
செய்யவுன் கூட வந்து சேவைசெய் வேமென் றீன்ரூ
ருய்யவா வுற்றெ ழுந்தாங் குடன்ருெடர்ந் தனர்வந் தாரால்.( )

பொதியமுந் தென்றல் வீசும் புதுமையுஞ் சந்த முன்ன
வதியநன் மாப்பூங் காவு மலரியீ கொசுக டந்தை
துதிதுள விகளின் றேன்பெய் தூயநீ ராற்று மாண்புங்
கதிவருக் கைதே மாமுன் கனிமா வளமுங் கண்டார். (௩௫)

மந்திரங் கணிதம் மர்மம் வாகடம் முத்தி றத்த
வெந்திர கருமஞ் சித்தி யெட்டுநல் வாதஞ் சால
தந்திரங் குறியி யோகந் தத்துவ ஞான மெல்லா
மிந்திர னஞ்சத் தேர்ந்த விருந்தமிழ்ச் சித்தர்க் கண்டார். ()

தென்மலை யிடைமுன் வாழ்குச் சிகன்மக வுடனுங் குற்ற
தன்மனு மகத்தி யன்முன் சார்ந்துமீ ணேத்த ரத்து
முன்மலை மகண்ம ணங்காண் முனிவபின் றுலோத்த ரத்து
மன்மகண் மணந்த மிழ்ப்பார் மகிழ்ந்துகாண் வணஞ்செய் நாத.()

இருமலை மணத்து யர்ந்த தெம்மண மறைகென் றேத்த
வருமறைக் குச்ச காசேய் மணமவா விலனென் ருனுந்
திருமண புரத்தென் காசி சேவைசெய் தன்ம ணப்ப
னொருமக விறவாச் சேயா வுயிர்ப்பன்மெய் காண்டியென்ருன்

மேலுமா விமய மன்றல் விண்ணவர்க் குகப்பாந் தென்றற்
காலுலாம் பொதியச் சார்தென் காசிசெய் துலோத்த ரந்தான்
சாலுமா கமியர்க் கின்பந் தருமணந் தாலி கட்டுண்
டாலுபர் தமிழ கத்தோர்க் கதை திரு மணமா மென்றான். (௩௯)

விளைமகிழ் தந்தை தாய்சேய் குறுமுனி விரைம லர்த்தாள்
பணைதாத் தொடுப ணிந்து பகர்விடை கொடுமெ ழுந்தார்
தனைதாங் கொடுதேன் பூப்பொற் சண்பகக் காவந் தாங்கா
ரனைதிபா முலகே சைபா லமருல கேசற் கண்டார். (௪௦)

மாலையிற் சேவித் தங்கண் வைகினர் விடிந்தெ ழுந்தார்
காலைமுக் கூட லாதி மணிகரு ணிகையின் காறுஞ்
சோலைசூழ் சித்தி ரைக்கண் டேதீர்த் தங்க ளாடி
மூலையீ சான தீர்த்த மூழ்கியா லயத்தைந் தாடி. (௪௧)

தவமிரு கண்டு தந்தை தாயுடன் மகிழ்ந்தன் பார்ந்து
சிவசிவ சிவவென் றாடிச் சிவையுல கம்மை பாக
னவவடி விறந்த சைவ நாயகன் விசுவ நாத
னுவகையார் திருமுன் வந்தா னுகந்துபூ சித்த மர்ந்தான். (௪௨)

நிட்டையி னமர்ந்த காலை நிமலன்முன் பரிபை யுப்த்தேந்
திட்டையிற் பெயல்போ லாகாத் திருவருட் பயனீ துய்ப்பக்
கட்டழ காரோர் மின்னைக் கைப்பிடித் தறிவார் சேய்ப்பெற்
றுட்டயங் கியோகா ரென்றுள் ளுணர்த்தின னுணர்ந்தெழுந்தான்.

வேறு.

நம்ப சச்சிதா னந்தபு ரத்தவ
வன்பர்க் கன்பகல் யாணப திச்சிவ
செண்ப கப்பொழிற் செல்வதென் காசிவாழ்
முன்ப சித்திர மூலபு ரீச்சுரா. (௪௪)

மயிலைப் பூங்கொடி வாழ்க்கையு மாபதீ
பயிர்வ ளங்கொள்ப லாவிங்கப் பாடிய
குயின்கு டிப்பா மேச்சுர கோசிக
வெயில்வ ராவசந் தக்குடி யேந்தலே. (௪௫)

---

௪௫-வாழ்க்கை—பதி. பாடி—பதி. குடி—பதி. எயில்—பதி.

முத்துத் தாண்டவ மூதூர நாதியே
வத்த வானந்தக் கூத்தவைப் பாண்டவா
சித்தர் வாசத்த தென்புலி யூரவ
சத்த மாதரூர்ச் சங்கர சப்புவே. (சசு)

சைவத் தொல்குறிச் சிக்கிரீ சாவரா
தெய்வச் சோடச நாமவா சேச்சுரா
வுய்வ ணர்தடுத் தாண்டிங்கு ணர்த்திய
மெய்வ ரப்படி வேட்டுவப் பேனரோ. (சஎ)

என்று பாடியின் பக்கணி ராடியே
யொன்று முன்பனு கந்துகூத் தாடினான்
நன்று பெற்றவர் நண்ணியெ னப்பனே
யின்று பெற்றதென் னென்றிரந் தாரரோ. (சஅ)

வேறு.

ஓதனு மைந்தா வேட்ட னுயர்தவ மதுதென் காசி
நாதனை யருளக் கேட்டா னான்சொலற் குளதென் னின்னே
காதலி தனைத்தேர் கற்புங் காவலு முடைய ளாயின்
மாதவ மில்ல றத்து வாய்ப்பதா மென்றான் றந்தை. (சகூ)

ஐபகட் டழுகார் மின்னை யடையவே யிறையுஞ் சொற்றான்
செய்யநீ கற்புங் காப்புஞ் சிறந்ததாச் சொற்றா யன்ன
மெய்யறி விப்பா யென்ன மிருகண்டு வேண்டத் தந்தை
தையலி னியல்சொல் வான்சேய் தனையழைத் தேகி னானல். (ருய)

சித்தரா சிரமஞ் சென்று தேயுபூ சனைமு டித்தாங்
கொத்தவோர் சண்டகத்தி னுழைபுகுந் தப்பன் முன்சேய்
வைத்தனன் சொல்வான் பெண்டான் மயிலன சாயல் மின்போன்
பைத்தமாந் தளிர்போன் மேனி பைங்கதிர் முகத்தோ ணல்லாள்.

குளிர்முள ரியிற்சி வந்து சங்காழி கொடிகு டைமீன்
மிளிர்வரை யமைந்து யர்ச்சி மெலிவின்றிச் சமனுப் பந்தின்
றளிர்குதி யதாய்த்த சைந்து சான்மலி யிதழ்போன் மெல்லென்
றொளியதாய் வலிதாய் வாய்ந்த வுள்ளங்கா லுடையா ணல்லாள்.

---

சசு-வைப்பு—பதி. சஎ-குறிச்சி—மலைப்பதி-வாசம்—பதி.

நிறைமதி தாள வட்டம் நிகர்த்ததாய்ச் செவப்பார் வெண்மை
யுறைநிறக் கழுநீர்ப் பூப்போன் றொளிர்ந்துமெல் லென்றரத்தத்
திறைநக முடைத்தாய் நீட்சி குறைசம னிலவாய்ப் பெட்பென்
றறையவொன் றுக்கொன் றூழ்நல் லணியதாள் விரலாள் நல்லாள்.()

பொன்னிறை கோற்றட் டொத்து வட்டமாய்ப் பொதிர்ந்து நாடி
யுன்னிமேயாங் கிடாத்த சைந்து வனப்பமை கரண்டை யுற்றுப்
பன்னிடா மையின்வெர் கூனே படிக்குமே டோவென் றூர்ப்ப
மன்னரம் புளேகோ ணீட்டில் வணப்புற வடியா னல்லாள்.(௫௪)

வற்றிடாத் தசைந்து தாளம் ஞண்டுபோல் வட்ட மாமேர்
நிற்றடங் கியன்முட் டார்ந்து நெற்கினை சினைவ ராலம்
பற்றிடாத் தூணி போனன் றமைந்துருண் டுளேந ரம்பேழ்
பெற்றிடாச் சமன்ப ரப்புப் பெறுங்கணைக் காலா னல்லாள். ()

இளவாழை கரித்து திக்கை யெனவளம் பொருந்தி நாடி
இளர்வின்றி மயிர்தோன் றாமற் கிளைத்தெழா தெலும்பு நல்ல
வொளிவீசி யுருண்டு மெல்லென் றுளங்கவர் வனப்பார்ந் தொத்த
வளவு,தாய்ப் பிறர்கண் வீழா தவிர்செல்வத் தொடையா னல்லாள்.

முருகும்பற் பிடரி யாமை முதுகென வட்ட மாய்த்தேர்
மருவுதட் டினிதென் காறு விரலள வகன்று மன்னு
மிருதொடை யடியி ரண்டு பக்கமு மிசைவ ளங்கொள்
கருமணா லொழுக்கார்ந் தின்பக் கடலன பகத்தா னல்லாள். ()

இடுப்படி வெரிங்கீழ் மேடா வெறும்பிமத் தகமு மாப்போன்
றெடுப்பராப் படந்தேர்த் தட்டு விசிறிபோற் குலாவ லேய்ந்து
வடுப்படாப் பருத்தி ரண்டு மொத்தவோர் வண்ண முற்றுத்
தொடுப்புளை யெழாச் செழித்த வல்குலார் தூயா னல்லாள். ( )

மின்னலிற் றோன்றித் தோன்று மெலிந்ததாய் நடுக்கு றீஇய
சின்னவோ ருடுக்கில் வஞ்சிக் கொடியிழை யெனச்சி றுத்து
நன்னரார்ந் திலையோ வென்ன நகிலிரு மலைதாங் காம
லின்னலாய்த் துவள லேய்ந்தே ரிடையுடை யவளே நல்லாள்.()

எழுதுநற் பலகை யோவா விலையோபொற் றட்டோ வட்ட
வொழுகுகண் ணாடி யோவென் றுரைப்பநன் றுய்க்கு ளத்தின்
குழுபடி நிகர்ம டிப்புக் கொண்டுமே வரையுற் றூன்மால்
விழுதுஞ்சின் மயிரொ ழுக்கு மிளிர்வயி றுடையா னல்லாள். ()

௫௮-வெரிந்-முதுகு. குலாவல்—வளைவு. உளை-மயிர். ௫௯-இழை-நூல். ௬௰-விழுதுஞ்சின்—பெரிதுமுறங்கினாற்போல.

அயிலெலி மயிர்போன் மெல்லென் றடர்மயிர் நெருங்கி யோரார்
வயினடுச் சிறித கன்றாழ் வனப்பதாய் நீர்ச்சு ழிப்போன்
றெயில்வலஞ் சுழித்து நாடி யெழாதளை முளைத்த லின்றி
யொயினந்தி யாவட் டப்பூத் தொளைக்கொப்பு ளுடையா ளல்லாள்.

நரம்பெனும் புளைதோன் றாது நடுத்தாழ்த லின்றி மெல்லென்
றரம்பெறத் தசைபொ ருந்தி யொன்பதிற் றிரட்டி யாய
வரம்பெறு விரற்க டைநீள் வளத்ததாய்ச் சிறப்ப தூற்றுத்
தரம்படு மொளிய தார்ந்த தகைவிலாப் புறத்தா ளல்லாள். ()

தசைந்தூரம் படச்செ ழித்துத் தகைவிர லளவி ரொன்பா
னிசைந்தகன் றுளைநு ரம்பி னெழுச்சியின் றியன்மி தந்து
பசைந்திவ ரிரண்டு வெற்புப் பாரம திளைக்கா தென்றும்
நசைந்துதாங் கழகார் செம்மை நலத்தமார் புடையா ளல்லாள்.

அடிபரந் துயர்ந்து வட்ட மாத்திரண் டிறுகி மெல்லென்
றிடிதலின் றுறப்ப ருத்தீர்க் கிடையுமின் றடர்ந்தி ரண்டும்
படிதலின் றிறுபாந் தொத்த படிவதா மெழினி றைந்து
கடிமுக மதிய மிழ்தண் ணிலாமுகி களின்மே னோக்கி. (௬௪)

செறியவேங் கைபூத் தாற்போற் றேமலர்ந் தொளிர்ந்தா ழாத
நறியகூர் கருத்துப் பூக நற்கழுத் தீனி ரண்டு
நெறியபாக் கெனக்கு ழந்தை நீரிளங் குரும்பை செப்புப்
பறிமுடி சிமிழ்கொம் பீர்ம்பை பந்துநேர் தனத்தா ளல்லாள்.()

கழைகழை கமுகெ னச்சீர் காட்டெழில் கொளத்த சைந்து
ளிழைநரம் பெனும்பு ரோம மிவர்ந்திடா மொழிய மைந்து
தழைதரத் தடித்த லின்றிச் சமன்றிரண் டழகாய்க் கண்ட
வுழைமுனே ழிசைகொள் சங்கேந் தூமொளிர் தோளி நல்லாள்.

கணுவமைந் திருண்டு நீண்டு சிறுத்தவாய்க் கவின்செவ் வுற்றூர்ந்
தணுகிநீண் மயிர்ந ரம்பி னெழுச்சியின் றவிர்நால் யாழி
னெணுமிசை மகர யாழ்போன் றறுமுன்னங் கையு டைத்தாய்
நணுதமு னெழாச் செழித்த நலனுயர் முழங்கை வாய்ந்து.()

௬௧—அயில்—அழகு. வயின்—வயிறு. எயில்—மதில். ஒயில்—அலங்காரம். ௬௩-பசைந்து—ஆசைப்பட்டு. நசைந்து-ஒழுக்கமுற்று. ௬௪-இடிதல்—சரிதல். ௬௫-கூர்—நனி. பறி—பொன். சர்ம்பை-இரும்பை.(குடம்) ௬௭-நால்யாழ்—செங்கோட்டியாழ், சகோடயாழ், மகரயாழ், பேரியாழ்,

வலம்புரிச் சங்கு கூர்ம மச்சமொன் பதுகோள் வட்டந்
துலம்பரி யானை தேரான் தோட்டிதா மரையு டுக்கு
குலம்பயி னுகக்கோல் யாழி சாமரங் குலிசஞ் சத்தி
நலம்பயில் வரைக ளின்ன நணியமைந் திலங்க லோடே. (சுஅ)

தனமலை களிற்காண் டோன்றி தாமரை போனு மெல்லென்
றினமெனி வீசி நாடி மயிரெழா திடைய கன்று
மினநடு வாழ்ந்து சுற்று மேடதாய் முயல்வ யிற்றின்
வனமெது வாய்ச்செ ழித்து மலரகங் கைய மைந்து. (சுகூ)

கிள்ளைவா யொத்த ருண்டு கிளர்ந்ததாய்க் கழுநீர்ப் பூவி
னுள்ளிதழ் போன்றொ ளிர்ந்து சரசரப் புறுதல் பள்ளம்
புள்ளிகள் விழுத லின்றிப் பொன்மைவெண் மைகளில் லாதே
தெள்ளிய செம்மை வாய்ந்த சிரிய நகமு டைத்தாய். (எ0)

இடைவிடல் வளைத னீடல் குறுகுத லின்றாய் மிக்கத்
திடமுறல் மெலித லின்றிச் சமனதாய்ச் செம்மை யுற்றே
யுடைநரம் பெழலு ரோம முறுதலின் றிரேகை நன்றூர்ந்
தடைகளிற் றணிவி ரற்க ளமைந்தசெங் கையா ணல்லாள். (எக)

மென்மைய தசையான் மூடி மிகச்செழு மையதா யென்பு
பன்மைய நரம்பு ரோமம் படர்தலின் றழகாய் மிக்க
வன்மையாய் னெளிவு யர்ச்சி வளைவிலா தகல்வ ளங்கூர்
நன்மைப் தாயொ ளிர்ந்து நயந்தரு முதுகா ணல்லாள். (எஉ)

சிறியபைங் கமுகு போன்று திரண்டுநால் விரலு யர்ந்து
நெறியமூ வரைகன் றூர்ந்து நிமிர்வுறல் பருத்த னீடல்
குறியதா யிடன்ம டித்தல் கோண்மெலி விலதா யென்பு
பறிமயிர் நரம்பெ ழாதே பணிலநற் கழுத்தா ணல்லாள். (எங)

வற்றிடல் நரம்பு பைத்தல் மயிரெழ னீட லாதி
குற்றமின் றழகு வாய்ந்து கொழுஞ்சமன் பிடரா ணல்லாள்
பற்றிரு விரன்மட் டார்ந்து பகனீடல் குறுக லாழ்கூன்
வற்றலின் மயிர்ந ரம்பில் வட்டமோ வாயா ணல்லாள். (எச)

---

சுஅ-ஒன்பதுகோள்வட்டம்—நவக்கிரகச்சக்கரம். துலம்-தராசு. நுகக்கோல்—நுகத்தடி. சத்தி-குடை. சுகூ-தோன்றி-செங்காந்தள். நாடி—நரம்பு. ஆழ்ந்து-பள்ளமாய். எ0-உள்ளிதழ்—அகவிதழ். எக-அடைகளிற்றணி-நெருங்கியகளிற்றுமீன்வரிசைபோல. எங-பணிலம்-சங்கு. எச-பகல்—பிளத்தல். ஆழ்—பள்ளமுறுதல். மோவாய்—நாடி.

விளக்கமாய்ச் சிறிது யர்ந்த மேலித ழொடுநன் றுச்சேர்ந்
திளக்கமின் றழக மைந்தூ டிடைவிட லின்றித் துப்பின்
கிளக்கிரு திரட்சித் துண்டிற் கிடைச்சியின் மெதுவாய்க் கோவை
வளக்கனிச் செம்மை வாய்ந்து வயங்கிரு பாற்கு விந்தே.(எடு)

இடையொரு வரையா ழாதேய்ந் தியலொளி முருக்கம் பூச்செவ்
வடையில வங்க மல்வி யலர்களிந் திரகோ பம்போன்
றுடையநன் றமைந்தொ ளிர்ந்தின் புதவமிழ் திவர்பற் போர்த்தின்
மடைமுனுட் கொளச்சொல் லீய மகிழவிள் ளிதழா ணல்லாள். ( )

நெடுவிழிக் கடலெ றிந்த நிழற்பவ ளத்துண் டம்போற்
சுடரிதழ் களையு டைத்தாய்ச் சூதலர் செவ்வ ரத்த
மிடையசெம் மையதாய்க் கண்க ளிடுகிலாப் பற்க டோன்றுப்
படுகவுள் சுழியா நக்கும் பான்மைய வாயா ணல்லாள். (எஎ)

இடைவிடல் பரவ றெற்ற விறுசொத்தை யுறுத லோங்கல்
படரிவை யின்றிப் பாசி பற்றன்மஞ் சட்கு ளித்த
லடர்தரா தணியி ரண்டு மழகிதொத் தொளிர்மு ருந்து
சுடர்மணி தளவம் பால்போற் றாயவெண் பல்லா ணல்லாள்.(எஅ)

வெண்ணெய்போன் மெதுவாய்ச் சாதிலிங்கநேர்மிளிருஞ்செம்மை
வண்ணமாய்க் கருமை வெண்மை மருவிலா துயர்ச்சி நீட்சி
திண்ணமில் குறுகுண் ணுக்குந் திகழ்வதாய்ச் சாய்த னீடல்
புண்ணுற றடித்தல் வன்மை பொருந்துதன் முதற்கோ ளின்றி.

செவ்விய தன்மை வாய்ந்து செழித்ததாய்ச்சாச ரப்பின்
றெவ்விய நடுநி லைக்கொண் டொளிர்வதா யடக்க முற்று
நவ்விய கிளிகு யில்யாழ் நல்வரைக் குழலொ லித்தாங்
கெவ்விதத் தினுமி னிக்கு மின்சொலீ நாவா ணல்லாள். (அ0)

தொளைகளொத்திருபாலோங்கிச்சுடர்ந்துயர்முக்கோண் போன்று
வளைநுனி சிறுத்து ருண்டு வயங்குமெட் பூக்கு மிழ்ப்பூக்
களைநிகர்த் திருளல் சேத்தல் கவிதலற் றிடையுங் கூரு
மிளைதலாழ் தாலின் றேர்கட் கிடையணை மூக்கா ணல்லாள்.()

---

எடு-இளக்கமின்று—தணிவின்றி.எஎ-சூதலர்-செந்தாமரைப்பூ,எஅ-அணி-வரிசை,முருந்து-மயிலிறகினடிக்குருத்து, சுடர்மணி- முத்து, தளவம்—முல்லையரும்பு, அக-கவிதலற்று-வளைதலின்றி, இளைதல்—மெலிதல், ஆழ்தால்-பள்ளமுறுதல்,

வட்டவா டியின்மெ தூஉஞ்செல் வணவொளி யுங்கூர் சீர்த்தாய்த்
திட்டமாத் தசைந்து பள்ளந் திண்ணமின் றளைகு ருக்கா
துட்டயங் கெழின்வ ளத்தை யுடையதாய்ச் சிறந்து கண்டோர்
கட்டழ கியனெ னக்காண் கவுள்வடி வுடையா னல்லாள்.(௮௨)

நீலநன் மணிநேர் நாப்ப ணிலாங்கரு மணித யங்கப்
பாலன வெண்மை சூழப் பயின்றிரு கடைகள் சேந்து
சீலகா தளவு மோடித் திரும்புத லுடைத்தாய் மால்பால்
வேலையிற் பரந்து மான்போல் மிளிர்மருட் பார்வை யெய்தி.( )

கணவனுக் கமிழ்தா நோக்குங் காமுகர்க் கால நோக்குங்
குணவினத் தவரைக் காணின் குலநடு நிலைநோக் குங்கொண்
டணவொண்முப் பார்வை நீடியயனுவெண் டிரைக்கார்கோளோ
வணமிவர் வண்டோ வேலோ குவளைநன் மலரோ மீனோ.(௮௪)

மன்னுமம் போவா ளோமா வடுவகி ரோவெ னச்சீர்
பன்னுநல் வனப்ப மைந்து பருப்பிடை விடுத னீட்சி
துன்னிடா தடர்க ருப்புத் தொடர்மயி ரணியி மைக்கொ
ணன்னரார்ந் துடன்மு தன்மை நயந்திவர் விழியா னல்லாள்.( )

தடித்துநீண் மயிர்க ளின்றித் தழைந்திடை விடாநெ ருங்கிப்
பிடித்துமெத் தெனப்ப ணிந்து பிறங்குகார் மயிர ணிக்கொண்
டடித்தலா னொடிக ணிக்கு மிமையடி யழகாய் வாய்ந்து
வடித்தகண் ணம்பார் விற்போல் வளைபுரு வத்தா னல்லாள்.(௮௫)

வள்ளையின் றண்டு போனீண் டவிழ்தரு மலரி தழ்ப்போன்
றெள்ளிதா விரிந்து மெத்தென் றுறுசுழி வாய்ந்து தாழ்ந்து
தொள்ளையாய் மயிர்ந ரம்பு தோன்றிடா துயர்ந்து மேனோக்
குள்ளதா வளைதன் முற்கோ ளுறுதொளிர் செவியா னல்லாள்.

மூவிர லகன்றொ ளிர்ந்து முழுமதி வகிர்வட் டம்போன்
றேவுமொன் பதுகோள் வட்ட விரேகையார்ந் துளைநரம்பு
மேவிடா தளகக் கொண்டல் பெற்றவாள் வில்லே யொத்த
நீவுசீர் வனப்ப மைந்து நிறைந்தநெற் றியினா னல்லாள். (௮௮)

---

௮௭-முற்கோள்-முதலியகுற்றங்கள். ௮௮ ஏவும்-உலகத்தைநடத்தும், நீவுசீர்-எப்பொழுதுந்தேய்க்கும்சிறப்பினையுடைய.

நிறைபிறை போற்கு ளிர்ந்து நிழற்பொலி வுற்றுக் கண்வண்
டிறைகொள்செந் தாம ரைப்பூ வெனமலர்ந் தொளிரும் வட்டத்
துறைவடி வமைந்து செல்வ மூறுகற்பு வரைக ளார்ந்து
பொறைகொடுநீண்டின்போங்கும்புதுமுகப்பொலிவாணல்லாள்.( )

சென்னிமான் பிடரி நெற்றி திகழுமிம் மூன்று முப்பும்
மின்னிநோக் கற்கு நன்றாய் விரிதனீ டிடல்ப ருத்தன்
மன்னிடா தழகாய் முட்டின் றுயர்ந்துநல் வட்ட மாய்மன்
கன்னிசி மந்த ரேகைக் கற்புயர் தலையா ணல்லாள். (௩௰)

கொண்டலின் செறிவு கூந்தற் பனையளிக் குழாம்போற் கார்த்து
வண்டகை முகநி லாவை வாரியுண் டிடவி ராகு
வொண்டலி னெடிதி ருண்டங் குறுகணம் பிறக்கச் சுற்றுங்
கெண்டகைமைத்தாய்நெய்த்தின்பியைகாத்தழைத்துத்தாழ்ந்தே.

நெறித்துநீள் கடைகு ழன்று நெறிமணந் திதனின் மிக்க
செறித்திவர் கருப்பின் றென்று திகழ்வதா யழகு வாய்ந்து
குறித்தகூர் பிளத்தல் சிக்கல் குறுகலசெம் பட்டை யாதல்
வெறித்திடை வெளிற வின்றி மிளிர்கருங் குழலா ணல்லாள்.(௩௨)

## பொதுவிலக்கணம் முப்பத்திரண்டு.

முப்பதிற் றிரண்டா மின்ன முறைதமி ழகமின் னார்க்கு
ளொப்பரு நல்லார்க் குள்ள வுடம்பிலக் கணமா மிப்பாற்
செப்புநன் னிறமு றுப்புத் திருந்திய நிறைவு காண்கண்
வைப்பழ குடைமை யாக்கை மணங்கருங் குழலி னுக்கம்.(௩௩)

மென்னடை யுடைமை நாளும் விளங்குகா லாக்க முண்மை
யுன்னருஞ் சுவைத ருங்கை யாக்கநன் குடைமை வேலை
நன்னரார் திறமை யுண்மை நயக்குமூண் சுருங்கக் கோடன்
மன்னற வொழுக்கத் தேர்ச்சி வயங்குதுப் புரவு நாட்டம். (௩௪)

அழுக்கிலா மனதி னீர்மை யரியசீர்ப் பொறுமை யுண்மை
யிழுக்கிலா வீகைத் தன்மை யேற்றமா ரமைதிச் செம்மை
வழுக்கிலா வின்சொன் னேர்மை வாய்மைநன் குடைமை நாளும்
நழுக்கிலாத் தாய்முன் னோன்கா நாடிவர் தெய்வம் பேணல்.(௩௫)

---

௨௯. இறைகொள்-இருப்புக்கொள்ளும். ௩௧. எண்டகைமைத்தாய் - எண்ணுந்தன்மையதாகி. ௩௫. தாய்முன்னோன்கா—தாய்தந்தைஆசிரியன் தெய்வமெனனாற்பாலதாக.

பெரியவர்ப் பணித லுண்மை பெருங்குடி நல்லார் கேண்மை
யுரியநல் லுயிர்க்கி ரக்க முடைமைபொய் புறங்கூ றல்கோள்
புரிபடாப் பழிசொல் வார்முன் புகநாணி யொதுங்குஞ் சீர்மை
திரிபுளக் கவடி லாத சிறப்பதா மடமை யுண்மை. (கூசு)

அபல்சொ லும் பழிக்கு ளஞ்சு மச்சநன் குடைமை யேனோர்
பயகிழற் படினு முள்ளப் பயிர்ப்பெழீஇ யொதுங்கு நீர்மை
யுயர்குண முடைமை மேம்பா டுறுபெருந் தன்மை நாளு
மியலுமில் லறப்பற் றுண்மை யினியகற் புடைய மேன்மை. (கூஎ)

இன்பவாய் நுகரு்ந் தன்மை யியைந்ததன் றவனுந் தானு
மன்புயி ரொன்றி யாக்கை யாமிரண் டனினின் றுற்போற்
றுன்பினு மின்பி னுந்தாந் துய்த்துவா ழொருமை யின்ன
தென்படு மியலெண் ணன்குந் திகழ்பொது வாகுங் காண்டி.(கூஅ)

எக்குடிப் பிறந்தா ரேனு மெளிஞரே யெனினு மின்ன
சொக்குறு மியலார் நல்லார் தோள்சேர்த லருந்த வர்க்காம்
மிக்குய ரிவரின் மக்கண் மேன்மக்க ளாவர் தீமை
புக்குறுர் முக்கட் பெம்மான் பொன்னடி மறவார் வாழ்வார். (கூகூ)

புழுகுவீ சிடுமெய் தாழைப் பூமண வுடம்பு கோங்கின்
விழுமலர் நாற்ற யாக்கை வீசுமல் லிகைப்பூ மேனி
யொழுகுதேன் முல்லை மன்ற லுறுமுடற் பிச்சி வாசந்
தழுவுரு வுடையார் நல்லார் தகைபிதா மைந்த வென்றான்:(௱)

கேட்டலு நலனு ணர்ந்தேன் கிளத்துமிவ் வாறே தீது
காட்டலு மாமோ வென்றான் கண்டுவெந் தாயஃ தோதி
ஞட்டவர் வாழ்விற் கூறும் நவின்றிலர் மேலோர் நிற்காத்
தாட்டனை மட்டுஞ் சொல்வேன் றலைவரை யவாறோர் கென்றான்.

வருக்கைவீச் சங்கற் றுழை மருவேம்பின் வம்பு சேற்றின்
றுருக்கடி சுண்ண வாவி தூரியிற் படுமீன் பூதி
யிருக்குமெய்முடைமாயோண்மாரெளியபொய்புறணிகோள்தீங்
கருக்கவில் லாராய் நாண மாதிய குறைந்தே வாழ்வார் (௱உ)

கூகூ—சொக்கு-அழகு. ௱உ—மரு-வாசனை,துருக்கடி-அழுக்கு நாற்றம். ஆவி-வாசனை. பூதி-துர்க்கந்தம். முடை—துர்க்கந்தம், பொய்—செய்ததைமறைத்து மற்றொன்றனைக்கூறுதல். புறணி—பழிகூறலாகிய தூற்றல்,அல்லது புறங்கூறல்.(நிந்தித்தல்.) கோள்-முன்புகழ்ந்துகாணுதவிடத்துஇகழ்தலாகிய பின்புறணி, அல்லது குண்டணி. தீங்கு—தீமையாகிய பொல்லாங்கு,படாப்பழிபோடல். அருக்கலில்லாராய்—சுருங்குதலில்லாதவராய்,

அடிப்பெரு விரரு னீளி னன்பனைத் துணைவி பேணும்
படியய னீளிற் பேணப் படுவளில் கணவ ஞலே
கொடிவிரன் மேனேக் கும்பெண் குலத்தினுக் காகா ளுடு
விடினகல் விரலாள் செல்வ மேன்மையே காண மாட்டாள். (௩௩)

பெருவிர லயல்வி ரற்கும் பெரிதிடை வெளியாள் சுற்றத்
தொருமையில் லாத கன்றே யுறைவதின் விருப்பங் கொள்வாள்
பெருவிர னிலத்திற் றேயாள் பிறனிடை நாட்டங் கொள்வா
ளிருவிர றேயா ளேனே ரின்பமே விழைந்து துய்ப்பாள். (௩௪)

விரலெலா மேனேக் குற்றூல் வெறுக்கைபோ மயலாற் சேர்வாள்
பெருவிரற் படிந்து நான்கும் பிழைத்துமே னேக்கிற் கைமை
பரவுசின் னரம்பெ ழுந்தாற் பாக்கியம் போஞ்சோர் வுண்டாம்
காவடி வெளிறி னுக்காற் களவாடற் கஞ்சி டாளே. (௩௫)

அகவடி மறுவுண் டாயி னவள்பா தேசம் போவாள்
தகவடி யெட்டி வைப்போள் சத்தியந் தவறற் கஞ்சாள்
மிகவெடு வெடுந டைப்பெண் மிடிபெரி தடைவாள் பாத
வுகளநீள் குறடு போல்வாள் கைமையீண் டுரைத்தற் குண்டால்.()

ஆகவிற் பிழைதீர்ந் தோங்கு மழகுயர் நல்லாட் பார்த்து
வாகதா மணப்பித் துன்னே வாழ்விப்ப லென்றான் றந்தை
பாகமா வுண்மை தேர்ந்தேன் பானருள் வரமு முன்றன்
சேகரத் திருவுண் ணேக்குந் தெளிந்தனன் செல்வோ மென்றான்.

திருமக னெருப்பா டோர்ந்து சிந்தைமிக் குகந்தி வர்ந்து
பெருகருண் மகனெ டேதான் பிறங்குமில் லையும ழைத்து
முருகுயர் கடவூர் வந்து முதன்மருத் துவதித் தாயை
வருபிதாத் தெர்ந்தெ டுத்து மணப்பித்து வாழ்வித் தானல்.(௩௮)

கனமுயர் குச்ச கன்சேய் கவுசிகன் மிருகண் டென்போன்
மனமகிழ் வுடன்றென் காசி வாழ்விசு வேசற் போற்றி
யினமுயர் வரம்பெற் றேகி யியன்மருத் துவதித் தாய்வேட்
டனகனும் மார்க்கண் டற்பெற் றகங்களி சிறந்தான் வாழ்வான்.

## மிருகண்டு வரம்பெற்ற படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௩௭௩

௩௯—அனகனும்—மாசில்லாதகிய



பதினாறாவது

# தேவிக்குக் குடிலையுபதேசஞ் செய் தருளிய படலம்.

கவுசிக னுப மிருகண்டு வளர்தென் காசிநன் னகரிடை வந்து, நவுசிசு வேச னருள்வரங்கொண்டு நயந்தநற் கதையினை சொற்று, மொவுமுல கம்மைக் குலகநா யகன்முன் புபர்குடி லையி னுபதேச, மிவுலக முய்வான் செண்பகக் கீர்வி னியமபிய தினியெடுத் தறைவாம். (க)

சூதமா முனிவ ருரைத்தது கேட்டுத் துகளிலா நைமிச வனத்து, மாதவ ருள்ள மகிழ்ந்துகுச் சகனார் மைந்தருக் கிறை வரந் தருசீர்க், காதைநன் றென்று முகமனே டன்பாக் கழறி மேற் கதைசொல வேண்ட, வோதுவன் சூதன் பசித்தவர்க் கமிழ்த முளங்களித் தூட்டற வோர்போல். (உ)

ஓம்பொருள் சிவோமே யத்துச தாசி வோமென லாற் சிவ மாமா, லாம்பொது வுமாவோங் காரவாச் சியமே யாவரவ் வடிவவாச் சியர்தென், பூம்பொழிற் கண்ணே சிவன்சிவை யாகிப் புகலவுங் கேட்கவு மமைத, ரும்பொழி லுய்வா னரு ள்விளை யாட றதுமதை வினவுவோர்க் கின்பாம். (ங)

அயனரி யானா மூவரின் மேலா யநாதியாய்த் துரீயமாஞ் சிவனு, மியலருட் பிழம்பா மூத்தபிள் ளையுஞ்சீ ரிளையசே யும்பிர ணவமே, வயதுவம் ஞான மபமுனே ஞான வதனமுஞ் சுப்பிர மணியோஞ், செயவரு பெயரு மவரையோங் காரச் செல்வரென் றுணர்த்துவ தறிமின். (ச)

குடிலையீட் டின்மூ வறைகளுண் டவற்றிற் குடிபுகு மூவ ரி லகாரக், கடியறை யயனு முகாரமா மறையிற் கண்ணனு மகா ரமா மறையிற், றுடிபெறு மானு மாவமைந் தாக்க ளெல்புவி காக்கல்போக் கல்கண், மடிவிலா தயர்வர் மற்றமூ வறைகொண் மாளிகைக் குடிலையோன் சிவனே. (ரு)

அகாரமே யுகா மகாரமு மெழுத்து மறிஞரால் வியட்டி
யென் றிடப்பட், டிகபரந் தருமாற் சமட்டியோங் காரமேற்ற
மாம் வீடுபே றருளுந், திகழுவாய் திறந்தா லகாரமா முகாரந்
திறந்தவாய் குவித்துநாட் டிடினும், மகிழமு டிடினு மகாரமிம்
மாபின் வயங்குமான் மூவர்முத் தொழில்கள். (௬)

மூவரை யதிட்டித் தாக்கலா திபவா முத்தொழில் புரிசி
வன் றனே, மேவகா ராதி வியட்டிகட் கும்மேல் மிளிர்சமட்
டிக்குமே யுரியன், மாவகா ராதி மூன்றுருப் புடைய மந்திர
ராசவோங் காரம், பூவழங் கொலியிற் பொதுவதா யிடினும்
பொறிவடி வினிற்றமி ழாமால். (௭)

பிரசந்ந வதன மெனுங்கரி முகமும் பிரத்தியக் கம்பிர
மாசி, பரைதனு மறையிற் காண்டலின் வெற்பிற் பயில்கரி
புழைக்கையைச் சிறிது, தாமுற மடித்தின் புடன்விளை யாடிற்
றமிழினோங் காரமா மெழுத்தே, வாவுள வியல்பி னுண்மைகா
ணறிஞர் வண்டமிழ் மறையதென் றறிவார், (௮)

ஒலிவரி வடிவ மனுதியாத் தமிழ்க்கே யுளவெழுத் திலா
மொழி வடசொன், மலிபிர ணவந்தான் வடிவிலா தொழியின்
மற்றதைப் பதிட்டைசெய் திறைஞ்சிக், கலிதவிர் வோரார்
மபேச்சுர தலத்தோங் காரமே சிவார்ச்சைசெய் ததுவாப், பொ
லிவுசெய் துரைக்கும் புராணமு முள்தாற் புகலுமோங் தமிழக
மறையே. (௯)

சிவனெழுந் தருளும் பிரணவ பீடந் திகழ்திரு வாசியென்
றிடப்பட், டிவர்தரு வழக்குந் தமிழெனல் காட்டு மிந்தவோ
மயனரி யரனைத், தவமெனக் கொளல்போற் பொருள்சொலு
வழக்குந் தரையிலுண் டஃதவ ரிருப்பா, னிவருவா சகமாந்
தியேயசே வியற்கும் நிகழ்த்துசே வகர்க்குவே றறிக. (௰)

ஆமறைக் கெல்லா முதலினுங் கடையுஞ் சொல்லுமோங்
காரமா மறையைத், தாமகிழ்ந் தொலிக்கு மளவினிற் பாசந்
தாண்டிமே லெழுப்பவி னேனுமாம், பூமனேய் படைமேற் காப்
பதென் றியலோர் பொருளுமோங் கரும்பிர ணவப்பேர், சேம
மா வுயிரை முடிவினி லிறைபாற் சேர்ப்பதென் றருத்தநல்
கிடுமே. (௧௧)

---

௰—நிவரு-உயர்கின்ற. தியேயசேவியற்கும்-தியானிக்கப்படுபவனா
கிய தலைவனுக்கும். சேவகர்க்கும்-தியானிக்கின்றவராகிய தியாதா(அடிமை)
கட்கும். ௧௧-பூமன்—உலகத்திலேநிலைத்த.

படிந்தசம் சாரப் பற்றினைக் கடக்கப் பண்ணலாற் றாரக மாமா, லொடிந்திலா விஃதேழ் கோடிமந் திரங்கட் குயிரதா யெலாமியக் கிடுமாற், கடிந்தமா தவரு மிதன்புகழ் முற்றுங் கழறவல் லாரில ரியார்க்கு, முடிந்தில திதனை யுலகநா யகிக்கு முதல்வனன் கியம்புசீர் கேண்மின். (௰௨)

உமையவ ளுபர்ந்த பிரணவப் பெருமை யுணர்தர விழைந்தமை யறிந்து, கமையவிர் சிவனா ரிமையவெற் பனதென் காசியாஞ் செண்பகக் காவி, னமைதியாய்ப் பதுமா தனத்தினா யிரத்தோ டகவித ழுளபொகுட் டமர்ந்து, சிமைமயி லன்னா ளுளங்குளிர் தருவான் திருமலர் வாய்திறந் தருள்வான். (௰௩)

அன்னவு மையையிங் கியாவரு மறியா ராகலி னவ்விவ ரத்தைச், சொன்னதார் கேட்ட தாரெனி னிலையாற் றொல்லுல குடையவட் குரியன், பன்னயக் குடிலோ பதேசமொன் றியன்ற பான்மையின் வழங்கலை யன்றி, யென்னது முரைக்கொ ணாமைய தெனினு மிளையசேய் கரந்துணர்ந் தனனே. (௰௪)

கரந்துகேட் டிருந்த குமாரு யகனைக் கண்ணுதல் பிதாமக னிடம்போ, யுரந்தரு கல்வி யோதுக வென்றே யுரைத்தன னப்பரி சுகந்தே, வரந்தரு மயனு மோதின னந்த வடிவுறு குடிலையின் பொருளைத், திரந்தா மொழிதி யென்றனன் குட்டிச் சிறைப்படுத் தாக்கல்செய் செய்தான். (௰௫)

பிரணவ மதுதான் வயிற்றுதி யென்றும் பேசிய தாமசி யென்றும், முரணவிர் நிருக்க ணாவிருத் தியுபா மூவித மூன்று மாத் திரையா, யரணமார் தருகாந் தாரத்தி னொலிபோ லளவையா யிருசுவந் தீர்க்கம், காணமார் புலுத மாயவுத் தமாதி களினிகழ்ந் துச்சியி னிற்கும். (௰௬)

அறியினித் தகைய பிரணவந் தன்னை யழகிய வில்லதாப் பணித்துச், செறியியல் சிறந்த திவ்விய வம்பாற் சீவனைப் பூட்டியே பிரமக், குறியினி லிலக்கா யவ்விய மவித்துக் கோதுதீ ரானந்த மயனும், நெறியினின் றேவிக் காலமூன் றுணர்ந்தோர் நிலைபெறு முத்தியே சேர்வார். (௰௭)

---

௰௩—பொகுட்டு—தாமரைக்கொட்டை, சிமை—குடுமி. (உச்சிச்சூட்டு) ௰௬-வயிற்றுதி—குட்டையாகச்சொல்லும் இருசுவவொலியது. தாமசி—நெட்டையாகச்சொல்லுந்தீர்க்கசுரத்தது. நிருக்கணாவிருத்தி—விரைவாகச் சொல்லும்புலுதத்தொனியது.

அகரமாத் திரைதா னென்றதா யிலங்கி யகிலமுந் தாரிக்கு மழகா, வுகரமாத் திரைதா னிரண்டதாய் வயங்கு முறைத்திடி னுள்ளொளி யாய, மகரமாத் திரைதான் மூன்றதாயொடுக்கும் வழுத்துமிம் மூவகை யறிந்தோர், பகரமாத் திரைதேர்ந் தநாமய ராகிப் பரவுவர் துறக்கநா டடைவார். (௧அ)

மருவிய நாத மோங்கிமே லுறைய வைக்குமா லுருத்திரலோகம், வெருவிடா விந்து சிவபதந் தனிலே விளங்கிவீற்றிருந்திடச் செயுமால், கருவியா மிந்தக் குடிலையைச் சற்றுங்கசடறக் கேட்டுளக் கனிவிற், குருவினு ணர்ந்தோர் கறைமிடற் றண்ணல் குளிரடி மலர்நிழல் வாழ்வார். (௧௯)

பிரணவ மகார முகாரமே மகாரம் பிந்துவு நாதமுங்கூடிப், பரவுமைந் துறுப்ப தாமதின் மூன்று பகர்ந்தவையெழுத்துமற் றிரண்டு, வரவமு வெழுத்துஞ் சேரவோ மெனுங்கால் வயங்கொலி நாதமா மதற்கா, முரனதோ ரெழுத்தேவிந்துவா முதன்மூன் றுடன்வரி யொலியுமா மைந்தே. (௨௰)

ஒன்றதா மிதேயே காட்சர மைந்தா வுரைப்பது முண்டிதைத் தனித்து, நின்றிய லாற்றன் மிக்கவைந் தெழுத்தினீர்மையிவ் வோமினு முண்டா, னன்றுமந் திரரா சேச்சுரமைந்து நவிலிது மந்திர ராசம், வென்றியோம் பிள்ளை யார்திரு மேனி விளங்கிதோன் றுமறை யின்றால். (௨௧)

பிள்ளையார் சுழியென் றுயர்தமி ழகத்தோர் பிறங்கமுன் வைத்தெதுந் தொடங்க, லுள்ளமை தொன்று தொட்டுள வழக்கஃ துணர்ந்திலார் பிறபனுட் டவரும், நள்ளுமுற் சுழிவிந்தடுத்திவர் கோடு நாதமோர் சுழியதன் முனையும், கொள்ளதூஉங் குடிலை வடிவுடைத் தாக்கங் கூடுதல் சைவரே யறிவார். (௨௨)

உரைத்தமாண் குடிலை யுண்மைநல் லரசா னுணர்த்தவோர்ந் தருவதேற் றறிஞர், நிரைத்தறா றிவுளி மகமியற் றுதேநினைக்கினிந் திரனுமா வாரித், தரைத்தலை கமலத் திலகனைமலர்த்தத் தலைப்பெயு மழைத்துளி யாண்டுந், திரைத்தகல் வதுபோற் கன்மசஞ் சிதங்க டெறித்திடக் காண்பரின் புறுவார்.()

௧அ—உத்தாரிக்கும்— கட்டளையிடும். அநாமயர்—பிணிநீங்கியவர். உ௰—வரி—ஓம்என்ற வரிவடிவெழுத்து. ஒலி-ஓம்எனவொலிக்கும்ஒலிவடிவு. உ௧-ஐந்தெழுத்தினீர்மை- நமசிவயவென்னும்பஞ்சாக்கரத்தின்றன்மை. ஐந்து- பஞ்சாக்கரம்.

இருந்திதை யுளத்திற் கருதுவோர்க் கரிதொன் றிலையிது கைவரி னுளும், வருந்தின கானி லறிவின ராவார் வயங்கு தென் காசியிற் றேன்பான், மருந்திவை மூன்றும் பொருந்து முக் கூடன் மணப்புன லாடியெம் மான்றாள், பொருந்தியர்ச் சித்திக் குறியையுட் கணிப்போர் புண்ணிய ராகிவீ டடைவார்.

முக்கண னகில லிங்கமா யாழின் முனிமுகி லூர்திமுன் பரவ, வக்கணத் தவர்க்குக் கண்டவை நின்றேழ்ந் தருளியாங் கருள்வழங் கினனுன், மக்கணன் மாறர்க் குதிப்பதல் வரங்கள் வழங்கினுன் மணத்தவாத் தந்தான், தெக்கண காசிசிறந்தது குடிலை சிறந்தது குடிலைதென் காசி. (உரு)

ஆதலின் குடிலை வடிவதென் காசி யரனடி தொழவலஞ் சூழ்ந்து, போதலி னுக்கம் பெருகிடு மங்குப் புகுந்துறி னிந் திர னுவார், காதலி லுமையொ டுமாபதிக் காதி கயிலைவாழ்ந் திருக்கைதென் காசி, யோதலி னுஇ யுய்த்துணர் வாரவ் வுண்மைதேர் வாரென மொழிந்தான். (உசா)

வேறு.

முயல ருந்தவர் முனீச வேண்முனு
ளயனே வன்சிறை யாக்கியங் காக்கலைச்
செயனு மைக்குப தேசமெ மான்செய
வியறென் வெற்பிலென் ருடலென் னென்றனர். (உஎ)

பிரள யந்தொறும் பேதப்ப டுங்கதை
வர னுண் டென்னம காகாந்தங் கேட்டநீ
ருரம கிழ்ந்திதூஉ முண்டொர்கா லென்றுணர்
தான்ம றக்கிலி றென்றிறை தந்தனன். (உஅ)

வினய ருந்தவர் விம்மித மெய்தினர்
தெனய செண்பகக் காச்சிவன் றேவிபான்
முனைப வோம்பொருண் முன்சொல வின்மிகப்
பனமு னீசமேற் பன்னென வேண்டினர். (உகூ)

## தேவிக்குக்குடிலை யுபதேசஞ்செய்தருளிய படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு சுஎஉ

உசு—தேன்பான் மருந்து—தேனுறு,பாலாறு, தேவாமிழ்தவாறு. (செங் கோட்டைநதிருற்றலநதிபாதலநதிகள்.) இக்குறி—லும்

பதினேழாவது

# தரணிபீடச்சிறப்புரைத்தபடலம்.

சிவன்பிர ணவஞ்சி வைக்குச் சிந்தைநன் குவக்கும் வண்ண
மிவர்தர வுபதே சித்த வியல்புட னதன்சீர் முற்றுந்
தவறிலா துரைத்தா மேலாத் தரணிபீ டச்சி றப்பு
நவமுற வினிதெ டுத்து நயந்தர வுரைப்பா மாதோ. (௧)

அடிநடு முடியி னெல்லை யளக்கொணா வோரொ ளிப்பாற்
குடிலையாய் நாத மாகி நாதமேற் கொழுவிந் தாகி
வடிவுறு விந்திற் றோன்றோர் வடிவுகொள் விசுவ நாதன்
படிகவுண் ணுழைநூல் கோத்த பரிசினுச் சத்து நின்றான். (௨)

வேறு.

சுத்த மாஞ்சிவச் சோதியே மத்திய சோதி
நித்த மாமது நிட்கள நிறைவிந்நா தத்திற்
பெத்த மாமதிக் கிராந்தவிந் துகசத்தி பிறந்தா
ளொத்தன் னதிக் கிராந்தவிந் துகசிவ னுரியாள். (௩)

இப்ப ராசத்தி யிச்சிவ னிருவரீ ரிருவர்
தப்பி லாமலைந் தொழிலையும் நடாத்துவர் தாமே
யொப்பி லாநா ரியாண்டொரு நாளதா ரும்பர்க்
கப்ப டிப்பிர மாண்டொரு கருப்பமா மவர்க்கே. (௪)

பிரம னேடிலக் குமிவலத் தோளினும் பெருமா
ளரியி னேடிடத் தோளினு முரத்தினி லானுஞ்
சரசோ தித்தாயுந் தோன்றினர் தம்மிடை மாறி
வரன்மு றைப்படி மணந்தனர் மயேச்சுரன் முதல்வன். (௫)

---

௨. உச்சத்து-குணங்குறிகடந்த மேனிலையில். ௩. அதிக்கிராந்தவிந்துக சத்தி-சுத்த மாயையாகிய விந்துவுக்கு மேற்பட்ட விந்துவை அதிட்டிப்பவளாய், விந்துவை நீங்கிய இலய சிவத்தால் தோற்றுவிக்கப்பட்டவளாய், சிவபேதம் ஒன்பதனுள் முதலாவதாகவுள்ள பரசிவத்துக்குத் துணையாக நிற்பவளாயுள்ள பராசத்தி. அதிக்கிராந்த விந்துகசிவன்—ஆன்மாக்களுடைய அறிவுக்குப்புலப்படும்பொருட்டுத் தனது சிற்சத்தியின் சந்நிதிமாத்திரத்தில் சுத்தசிவனால் தோற்றுவித்த சிவபேதம் ஒன்பதில் முதலாவதாகிய நிட்கள பரமசிவம். ௪. ஈரிருவர்—பரநாதம், அபரநாதம், பரவிந்து, அபரவிந்து என்னும் நால்வர். ௫. பெருமாள்-திருமால். அரி—உருத்திரி. மயேச்சுரன்—பரசிவன்.

வேறு.

துருவிய விசுவா ரூடி வாயிலாத் தூவெண் சித்தி
மருவிய வணிமா வோடு மகிமாவு மிலகி மாவும்
பெருவிய கரிமாப் ராத்தி பிராகாமி யம்மீ சத்வங்
கருவிய வசித்து வங்கள் கவினவச் சிவத்துண் டான. (சு)

இத்தகை யெட்டு மெட்டுந் திசையித ழெட்டின் மேவப்
புத்தகத் தாது வீசும் பொகுட்டதன் மேல்வட் டத்தின்
மத்தகத் திதழீ ரெட்டும் வாழ்வரு டெய்வ வாழ்க்கை
முத்தகு வளையத் துள்ளே மொழியிதழ் வெளியி ரண்டே. (எ)

## குறுக்குவரை நீட்சிக்கு நெல் அளவுமுறை.

முரிவுறுச் சதுர ரேகை மூன்றுமேல் வாய்த ஞன்காந்
தெரிவுசெய் ததனுள் வட்டந் திகழுநாப் பண்கோ ணத்தி
லெரிவுசெய் பானுக் கீற்றிற் கிருபத்தஞ் சாம்நெனெ னீட்சி
யரிமதி வரைமுப் பானு லரைநென்னீ ளத்த தாமால். (அ)

பூமகன் றனக்கு நாற்பா னேழரை புதன்பன் னேழா
மேமனுங் குருவுக் குப்பன் னொன்றுவெள் ளிக்குப் பன்னேழ்
நேமமார் சனிக்கு நாற்பத் தேழரை நெல்லி னீளம்
நாமரா குவுக்கு முப்பா னுலரை னென்னீட் டாமால். (கூ)

செவ்வைய கேது வுக்கை யைந்துநெல் செறிநீ ளந்தா
னிவ்வையைப் பானென் பானெல் லெழிற்குறுக் கிரேகை நீளம்
வெவ்வன லோன்முன் னுக வெள்ளியீ ருக்கு றித்த
வவ்வக டாற ரைநெல் லளவிடை வெளிமுன் கண்டே. (ய)

---

சு. விசுவாரூடி வாயிலா—உலகமுன்னேற்றத்தின்வழியாக. எ. புத்தகத்தாதுவீசும்-அகத்திலுண்டாம் புதிய மணங்கமழும்.பொகுட்டு-தாமரைக்கொட்டை. மத்தகம்—தலையில். அ. பானுக்கீற்று-ஞாயிறுரேகை. இது சத்திகோணத்திலுள்ள ஒன்பது வரைகளில் முதல்வரை. அரிமதி-ஒளிவடிவாகிய திங்கள். கூ. ஏமனும்—பொன்னனுகிய. நேமமார்சனி—முறைதிறம்பாத சனி. நாமராகு- கீர்த்தியுள்ளராகு. ய-வெவ்வனலோன்—விரும்பத்தக்கஞாயிறு. அவ்வகடு-அந்தநடு. இதே மேல் யஉ ஆம்பாட்டிற்கூறும் முனையாம்போலும். நாற்பத்துமுக்கோணத்தை ஆராயுங்கால்,

## பங்கிடு முறை.

இரவியி னிரேகைக் கீழோ ராறுபங் கிடைநென் னீளம்
நிரவியிந் திரேகைக் கீழஞ் சேகாற்பங் கிடைநென் னீட்டாம்
விரவிய செவ்வாய்க் கீழ்மூன் றரைநெல்லின் வெளிகி டப்ப
வரவிரி புதனி ரேகைக் கீழிரண் டரைநென் மட்டாய். (௰க)

குருவின திரேகைக் கீழ்நா லரைநெற்கள் கொளவுட் காண்க
மருவிய வெள்ளிக் கோண்கீழ் மூன்றேமுக் காலென் மட்டாந்
துருவிலாச் சனியின் கோண்கீழ்த் தோன்றாறு நெல்லி னீட்டாம்
வெருவிலா விராகுக் கோண்கீழ் விளங்காறு நென்னீட் டாமால்.

## நாற்பத்துமுக்கோண் விவரம்.

அன்னசீர்க் கேதுக் கோண்கீ ழாறுநெல் லளவி டங்காண்
பன்னயா றறைமு னைக்கிப் படியைம்பா னெற்பங் காமால்
மன்னிய சுற்றீ ரேழ்கோண் மற்றிரண் டெட்டப் பத்து
நன்னரெட் டெண்ணு மொன்று நாற்பத்து முக்கோ ணுமால்.(௰ங)

## மூலை வந்துகூடுமுறை.

வெள்ளியா மாறுங் கோடு மிளிர்திங்க ளாமி ரண்டி
லுள்ளிய சனிகோ டாமே மூயர்விருத் தத்தி லொட்டு
மெள்ளிலெண் வளைய ராச்சூ ரியனதா முதற்கோட் டின்க
ணள்ளிலொன் பான்கோட் டார்கே தழல்வரை மூன்றிற் கூடும.( )

| 1. இந்நூல். | 2. சிற்பநூல். | 3. கடைக்காண்டம். | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | | 1 | 2 | 3 |
| ஞாயிறு பங்கு | கூ | கூ | கூஇ | வெள்ளிபங்கு | ஙளு | ச | சஇ |
| திங்கள் பங்கு | ருவ | கூ | கூ | சனி பங்கு | கூ | ங | ஙளு |
| செவ்வாய்பங்கு | ஙஇ | ரு | ருவ | இராகு பங்கு | கூ | கூ | கூ |
| புதன் பங்கு | உஇ | ங | ஙஇ | கேது பங்கு | கூ | கூ | கூ |
| வியாழன் பங்கு | சஇ | ங | உஇ | மூலை பங்கு | கூஇ | கூ | கூ |
| | | | | ஆக பங்கு | ருய | சஅ | ருய |

இங்ஙனம் மூன்று வேறுபாடுகள் காணக்கிடக்கின்றன.

"ஈராறு மைந்து மிருமூன் றும் நான்மூன் றுஞ்
சீரான மூவாறுஞ் செப்பக்கேள்—வாரார்பூ
வட்டமுலை மாதே வடிவுடைத்தேங் காயிலிட்ட
கட்டமைவே சீசக் கரம்'

என்னுஞ்சிற்பநூலாரது வெண்பாவுங்கிடைத்தது. சீசக்கரத்திரேகை கூ, வட்டம் ரேகை உ, ஆக ரேகை ௰க-க்கு பங்கு ருஉ எனக் கடைக்காண்டத்தார் கூறுகின்றார். ஒரு அகலத்தை எட்டு ஒடி ஒடித்து, அதில் ஒரு ஒடியை ஆறாக முறித்தல் பங்கிடுமுறை யென்பர். ௰ங-கா-௩டு- ஆ-ஆச.

முதல்வரை ஞாயி றுறும் வெள்ளிகோட் டின்கண் முட்டும்
மதிவரை யாமி ரண்டொன் பான்கேது வரையிற் சேரு
முதிரன்கோ டாமூன் றேடி விருத்தத்தி லொட்டும் நாலாம்
புதன்வரை கருங்கோ ளெட்டிற் பொன்னேந்தேழ் சனியிற் கூடும்.

## தரணிபீடஅமைதி.

மத்திமுக்கோண்முக்கோண்மேல்வளைவினெட்டினிமுக்கோணப்
பத்திரு வளைவின் முக்கோண் பதினான்கு மேற்சூழ்ந் தப்பாற்
சுத்தித மெட்ட ரெட்டுச் சுற்றிரு வெளிமூ வட்டஞ்
சத்திநாற் பான்மூக் கோண்மேற் சதுரமுத் தரணி பீடம்.(௬௬)

## அங்கிச அளவு.

ஒருபது தகட்டுப் பார வங்கிச முளவ தன்மே
லொருபது பந்த பற்ப வங்கிச முளவ தன்மே
லொருபது பந்த பற்ப வங்கிச முளவ தன்மே
லொருபது பந்த பற்ப வங்கிச முளவ தன்மேல். (௬௭)

விந்துவுள் படவே கம்பி யாறுக்கும் விளங்கு மம்சம்
பந்துவா மொவ்வொன் றுக்கா றுருமுப் பானு றுகத்
தந்துவுற் றிடுவ தான தன்மைத்தா முண்மேற் சுற்றின்
முந்துசக் கரக்கூ றுக்கோண் பதினன்காய் மொழிவ தற்கே.

---

௬௬-இப்பாட்டு"பிந்துத்ரிகோண வசுகோணதெசாரயுகம்-மந்மஸ்ரநா கதளஸம்யுத சோடசாரம் | வ்ருத்தத்ரையஞ்ச தரணீசதனத்ரையஞ்ச— ஸ்ரீசக்ரமேவலிகிதம் பரதேவதாயாம். | |,, என்றசிற்பசுலோகத்தோடும் ஒத்துள்ளமைகாண்க-சிற்பநூலில் முனைமூட்டுமுறைகூறுமிரண்டுவெண் பாக்களுங்கிடந்தன. அவைவருமாறு:—

"கேதுவொடு செவ்வாய்க்காங் கீழாவி ஞதித்தன்
றீதில்சனி வட்டத்திற் சேருமே—போதமார்
வெள்ளியுந் திங்களில் வேந்தன் சனியுடனு
மெள்ளி விதன்படி யீந்து."

"ஞாயிறு வெள்ளிபொடாம் நற்றிங்கள் கேதுவொடாஞ்
சேயிவர் மாதுவட்டஞ் சேருமே—யேயிற்
புதனே டிராகாம் புகழ்கூர் சிவைகோணிவ்
விதமாகக் கீழே விழும்"

முன்னையதில் 'வேந்தன் (வியாழன்) சனியுட' னுமென்றது கீழ்நோக்கிய முக்கோணமாகவுள்ள ஐந்து சத்திகோணங்களின் வைத்து எண்ணப்படாமல், மேனோக்கிய முக்கோணமாகவுள்ள

அங்கிசம் பன்னி ரண்டே யாகுங்கோ ணுருபத் திற்காங்
கங்கிசம் பன்னி ரண்டே யாகுங்கோ ணுருபத் திற்காங்
கங்கிசம் பன்னி ரண்டே யாகுங்கோ ணென்ப திக்கவ்
வங்கிச மெட்டிற் காறே முக்கோண மதற்கெட் டாமே.

நிறவகை. முதல்வீதி.

புல்லிய பதினாற் கோணின் வண்ணத்தைப் புகலக் கேண்மின்
செல்லிய முதற்கோண் சேப்புக் கீழ்க்கோ ணுஞ் சிவப்பே யாகும்
சொல்லிய கீழ்க்கோண் காரி துலங்குகீழ்க் கோண்க றுப்பு
வெல்லிதன்கீழ்க்கோண் சேப்புவிளங்குகீழ்க்கோண் வெளுப்பே. ()

திருவியல் கீழ்க்கோண் சேப்புச் சிறந்தவெட் டாங்கோண் சேப்பு
வெருவிலர் மேற்கோண் சேப்பு மேற்கோணம் வெள்ளை யாகும
கருவிமேற் கோண்சி வப்புக் கருதுமேற் கோண்க றுப்பு
மருவிதன் மேற்கோண் காரிமற்றிதன்மேற்கோண்சேப்பே. (உக)

இரண்டாம் வீதி.

இப்பதி னாற்கோ ணிற்க விதனயற் பத்துக் கோணி
லொப்பதின் முதற்கோண் வெள்ளை யுமதன் கீழ்க்கோண் காரி
செப்பதின் கீழ்க்கோண் காரி திகழுநா லாங்கோண் சேப்பு
வைப்பதின் கீழ்க்கோண் வெள்ளை வயங்குமா றுங்கோண் காரி.()

மூன்றும் வீதி.

நபம்புரி மேற்கோண் வெள்ளை நவிலுமெட் டாங்கோண் சேப்பா
மியம்புமேற் கோண்க றுப்பா மேற்றமேற் கோண்க றுப்பு
வயம்புகு மடுத்த பத்தில் வயங்குமொன் றுங்கோ ணீலம்
கபம்புகல் கீழ்க்கோண் காரி கருதுமூன் றுங்கோண் சேப்பு,(உ௩)

நிலவுநா லாங்கோ ணீலம் நிகழ்த்துகீழ்க் கோண்சி வப்பு
குலவுகீழ்க் கோண்சி வப்பு கூறுமேற் கோண்சி வப்பு
செலவுமேற் கோணம் நீலந் திகழுமொன் பான்கோண் சேப்பு
நலவுறு மேற்கோண் காரி நவிலிதே மூன்றும் வீதி. (உ௪)

---

நான்கு சிவகோணங்களின் வைத்துச்சொலவியிருக்கிறது. கீழ்க் கண்ட ௧௪, ௧௫ ஆம் பாட்டுகளில் கண்டுகொள்க. ஆறு கோணம் வட்டத்திற் கூடியும், எட்டுக்கோணம் கூடாதுமிருக்கும் இதில் இரண்டு ரேகை கூடின சந்தி உ௪ (சர்மம்), மூன்று கூடின சந்தி ௧௮ (வர்மம்) இதேடமருகம் எனப்படும். ௧௬, 'எட்டாங்கோண் சேப்பு' என இந்நூலாசிரியர் கூறுகின்றார். பிறர் எட்டாம் முனை க்குக்கறுப்பு, நீலம் என நிறங்கண்டுளார். உண்மையாசிரியன் வழி ஆராய்ந்து கண்டு கொள்க.

நான்காம் வீதி.

நாட்டிய நாலாம் வீதி நடுமுக்கோண் பொன்சேர் செம்மை
தீட்டிய முதற்கோண் மஞ்சல் சிறந்தகீழ்க் கோணஞ் சேப்பே
கூட்டிமூன் றாங்கோண் மஞ்சல் கூறுநா லாங்கோ ணீலம்
நீட்டிய கீழ்க்கோண் சேப்பு நிகழ்த்துமா றாங்கோ ணீலம். (உரு)

நிரைத்தவே ழாங்கோண் மஞ்சனெடியவெட்டாங்கோண்சேப்பா
முரைத்தநாப் பண்முக் கோணசெவ் வொளியறை முதல னைத்து
மரைத்தழ கியம ருந்தா லவிர்தரச் செய்துள் விந்து
பரைத்தலம் பச்சை சாத்தி பரவெளி பச்சை சாத்தி. (உசு)

இதழ்களெட் டீரெட் டிற்கு மிலங்குசெந் தாம ரைப்பூக்
கதழ்வதா வடிவெ ளுத்து மேற்செம்மை கவினத் தீட்டி
முதல்வியை மருக்கொ ழுந்து முகையவிழ் பிச்சி முன்பல்
விதமல ராற்பூ சிக்கும் மெய்த்திரு தாணி பீடம். (உஎ)

இவளென் றறியொ ணுச்சீ ரியையிவள் குடிலை யாவா
டவளநா மகளு மாவா டருணசெங் கமலை யாவாள்
பவளவாய்க் கௌரி யாவாள பகர்மயேச் சொரியு மாவா
ளவளவின் மேன்ம னோன்ம னியுமிவ ளாவாள் காண்மின்.(உஅ)

வேறு.

வாலை மாண்டிரி புரைபுவ னைபெனுமூ வாத
சீலை யாயவி ளைிநதையாஞ் சிவையினெந் திரமா
மாலை யத்தைநாற் பத்துமுக் கோணமென் றறிந்து
காலை மாலைபூ சிப்பவர் கவிதவிர் வாரே. (உகூ)

வேறு.

நாவரு பிராமி யம்மை நாரணி ரவுத்தி ரேசை
யீவருட் பதங்க ளெல்லா மீந்திட லாகி மிக்க
மூவரும நச்சுந் தாயாய் முகிலின்வா கனனு மேனைத்
தேவரு மெவரும் போற்றித் தெரிசிக்குஞ் சாணி பீடம்.(ஙo)

---

உருல் 'முதற்கோண் மஞ்சல்' என்று இந்நூலாசிரியர் கூறுகின்றார். பிறர் சிவப்பு, குங்குமம் என வண்ணங்கூறியுள்ளார். உகூ, இப்பாட்டு 'ஸ்ரீபால திரிபுரசுந்தரி லலிகா ஸ்ரீசக்ரஸ்வரூபிண்யை நம:- ஸ்ரீசக்ரப்ரியவாசநீம் பகவதீம் ஸ்ரீராஜ ராஜேஸ்வரீம் பக்தாநாம் அபயப்ரதாபவாநிதீம் அநந்த சந்தாயிநீம் | பரமே சாச்சுதாம் வர்நிதாம் முநிநுதாம் கந்தர்வசம்சேவிதாம் துவாந்தேவி திரிபுரே பராபரமயீ ஸ்ரீப்ர்ஹ்ம வித்யாம் சிவே.' என்றோர் வசனத்தோடு சிறிது ஒத்துப்போதல் காண்க.

மருவுமக் கரமீ ராறுய் வளர்கண்ட மறைமுன் றுமீ
திருவுயர் முடியி னேரோர் மாயையோ டொன்றிச் செல்வக்
குருவுப தேச மாகிக் கோதிலாக் குணங்கண் மன்னித்
திருவுளச் செயற்கைச் சித்தி சித்திக்கும் சீலர்க் கம்மா. (௩௧)

மருவிய சித்திப் பேற்றுன் மகாசித்தி பீட மாகு
மொருவிலாக் கலைஞா னந்தந் தொளிர்கலா பீட மாகுந்
திருவிய லாறே ழொன்றுந் திரிகோணுற் போக பீடந்
தருமுரு வெலாமச் சீராற் றரணிபீ டம்மீ தென்றுன். (௩௨)

தரணிபீடச்சிறப்புரைத்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௬௨௱௩.

## பதினெட்டாவது

# சிலாதரன் மகப்பேறடைந்த படலம்.

ஓங்கருட் டாணி பீட வுண்மையு நாற்பான் முக்கோ
ணுங்கமை திறனு மேன்மை யனைத்துமே யறிந்த மட்டும்
பாங்கதாச் சொற்று மிப்பாற் பகர்சிலா தரன்பூ சித்துப்
பூங்கழன் மகப்பே றுற்ற பொருவிலோர் கதைசொல் வாமால். (௧)

நேமியங் காவாழ் தூயோர் நெஞ்சகங் கனிந்தா னந்த
நாமகள் வாணு வான்போ னற்கதை யெடுத்தெ டுத்துக்
காமுறச் சொன்மு னீச கைமாறு காணே மெம்மை
நீமகிழ்ந் துய்வி யென்று நிலம்படிந் திரந்தார் சொல்வான். (௨)

சித்திரை நதிவ ளங்கூர் செண்பக மலர்க்கா வின்கண்
புத்திர வரங்கொ ளற்காப் புக்குவாழ் சிலாத ரன்றுன்
மித்திரன் மதிதீ முக்கண் விசுவைகோன் விசுவ நாதன்
முத்திறக் குணங்க டந்த முதல்வனெண் குணன்று டாழ்வான். (௩)

வேறு.

பகுதியவா மிடைகலைபிங் கலைசுழினை யொருவழிக்கொள் பயிற்சி முற்றித், தொகுதியவா யிரேசகபூ ரகரும்ப கங்கணெறி துலங்க வாற்றித், தகுதியவா வடிமிசைநா டியையடுக்க வடுக் கமுய றாத்தா லேற்றி, மிகுதியவா முறைநிறீஇயெண் ணுன் குவெளி விடத்தேர்ந்த விதியோ குற்றுன். (௪)

பிருதுவியின் வசத்தாகு மிருமுக்கா லொன்றேகாற் பெருப்பு னற்கு, விருதுபெறுந் தேயுவயத் தொன்றேயாங் காற்றினுக்கு வீசு முக்கால், கருதுயரா காயத்திற் கரையாகுங் கன்னலஞ்சு கனைந்தப் பாக்காற், பொருந்துளத்தாய் மீண்டிருமுக் கினிநடந்து சுழினைநிலை புகல்கண் டுற்ருன். (ரு)

பூரித்தோர் கொள்வதொரு பதினறு மாத்திரையாம் பூரகத்தப், பாரித்தே காந்தமுறுங் கும்பகமெட் டெட்டாகும் பாங்குங் கண்டு, நேரித்தே மூலமுனை ருதார முகிழ்விரித்து நிலனீர் தீக்கால், கூரித்தேய் வெளிமேலாந் தியானுநி கம்பரமுட் கொண்டோ னுன். (சு)

நாசியினம் முனைகோலி மதியிரவி யக்கினியி னுட்டங்குன்ரு, வாசியினன் னெறியொருமை யைம்புலனிற் பிரியாதே வலமாச் செல்ல, வூசியினுண் முனைமயிரி னுனியினெனுங் கொருவாதுள் ளுவந்து விந்து, வீசியிருற் றெள்ளமிழ்தி னனைந்துஞறை சோதியைநேர் விளங்கக் கண்டான். (எ,

வருகாத லோடுகண்ட தலந்தொறும்புக் காற்றுதவம் வளர்தென் காசிக், கொருகாத லெழுப்பியுய்த்த தத்தவத்தால் வந்தவவ ஞேராண் டிங்குச், சருகாதி வாயுநுகர்ந் துலாமற் புற்றருக்க டழைந்து மூடிக், குருகார்வத் தடையாமன் முதுகுற்ரு லம்படிந்து குறுகன் றைக்கே. (அ)

எக்காலக் கெவ்விடத்தி னெவ்வெவரே யெண்ணினுமாங் கிசைவோ னீறின், முக்காலம் பொருடானுய் முனைக்குமொரு சொயஞ்சோதி முக்க ணுற்ருேண், மிக்காலம் பூதபவு திகங்காட்டிச் சத்திவித்தாய் விடைமேற் ருேன்றிச், செக்காலக் கரும்பூற்று பாகன்னுன் முனிவன்முன்பு திகழ்தலானுன். (கூ)

எழுந்துவிடைக் கொடியானே யெம்மானே யிருமானையிடங்கொண் டோனே, யழுந்துகறை மிடற்ருேனே யங்கையினேர் மழுவானே யபயத் தானே, செழுந்துழாயன் காணுனே தென்மலையா னேயென்று தெண்டா காரம், விழுந்துபணிந்துவகையொடு வலம்புரிந்து துதித்துநின்ருன் மெய்யன்பானுன்.

---

சு- பாரித்து-பருத்து. நேரித்தே—அடுத்தே. கூரித்தேய்-மிகுந்தொத்த. இற்றுச்சாரியை இத்து என மரீஇயிற்றுப்போலும். தியானுநிகம்பரம்—தியானத்துக்குரிய மேலான சிதாகாசத்தை, எ. விந்து-புருவநடு கூ. மிக்காலம்பூதபவுதிகம்-மிகவகன்ற ஐம்பூதங்களையும், பூதங்களாற் ருேன்றிய பூதியங்கட்கடுத்தவற்றையும். ம இருமான்-இளமானும், உமையும்.

வேறு.

ததலைநன் குடைய சிலாதர நீசெய் தவத்தையோர்ந் தக ந்தன மன்பான், மதலையை வேண்டி வந்தனே யுனக்கு வழங் கின மொருமக வதுவும், விதலையிற் படாது நமக்குகந் தது வாய் விளக்குமெஞ் ஞான்று மாயாது, முதலையுற் றேங்கு மெனவரந் தந்தான் முனிமகிழ் தலைசிறந் தனனே. (௰௧)

பரிந்தரு ளிறைவ னின்பக்கூத் தாடம் பலத்தினின் றிவ ர்ந்ததின் மறைந்தான், றெரிந்தறி வுடைய தவத்தனன் புரு வாஞ் சிலாதரன் சிவனருள் வழியே, விரிந்தகூர் முகத்துக் கொழுவினை லுழுத மேதினிக் கண்ணொரு பிள்ளை, புரிந்தநன் றனைத்து முருக்கொடா ஞற்போற் பூத்தது கண்டனன் மகிழ் ந்தான். (௰௨)

அன்னது காலை யருந்தவன் மகப்பே றளித்ததெல் காசி நன் னகர்வாழ், முன்னவ னுலகாள் பாகனை மறவான் முகிழ் த்தகண் ணுடையசேய் காணக், கன்னவி னும்பர் துந்துமி முழக்கிக் கடிமலர் மாரிகள் பொழிந்தார், மின்னவிர் பாற்றண் கதிரொளி பரப்பி விளங்குமெய் யனைக்கண்டு கண்டு, (௰௩)

கண்டகண் குளிர்ந்துட் குளிர்ந்துவந் தடுத்தென் கவ்வை தீர்த் தருளருட் கனியே, தொண்டனெற் கிறைவ னருளருட் பதிந்த தோன்றலே சிவகலைக் கூறே, கொண்டன னுனையோர் பொருளென வினியோர் குறைவுநான் காண்பதே யின்றுன் மண்டலம் புகழு மைந்தனே யெனத்தன் மலர்க்கையா லெடுத் துமார் பணைத்தான். (௰௪)

ஆருக்குந் தாதை யாகிய முதலோ வருமைமீ யான்சொளு மவாவாஞ், சீருக்கு முகந்தோர் பிள்ளையாய் வந்த திறமது மெத்தவச் சிறப்போ, பாருக்கு ணீரி லெழுந்தசெங் கமலம் படிதிரு கலைமகள் பாவ, வூருக்குட் கொடுபோய்த் தன்ன றச் சாலை யுறைந்தனன் றவத்தினுக் கொருவன். (௰௫)

ஒருவனிவ் வுலகி னுள்ளுடற் குயிர்போ லுதித்துநாற் றிருபது வயதுப், பொருள் வரங் கிடைத்தான் மகிழ்வனிம் மேலோன் பொன்றிலா மகப்பெறி னென்னுந், தருவள வா னோர் முனிவரர் மக்கள் சகலரு மகிழ்ந்துகொண் டாட, வரு வண மகவை மனைவிகைக் கொடுப்ப வாங்கினண் மலர்ந்தது கொங்கை. (௰௬)

௰௧. ததலை—நிலையை. விதலையில்—நடுக்கத்தில். முதலையுற்று —முத ன்மையை யுடைத்தாய். ௰௩. கன்னவின்—ஊழிக்கையில்.

மலர்ந்தன கைகண் முகமலர்ந் ததுகண் மலர்ந்தன வுள மலர்ந் ததுவே, மலர்ந்தன விருபாற் குடங்களும் பொழிநன் மணத்தபா லூட்டினன் மகிழ்ந்தான், மலர்ந்தருள் வாய்வைத் திருகுடப் பாலுண் மகவக முகமலர்ந் தறிவு, மலர்ந்தருள் பதிந்து மகிழ்தலை சிறந்து வளர்ந்தது வளர்பிறை போன்றே.

வேறு.

கைபி லேந்திக்கொங் கையமிழ் தூட்டியே
மையி லேசற்றுக் கண்ணிளி மைக்கிட்டுச்
செய்யி னேதுஞ்செ யத்தக்க செய்தொளித்
துய்யி னப்பணி சூட்டிநன் குற்றுவள். (௰அ)

பெற்ற தாய்தந்தை பேணிய மாதவத்
துற்ற மைந்தற்கு நந்தியென் றோர்பெயர்
சுற்ற மேவர்க்கு மின்புறச் சூட்டினர்,
நற்ற வன்சைவ நந்தியெம் மானென்றான். (௰கூ)

சிலாதரன் மகப்பேறடைந்த படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௬௨௨௩.

பத்தொன்பதாவது

# நந்தி யுபதேசம்பெற்ற படலம்.

வளர்சிலா தரமுனி சிவன்வ ரங்கொடோர்
தளர்விலா மகப்பெறு சரிதங் கூறினு
மொளிர்தவ மகவவ னுலகம் மையருண்
மிளிரொண்போ தகம்பெறல் விள்வன் மேலரோ. (க)

நூலனைத் தினுமுள நுணுக்கந் தேர்பரி
பாலனு நந்தியெம் மான்ப முங்கதை
சாலயாங் கேட்டிடுந் தவமு முண்டுகொன்
மேலசொல் கெனத்தவர் வேண்டச் சொல்லுவான். (௨)

நந்தியெம் மான்றமிழ் நாட்டுச் சைவர்தம்
முந்திய நிலைவழா அர் முதல்வ னுக்கொள
வந்தியன் மேன்மக னவன்வ ளம்புயற்
சிந்திவர் பயிர்நிகர் செல்வர்க் கின்பமாம். (௩)

சிறுத்துமோ டெனவுயர் செழுமை வாய்ந்தரின்
மறுத்துநா வகன்றொளிர் மடிப்ப மைந்தெழி
லுறுத்தநற் சுழியதா யொழுகு மென்மயிர்
கறுத்தவாய் மேடதாய்க் காண்வ யிற்றினன். (௪)

திரண்டதாய் வலியதாய்ச் செழித்தொன் ஞர்க்கெதிர்
முரண்டழைத் திவர்வதாய் வெற்பின் முற்றற
னரண்டக வமைப்பதா யாடல் பூண்பதாய்ச்
சரண்டரு பொறைகொடு தழைத்த தோளினன். (௫)

இடுப்படிப் புறத்ததா மிருபிட் டத்தவா
யெடுப்பராப் படமென விவர்ந்த கன்றதாய்
மடுப்படல் சூம்புதல் வற்ற லின்றியோர்
கொடுப்பிதாய்ச் செழித்தவல் குலாமி ருப்பினன். (௬)

அடிபோன் மெதுவதா யகன்ற தாய்ப்பரந்
திடிவர் வயிரவெற் பெனவு ரத்ததா
யோடிய நடுத்தணிர் துயர்ந்து செப்பமாய்
நீடியற் கருமயிர் நிரைநன் மார்பினன். (௭)

நெறிந்திவர் வரையதாய் நிழல்சி றந்ததாய்ச்
செறிந்துநன் றுயர்ந்ததாய்ச் சிறித கன்றதா
யறிந்தவ ருளங்கவ ரழக தாய்நவை
பறிந்ததாய்ச் செழித்தொளி பரந்த நெற்றியான். (௮)

மாதுள மலரென வயங்கு நாள்சிறுத்
தோதுசீர் நுனிவிரிந் தொளிர்ந்தி ரண்டகத்
தேதுளே சிறுத்ததா யிவர்முக் கோணநேர்
கோதுறு துயர்ந்தெழில் கூரு மூக்கினன். (௯)

ஓங்குமிவ் வாறுறுப் புபர்ந்த வாமிவை
தீங்குறு தமைந்துள செல்வ னெண்வகைப்
பாங்குபர் செல்வமும் படிநல் வாழ்வையுந்
தாங்குமேன் மகனெனச் சாற்று நூலரோ. (௰)

நெடியதாய்ப் பாற்கட னீலம் பூத்ததிற்
படிகநாக் கருமணி பதிந்த வண்ணமார்ந்
தடியிமை காக்கநன் றமைந்தொ ளிர்ந்துள
வடிவவாந் திருவமர் மணிச்செங் கண்ணினன். (௰௧)

வீணைபோ னெடியதாய் மிளிர்செங் கையினன்
கோணல னுடையதாய்க் குவிந்து மேலகன்
றேணடி சிறுத்துநீண் டிதழ்ம லர்தொலி
யாணலன் காக்குறட் டையின்விள் காதினன். (மஉ)

ஆடியேர் படைத்துநீண் டகல்க துப்பின
னீடுவில் வளைந்தநி னிலைகொள் பூருவா
னீடிவில் வைந்துநீண் டிருக்குஞ் செல்வனே
கூடிய நலமெலாங் கொளுமென் பாரரோ. (மங)

தடித்திலாச் சிறுத்ததாய்த் தளிர்மெ துக்கொடு
வடித்ததா யழகுமெய் வயங்கு தோலினன்
றடித்தனு நீடனுஞ் சார்கி லாதெழில்
விடித்தணி சிறுத்தமை விரற்க ணுவ்வினன். (மச)

அகன்றிட னெடுகலின் றழகி தாச்சிறுத்
திகன்றகோ தருதொளி யிவர்ந கத்தின
னகன்றிட றெற்றலின் றணிய மைந்தெழிற்
கிகன்றகோ திலாச்சிறுத் திலங்கு பல்லினன். (மரு)

குறுகனீ டிடன்மெலி கொள்ப ருத்திட
லுறுதலில் சமன்சிறுத் தொளிர்க ழுத்தினன்
சிறுகுறுப் பைந்திவை சிறந்த செல்வனே
நறுமையார் நீண்டவா ளுள னென்பரால். (மசா)

மூன்றிரு மூன்றுமும் மூன்று பன்னிரண்
டான்றிவர் விரற்கடை யளவு கூறலிற்
றோன்றிய முதன்மையிற் றுலங்கு மூவிர
லேன்றியற் குறீஇத்திரண் டெழில்கொண் மேட்டிரன்( )

நீடிலா தாழ்ந்திலா நிரைவ ளத்தசை
மூடிய கைக்குழி முகிழ்த்த வக்குளான்
தேடிய நடுநிலை திறம்பி லாதுசேந்
தாடிமன் குறீஇமிளிர்ந் தடக்க நாவினன். (மஅ)

அழகிதாய்க் கூனலின் றறவு நீண்டுரம்
பழகிய தாய்க்குறீஇப் பாரவு வெந்நினன்
குழகிநான் குறுப்புகள் குறீஇய மெய்யனே
வழுமையா வுளமகிழ் வளத்த னென்பரால். (மகூ)

மச. விடித்து—விடிந்து. மஎ. மேட்டிரம்—குறி.

பாந்தகன் றழுகிதாய்ப் பாவு சென்னியா
னிரந்தக னிறைமதி நிகர்மு கத்தின
னுரந்தரு மிவையகன் றுற்ற மெய்யனே
தரந்திற னறிவுயர் தனைய னென்பரால். (உ௦)

காலகங் கையகங் கடைக்கண் வாயிதழ்
ஞாலமேட் டிரநுனி நகமிவ் வேழுமே
சீலவவ் வதற்கியை செம்மை வாய்ந்தெழி
லாலவுற் றிடின்மி னரவாஞ்சே யென்பரால். (உக)

பிள்ளையோ டம்மையும் பிரிப்பின் மேட்டினுட்
கொள்ளமுன் கோக்கப்பட் டிருந்த கொப்புளுந்
துள்ளவுந் திபின்சுழி வலஞ்சொ டற்றெழி
லள்ளியு லாழ்ந்தொளி யவிர்கொப் பூழினன். (உஉ)

அடல்கொண்மார் பினிடை வழுகி தாழ்ந்துகண்
ணடன்மினு ருளங்கவர் நடுச்செப் பத்தினு
னுடலொலி மூலமா முயிர்ப்புப் போய்வரு
மிடறது பதிந்தெழின் மிகுந்த தொண்டையான். (உ௩)

இன்னமுன் றுறுப்புமாழ்ந் திருப்பின் மேலவர்
நன்னர்கொண் டாடுமா நலனுண் டென்பார்
னுன்னத மாமெனுன் குறுப்பி லக்கணம்
மன்னிய நந்தியெம் மான்வ ளர்ந்தனன். (உச)

வேறு.

வளரு நந்தியெம் மானைநன் மாதவர்
கிளரு மன்பினுற் கிட்டினர் போற்றுவார்
தளர்வி லாத்தவத் தந்தையை மெச்சுவார்
விளரிற் சைவமெய் வேட்கைகண் டேத்துவார். (உரு)

என்றும் பொன்றிடா வவ்வரச் சேயையின்
றொன்று மின்பகத் தோங்குசி லாதன்
மூன்று னிந்தெழீஇ மொய்தவர் பிள்ளைமெய்
நன்று தாமொரா ண்டுள்ளவா னுளென. (உ௬)

வினுப துஞ்சின மேற்கொடெவ் வாறுநீர்
பனுநின் றீரெனப் பண்ணவ ரஞ்சிமெய்
சொனுமெய்க் கூறுநூல் சொற்றவா றென்றனர்
தனுனுந் தேர்ந்ததாற் றட்பமுற் றேறுவான். (உஎ)

உலக முற்றுமு ளுற்றுத வப்பய
னுலக முற்றுடை நங்கையோர் பங்கன்பா
ரிலக வுய்த்தத வன்றரு மிம்மக
னிலகன் மெய்பொன்றி னீசனு மில்லையால். (உஅ)

இம்மெய்க் கூறுநூ லென்செயு மெம்முல
கம்மை பங்கன ளித்தவ ரந்தரணை
செம்மை நிற்றலிற் செம்மறல் சீறினு
மம்மைச் சேயெதிர்த் தாமோ னென்றனர். (உகூ)

அஞ்ச லீரென வத்தவர் தாழ்ந்தெழீஇ
நெஞ்சை யத்துநி மிர்ந்தனர் சென்றனர்
மஞ்ச னன்புடன் வந்துதன் றந்தைபால்
விஞ்ச ருந்தவர் விண்டதென் னென்றனன். (௩0)

மூளைகட் பெற்றவர் மூன்றுல கத்தினும்
விளையுஞ் சீர்த்திவி ரித்தனர் வாழுவார்
மூளைத ருப்பண முன்கடன் செய்தலிற்
றளைமுன் னோர்துவாந் தத்தினின் றேறுவார். (௩க)

அணிசெய் தோட மாடுசே யின்மனை
பணிசெ றிந்துப யில்காட தாகுமான்
மணிபொன் செய்முன்வ ளம்பெற்றி ருப்பினுங்
கணிசே யில்லார்பொன் காக்கும்பே யாவரால். (௩உ)

உண்டு டத்தணி யுற்றும கிழ்மணங்
கொண்டுஞ் சேயிலார் கோமனை பாழ்மனை
யெண்ட குந்தொழு லிவ்வணங் கூறலின்
மண்ட ருந்தவ மாடினன் வந்தனை. (௩௩)

உனக்கொ ராண்டுள தென்றிவ ரோதிறு
ரெனக்கொ ராறுத லெண்ணிகல் கென்றனன்
மனக்கொண் மைந்தன்ம கிழ்ந்திபான் பொன்றிலேன்
றனக்கொன் றைப்பிரான் சார்புள தென்றனன். (௩௪)

---

௩க. துவாந்தம்–நரகம். ௩௩. மாடினன்–செய்தேன். ௩௪. தனக்கொன்றை—பொற்கொன்றை.

நந்தை கேட்டுளந் தன்னிலின் பார்த்தனன்
மைந்தன் றந்தைபான் மாதவஞ் செய்யயான்
புந்தி கொண்டனன் புண்ணிய நீவிடை
தந்த னுப்பெனத் தந்துவிட் டானரோ. (௩௫)

அவிர்தென் காசிய டைந்துமுக் கூடனீர்
கவின வாடிமுக் கட்பெரு மான்கழற்
செவிதழ்ப் பூசைதி ருந்தவு ஞற்றினன்
குவிகை யோடிறை கோயிலை நண்ணினான். (௩௬)

எத்தி யர்ச்சனை செய்தெனந் திப்பிரா
னுத்த னுழல் கம்மையொர் பங்கனோர்
வேத்தி ரக்கையன் வீழ்ந்துப ணிந்தெழீஇத்
தோத்தி ரம்பல சொல்லிநின் றனனரோ. (௩௭)

வேறு.

விரிசடைப் பகிரதி மிலைச்சுஞ் சென்னியா
யரிசன மணியுல கம்மை பாகனே
கிரீசநற் றவர்க்குறு கேடு நீக்குவோய்
பரிசனர்க் கெதிரெழீஇப் பயத்தைத் தீர்ப்பவா. (௩௮)

வித்திய வற்புத வெளிய தற்பரா
நித்திய பசுபதே யதுல தேவனே
மத்திய மந்தமா தியில்வ ரத்தனே
யுத்திய சூக்கும வகார வோமயே. (௩௯)

நித்திய நிற்குண நின்ம லாபரா
சித்திய புத்திய சருவ திட்டியே
சத்திய சாந்தவே சகள நிட்களே
முத்திய பூரணே ஞான மூர்த்தயே. (௪0)

வருவன போவன மலர்ந்து நிற்பன
தருவன வுயர்சரா சரத்தின் கூற்றினத்
தொருவன தொருத்தியென் றுலக மோர்ந்தறி
யருவந வோநவ பேத வாதியே. (௪௧)

---

௩௭. வேத்திரம்—பிரம்பு. ௩௯. அதுலதேவன்—ஒப்பில்லாதகடவுள்.

இரங்கவேண் டுதுமென விறப்பி லாமலே
யரங்கமா டியசிவ னபய நல்கிமுன்
வரங்களீந் திடவந்து வலக்கை சென்னிமே
லாரங்கவின் பெறவைத் திஃ துரைப்ப தாயினான். (சஉ)

சிறுவகேள் பகடுடைத் தென்றி சைச்சண்ட
னிறுவபா சங்கொடுன் னிடத்தி னெய்திடான்
மறுவகன் மதிநிகர் வாழி யென்னனும்
நறுவடி வதின்முக்க ணாற்கை தோன்றிற்றே. (சங)

திருந்தின னென்னைப்பின் றென்ன னின்றவோர்
மருந்தன பூங்குழல் வாய்மொ ழித்திரு
பொருந்துசெம் மேனியெம் புநித னேக்கமிக்
கிருந்ததி னுலகம்மைக் கிதுசொல் வானரோ. (சச)

பூரணி யேயிவன் புதல்வன் ஞானமெய்க்
காரணீ வேதவா கமக லாதியைத்
தாரணிக் கண்ணிவன் றனக்கு நல்கென்றான்
நாரணி சேவடி நந்தி வீழ்ந்தனன். (சரு)

விழுதலு மகமலர் வெய்தி மென்கையாற்
றொழுமகன் றனையம்மை தூக்கி முன்னிரீஇ
வழுவிலாச் சென்னிமேல் வலக்கை வைத்தருட்
பொழிவிழி சாத்திமெய்ப் போத மூட்டினள். (சசு)

தழைத்தகொன் றையஞ்சடை தயங்கு செல்வனு
வுழைத்தமைந் தனுக்கனு கூல மோங்கவே
யழைத்தமை வுறுகண ஞத ஞகப்பொன்
னிழைத்தவி சிரீஇயபி டேக மாடினார். (சஎ)

உறைவள வுலகெலா முடைய நங்கைபா
லிறைவனே நந்தியெம் மானுக் கோமணி
நிறைமுடி சூட்டியே நீள்க ணத்திறை
முறையுநல் கினனந்தி முதன்மை பெற்றனன். (சஅ)

வேறு,

ஆய வேலையி னறவொழு கியதுழா யவற்குந்
தூய வேரியின் கமலமீப் பொலிந்தயோன் றனுக்கு
மேய வேந்தென விண்ணவர் தொழுமக பதிக்குஞ்
சேய வேகமார் கணங்கட்குந் தெரிந்ததிச் செயலே. (சகூ)

தெரிந்த வக்கணங் தேவருங் கணங்களுங் திரண்டு
பரிந்த வன்பினுற் குழீஇக்குழீஇ வந்தனர் பணிந்தார்
புரிந்த மாண்விசு வேசனி ஞணையைப் புரந்து
சொரிந்த நல்லருள் வழிப்படுந் தூயரா யினரால். (ருO)

அருமை நந்தியெம் மானைமந் திரனீ ராட்டிப்
பெருமை யார்கணத் தலைவனு வைத்தமை பெற்றோர்க்
கிருமை யுந்தரு செய்தியா வந்தது மின்பாரந்
தொருமை யாகவந் தோங்குதென் காசியிற் கண்டார். (ருக)

பெற்ற வர்க்குநந் திப்பிரான் காட்சிதந் தருளி
நற்ற வத்திர்நீ ரும்முடை யுயிற்றினுன் றேன்றி
யுற்ற பேறுமை யுலகெலா முயர்த்துவ தாமால்
கற்றை யஞ்சடை யான்கழ லுமதெனக் கரந்தான். (ருஉ)

நந்தி யெம்பிராற் குலகநா யகியுல கேசன்
பந்தி நன்றரு ளிக்கதை படிப்பவர் கேட்போர்
புந்தி நன்றதா மிகபரம் பொருந்துவர் நாளு
மிந்தி ரன்றொழ வாழுவ ரென்றனன் சூதன். (ருங)

நந்தி யுபதேசம்பெற்ற படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௬உஎசு.



இருபதாவது

# நந்திக்கு முடிசூட்டு விழாப்படலம்.

உலக நாதனைக் குடனுல கம்மைபோ தகமு
மிலக நந்தியெம் பிரான்பெறல் சொற்றன மினியத்
திலக னுக்கெமான் மணிமுடி சூட்டிய சிறப்பை
யலக லாதவன் புடன்விரித் தினிப்பகன் றறைவாம். (க)

நந்தி யெம்பிராற் கருடிற னயந்தமா தவர்கள்
சிந்தை யுட்களி சிறந்தன ரவன்றிரு மணமும்
பந்தி யாமுடி சூட்டுவை பவமுநன் றெடுத்துப்
புந்தி யார்தரச் சொல்கெனப் புகலுவான் சூதன். (உ)

திக்கி னைத்திக ழும்பர மாக்கொளுஞ் சிவனுற்
றொக்கி னைத்தொட ருறுப்பொரீஇ நந்திமான் சோதி
முக்கி ளைக்கணுற் றேருள்சடை முடிமுதற் றிகழ்ந்து
சொக்கி ளங்கதிர் மேனிபெற் றனனகணந் தொழவே. (௩)

ஆரி யற்படுத் திறைமக னுக்கொளப் பட்டு
நாரி யற்புத வுலகம்மை யருள்பெறு நந்திச்
சீரி யற்கையிற் செய்திடத் திருவுளங் கொண்டான்
வீரி யச்சிவன் கணமெலாம் வந்தனர் மிடைந்தார். (௪)

முனைத்த லைக்கொளு மூவிலை வேலுடை முதல்வ
நினைத்த ழைத்தமை யென்கொலோ பகருதி நிரைத்துக்
கனைத்த வேலைகட் குடிக்குகோ கார்மலை யெடுக்கோ
வினைத்த ரைத்தலை யெவ்விதஞ் செய்புகோ விளம்பாய். (௫)

அடுக்கு மண்டரண் டங்களைப் பிடுங்குகோ வாழி
படுக்கு மாயனை யெழுப்புகோ பகைஞர்மேல் வாளி
விடுக்கு கோபிர மனையும்பங் காடுகோ விண்ணி
னுடுக்கு லத்தினை யுதிர்க்குகோ திருவுள்ள மோதாய். (௬)

என்ன னுந்தவழ் கங்கையஞ் சடைமுத விறைதா
னுன்ன னுந்தெரிந் திடக்குறு நகைபுரிந் தமக்குப்
பன்ன லுண்டொரு செய்தியெண் டிசைக்கணும் படர்சீர்
மன்ன னுற்றநங் கணங்கணீர் கேண்மென வகுப்பான். (௭)

சொல்லு வானமுந் தொழுந்திற லுடையநீர் சுற்றுங்
கொல்லு வான்பகை யில்லையாற் கோமுறை யெங்குஞ்
செல்லு வானிந்த நந்திக்குத் திருமுடி சூட்டி
வெல்லு மாறவன் பணிசெயு மென்றனன் விமலன். (௮)

விதிய வாமடன் மலைவலஞ் சூழ்ந்திட விரைக்காற்
பொதிய மேமுத லெண்டிசை வரையும்பொன் பூத்த
திதிய வான்சுவர் நிறுவிநற் றோரணஞ் சிறப்ப
மதிய ருக்கனு மிருபுற விளக்கென வயங்க. (௯)

---

௪—ஆரியற்படுத்து-பொருந்தியஒழுங்குபடச்செய்து. வீரியச்சிவன்-மகத்துவமுள்ளஇறைவன். ௯-விதியவாமடன்மலை—செல்வங்களையுடைய தாரும்வலியமேருகிரி, வேதாகமமுறைகளைவிரும்பும்வெற்றிமலை.

செழுங்கு ணக்கொடு தெற்குமேற் குத்தரஞ் சிவனா
லொழுங்கு பற்றியாங் கொருபது முழுழ முயர்த்துக்
கொழுங்கு றிப்பொடு குழகுயர் நிலைசுத வுடைத்தாய்ப்
புழுங்கு ருதுகாற் றீரெண்காற் கொட்டகை போட்டு. (௰)

விரித்த சுற்றிலே நிரைசலும் பந்தரும் வேய்ந்துத்
தரித்த சுற்றினெண் ணுகமென் கரிநிறீஇத் தாங்க
வரித்த கால்வளை விட்டமற் கூட்டுண்மா லிகையாப்
பரித்த மத்தியி னென்பதுக் கொன்பதாம் பதங்காம். (௰௧)

அவைக்கு மேற்சுற்றுப் பதமொன்றுண் டாக்கிமா டடுத்துச்
சவைக்கு ளோர்பிர காரஞ்சஞ் சரித்தற்கிட் டப்பாற்
கவைக்கு கந்திடு புரிசையிற் கமலமேற் கனிவாஞ்
சுவைக்கு ணப்பீதத் திருபத்தேழ் சொன்னமட் கலசம். (௰௨)

அமைப்ப தவ்வத்தா னத்திலே கீழ்த்திசை முதலா
வமைப்ப தாயவவ் வடிவுகூ ரியன்முத லாக
வமைப்ப ரர்க்கிய பாத்தியங் கொடுத்தபி டேக
மமைப்ப தாகியொற் றுடைசாத் தினாலங் கரித்தார். (௰௩)

மருவு மண்டலேச் சுரற்கொன்பான் குடம்வைத்து மேற்கன்
புருவு றிட்டலிங் கத்துக்கொன் பதுவைத்து முதீசி
தருவு ழைத்தளி ரைந்துடன் றகைமருந் தைந்துந்
திருவு றைத்தரை மண்ணைந்துஞ் செய்யதோ லைந்தும். (௰௪)

நீரி னிற்றனி வகையஞ்சும் வைத்துநேர் கீழ்பாற்
பாரி னென்பதிற் பஞ்சகும பப்பதிப் பதுமாய்ச்
சீரி னிற்கிழக் கொனபதுந் தேவவர்த் தனைக்கென்
றேரிற் றெற்கினென் பதுபதத் திவர்குண்ட மென்ப. (௰௫)

இதனி னங்கிசீ டப்பிர வேசமீ தொன்பா
னதனின் மேற்கினு சாரியற் கொன்பதா மதன்மேற்
பதனி னங்குமரர்ப் பணத்துக்கு மொன்பதாம் பகரிவ்
விதநி கழ்ந்திடி னென்பதுக கொன்பதாய் விளங்கும். (௰௬)

---

௰௧-மாலிகையா—நிரல்படநிற்குங்குழுவாக. பதங்காம்—பிரிவாகும். ௰௨-பதம்-வேதி, சொன்ன—பொன்மயமாகிய ௰௪-உதீசி-வடக்கு, தளிரைந்து—ஆல்அரசுஅத்திமாநாவல்என்னும்பஞ்சபல்லவம், மருந்தைந்தும்—தாமரைவிட்டுணுக்கிரந்திசீரா செங்கழுநீர்நாயுருவிஇந்திரவல்லிஎன்னும்பஞ்சௌஷதி. மண்ணைந்தும்-ஆனையடிகுதிரையடிதேரடிபன்றிக்கோடுகிண்டியஇடம்புற்றுஇததலங்களிலுள்ளபஞ்சமிருத்திகை. செய்யதோலைந்தும்-ஆல்அரசுஅத்திமாநாவற்படைகளாகியபஞ்சதொக்,௰௫-தேவவர்த்தனைக்கு-சிவனுக்குஞ்சத்திக்கும், குண்டம்-அக்கினிகுண்டம் ௰௬-சீடப்பிரவேசம்—நந்தியிருக்குமிடம்.

இந்தி ராதியர் சூழ்மதிற் கமலமே லிருப்ப
நந்தி ராகஞ்செய் மால்கன்னி திசையிலே நண்ண
மந்தி ராசல சத்தனீ சானத்தின் மன்னச்
சந்தி ரார்த்தக்கீழ்த் திசைநடு மயேச்சுரன் றயங்க. (யஎ)

இரவி சாந்திவித் தியைநிவிர்த் தியேபிர திட்டை
விரவி நந்திமா காளரே பிருங்கியே விநாயர்
தரவி ணங்கிடப் பாகந்தாந் தேவியே சண்டன்
பரவின் வாத்துவின் பதிதிரு கணபதி குருக்கள். (யஅ)

வேறு.

ஆடகக் குடங்க ளவைபதி னறு படிகெரூளு மைந்துவர்த் தனையு, மீடக முடைப மரகதம் பவள மிமைத்திடும் வச்சிரம் நீலம், நீடக வொளிகூர் முத்துமா ணிக்கம் நிலவெழும் மின் மணி மாலை, யேடக மைந்து நிறவகைப் பட்டுஞ் சீரையு மிவை க்கிணங் கினவும். (யகூ)

விருப்பையார் சிருக்குச் சிருவமுஞ் சார்வம் விளம்பிய விதிசொல வளர்ந்த, தருப்பைநற் சாதி மாங்குழை மாலை தம னியத் தகடிரத் தினங்க, ளருப்பையார் மிருத்து முகிவெலாந் தொலையௌ டதத்தொ லையுற வறவு, மிருப்பையென் றேது ங் குடஞ்சுசி யாக்கி யிவையெலா மவைக்குளிட் டினிதே.(உய)

. அல்லியம் பொருட்டா யெழுதியே வைத்த வாங்கதன் மேற்குட மமைத்துப், புல்லிய குபேர திசைக்கணே முன் பேரற் புகனவ கோட்டத்துட் கும்ப, மெல்லிய லைந்தா யிலகு வே போற்றி யிரவிய தேமுத லெடுத்துச், சொல்லிய நிருதிக் கணபதி தொகுத்த சுரபியைந் தவைமுறை தொடங்கி. (உக)

ஓதிய மிருதி சுருதியா கமத்தி னுத்தரித் துளதெய்வ வுருவாய்ச், சோதிய திலகு சுடர்பணிக் குடங்க டுலங்கவே யிருகையான் மலரின், தாதிய னறவந் துளும்பிட வாங்கித் தனித்தனி தாபித்துத் தயில, மாதிய பிட்டா மலகமார்ச் சன மே யைவகைக் கவியமைந் தமுதம். (உஉ)

---

யஅ—வாத்துவின்பதி—பிரமா, யகூ-சீரையும்—மரவுரியும்,உய— அருப்பையார்மிருத்து-துக்கத்தைப்பொருந்தஞ்சாக்காடு,முகிவு-வாணுண் முடிவு, உஉ—பிட்டாமலகம்-மாக்காப்பு,நெல்லிக்காப்பு,

முருகுதிர் கனிதேன் சந்தன மிளநீர் முறைசொரிந் துல ர்த்தியா டகத்தேர், பெருகுமே கலைகள் களபசிந் தூரநற் பிணையல்க ளணிபொனால் கனகத், தருகுகா ரமெனய் யனம் பஞ்ச தாரை யுயர்பல வகைநிவே தனங்க, டருகுடங் கையி னுற் றாபதீ பங்கள் விசிறிசத் திரந்தருப் பணங்கள். (உரு)

ஆற்றிய கவரி யிவையெலா மாடல் பாடலி னுடனழ காகப், போற்றிய பின்னர் பொற்புறு புட்பார்ச் சனைகள்கற் பூரபூ டணங்க, ளேற்றிய பூதி தரித்துவேண் டுவதி யாவையு மியம்பித்தான் பெற்றுத், தோற்றியங் குறையு மூர்த்தியை மனத்தாற் சூழ்ந்துதாழ்ந் திருகையாற் றொழுதே. (உச)

வேறு.

களங்க றுத்தவ னகளங்க னெம்பிரான் கருணை
துளங்க வந்தருள் செய்திடற் றுபரமே யின்று
வுளங்க னிந்துமை யவளொடு முத்தரித் திறைவன்
விளங்க வேறுவே றிவையுஞற் றிடன்மறை விதியால். (உரு)

கொழுந்து வெண்ணிலாக் கண்ணியோன் கூறிய வேவற்
கெழுந்து நான்முக னினிதுபொற் குடத்திவர் கங்கை
யழுந்து மாசகன் றிடச்சொரிந் தனனவி ராடை
விழுந்து தாழுற்று மெய்விரை வினிற்றுவர்த் திடனால். (உசு)

வத்தி ரங்கொடு புலர்த்திப்பின் மேகலை வனைந்து
முத்தி ரத்தின திகளின பாணமு முறையிட்
டத்தி ரத்துப வீதமுத் தரியமுட் டினீசம்
பத்தி ரத்தனிந் தேகள பாதிமேற் பட்டா. (உஎ)

இலங்க வார்திரி புண்டரம் நுதலிடை யிரவி
துலங்க வைத்தபோற் றாயசிந் துரமணிந் தணிகூர்
நலங்க லந்தொளி பாப்புசிங் காசன நடுவி
னலங்க ரித்துநந் தியையரி முடிகவித் தனனால். (உஅ)

கவித்த மாமணி மகுடமோ டுறைந்திடு காலை
செவித்த ருங்கயல் விழியுடைச் சுயேசையாந் திருவைப்
புவித்த லம்புகழ்ந் திடமுறை புரிவன புரிந்து
பவித்த மங்கல முழக்கொடு பலசிறப் பாற்றி. (உகூ)

---

உஎ. உட்டினீசம்-தலைக்கட்டு.

திருத்தி யாமருங் கிருத்தியே திருமணஞ் செய்துள்
ளருத்தி யோடுவண் டுளவனு மன்புடன் வணங்கப்
பெருத்தி ருந்தவுந் தியங்கம லத்துறை பிரமன்
கருத்தி னித்திவர்ந் தடிக்கம லம்பணிந் தனனால். (௩௰)

பூரு வத்திறை யிந்திரன் பணிந்தனன் போதங்
கூரு வப்பொடு தேவர்கை கூப்பியே தொழுதார்
மேரு வன்மையார் கணங்களு முனிவரும் விஞ்சை
தேரு வன்பருஞ் செறிந்தவர் திறைஞ்சினர் நின்றார். (௩௧)

இங்க ணந்தியெம் மான்முடி சூட்டுநன் கியன்ற
தங்க ளுன்ற தென் காசிநன் னகரின்னைவத் தருள்கூர்
செங்க ணேற்றினன் றிருமுனர்ப் புரியதீ கார
துங்கன் கைலையும் பொதியையு முளனெனச் சொற்றான்.

## நந்திக்கு முடிசூட்டு விழாப்படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௬௩௮.

---

இருபத்தோராவது

# சிரும்பாசுரன்

# திக்குவிஜயஞ்செய்த படலம்.

நந்தி யெம்பெரு மான்சு யேசைநன் னங்கை யைமணஞ் செய்ததும், மந்திரப்புன லாட்டி மாமணி மகுடஞ் சூட்டிய துஞ்சொனு, மிந்தி ரன்முத லோரை வாட்டியு மிறைக வர்சிரும பாசுரன், வெந்தி றற்கொடு போர்தெண் டிக்கினும் விசயஞ் செய்திறல் சொல்லுவாம். (௧)

நைமி சத்தவர் காங்கள் செய்தவ நன்மை நந்தியெம் மான்கதை, மெய்மி குந்திரு வரய்ம லர்ந்துரீ விள்ளப் பெற்றன முய்ந்தன, மொய்மின் வண்டுக ளுழுநற் பூம்பொழின் முதுதென் காசியின் சீரெலாம், பெய்மி னென்றுரு குற்றி ரந்தனர் பிறங்கு சூதனும் பேசுவான். (௨)

மன்ன வல்லிரண் யாக்கன் வங்கிச வச்சி ரப்புய மாபெ லன், றுன்ன வந்தனன் விருபாக் கிப்பெயர்த் தோகை யைம ணந் தின்புதுய்த், தந்நல் லாளுடன் வாழு நாள்பொரு ளள வின் றுற்றுமோர் சேயிலாத், தன்ன கக்குறை தீர வேயிம தாணி போய்த்தவ மாடினுன்: (ந)

மலர வன்றனே வேண்டி வச்சிர வாகு வில்லொடு மாதவ, மிலக வாற்றல றிந்து முன்வந்து மெண்ண மென்னென வோ தினு, ருலக மாக்குவோ னஞ்ச லீர்மக வுதவி னேம்புவி மூன் றுமா, ணலன ளித்தன மென்று சென்றன னயந்தெ ழீஇய வர் வந்தனர். (ச)

வருவில் வச்சிர வாகு வில்லொடோர் வமை டைந்தலர்ந் தோர்நிழற், றருவி ருக்கம ருங்கொ துங்கினர் தகையும் வேர் வையு மாறுவா, ஞெருவி லாததி தூல கண்டவி ருடியு கந் தொரு சாருறன், மருவி ஞருணர்ந் தாரி லாரவண் வைகி ஞர்வெயி ருழ்வரை. (ரு)

வேறு.

ஆங்க மர்ந்தநில மீதி லேகொழுந ஞன வன்றுயில மர்ந் தனன், கோங்க ரும்புழலை யந்ந லாள்குளிர்மை கொள்ள மெல்லநடை கூடியே, தேங்க மழ்ந்தசுனை வாச மேய்த்தவசு செய்யு மம்முனிவர் சென்னிமேன், வீங்க மண்டுவலெ றும்பை வாரினள்வி ரைந்தெ றிந்துகொடு கொட்டினுள். (சு)

வேறு.

சிரித்து நின்றன ளவளை வெவ்வழற் சீக ரத்தினு வெம் பியாரப், பரித்து றுக்கியு னக்கு மேவர பால ஞரெறும் பாகவே, விரித்து ரைத்தனன் சாப மென்னவும் வெருள்கொ டேவிரு பாக்கிபோய், வரித்து ளும்புநீர் விழிய ளாய்வல வல்ல வற்கதைச் சொற்றனள். (எ)

மன்னன் வச்சிர வாகு வாவிதென் வந்த தாழ்வவி யோவென, வின்ன நீர்தரத் தூல கண்டசு ரண்ச ரண்ணென வேத்திநேர், நன்ன ரன்பொடு சென்றி றைஞ்சின னங்கள் கோதுபொ றுத்தரு, ளன்ன வாகனன் வரநி நீஇமக வாக்கம் நல்கென வேண்டினுன், (அ)

---

எ. வெவ்வழற்சீகரத்தினும்—கொடியஅக்கினிமழையினும், வரித்து ளும்புநீர்—அக்கினியிற்கொதிக்கும்புனல்,

அன்ன காலேயி லேய ருந்தவ தூல கண்டர கங்கனிந், தின்ன தீரர சேயெம் போன்றவ ரிட்ட சாபம்பொ லாதசேத, மன்ன நீகல ஞாத லின்பெரு மகன்மு கம்மெறும் பின்முகம், நன்ன ரார்தரு மெய்தி றங்கொளு நாமெய் யாவரம் நல்கி னேம். (௯)

உற்ப வித்திடு மைந்தன் மாபல யோக ஞப்சிரும் பாசுர, னெற்ப வித்தல சாள்வன் முற்றவு மினிது காவிரித் தென் கரை, பொற்ப விக்கிர கப்ப திட்டைநீ புரிந்து பேசிவ லிங் கனேச் சொற்ப வித்திர பூசை செய்துவாழ் துன்பு தீருமென் றேருதினர். (௰)

அக்க ணத்தவண் விட்ட கன்றுதன் னகர மெய்தின ராங் குளா, மக்க ணல்வர வாஙக் கொண்டனர் மனேவி யாம்விரு பாக் கிதான், முக்க ணன்பணி யாற்ச ருக்கொடோர் முனேயை யீன்ற னன் மற்றவன், றெக்க ணத்தொரு மேரு வந்ததிற் றேய மெச் சவ ளர்ந்தனன். (௰க)

ஆங்க வண்சில நாளி லேவளர்ந் தான தன்பின்சி ருப்ப னின், போங்க வந்துபெற் றேரி டைத்தவ முஞற்று வான் விடை வேண்டி ஞன், ருங்க ருத்துறு தூல கண்டர்சொற் றனே யு ணர்த்தது செய்துநீ, நீங்க ருந்திறல் பெற்று வாவென நீற ணிந்தன ருய்த்தனர். (௰உ)

கைத்த னுத்திறல் சுற்ற வெஞ்சிறு காளே யாம்பரு வந்த னின், முத்த னுக்குயர் பூசை செய்திட வேமு யன்றனன் காவிரி, நித்த னுட்பவி யாப கத்தன னிக்கை கேள்வி்தி கழ்த் தியே, யத்த னுக்கொரு கோயி லாக்கின னருளி லிங்கதி றீஇ யினுன். (௰ங)

ஆலே யஞ்சிவைக் காக்கி யேசிவை யைப்ப திட்டைசெய் தின்பமாய்க், காலே யுச்சியு மந்தி யும்பிற கால மும்வழி பாடுகள், சோலே யம்புது மலா னேகசு கந்த மும்பொலி வாய்மளரி, மாலே யும்புழு காதி யுஞ்சரி வரவ ழங்கினன் போற்றினன். (௰ச)

---

௰-எற்பவித்து-என்னவுண்டாகி, சொற்பவித்திரபூசை - சொல்லப் பட்ட தூயவழிபாட்டை, ௰க-அகரம்-நகரம்,

ஆத லின்சிரும் பத்த லைப்பெறு மன்ன வன்பெரு கன்பிறு, லீத் லின்பொரு விடையி ஞனடி யேத்து மெய்த்தவங் கூடவே, காத லித்தருள் செய்யு மண்ணல்க டாட்ச வீட்சணஞ் செய்துவந், தோத னிற்கிவ ணென்னை யேண்டுமென் றுசாயி ஞனது கண்டரோ. (௰௫)

எனக்கு வேண்டுவ வென்செங் கோலிரண் டேழு லோக மூஞ் செல்லவுஞ், சினக்கு மன்னவர் கைத்தி றற்படை சிந்து வன்மையு மும்பரின், மனக்கு ரூரமாய்த் தவர்துப் பாலியான் மாய்ந்தி டாமையும் நாளுமென், றனக்கு மன்னதி கார மோங்கவுந் தாழ்வில் வென்றியு மென்றனன். (௰௬)

பொருதி றத்தமா வாதி யாவுநீ புகன்ற வாறுமே பொன்றிடாத், தருதி றத்தவ ரம்மு னக்கியாந் தந்து ளேமென வெம்பிரான், றிருதி நல்கிம றைந்த னன்வர சித்தி பெற்றசிரும்பனல், விருதி னேவலின் விழவு கொண்டுதன் வேலி புக்குநன் வாழுவான். (௰௭)

முதுவ ளப்பிர சண்டன் மந்திரி முன்ப மைச்சகேளிதெனப், புதுவ ணத்தகி லாண்ட நாயகி புணரெ மான்வழிபாடுநன், மதுவ னத்தலர்க் கொன்றை யாதிய வாரி யாற்றியியோகுறீஇ, விதுவ னைந்தவெம் மானெ திர்ப்பட வேண்டினேன்பல்வ ரங்களே. (௰௮)

உருக்கன் பர்க்குவேண் டுவவ னைத்துநல் குத்த மன்னருள் பெற்றயான், மருக்க மழ்ந்தெறி மாலை வாசவன் வருணன் கூற்றெரி நைருதி, நெருக்க வாயுகு பேர னேவரும் நெடியன் வேதன்முன் யாவரும், பெருக்க மாயெதிர் செல்லுமாயினும் வெல்லு வேனெனப் பேசினன். (௰௯)

வேறு.

பழுத கன்றமந் திரியது கேட்டனன் பராபின னினதாணை, யெழுத லத்தினு மேற்றுவ னிகன்றெவ ரெதிர்ப்பினுமவர்தம்மை, யழுத கன்றிட நொறுக்குவ னிறையிடை யாட்சிநீ பெறுகென்று, தொழுத கன்றனன் றந்தைபா லுணர்த்தினன் சொல்லரு மகிழ்வுற்றான். (௨௰)

---

௰௭. திருதி—உறுதியாக. வேலி—நகரம்.

அரசன் வச்சிர வாகுவு மன்பிறை லானருள் பெறுமைந் தன், வரச மர்த்தல கறியவுந் தான்றவ வழியிறைட் கழித் தற்கும், சரச னுளறிந் தாட்சியை மகன்புயந் தனிற்சுமத் தின னப்பான், முரச திர்ந்திடத் திசையெலாம் வென்றிட முன்னி னன் சிரும்போச்சன். (உக)

வேறு.

தலைவன் சிரும்பாசுரன்.

கருடவா கனத்தனுய்க் கையின்வ லப்புரி
மருடரு வாள்கதை வளைவின் னேமிகொ
டிருடபஞ் சாயுதத் திருவ னுய்ப்புவி
புருடவுத் தமனெனப் பொலிந்து தோன்றினுன். (உஉ)

மகன் விரூபாக்கன்.

அன்னமும் வாகன மாக வேறினுன்
பன்னருங் கரத்திவர் பாச மூர்த்தமாய்
மின்னவிர் வெண்மைய வேத மாங்கொடி
துன்னமுன் றிலின்விரு பாக்கன் றேன்றினுன். (உரு)

மாமன் பிரவிருத்தன்.

உருப்பிர காசவெள் ளானை யூர்திதான்
மருப்பிரு பானுநான் கொளிரு மற்றதைத்
திருப்பினுன் வச்சிரஞ் செங்கை யேந்தினுன்
விருப்பினுற் றடற்பிர விருத்தன் வந்தனன். (உச)

மருகன் சடன்.

சிருவமுஞ் சிருக்குமே செங்கை யேந்திமாண்
வருவனத் தபயமும் வரத முங்கொடு
பொருவளம் பெறுகிடாய்ப் புறத்தி னேறிநீ
டுருவவக் கினியெனச் சடன்முன் னேங்கினுன். (உரு)

மகளுக்கு மகன் கேசகேசரி.

இயங்கமே தியின்வெரி னேறிப் பாசமு
முயங்கவண் டண்டமு முறுகை யேமனுய்ப்
பயங்கர வக்கிர தந்தம் பாங்குற
வயங்கச கேசரி வடிவுற் றூர்த்தனன். (உசா)

மைத்துனன்கிருசனன்.

புரவியி னேறியே பொருந்து மங்குசம்
விரவிடப் பரிசையும் வேய்ந்து மேய்படு
வரவின னுகிமா மருத்தி ராசனு
வுரவியன் கிருசன னுருக்கொ டேற்றனன். (உஎ)

பேரன் புட்கரன்.

பொருவையச் சகத்திர விதழ்கொள் பூங்கைய
தருணனுய் மகரமே தாங்கு மூர்த்தியா
யருணனு மதியுவந் தடங்கு மாலவை
வருணனுப் புட்கரன் வடிவந் தாங்கினுன். (உஅ)

தம்பி மகாந்தகாசுரன்.

குருத்துவந் துயர்சரா சரங்கை கூப்பவே
யுருத்துமோன் புறுகலை யூர்தி யேறியூர்
திருத்துவண் சிகரஞ் சிதறச் செவ்விறன்
மருத்துவாய் மகாந்தகா சுரன்முன் மன்னினுன். (உகூ)

மகாந்தகனது மாமனுகிய முற்கரன்.

வல்லியன் மகாந்தகன் மனையைப் பெற்றவோர்
நல்லியன் மாமன்முற் கரனற் றண்டொடு
செல்லியற் சிவிகையிற் சிறக்க வேறியே
வெல்லியற் குபேரனில் விளங்க லாயினுன். (௩0)

மயன், விகடன்கடன்மார். சேடி.

தேவகம் மியனென மயன்றி கழ்ந்தனன்
மாவிக டன்கடன் வயித்தி யர்ப்பொர
மேவினர் செடியுமுன் விளங்கி நின்றனன்
கோவிவர் படையொடுங் குழீஇப்ப டர்ந்தனர். (௩க)

அயன்பாற்போர்,

வரதமு மபயமு மலர்கை காட்டிமுன்
விரதமா விடபமே லேறி வெல்கொடி
சரதபாப் பிடித்தயன் றலைமை கொண்டிட
விரதமாக் குளிகனி லெதிர்த்து நின்றனன். (௩உ)

வேறு.

சோத னைக்கெதிர்த் தான்சிரும் பாசுரன் சொட்டை
சாத னைக்குடர் முசலமுன் பேவினன் றண்பூ
வேத னைத்தொட விடுத்ததைத் தடுத்தயன் விரைந்து
காத னைப்பொரு பொருசத்தி யேவினன் கடிந்தான். (௩௩)

உகூ. மருத்து—காற்று. ௩க. வயித்தியர்—அசுவினிதேவர்கள். ௩உ. தலைமை—தலைமயக்கம். ௩௩. சொட்டை—ஓராயுதம்.

பின்னு மன்னவன் பீத்திரா வணத்தனைப் பாசந்
துன்னு மாறறக் கோட்டினன் சுரும்பலர்ப் பிரமன்
வென்று முனெதிர்த் தனன்பிர மாத்திரம் வீச
முன்னு னுக்கினன் சிரும்பன்காண் முண்டகன் வியந்தான். (௩௪)

எதிர்த்து வெஞ்சினத் தேறிமால் படையினை யேவி
விதிர்த்து வாளினத் திரத்தினற் பிரமன்விழ்த் தினனற்
பொதிர்த்து திர்த்திடப் பொருமிருப் புலக்கையாற் புடைத்தே
யதிர்த்தி யாலயன் கமண்டல மண்டமேற் றினனல். (௩௫)

மாலை யேபடைந் தனனயன் சிரும்பனு மணித்தேர்
மாலை யேவிமா லூர்புக வான்வழி வந்தான்
காலை யேமக னஞ்சிவந் ததுகண்ட கார்மால்
காலை யேயுளங் கொண்டனன் கலங்கினன் சூழ்ந்தான். (௩௬)

மாத வச்சிரும் பானவண் வந்தனன் மாயன்
சூதன் வஞ்சமே துணிந்தன னசுரர்கோன் றுணிந்து
போத வஞ்சமும் வாணமும் விடுத்தனன் பூமேற்
பாத லங்களும் விடுக்குமாற் றடுத்திடைப் படுத்தான். (௩௭)

சுரிகை வாளயில் குலிசஞ்சக் கரம்பிண்டி சூல
மெரிகை யார்மழு வீரும்வாள் கவணிருப் புலக்கை
முரிகை யாற்றுதண் டிருப்புமுண் மூக்கரி கத்தி
கரிகை செய்சாம் முற்காங் கணிச்சிநா ராசம். (௩௮)

படைக்க லங்களாற் றொளைபடப் பகைவர்நெஞ் சகழ்ந்து
மடைக்க லுங்குரீ ரோடுவ போல்வடி செந்நீர்
முடைக்க வந்தமுண் டாடுவான் முனைமுடு கசுர
னிடைக்க லந்திலாப் பிரமன்மால் வரப்புகுந் தெதிர்த்தான். (௩௯)

சக்க ரத்திரு மாலின்மேற் சாந்தொடுத் தேவி
யக்க ரத்தினற் றள்ளிடத் துள்ளிப்போ யகன்ற
வுக்க ரத்திறுங் கொடியவே லசுரன்விட் டுலப்பி
லெக்க ரத்தொலி சுரிசங்கைத் துளைக்கவெக் கினன்மால். (௪0)

---

௩௪. பீத்திராவணத்தன்–வீம்பு பேசுதல் பாடினவன். ௩௫– மால் படை—மோகாத்திரம், ௩௬ மாலை—திருமாலை, மாலை–வரிசையை. காலை–கண்டகாலை, காலை–இருளை, ௩௭ வஞ்சம்–வாள்– வாணம்–அம்பு ௩௮, அயில்–கைவேல், கலப்பை, குலிசம்– வச்சிராயுதம், பிண்டி— பிண்டிபாலம், (எறியாயுதம்) முற்காம்–ஓராயுதம், சம்மட்டி. கணிச்சி—கோடரி, முட்கோல், உளி, நமனுயுதம், நாராசம்–இருப்பாணி‘ சலாகை, ௪0, அக்கரம்–எழுத்து, (மறை) உக்காத்திறம்—அஞ்சும்படி அரத்தை முறிக்கும். உலப்பில்எக்கரத்திவர்—கெடாது மேலேறப்பண்ணச்செவ்விதொலிக் கும், எக்கினன்–வற்றிவளைந்தனன்.

வேறு.

தேவரு மிங்கிது கண்டுந டுங்கினர் திசைதோறு
மேவரு மஞ்சிய கன்றுட னோடின ரிவ்வேளை
பூவரு வோனுமொ ளித்தனன் சங்கணி பூணாழி
மேவரு மாயனு மோடினன் வேறெவர் வெல்வாரே. (சக)

அப்படி யோடிய பின்சிரும் பானரி யூராட்சி
கைப்படுத் தாண்டய னூர்முதற் றன்னவர் கைகொப்பித்
திப்படி வல்லர சாவிருந் தாண்டன னிவனுண்மை
முப்படி யுஞ்செல மாறிய சீர்சொல முடியாதே. (சஉ)

அன்னவ னுக்கிற் காலமு மின்றிம னவனுணுள்
சொன்னவ சுந்தரை யோரிடர் துய்த்திட மாட்டாமற்
பின்னவ சந்தொலை வித்திட வெண்ணினர் பெறுகால
மன்னவ ருந்தல மேதென நாடயன் மால்சென்றார். (சங)

முக்கணர் தென்றிசை வில்வவ னத்தினு முன்னுதித்
தெக்கண காசிவ ளம்பொலி செண்பகப் பொழிலின்க
ணிக்கண மெய்திடி னெம்மிறை பங்கினி ருக்குந்தாய்
மைக்கண மல்லல றுக்குமென் றுற்றனர் மான்முன்னோர். (சச)

செங்கம லத்தின்ம லர்ந்தவ ருட்கணி திருமுன்போய்
தங்கரு ணீடுமீ னாட்சிதென் காசிவி சாலாட்சி
பொங்குகா மாட்சியே யுன்னையன் றிங்கொரு புகலின்று
லெங்களை யாள்வது நின்கட னென்னவி றைஞ்சிட்டார். (சரு)

அஞ்சலி ரஞ்சலி ரும்பர்க ளேயுமை யானுள்வ
னெஞ்சமஞ் சாதிரு மென்றப யந்தர நிலைகொண்டார்
நஞ்சமர் கண்டனி டத்துல கம்மையெ னுதாகின்
றஞ்சமெ னுதிவ ரெனனிடை வந்ததென் சாற்றென்றாள். (சசு)

என்னைம தித்தில ராகியி ரந்தவ ரினிதுய்ய
முன்னைவ ரக்கொடை பின்னையொர் கேள்வியென் முறையென்று
னன்னைம கிழ்ந்தெனி ரக்கம வாறுள தாலேது
முன்னைய லாதிய லாதது முன்னுடை யுரனென்றாள். (சஎ)

---

சஙு—அவசம்—மயக்கம், மன்ன—நிலைபெற, சச—வில்வவனம்—கடயம், அப்பர்—வில்வவனநாதர், அம்மை—நித்தியகலியாணி,)

சிரும்பனை நம்வரம் மேம்பட வைத்தமை தேர்ந்தின்னோர்
தரும்பத மாற்றலி றன்மைய றிந்தனர் தாழுய்ய
விரும்பிநின் பாலினி ரந்தனர் சூரனை வெல்லற்கோ
ரரும்பல ருன்னையன் றுருமி லாமையி னுய்த்தீண்டே. (௪௮)

மற்றவ னூளையி வண்வரு வானமர் வலிதாகுங்
கொற்றமு னக்குறு மச்சிரும் பன்னமன் கொன்றேங்கும்
நற்றவர் பேறுநல் கென்றருள் செய்தன னப்பன்றான்
பற்றடி யார்க்கரு ளம்மைம கிழ்ந்தனள் பரிந்தென்றான். (௪௯)

## சிரும்பாசுரன் திக்குவிஜயஞ்செய்த படலம்முற்றிற்று.

ஆகப்பாட்டு ௬௱௰௭.



## இருபத்திரண்டாவது

# சிரும்பாசுர சங்காரப் படலம்.

சிவனருச் சனைத்த வங்கூர் சிரும்பனீ ரேழ்பு விக்குந்
துவசவல் லாசாத் திக்கு விசயமா டியசீர் சொற்று
மவனெதி ருடைந்த யன்மா லாதியோர் சரண்பு கக்கரண்
சிவைபய யந்தந் தந்தச் சிரும்பனை வெல்சீர் சொல்வாம். (௧)

சூதமா முனிவன் கூறத் துகளினை மிசத்து மெய்யர்
மாதவன் முதலோர் சீர்த்தென் காசியின் வந்து வேண்டி
னுதரித் துலகம் மைகாத் தருளிய விரக்க மேனு
மோதசு ரன்மா சைவ னுவற்கொல லாமோ வென்றார். (௨)

சிரும்பசங் காரங் கேட்டாற் றிறனது வெளியா மன்னேன்
விரும்பலர்ச் சேறித் திக்கு விசயமா டினனென் றுனும்
வரும்படிக் கவ்வ வேந்து வழிப்படு மளவு மன்னுய்த்
திரும்பவொப் புவிக்கு மெண்ணஞ் சிறிதுமின் றெடுத்த லாமோ

குடிலநா லொழுங்கு பற்றிக் குற்றவா ளிகளை வென்று
கடியிலன் னோர்தொட் டன்னோர் கால்களீ ருவேர் கல்லுங்
கொடிய னுய்த் தமர்க்கே யாக்கங் கொடுத்திடப் பார்ப்பானுறைற்
படிமுழு துடைய நங்கை பரிந்திடா திருத்தலாமோ. (௪)

இன்றுநீர் வினுபாங் கேயென் னிறைவியா தனின்பாற் கேட்டே
னன்றவ னிறைநன் றேருதி யருளியாங் கறைவல் கேண்மின்
மன்றனே வென்றோ ருடு மகிழ்ந்திட வொழுக்கம் பேணி
நன்றுசெய் யான்றன் சுற்ற நயக்கவிட் டான்மாழ் குற்றுன்.(ரு)

மன்னனுஞ் சிரும்பன் பானு ரதன்வர மகிழ்ந்தன் பாற்றி
யென்னகாண் புதுமை யென்று னிறைவதென் காசிநாதன்
முன்னர்சே வைக்குச் சென்றேன் முருந்தனு தியரைக் கண்டே
னுன்னத ராத்த வஞ்செய் தூலகனே சரணு வுற்றுர். (சு)

சிமையவெண் கயிலை புக்குச் சிவனையர்ச் சிக்கு மந்தச்
சமையநீ யேவரா னுஞ் சாவிலா வரம்பெற் றுயே
விமையமீன் றெடுத்த தெய்வ விளம்பிடி யிறைவன் பாங்கா
ருமையவ டனைவ ணங்கா தற்றதா றுனக்கென் றிட்டான்.(எ)

குலவது கேட்டு மாற்றங் குறித்தடக் கினன கைத்துப்
புலவரை யுழைத்தன் ஞேரர் புக்கா சாள்வித் தேயா
னிலவித முமைத்தாய்க் குள்ள மிரங்குவான் செய்வேனென்றுன்
சொலவியாழ் முனிவன் மன்ன சொற்றதென் முறையீ தன்றே

ஒருத்தியைப்பெண்ணென்றெண்ணு புளந்தளர்ந்தெளியவார்த்தை
திருத்தியின் மொழிந்தாய் மன்னர் செப்கையீ தோவெல் வேந்தே
யிருத்திநீ யும்பர் தம்மி னியாவரே யுன்முன் னிற்பார்
கருத்தினை யேல்சி ரும்பா கடிந்துவாழ் கென்றுன் சென்றுன் ()

பொருவதற் கெழுப்ப யாழோன் போந்தமை யறிசி ரும்பன்
தருவள முயர்தென் காசிச் சண்பகா ரணியத் தும்போய்த்
திருவளர் தேவி முன்புஞ் செப்புவா னிவன்பல் கோள்கள்
பருவா னுறுமும் பர்க்கும் பகருவான் பலவென் றோர்ந்தான்.(ம)

காவிரிக் கரைக்கண் கோயில் கட்டியா னுமாப திக்கு
மாவிரி வாய பூசை மாடினன் வரம்பெற் றேன்மேற்
பூவிரி கைலை யும்போய்ப் போற்றினன் மறந்தி லேன்யான்
றேவியை நாா தன்சொற் றிறம்பின னென்றுள் ளாய்ந்தான்,(மக)

உலகவாழ்க் கையைச்சி றப்பா வுகந்தவென் னினமென் போன்று
நலகருத் திலாரய்ப் பார்க்கு ஞயம்படு செயலி முந்தார்
விலகலாந் தேவ ரென்பான் மீண்டிரந் திறைவேண் டாமற்
கலகநோக் கினரா னுர்யான் காவலாற் றுயர்க்கா ளானேன்,(மஉ)

---

ரு-மாழ்குற்றுன்-மயக்கமெய்தினுன், மக-மாடினன்-செய்தேன்.

இறப்பிலா வரம்பெற் றூறு மிதரரும் பணிசா டாட்சிச்
சிறப்பிலா னூனே னெற்குச் சிந்தையில் வெறுப்புண் டாய்த்தான்
மறப்பிலா வுமைபாற் றூனே வலியபோ ராடி மேம்பா
டுறப்பிலா விலிங்கங் காய்க்கு மூர்புகு வேனென்றூனல் (௰௩)

வேறு.

நாரத னேங்குதென் காசி நண்ணினன்
பூரத சாரதி முதலோர் புன்கணீங்
கோரதர் வேண்டியாங் குறைவர் முன்புகச்
சூரதன் மத்தினைச் சொல்கென் றூர்சொல்வான். (௰௪)

அதர வொடுவிற லசுர னனவன்
சீதான் வைகுண்டத் திரட்சை செய்கிறான்
காதரந் தீர்மகன் கமலத் தோன்றூழில்
வேதரஞ் சகவிரு பாக்கன் செய்கிறான். (௰௫)

அங்கவன் மாமனும் பிரவி ருத்தனோர்
புங்கவ னிந்திரன் புரத்தைக் காக்கிறான்
துங்கவன் சகோதரி துணைவன் மைத்தனன்
றங்கவண் கிருசனன் மருத்திற் றூழ்கிறான். (௰௬)

உற்றவன் மருகனுஞ் சடனு தாசனன்
பெற்றவன் புயர்தொழில் பிறங்கச் செய்கிறான்
பொற்றவன் போனும் புட்க ரன்புனற்
கொற்றவ னுட்டையாள் கோவ தாயினன். (௰௭)

மன்னவன் றம்பியா மகாந்த காசுரன்
தென்னவக் கிரகரா சரிக்கஞ் செய்கிறான்
நன்னவா யுவினகர் நயந்து முற்கர
னென்னமா மன்னள கையின்க ணெய்தினன். (௰௮)

இயக்குமன் மகடவத் தீன்ற மைந்தனும்
வயக்கேச கேசரி மறலி யாயினன்
நயக்குவல் லரசனி னன்ப னுஞ்செடி
செயக்கட வினுக்கதி காரஞ் செய்கிறான். (௰௯)

---

௰௩-இதரர்-அயலார். பிலாவிலிங்கங்காய்க்குமூர்—பலாமரம்இலிங்கமாகக்காய்க்குமூராகியதென்காசி, ௰௪-பூரதசாரதி-பிரமதேவன், ஓரதர்—ஒருவழி.சூரதன்மத்தினை—சிரும்பாசுரனதுஅதருமத்தை- ௰௫- காதரம்—அச்சம், ௰௬-மருத்து—மருத்துச்சக்ரவர்த்தி ௰௭-பொற்றவன்—அழகியமேலோனது,புனற்கொற்றவன்—வருணன்,௰௯இயக்குமன்-உலகத்தைநடாத்துஞ்சிரும்பன், மறலி-யமன், செடி. ஓரசுரன்- செயக்கடல்—வெற்றிவேலை,(சேனை,)

குடியிடத் துளமயன் கோவிண் டச்சனுப்
படியிரு தரவதி காரம் பண்ணுவா
ளிடியிசை விகடனுங் கடனு மென்றிவர்
வடியித மருத்துவர் பதத்தின் மன்னினர். (உ0)

ஆயின ரீண்டதி காரஞ் செய்துமேற்
போயினர் தேவரைப் புகுந்து பற்றவு
மேயின செய்கையுள் ளெணிப்பிற் றைக்கிவண்
டையினன் னுவரெனுந் தெரிந்த தென்றனன். (உக)

அன்னவ னுங்களை யாண்டுங் கண்டிலன்
பொன்னவிர் சண்பகப் பூம்பொ ழிற்கணே
சொன்னவ கன்னிமார் சூழுந் தேவிபான்
மன்னவந் தமைநென்னன் மதித்துக் கொண்டனன். (உஉ)

திங்களைத் தாழ்த்தொளி திகழுஞ் செம்முக
மங்களை தஞ்சமா வதித றேர்ந்ததும்
வெங்களை களைவபோல் வேர்ப்பி டுங்கலா
வுங்களைக் கொடுசெல வுரத்தல் கண்டனன். (உ௩)

பழுதிலா வுமக்கதை யறியப் பண்ணவே
யெழுதிற லுற்றிவ ணெய்தி னேனென
வழுதிடு விழியார் யமா ரஞ்சுபப்
பொழுதினி லவனிறு காலம் பூத்ததால். (உச)

நன்றியா ருலகெலா முடைய நங்கைதான்
வென்றிமைப் பொழுதினில் வீய்ப்ப துண்மையாற்
கன்றிலி ரஞ்சிலிர் கருணை நாயகி
முன்றிலின் பாமென மொழிந்து சென்றனன். (உரு)

என்றவச் சிரவிரத் தினச்சிம் மாசனந்
தோன்றவ னருளணி மாதி சூழ்தர
வான்றவர்த் தனைக்கொலு வமரு மம்மைபாற்
சான்றவ னாதன் றனியெய் தேத்தினன். (உசா)

---

உ0.கோவிண்டச்சன்– விசுவகர்மா,இடியிசை — பேர்சேட்கடுக்க
ந்தரும்புகழையுடைய, மருத்துவர்பதம்—வைத்தியர்பதவி,(அசுவினிதேவ
ர்இடம்,)உக-பிற்றைக்கு—நாளைக்கு, உஉசொன்னவ-புசழ்ப்புதமையை
யுடைய,சொல்லப்பட்டஒன்பது,நென்னல்—நேற்று.

வந்தனஞ் செய்தனன் வாய்பு தைத்துநின்
றெந்தநல் லுலகுமா ளிறைவி யேயிவ
ணந்தர விந்திர னயன்விண் டாதியோர்
வந்தனர் வாழுவார் வரமன் றேர்ந்தனன். (உஎ)

அடைக்கல மாகவந் தவரை யுய்த்தலாற்
படைக்கல முடனிவண் படர்வன் போதுமென்
றிடைக்கலந் ததிலெனக் கெட்டிற் றேநினன்
சடைக்கல னென்றனன் றாய்நக் குற்றனள். (உஅ)

சீரத நெறியவன் செலல்விட் டில்லனே
வீரதந் திரப்பெலன் மேவு வல்லனே
சூரதந் தளத்துனை சோர்வில் செல்லனே
நாரத கூறென நவிற்ற லாயினுன். (உகூ)

எத்தனை யிருப்பினு மிறைவன் றந்தவே
வத்தனை யும்முழு னடல்கொள் வல்லவோ
பித்தனை யடைந்தவொர் பெண்ணென் றெண்ணினு
னித்தனை மணந்ததாய் நிலைமை தேர்கிலான். (௩0)

என்றியம் பினனியாழ் முனிவ னெங்கணும்
நின்றியங் குயிர்தொறும் நிறைந்த வம்மைதான்
வன்றிற லவனையான் மதித்துஞ் சேறிநீ
நன்றினிக் காணென நயந்துற் றுளரோ. (௩க)

பொறியுள வமரரைப் போது சூழ்குழற்
குறியுடை மாதராங் கோலங் கொண்டுறச்
செறியுநோக் கருளினு டேவி யப்படி
யறியுநல் லாரென வவருந் தோன்றினர். (௩உ)

வேறு.

கோடி தேரெழு கோடிகள் குஞ்சர
மாடி யேறும ருங்கதி வாம்பரி
சூடி யாயிர கோடிகள் சுற்றிட
நீடி யாள்களா நின்றன ரெண்ணிலார். (௩௩)

---

௩௩—சூடி—அலங்காரம்பண்ணி.

அன்ன வேளைசி ரும்பன னீகமுங்
கன்னல் வேலையிற் கத்திபோர் சார்வரச்
சின்ன வொற்றுவிட் டுண்மைதெ ரிந்தனன்
மின்ன னார்குழு மீறிநின் றிற்றென. (௩௪)

கால நன்றெனக் கண்டசி ரும்பனுள்
ளாலன் பாய்ப்புறத் தார்த்திவர்ந் தேயதர்ப்
பால தாயொரு தூதுப யிற்றிவிட்
டேல வார்குழ லீசியுட் டேருவான். (௩௫)

வேத ரஞ்சக னும்விரு பாக்கனற்
காத லன்றனை யுய்த்தனன் கண்டுமை
தூத வந்ததென் சொல்லென பூர்வதே
வாத வர்தலை வன்சிரும் பாசுரன். (௩௬)

சைவ னீதித ஞதவ னும்பரைத்
தெய்வ நல்வரங் கொண்டுசெ யித்தனன்
மெய்வ ளம்படை வீறில வர்முறை
செய்வ தற்கதர் தேர்ந்தில ரோடினர். (௩௭)

வெந்நிட் டாரைவி ரட்டல டாதென
நன்ன ரன்னவர் நாடுமுற் றுண்டுளான்
பின்னர்ப் பேதக ராயவர் பீடுயர்
மன்ன னுக்கிடர் மாடவிங் குற்றனர். (௩௮)

பீடி லாவவர்ப் பேணலிற் றீதுபின்
பாடி னுபொருப் பம்மசொ லன்றவ
ரோடி டாவண மொப்புவி யல்லையே
லீடில் போரெழு மெண்ணமெ னென்றனன். (௩௯)

மைந்த வுந்தைவ ழாஅநெறி நிற்பினும்
நொந்த டைந்தவர் நொய்மையு மற்றவர்க்
கிந்த நாடிட மீதலொண் ணுமையு
முந்த ரத்தறி விப்பினு ணர்த்திலான். (௪௰)

---

௩௪—அனிகம்—படை. கன்னல்வேலை—கருப்பஞ்சாற்றுக்கடல். வர—வரவும். சின்னவொற்று—சிறுபிள்ளைகளாகியவேவுகளை. ௪௰—உந்தரத்து—வழியாக.

ஆத லான்முன வர்க்கப யம்மியா
னீத லாய்த்தினி யென்செய லாஞ்சுரர்க்
கேதந் தீர்த்திட லென்கட னென்றனள்
வேத சத்திசொல் வேண்டின னோதுவான். (௪௧)

அம்ம வாண்மையும் பெண்மையு மாய்த்திடிற்
செம்மன் மாரடு போர்செயல் சீரதோ
பொம்ம லார்க்கொடு போருநங் காட்டுதி
பம்ம வர்க்கவர் பண்டனஞ் செய்கென. (௪௨)

மெய்ய வும்பரைக் காட்டிவி டற்கியான்
செய்ய வாக்கருள் செய்தில னென்றனள்
வைய வாண்சுரர் பெண்களாய் மாறினார்
நைய்ய வாண்பெணாய் நாடக மாடினும். (௪௩)

பூவை வேந்துருப் போட்டுந டிப்பினுங்
கோவைப் பெண்ணெனல் கோதையை ஆணென
லேவர் தேர்ந்தபா மின்றெதிர்ப் பேமினிப்
போவந் தாடெனப் போந்தனன் செல்வனே. (௪௪)

தனையன் வந்தனன் றந்தைகண் டப்பவீங்
கனையென் சொற்றன ளாடென வாடினான்
வினைய வாறுறின் மேலெனை செய்பலாம்
முனைமு யல்கெனத் தக்கைமு ழக்கினர். (௪௫)

சண்ட மாருதம் போன்றுத னித்தனி
மண்ட வான்கதிர் மாலைவ னைந்ததேர்
கொண்ட வாணுதற் கோதைய ரேறினா
ரெண்ட னின்மருத் தேறிந டத்தினாள், (௪௬)

பூட்டு வாணுதற் பூஞ்சிலைக் கேகணை
யாட்டு வாள்விழி யண்டமுஞ் சூழ்வரக்
கோட்டி யீசன்கு றுஞ்சிரி போற்சினந்
தீட்டி நல்லவ ரெல்லவ ரும்மெழீஇ. (௪௭)

கருமு கிற்குலஞ் சூழ்கக னத்திடை
பெருமு ழக்கொடு பேர்ந்துமின் மின்னியார்த்
துருமு மாரிசொ ரிந்திட வுற்றபோற்
செருமு தானவர் சேர்களத் தெய்தினார், (௪௮)

---

௪௨-பண்டனம்—போர். ௪௬-எண்டனின்—மனவேகத்தில். ௪௭—ஈட்டி-குந்தம், சவளம். ௪௮-ககனம்-ஆகாயம். உருமு—இடியுடன். செருமு—நெருங்கிய.

செருக்க ளந்தனிற் செல்லிரு பாற்படை
வருக்க மும்மலை யோடும லைபொர
னெருக்க மொத்திய னீணிலை காண்பவர்
வெருக்க தங்கொள வெவ்வம ராயதே. (௪௯)

அத்தி யூனுடற் கங்குசந் தொட்டுயர்
சத்தி யூட்டுசெண் டப்பிர சண்டன்மேற்
றுத்தி யாருர கப்படை தூண்டினாள்
வித்தி யாயையொ டித்தனன் வில்லினால். (௫௰)

வித்தி யாயைவெ குண்டம்பு தூர்த்திட
வெத்தி யாயிர வெஞ்சர மேவினான்
கத்தி யாலவன் கண்டம றுத்தனள்
புத்தி யார்மடம் போக்கினள் விண்ணுற்றான். (௫௧)

ஆலம் போல்விழி யாள்பிரஞ் ஞைநுதற்
பாலம் போர்ந்துவிட் டான்விரு பாக்கனச்
சீலன் றீமைக டரவ வண்முனீஇச்
சூல மோச்சினள் சூரவின் ணேறினான். (௫௨)

மிக்க நீள்வில்வ ளைத்துவி தக்கணன்
றொக்க தீச்சரந் தூர்ப்பவி ருத்தைதான்
றக்க வன்முச லங்கொடு சாடினாள்
புக்க கோற்கள் பொடிப்பொடி யாயவே. (௫௩)

எந்த வத்திர மேவினை யாயினு
மந்த முற்றுமிவ் வாறடிப் பேனென
முந்த வாண்மைமு டித்தனு ரைத்தவன்
சிந்த மண்டைநெ ரிப்பவிண் சேர்ந்தனன். (௫௪)

கிருச னன்விரைந் தேகிளர் காந்திமேற்
பொருச மத்தினிற் பூட்டினன் றண்டமே
யொருச ணத்திலொ டித்தனைக் காந்திவேல்
வருச மாவிட மாண்டுவிண் ணேறினான். (௫௫)

---

௪௯—வெருக்கதங்கொள—பயங்கொண்டு ஓடும்படி. ௫௨—முனீஇ—முனிந்து. சூரவின்—வீரசுவர்க்கம். ௫௩ முசலம்—உலக்கை. கோற்கள்—அம்புகள்.

கருதி வெங்கொலைக் கச்சவி யாபினி
யொருதி றற்படை யூடுபு றங்கொடா
விருதி ஞன்புட்க ரன்விடு வச்சிரம்
பொருதி றந்தெரி போதெதி ராடினுள். (ருசு)

வச்சி ரப்படை வந்ததை வாங்கியே
மூச்சி ரத்தயி லரலவன் முச்சிகிண்
டெச்சி றுந்தலை யெற்றியு ருட்டியே
யச்சி ரத்தனை யந்தரத் தேற்றினுள். (ருஎ)

கிருத்தி மப்பரை நேர்கெச கேசரி
கருத்தி னற்புத மாக்கட கத்திறற்
செருத்தி றத்தினைக் காட்டினன் சிரியத்
திருத்தி கண்ணெரி சிந்தி யெதிர்த்தனள். (ருஅ)

நம்பன் முப்புர நக்கெரித் தென்னவே
வெம்பு கண்ணழல் வீசியெ ரித்தனள்
செம்ப தம்மவன் றீந்தமெய் தீண்டலின்
வம்ப ருமலர் வான்புக லாயினுன். (ருசு)

அயிலை யென்பவண் முன்விக டன்வரா
வெயிலை யோரட்டழல் வெஞ்சரம் வீசினுன்
கயிலை யான்சராங் கையிலெ டுத்தெழின்
மயிலை நேரவள் வஞ்சனை வாட்டினுள். (சூ0)

பக்க லாயிர பாணமெ டுத்துட
லொக்க வேறிட வேகட ஞேச்சினுன்
சுக்க லாவவற் றைத்தொலைத் தூர்ச்சித
னுக்க நைத்துயி ரும்பருக் கேற்றினுள். (சூக)

ஆல காலவி டம்மனை யான்மயன்
பாலநேர் காண்டம் பைரவிக் கேவினுன்
சில மாரவள் சிந்தியவ் வம்பினைச்
சூல காகோத ரப்பாணந் தூர்த்தனள். (சூஉ)

---

ருஎ. மூச்சிரத்தயில்-சூலம், எச்சு-எய்த்து. ருஅ, கிருத்திமப்பரை—பூதகணங்களையுடையதிரிபுரை, திருத்திஎன்பவளுமஅந்தப்பூரணியே, சூ0—வரா—வந்து. சூக-உக்க-இற்றுப்போகும்படி, சூஉ-பாலநேர்காண்டம்—நெற்றிக்குநேரம்பு, காகோதரப்பாணம்—நாகபாணம்,

மயனு மோடினன் வன்மைகொள் வீரிதான்
கயனு ரத்தெழுங் காலையெ திர்த்துமே
பயனு றுத்தழிக் கும்படி சக்காச்
செயனு வன்றிட வேவிச்செ யித்தனள். (௬௩)

செடிய னென்றதி றற்படு தானவன்
படிய வேயரி சூரியைப் பத்தியான்
முடிய யேவினன் பார்த்தனண் முற்படஇக்
கொடிய கண்ணழல் கொட்டிவின் னேற்றினள். (௬௪)

சிங்க வாகினி யாள்வச் சிரப்படை
துங்க வாகுவைச் சூழ்ந்துசி தைத்திட
சங்க வார்குழை யாள்சரண் பெற்றவா
றங்க வன்மெய் யழிந்துவின் னேறினன். (௬௫)

சிரும்ப னுந்தவச் சீர்த்திகொண் மன்னவன்
விரும்ப வன்படை வீழ்ந்தமை காணவே
யரும்ப விழ்மல ரார்ந்ததே ரேறினன்
பொரும்ப டைக்கலத் தானைசூழ் போந்தன. (௬௬)

எட்டி லக்கவெண் டேர்பரி யெண்ணில
தொட்டி லக்கக யங்களுஞ் சூழ்வர
வொட்டி லக்கவை யத்தினு டெய்த்தெழீஇ
மட்டி லக்கறி யாச்சினன் வந்தனன்; (௬௭)

திசைய டங்கலுஞ் சேர்ந்தெழல் போலவன்
வசைய டங்கவ குத்தணி வந்துசூழ்ந்
திசைய வேழ்கடன் மாந்தெழு மங்குலிற்
பசைய றக்குடிப் பானினின் றனரோ. (௬௮)

கண்ட தேவராங் காரிகை மாசெலாங்
கொண்ட வச்சமீக் கூர்ந்தொரு வற்கிட
மெண்டி கைக்கணு மின்மைகண் டோவிடச்
சண்டி காதியர் சாத்தினர் கண்ணரோ. (௬௯)

ஒருவ ழிக்கொடு ரத்துநின் றூரவர்
பருவ ரற்குறி பார்த்துநக் குற்றசுர்த்
திருவ னுட்கொடு சிந்துசி னத்தனின்
மருவன் பான்மலர் வாளிமுன் றூர்த்தனன். (௭0)

---

௬௭—வையத்தின்—தேர்களின்,

ஆரி யைக்கெதி ராயடுத் தானறி
வீரி கைக்கொடு வாள்பிறை விற்சரஞ்
சூரி வைத்தவை தொட்டெறிந் தார்த்தனள்
சாரி யைப்படி தானவன் சூழ்ந்தனன். (எக)

இட்ட பாதகை யாளிட பத்தினள்
தொட்ட விற்சரஞ் சோர்விலள் வஞ்சனி
யட்ட வீரக லாபவெந் நார்ந்தெழீஇ
நட்ட மாடின ணங்கைபொன் னங்கையே. (எ௨)

மாரி நீலிவ ராகிவ கேவெம்
போரின் வென்றிவர் பூவையர் தண்ணறு
நாரி லேறும லர்ப்புனை நாகமார்
தேரி லேறினர் சீறிமுன் வந்தனர். (எ௩)

அட்ட பைரவி யட்டமா காளிமா
துட்ட மாலினி சூலினி யோகினி
விட்ட வாணவில் வீசலந் தண்டகி
மட்டில் வன்கொடு வாளங்கு சத்தியே. (எ௪)

பாத்தி ரத்திக பாலத்தி பாம்பிடு
சூத்தி ரத்திபீத் ராவணி சூரிமான்
வேத்தி ரத்திரி வெஞ்சமு தாட்டியாள்
காத்தி ரத்தொனி யாள்சங்கு கன்னியே. (எ௫)

அக்க மாலைய ளங்கையு லக்கையள்
பக்க மந்திர கருணி பகவதி
மிக்க வெக்கலா வெம்மழு வோச்சுவாள்
தூக்கை மான்சுடர் வச்சிரை சோபணி. (எ௬)

சோனை மாரிய தாச்சொரி யத்திரம்
வானை மூடிவந் தேறிட வன்சமர்த்
தானை தேர்பரி தட்டழி யப்பெருங்
கானை யாறெனச் சோரிக டாவவே. (எஎ)

---

எ௪- வாணவில்-அம்பும்வில்லும், வீசலம்-வீசுங்கலப்பைப்படை. எ௫ பாத்திரத்தி-தகுதியுடையவள், பாம்பிடுசூத்திரத்தி-பாம்பை கழுத்திடுகயிறாகவணிந்தவள், பீத்ராவணி-வீம்பு பேசும்கரிய நிறத்தினள், சமுதாடு—ஓராயுதம். சங்குகன்னி—சங்கக்குழையையுடையவள், எ௬- தூக்கைமான்—துர்க்காதேவி, எஎ-சோரிகடாவ-உதிரவெள்ளஞ்செல்லவிட.

எடுத்த வல்லிடி யேமெறன வார்த்திடுங்
கடுத்த சொல்லினர் கண்ணழல் சிந்தநின்
றடுத்த டுத்தெதி ராரணி சாரியாத்
தொடுத்த தேர்பரி தூண்டிஞாட் பாற்றினர். (எஅ)

கோடி தேருள கோதையர் வெம்படை
மூடி யேதடு போர்செய்மு றைப்படி
யாடி னாடு போர்செய்சி ரும்பனு
மீடில் வன்சம ராடி யெதிர்த்துளான். (எகூ)

வட்ட வார்குழை மாதர்நெற் றிக்கெனத்
தொட்ட பாணமெ்மான் றுயிரந் தூவலாய்
விட்ட சூருள்ம் வெம்பவ றுத்தன
ரட்ட கர்ளிகள் கண்டுருத் தாடினான். (அ0)

அந்த வாறுருத் தம்மைமார் கோல்விட
வந்த முற்றுமு றித்துவ யங்கினான்
விந்தை தன்கொற்ற வேலைவி டுத்தனள்
சந்த மாதிற் றப்பிநின் றனனோ. (அக)

எட்ட ருட்குணி தம்பிராட் டிப்போய்க்
கிட்ட லாயினள் கேடில்சி ரும்பனன்
புட்ட தும்பியு கந்துகை கூப்பிநின்
றிட்ட காலரு ளேறுகண் சாத்தினள். (அஉ)

சிவைய ருட்செய றேர்ந்தசி ரும்பனச்
சிவைய ருட்கையாற் செத்துய னடினான்
சிவைய ருட்கணத் தேற்றிவர் வித்திடிற்
சிவைய ருட்பதஞ் சேர்பவ னென்செய்வான். (அங)

கோடி கோடிகொ டுஞ்சர மேவினான்
கோடி கோடிச ரங்கொட டுத்தனள்
கோடி கோடிபல் கூழைபோ ராடினர்
கோடி கோடிநின் றீர்ந்தனர் கொம்பனர். (அச)

---

எஅ-சாரியா—உலாவாக ஞாட்பு-போர் எகூ-தடுபோர்—தடுத்தடிக்கும் போர். அடுபோர்—அடுத்தடிக்கும்போர். அஉ-நின்றிட்டகால்-நின்றிட்ட சமயம். அங-அருட்கணத்—அருட்கண்ணனது அந்த. அச-கூழை—படை வகுப்புக்கள், ஈர்ந்தனர்—பிழந்தெறிந்தனர்.

கோட்டி னுள்புரு வச்சிலை கோமளை
வீட்டி னுள்ளன வெங்கனற் கட்பொறி
காட்டி னுள்பிறர் கண்டுக லங்கிடச்
சூட்டி னுள்சிரும் பற்கொரு சூலமே. (அரு)

சூல மேய்க்களஞ் சூலவ கைப்பிடித்
தேல டற்சிரும் பாசுர னீச்சொரி
சால ருட்பதங் கன்னைய டைந்துதாழ்ந்
தோல மிட்டுணர் குற்றுயி ராயினன். (அசு)

அன்ன போதுல கம்மைய ருள்கனிந்
தென்ன மைந்தநிற் கேதவா வென்றலும்
தன்னை யென்னைவெல் தம்பிராட் டிப்பெயர்
மன்ன விவ்விடை வைகிநீ யோங்கியே. (அஎ)

வாதை யாய்ப்பணி வார்க்கருள் வாயெனை
யாத னத்திருத் தாளின்வைத் தாண்டருள்
சாதை யேயெனத் தாயுண்ம கிழ்ந்தவா
றோத மாத்தர வின்பவாழ் வெய்தினன். (அஅ)

அந்தப் போரில ழிந்தவர் முற்றுமே
நந்த மம்மையுண் ணுடிய வாறும்பர்
வந்த மர்ந்தின்ப வாழ்க்கைய ராயினோர்
சந்த மாண்சிரும் பற்குமை தாள்கதி. (அகூ)

பாண்டி யிற்சிரும் பற்கடி நல்கிடம்
பாண்டித் தம்பிராட் டிப்பதை கோயிலாம்
பாண்டித் தாயினைப் பற்றெடி றைஞ்சுவோர்
பாண்டி யிற்பெரும் பாக்கிய ராகுவார். (கூ0)

சிரும்ப னுக்கருள் செய்தம்பி ராட்டியே
வரும்ப னும்பர்ம கிழ்வடி வாய்த்திகழ்ந்
தரும்ப லர்க்கர சையரு ணங்கையாய்
விரும்பன் பர்க்குமுன் மேய்விழி சாத்தினள். (கூக)

---

அகூ—சூல—குடைய, அஎ—என்னமைந்த—என்னுடையபிள்ளாய். கூக—தம்பிராட்டி—வடக்குவாய்ச்செல்வி. அரசையருணங்கை—அரசருணங்கை. இக்காலத்தில்அரசூர்நங்கையெனவழங்குகிறுள். அரிகேசரி பராக்கிரமன் காலத்தில் கோயில்கட்டப்பட்டதால் அரிகேசரிநங்கையெனவும்இடைக்காலத்தில்வழங்கலாயினள்.

பெண்மை நீங்கினர் பெட்புறு தேவர்கள்
வண்மை யாருல கம்மைமுன் வந்தன
ருண்மை யன்புகொ டோலமிட் டேத்தினு
ரெண்மை தீரவெ மக்கரு ளம்மையே. (கூஉ)

அரச ருண்ணங்கை யாயிவண் வைகிநீ
பரசன் பாக்கருள் பண்ணென வேண்டினார்
சரச மார்சுரர் தம்மிடை யானுமக்
கிரச காட்சிநல் கிங்குவேண் டாறுளேம். (கூங)

புரங்க ளுக்குநீர் போய்ச்செருக் கின்றியுந்
தரங்கள் காத்தினிச் சைவராய் வாழ்மினென்
றுரங்க ணல்கின ளுய்த்துல கம்மைதான்
சிரங்க ளித்துடன் சேர்ந்தனள் கோயிலே. (கூச)

இங்கு சூழ்வரு மேழ்மாத ராதிய
நங்கை மாருல கம்மை நயந்திட
வங்க யற்கண்ணி யாயுல கம்மையாய்
மங்க லக்குழல் வாய்மொழி யாயநீ. (கூரு)

அரச ருண்ணங்கை யாய்ச்சுரர்க் காத்தனை
வரசி ரும்பனை மாய்த்துவாழ் வித்தனை
பரசு வென்றிப லித்தமர் வுற்றனை
சரத மாயெமைத தாங்கினை யம்மையே. (கூசு)

வேறு.

நாங்கண்மேற் செய்தலை நாடிவிள் கென்றனர்
தாங்குந்தென் காசிவி சாலாட்சி கூடல்வாழ்
தேங்குமீ னாட்சிகாஞ் சிக்கண்கா மாட்சிநா
கோங்குநீ லாட்சியு லோகாட்சி சொல்லுவாள். (கூஎ)

வாராகிகௌ மாரிம கேச்சுரி காளியிந்
திராணிநா ராயணி சிரபி ராமியேழ்
பராவனை மீருமைப் பாவிரீஇ யும்மினுன்
விராயுறை வேனென விண்டுவப் பாக்கினள். (கூஅ)

மற்றுள தெய்வமின் மாதரை நோக்கிநீர்
வெற்றியார் நங்கைமா வீரிக ளாயென்றுஞ்
சுற்றிநம் பானுறை வீரெனச் சொற்றனள்
கற்றவர் போற்றுதென் காசிவாழ் தேவியே. (கூகூ)

தேவிவ ரங்கொடு தெய்வமின் மாரெலாங்
கோவில்கொண் டுற்றனர் கொட்டலர்ச் செண்பகக்
காவினிற் சைவரைக் காத்தவர் வாழுவார்
பாவிகட் காய்ந்தருட் பாலனஞ் செய்வரால். (௰)

உயுத்தக ளத்திலு ருண்டத லையுட
னியுத்தநி யுத்தமா நீள்பறை பேய்க்கணம்
வயிற்றைநி ரப்புறு வல்விருந் தாயுண
வயிற்றிடம் பட்சிகுன் றப்புலஞ் செம்புலம். (௰௧)

வெல்லுறுங் காலமொன் னார்களை வெல்லுவார்
செல்லுறு நாள்களிற் செங்கோல்செ லுத்துவார்
புல்லுறு நாள்களிற் போகமெ லாமுண்பார்
கல்லுமேமார் கால்வரிற் கைவிடு வார்களே, (௰௨)

அம்மைவ ரங்கொடின் பார்சுர ரேவரும்
நம்மையாள் கோன்விசு வேசர்வாழ் நற்றளிச்
செம்மைபா னந்தநி ருத்தம தாடியே
யம்மைப் பர்ப்பணிந் தர்ச்சைசெய் தேகினர். (௰௩)

சிரும்பாசுரன் சங்காரப்படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௲௪௪௫௰.



## இருபத்துமூன்றாவது

# வாலி வரம்பெற்ற படலம்.

சிரும்ப னைச்செயித் தருளிமா லயன்முதற் றேவர்க்
கரும்ப ருடர சாட்சிநல் கியதிற னறைந்தாம்
தரும்ப லத்ததென் காசிமா தவவெற்பிற் றவஞ்செய்
வரும்ப லங்கொள்வா லியின்கதை யினிவகுப் பாமால். (௧)

பாண்டித் தம்பிராட் டியாய்ச்சிரும் பனுக்கருள் பதத்தி
யீண்டி யும்பருக் கரசரு ணங்கையா யியல்சேர்
வேண்டி யாங்குருக் கொளுமொரு விமலையன் பெனத்தேர்ந்
தாண்டி னுங்கதை யவாவின மெனத்தவர்க் கறைவான். (௨)

---

௰௧-நியுத்தம்-நியுதம். அது நூறுயிரமென்னும் பொருளது, அயிற்றிடம்-ஊட்டியஇடம், பட்சிகுன்று—பட்சிபொற்றை, செம்புலம்—போர்க்களம், அலைதிற்றைக்குஞ்செம்மண்தரையாகவேயிருக்கும். ௰௨-கல்லும்-சின்னப்படும்.

பன்ன ரும்புகழ் கிட்கிந்தைப் பார்மன்னன் வாலி
தன்ன ருந்திறற் சைவனு வானுயர் தூயோன்
முன்ன ருந்துணை தாரையா மங்கதன் மூளையாம்
மன்ன ரும்பெரு வாழ்வின னுங்கவன் வாணாள். (௫)

தம்பி சுக்கிரீ வன்னுளா னுடேபார்த் தற்கென்
றெம்பி ரானருள் பெறுதவஞ் செய்பவுள் ளெண்ணி
வம்பி ருமலர்ப் பொழில்வளஞ் சிறந்ததென் மலைக்க
ணம்பி வந்திசெண் பகப்பொழி னலனுணர்ந் தமர்ந்தான். (௪)

மாவ ளத்ததென் காசியின் மாதவ கிரியாம்
மூவ ளக்குவ டாருமுக் கூடற்கோ வியனுங்
தேவ னம்மையோ டாடிய பொருட்டதன் சீரு
மாய றிந்துறைந் தானதே வாலியம் பொற்றை. (௫)

மற்ற வன்சுத்தன் பெரியவ னுகிவா லியென்பேர்
பெற்ற மாசைவன் வடவாற் குரங்கெனப் பேச
வுற்ற வேதவூ னுணுமையா மம்மெயூ னுண்டு
தெற்ற சாம்புவந் தனமிளி றெனப்பட றேற்றும். (௬)

ஆபி னுன்சுவா வெனச்சொலா தென்னெனி னயல்சார்
மேபி னுன்விரட் டாதுநாய்க் கின்றுபேர் விறலவ்
வாயி னுடிபெள் ளிகலிடும் பெயர்ப்பொருள் வல்லார்க்
கேபி னுத்தரா தென்கசை வனையிகழ்ந் திடன்மின். (௭)

வாலி யென்றபேர் வான்மூளைப் பித்தலின் மயங்கின்
வாலிப் பேர்பல ராமற்கேன் வாலைவைத் திலையெண்
வாலி யென்னலா னினைவெழின் வாலறி வீறைக்கும்
வாலி ருப்பதா வெனுமப்பேய் மாற்றுதிர் வல்லீர். (அ)

வடவர் நூலைபா சாக்கொடு கோயிலின் வால்வைத்
திடவ மைத்திகழ் வாலியின் புகழ்பெரி திதுமேம்
படவ ளத்தநல் லாக்கமுண் டாக்குமிப் படிக்கண்
திடவல் வாலிவந் தருந்தவஞ் செய்வது துணிந்தான். (௯)

---

௫-வியனும்—பெருமையும். பொருட்டு—மலையாகிய.ஆயறிந்து—ஆக (ஒக்க) அறிந்து. ௬-தெற்ற—மாறுபட்ட; மிளிறு—காடி. ௭—ஆன்சுவா — பசுவும் நாயும், அயல்சார்-தெவ்வுதன்மருங்கு. வாயில்—காரணம். இனுத்தராது-வெறுப்புத்தராது. அ-எண்—எண்ணத்து.

சீல வாலிவெற் படுத்துதென் மருங்குசித் திராற்றின்
மூல மாயமுக் கூடலி னாடிமுக் கூடற்
பால வாவிநா தனைநிறீஇப் பணிந்துநா டொறும்போய்
நீல கண்டனாம் விசுவநா தனையுநேர் கண்டே. (ய)

வாலி வெற்புறு குகையினுள் மன்னிமா தவஞ்செய்
மோலி மன்னனோ ரயனம்வை கினன்றவ முற்றுங்
காலி னெம்பிரான் றம்பிராட் டியினோடு கனிந்து
பாலின் வந்தருட் காட்சிநல் கினன்பணி வாலி. (யக)

வேறு.

உண்மை ஞானமின் போருரு வாயவா
வண்மை யாளுல கம்மைம னாளனே
பெண்மை யாண்மைபே டில்லாத பெற்றியோ
யண்மை யாயரு ளம்மையப் பாசரண். (யஉ)

உலகெ லாமுடை மையெனக் கொண்டவா
விலகு யிர்க்கெலா மீசனாய் நின்றவா
நிலவு மெங்குமெ வற்றுநி றைந்தவா
வலகி லின்பரு ளம்மையப் பாசரண். (யங)

ஒப்பு யர்விலா வுத்தம னேசரண்
செப்பு மெட்டுருச் சேர்சிவ னேசரண்
முப்பு ரத்தைமு னிந்தவல் லோய்சரண்
அப்பு வெண்குணத் தம்மையப் பாசரண். (யச)

என்று கண்டினித் தேத்தியா டிப்பாடி
நின்று கைதொழு நீடுமெய் யன்பனை
யன்று நோக்கிவா லீசெய ருந்தவம்
நன்று வேண்டுவ நல்குதுங் கேளென. (யரு)

கிரீசன் கேட்கவுங் கேடிறென் காசியாண்
புரீச நீதரல் போதுநல் கென்றன
னரீச வாலியெம் மண்ணனு கந்துமங்
திரேச வைந்தெழுத் துண்மைமுன் செப்பினான். (யசு)

---

யக, அயனம்—ஆறுமாதம், யச-எட்டுருச்சேர்சிவன்-எட்டு மூர்த்தியாய் நிற்குமிறைவன், அப்புவெண்குணம்—கடல்போலுமெட்டுக்குணங்கள், யசு போதும்-தகுதியாம், அரீசவாலி-சக்கரேச்சுரனாகியவாலி, குரங்குத்தலைவனென்பாருமுளர், (அரி-சக்கரம், குரங்கு) கதிர்த்தவன்மை-ஒளிசெய்யும்வலிமை, அதிர்ந்து-சொல்லி,

எதிர்த்த வன்பலம் பாதியு னக்கெய்தக்
கதிர்த்த வன்மைதந் தேனெனக் கண்ணுத
லதிர்த்த ருள்புரிந் தங்கும றைந்தனன்
முதிர்த்த வன்பன்மு கம்மலர்ந் தேத்தினான். (௰௭)

நன்மை மிக்கதென் காசிந கர்வளன்
தொன்மை யாயதிர்த் தங்களின் றாவளன்
வன்மை கூரிலிங் கத்திரு வார்வளன்
பொன்மை மூன்றுமோர்ந் தான்மகிழ் பூத்தனன். (௰௮)

வலம்பு ரிந்துல கம்மைம ணாளனை
நலம்பு ரிந்துசெய் பூசைந டாத்தினான்
நலம்பு றத்தினுஞ் சூழ்ந்துத ணந்தனன்
அலம்பு வீரக்க மூல்லாலி யண்ணலே. (௰௯)

அவனி றாஉம்வாலி நாதனை யாய்ந்திலார்
அவன்கு ரங்கென்பார்க் காட்பட லாய்த்தொங்கந்
தவசொங் கஞ்சொக்க நாதனுச் சாற்றலாய்ச்
சுவசொக் கேசன்கோ யில்லெனச் சொல்வரே. (௨௰)

சொக்க நாதனுச் சொல்வாலி நாதனின்
மிக்க வாலைய மேய்வழி பாடுசெய்
தக்க மேலவர் தங்கிளை யோங்குமால்
செக்க ரஞ்சடைத் தேவருள் சேருமே. (௨௧)

அன்பர்க் கன்பனி னணைவ ழிப்படி
னின்ப மெய்துவ ரின்றெளிற் றன்பமே
முன்ப ருண்ணன்மு யங்கன்ம கப்பெறல்
பின்ப ரன்பணி பேணன்முன் பென்றனன். (௨௨)

வேறு.

ஆவ லார்தவர் சூதனை யன்பொடு மேத்திக்
காவல் வாலியின் கதைநல தவனிவண் கடந்தி
மேவ லெங்கதை விளம்பிட வேண்டுமென் றிரந்தார்
பாவன் பார்தவச் சூதனுண் மகிழ்ந்தது பகர்வான். (௨௩)

---

௰௮-பொன்மை-அழகிய தன்மையாக, ௨௰-தொங்கம்-குரங்கு,தொங்கல்-குதித்தல், தொங்குதல், ஆகலின் அத்தொழிலையுடையமுசு தொங்கெனப்பட்டதுபோலும்,தொங்குநாதன்,தொங்கநாதன், சொங்கநாதன்,சொக்கநாதன் எனவழங்கலாயிற்று,ஆயினும்சொக்கநாதன்-விசுவநாதனேயாகலின் வாலி குரங்கலனென்பதைத்திருவருளை விளக்கியதெனவறிக,

பிரம தேசத்து வடாதுமேற் காப்பிறழ் கடனைக்
கரைய டுத்தனன் வடக்குநின் றவாசியாக் கடுகி
வாகி ழக்கிவர் நதிவளங் கண்டனன் மகிழ்ந்து
பரன ருச்சனை செயவிழைந் தவ்விடைப் பதிந்தான். (உச)

அவ்வி டைச்சிவக் குறிநிறீஇ யருச்சனை புரிந்து
செவ்வி டைக்கொடிச் சிவனருள் பெற்றனன் சென்றா
னவ்வி டத்தைவா லீச்சுர மென்பராங் குறையும்
நவ்வி யங்கைவா லீசனைத் துநர்க்குநன் கருள்வான். (உரு)

அத்த லத்தைவா லீசனை யவிர்திருத் தத்தை
முத்தர் மெச்சுவர் தோய்ந்திருந் தேத்துவர் முனிவர்
சித்த யாசிலா வாலியாங் கிருந்துபோய்த் திகழுஞ்
சுத்த நீடுதென் சமுத்திர மாடுவான் றுணிந்தான். (உசு)

தென்க டற்கரை சேர்ந்தனன் சிவார்ச்சனை செய்வான்
பொன்க ணெய்தலிற் றேடினன் புகழுயர் வாலி
முன்க ளின்பெற வொருகுறி முளைத்தது கண்டான்
றன்க ணேடுளங் குளிர்ந்தவண் சமுத்திரங் குளித்தான். (உஎ)

பூசை செய்தனன் புந்தியின் பாயவ னுறைகா
லாசை கூறிலங் கேசன்வந் தவன்பினின் றிறுகத்
தேசை யார்மெய்யைப் பற்றினன் சினந்திவன் பற்றி
யோசை யாரக்குள் வைப்பமுச் சடக்கிவிண் டுகந்தான். (உஅ)

இகலி லான்படை யேந்திலான் சிரித்துமுன் னின்று
புகழும் வாலியை மெச்சினன் போற்றிலங் கேசன்
தகவு ளாயிலங் கேசநீ யகப்பட்டுத் தணந்தாய்
மிகலி லார்பிற ரெனவிவ னவனைமெச் சினனால். (உகூ)

வாலி ராவண சக்கிய மியன்றதிவ் வாறு
மேலி ராவணன் றிசைவெல நினைந்தமை விண்டான்
சூலி நற்றுறை முற்றிய சூரநீ யன்றிக்
காலி யாருளா ரெனமுதற் கனகமீய்ந் துய்த்தான். (௩௰)

அன்று செந்தமிழ்ப் பார்தெலிங் காணமா ணழகார்
நன்றி லங்கைமுந் நாடுமோற் றுமைகொடு நட்பாய்
நின்று சைவமே வளர்த்தமை நீடுல கெல்லாம்
வென்று வாழ்ந்தமை தமிழ்வலார் தேர்வது மெய்யால். (௩௧)

வேறு.

மாண்டவா லியாற்பூ சித்தும் வாலீச னெனமாட் டாம
னீண்டவன் பாற்றுன் றேன்றி நாதனென் றிசைத்தா னிள்பேர்
பூண்டவப் பேரெம் மான்பாற் பொருந்திய பரைத்தா யோடே
யீண்டருட் காட்சி நல்கி யெண்ணிலா வரங்க டந்தான். (௩௨)

வரங்கொடு தான்றேன் றீச வரதையாம் பரைத்தாய் நெய்தற்
சுரங்கனிந் திருப்ப வாலி தூவுளக் கோயி விற்கொண்
டுரங்களித் தடைந்தான் கிட்கிந் தாபுரி யுவனுற் கண்ட
தரங்கவே லேந்த லந்தான் தனைபுக ழுவரி யாமால். (௩௩)

அத்தலத் தான்றேன் றீச னுடுமேய்த் திடுமோ ராயன்
வைத்தபாற் குடமெ டுத்து வரினடம் பங்கொ டிக்கா
னித்தமுந் தடுப்பச் செய்து நிறையபி டேகங் கொண்டான்
சுத்தனச் சாத்தன் வெட்டச் சுரந்தது செந்நீர் வெள்ளம் (௩௪)

அஞ்சினன் சாணி யாலே யடைத்தன னோடி மாறற்
குஞ்சிட வுரைத்தான் கேட்ட வுடன்பரி சனத்தோ டெய்தி
யெஞ்சிவ னிருப்பைக் கண்டா னிதையறிக் குருகித் தாழ்ந்து
பஞ்சவன் கோயி லாக்கிப் படித்தர மேற்ப டுத்தி. (௩௫)

நயந்துதான் றேன்றீ சற்கும் நாயகி பரையம் மைக்கும்
வியந்திட நாளும் பூசை விதித்தன னிலங்கள் விட்டு
வயங்கிழ் சைவப் பண்டா ரங்களின் வயத்தொப் பித்தான்
புயந்தழைத் திசிதன் சென்றான் புதுமைய துவரி யென்றான்

வாலி வரம்பெற்றபடலம்முற்றிற்று.

ஆகப்பாட்டு ௲௪௬௬

✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿

## இருபத்துநான்காவது

# கண்ணுவருக்கு ஆனந்தநடக்காட்சி யருளியபடலம்.

நயந்தவா விக்கு லோக நாதன்மாண் வரங்க ளீந்த
வயந்தரு காதை சொற்றும் வாலியின் சிறப்புஞ் சொற்று
மியந்தழை கண்ணு வர்க்கிங் கெம்பிரான் விசுவ நாதன்
வியந்தனி யின்பக் கூத்துக் காட்சிநல் கியசீர் விள்வாம் (௧)

கண்ணுவன் பலத லத்துங் கண்ணுதல் பூசை யாற்றிப்
புண்ணிய னாய்த்தென் காசி புக்குநன் பழந்தேன் பூக்கள்
பண்ணமர் பாக்கள் பொன்னீர் மணிகளைப் பசுந்த ருக்க
னுண்ணிறை யன்பர் கொண்டல் பொழில்வள முகந்து கண்டான்.

மங்குலை ழுரைப்பர் தீகல் மண்களும் பொழியு மென்ப
ரிங்குரா டொறுஞ்சிந் தேழு மினிதவர் காணார் போலும்
பொங்குமிவ் வாக்கங் காணின் புன்மைமுனொழித்துப்பார்த்தே
னங்குளிர் கனிசேர்த் தாள்வ ரதிகமாந் தலமீ தாமால். (௩)

கண்டபல் சிவத லத்துங் காணருங் காட்சி யிங்கே
யுண்டான் குறிக்காய்க் காட்சிக் குறும்பலா வொளிர்த னன்றால்
பண்டவிர் பொற்பூ வார்சென் பகப்பொழில் வளமும் நன்றால்
மண்டொர்சண் பகம்ப டர்ந்த மயிலையின் பொலிவும் நன்றால் (௪)

செண்பக மலர்க்கீழ் மேவுஞ் சிவக்குறி யனாதி யாமால்
வண்பக ரதிற்ப டர்ந்த மயிலையி னடியி னம்மை
நண்பக லாள னாதி நங்கையா வாள வட்குப்
பண்பக னீழ னல்கும் பவளமல் லிகைசீர்த் தாமால். (௫)

ஆனந்த தீர்த்த மீதே யானந்த வனமா மீதே
யானந்த புரமு மீதே யானந்த மவாம்நான் சச்சி
தானந்த னருளால் வந்தே னானந்தக் கூத்திங் கேகண்
டானந்த முறுவே னென்றாங் கானந்த மார்ந்துற் றானால் (௬)

தீர்த்தங்க ளெல்லா மாடிச் சிவார்ச்சனை புரிந்து லோகான்
மார்த்தனை யுலகா டன்னை வயக்குல சேக ரேச
மூர்த்தனை யிசைக்கு ழல்வாய் மொழியனை தனைமெய் யன்பாற்
பார்த்தன னாகித் தென்கீழ் பாலொரு வளச்சா ருற்றான், (௭)

சித்திரை வடக ரைக்கண் செழியபூங் காவின் வைகி
முத்திற வளத்தென் காசி முதல்வனை மனக்கோ யிற்கண்
வைத்தன னருச்சித் தோங்கு மாதவத் தமர்ந்தான் முக்க
ணத்தனா னந்தக் கூத்துள் ளவாவியாண் டொன்றாய்த் தம்மா (௮)

உலகமுற் றுடைய வம்மை யுடனுல கேச னுள்ளத்
திலகருட் பெருக்க ரன்றே வெண்ணிய வெண்ணி யாங்கே
விலகிலா வன்பர்க் கீதல் விடுவரோ கண்ணு வற்கா
வலகிலா னந்தக் கூத்தாட் டவாவெழுந் தருளி னால். (௯)

---

௫. வண்பகர்-வளப்பமாகச் சொல்லப்பட்ட. நண்பகலாள்-உயிர்க்கரு ணையம் நீங்காதவள். பண்பகனீழல்—குணமாகவிரிந்தநிழல்,

நித்தியா னந்தக் கூத்தர் நிறைந்துல காட்டுங் கூத்தர்
முத்தியி முந்துக் கூத்தர் முதுசிற்றம் பலத்துக் கூத்தர்
வித்திய பெருவான் கூத்தர் வெள்ளிமன் றத்துக் கூத்தர்
சத்திகன் மன்றக் கூத்தர் தாம்பிர சடைமாண் கூத்தர். (௰)

இராவணற் காப்பு யங்க மாநட மியற்ற வுட்கொண்
டொராக்கயி லையின்க ணுடி யுகப்பருள் கூத்த ரின்னும்
பாவள விலாவண் கூத்தர் பயிலுமைந் தொழிலாள் கூத்தர்
முராரிநான் முகனுந் தேரா முதியகுற் றாலக் கூத்தர். (௧௧)

சிவனுல கிதுவெ னுந்தென் காசிநன் னகரிற் சித்தர்
தவர்முனி வாரி யோகர் தழைதர வலகாள் பாக
னிவர்நட ராச னுகி யெழுந்தரு ளக்கா லும்ப
ருவகைமா லயன்முன் னோர்தம் புருவுநா ரதன்முன் னோரும்()

கணங்களுந் திருவு ளங்கொள் கணத்தவந் தனரி ரண்டு
துணங்கையார் வேற்கைப்பிள்ளை துதிக்கைப்பிள்ளையுமுன்னின்று
ரிணங்கரு ணந்தி வந்தா ரிமையவர் மலர்பொ ழிந்து
வணங்குதுந் துமிக ளார்த்தார் மாயன்மத் தளம டித்தான் (௰௩)

பாடினு யிரங்கை வாணன் பருமுழா முழக்கி னுனல்
நீடிரண் டாயி ரங்கை நிரையினு யிரஞ்சங் கேந்திப்
பீடியல் பானு கம்பன் பெரிதொலி யெழுப்பி னுனு
வீடிலா யிரமு கக்கங் கைகட லெனவார்த் தாளால். (௰௪)

பரம்பர னின்பக் கூத்தப் பயின்மக ரத்த மாவன்
றரம்பையர் கவரி யேந்தி யசைத்தனர் முனிவ ராரும்
வரம்பினின் றேத்தல் செய்தார் வானவர் புகழ்ந்தார்த் திட்டார்
தரம்பலாண் டிசைத்தார்த் தார்மா தவர்கணங் கடலி னுர்த்த.

நாரதர் தும்பு ரேழு நல்லிசை யமிழ்த மெம்மான்
சிரவிர் செவிக்கு வார்த்தார் திருமறை யாயி ரங்க
ளோரறம் பொருளின் பம்வீ டெடுத்திசைத் தார்ப்ப ரித்த
கூரருட் புலியும் பாம்புங் குளிர்ந்தவுட் குளிர்ந்த கண்கள். (௰௬)

௰, பெருவான்கூத்தர்—பேரம்பலக்கூத்தர். சத்திகன் மன்றக்கூத்தர்—திருவாலங்காட்டில்காளியோடு மணிமன்றத்திலாடிய கூத்தர். ௰௧. ஒரா—நீங்காத. ஒருவாவென்றது ஈண்டு எதுகைநோக்கி ஒராவென நின்றது. ௰௩. துணங்கையார்—திருவிழாவுக்குப் பொருந்தும். ௰௪. மகரத்தமா—தையமாவாசி. வரம்பினின்று—ஒழுங்காக நிலைகொண்டு. தரம்—தரம்போல, மேன்மையாக. ௰௬.புலி-வியாக்கிரபாதர். பாம்பு-பதஞ்சலி.

கோடிவெங் கதிரோர் காலை கூடிவந் துதித்தாற் போல
நீடிய செம்மே னிக்கண் ணிறையவெண் ணீறு பூத்துச்
சூடிய பிள்ளைத் திங்க டூலங்குவெள் ளொளிப ரப்ப
பீடிய லறுகு வில்வம் பச்சையும் பிறங்கெல் வீசு. (௰எ)

இளமைமா னொருகை யேந்தி யெரிமழு வொருகை தாங்கி
வளவர தாப யங்கண் மலரிரு கைகள் காட்டித்
தளர்விலா நாற்றோண் முக்கண் டழைதரு நீலகண்டங்
கிளர்சடை வயங்க முந்நூல் கேடில்கண் மணிகள் ஞால. (௰அ)

வளைக்குழை யிருதோ ளாய வரைகிடந் தூச லாடக்
களைக்குண பணித்த லைமாக் கடுவராக் கடக மாடத்
தளைக்குவெண் டலைமா லைகட் சார்தரப் பூண்டுமாட
விளைக்குமார் மத்தந் தும்பை வெள்ளெருக் கிதழி யாட. (௰௯)

எழுந்தரு ளுலகாள் பாக னினியநல் வரவு தேர்வான்
றெழுந்துணைத் தோள்வ லந்தான் றுடித்தது கண்ணு வற்கிங்
கழுந்துவல் லிருள்பொன் றிற்றூர்ந் தவிரொளி பரந்திற் றெங்குங்
கொழுந்தவிழ் பொழின்மாப் புட்கள் குளிர்ந்தியங் காநின் றிட்ட

கண்ணுவன் றவச்சா லைக்கண் கண்ணுதற் கூத்தன் றோன்றிப்
புண்ணியச் சிவைகண் டின்பம் பூத்திடக் குறண்மே லோர்காற்
றிண்ணிதி னூன்றி யோர்காற் றிகழ்தர மேலெ டுத்து
மண்ணிமான் றுடியா வார்த்து மாநடம் புரிந்தான் மன்னோ. (உக)

உடுக்கினி லாக்கல் காட்டி யமைப்பினி லோம்பல் காட்டி
மடுக்கனற் போக்கல் காட்டி வைத்ததாண் மறைத்தல் காட்டி
யெடுக்குமோர் தாளி லின்ப மீந்தருட் செயலைக் காட்டி
நடக்குமைந் தொழிற்கூத் தாட்டம் நாடுணர் தரந டித்தான் ()

எண்சுவைப் பாக்கள் வாணி யின்னிசை பிறங்கப் பாட
வண்சுவைக் கவுரி தாளம் மரபினிற் பிடித்துத் தட்டப்
பண்சுவைக் கண்ணு வாதி பலதவர் முனிவர் சித்தர்
தெண்சுவை யோக ரும்பர் தெரிசனை செயந டித்தான். (உ௩)

சிவசிவ சிவவென் றோர்பால் செயசெய செயவென் றோர்பாற்
றவர்முனி வர்முன் னோரார்த் தனரர வாவென் றோர்பா
லிவர்தரக் கலின்க லின்க லின்னெனக் கழல்க ளார்ப்பக்
குவலய முயத்த குந்த குந்தகு மெனந டித்தான். (உ௪)

௰எ. எல்— ஒளி. (பச்சொளி) ௰௯. களைக்குணம்-ஒளிக்குணத்தையு டைய. மாக்கடு-வல்விடம். தளைக்கும்—கட்டமைந்த. விளைக்கும்—மணம் விளையச்செய்யும். உக. குறள்—குறளன். (முயலகன்)

எண்ணில்கண் படைத்தான் போலு மிறைவனு ணந்தக் கூத்துக்
கண்ணுவன் கண்டா னந்தக் காட்சியிற் குளித்தா னந்தப்
புண்ணியன் பொருட்டாக் கூத்துப் புரிந்தமை கண்டோ ருய்யப்
பண்ணிய தென்கா சிக்குப் பணிந்திறை வனைப்ப ணிந்தார். (உரு)

ஆனந்தக் கூத்தர்க் கங்க ணமைத்தசிம் மாச னத்தி
னானந்த வல்லி யோடு மமர்ந்தினி திருந்தார் கண்டோ
ரானந்தக் கடலின் மூழ்கி யடிபணிந் தறமூழ் கும்பே
ரானந்தக் கண்ணு வன்று னன்பதாய்த் துதிப்ப தானான். (உசு)

வேறு.

நம்ப கண்ணுத னங்கையோர் பங்கனே
யன்பர்க் கூஉபக றைக்களத் தண்ணலே
யென்ப ணிந்தவ வேந்துடிக் கார்ப்பவ
பொன்ப டாம்புலித் தோலுடைப் புண்ணியா. (உஎ)

வரத மாணப யாமழு வாழ்கையா
சுரகங் காதர சூழ்பண கங்கண
சிரச டாதர திங்கண்மு டித்தவா
வாசி வாபர மானந்தக் கூத்தனே (உஅ)

குறளன் மேலடி யூன்றிக்கு னிப்பவ
வறன தாமடி பொன்றுமே லானவ
திறன ருள்விழி செய்யவா யன்படி
யுறநல் வின்புவைத் துன்னிந டிப்பவா (உகூ)

சரண்ச ரண்சர ணென்றனன் றூழ்ந்தன
னரன ருட்கண ளித்தன்ப கண்ணுவ
பரசு நின்றவம் பார்த்துகந் தேனுனக்
கிரச நிர்த்தனக் காட்சியு மீந்தனன். (௩0)

மேலும் வேண்டுவ வேண்டென வீசவென்
பாலு கந்தமை பாரறி வானிவண்
கோலு மாலயங் கொண்டருள் யான்பணி
காலு வாமணி கர்ணிகை கண்டருள். (௩க)

---

உஎ. பொன்படாம்-அழகியஉடையாகிய, உஅ பணம்-பாம்பு, ௩க கோலும் இடங்கொள்ளப்பண்ணும், யான்பணி-யான்வணங்கியகாலுவா-காலமாகிய தைஅமாவாசியை,மணிகர்ணிகை—தீர்த்தத்தை,

சீர்த்தென் காசியாஞ் சிங்கதிக் கிற்றலை
யூர்த்தி ரப்புலி யூர்நல்வேங் கைகிழ
னேர்த்தி யாடிவாழ் நீபுலி யூரனென்
றார்த்த பேர்கொட ருள்கென வேண்டினன். (௩௨)

வேண்டு வார்வேண்டல் வேண்டியாங் கிபிரா
னண்டு கந்தருள் செய்தன னவ்விடை
நீண்டு றைந்திட னோர்ந்தும்பர்க் கின்புதந்
தீண்டுய்த் தானிவர்ந் தெய்தினன் கோயிலே. (௩௩)

இங்கி ருந்தல கெங்குமி ருப்பவன்
றங்கு மூர்பல சார்தளி கொண்டமை
யுங்கெ னற்புத மோங்கரு ளாட்டது
தங்க கண்ணுவன் சூழ்ந்தாந்தி ரஞ்சென்றான். (௩௪)

வேறு.

சிவத்தென் காசியாம் புலிநகர் சேர்ந்துதை யமாவிற்
சுவத்தன் சித்திரை மணிகரு ணிகைப்புன றோய்ந்து
தவத்த தென்புலி யூரனு மின்பக்கூத் தனைக்கண்
டுவத்த லாலிக பரமுண்டா முணர்வர்மா தவத்தோர் (௩௫)

விழிய ருட்கடன் மடைதிறந் தன்பரின் விருப்பம்
பொழியு மானந்தக் கூத்தனும் புவன நாயகனும்
பிழியி சைக்குழல் வாய்மொழி யாம்பிரி யையுமே
கழிப ரம்பொருள் கண்டவர்க் கின்பமே கதியாம். (௩௬)

அப்ப னண்டவ னவனரு ளம்மையாண் டவளாச்
செப்புஞ் சைவமே திருநெறி யருளரு ளாள
னெப்பி லாச்சிவன் சிவையெனல் கதிர்கதி ரோன்போல்
வைப்ப றிந்தவர் சத்திமான் சதியை மதிப்பார். (௩௭)

அம்மை யப்பனைக் கண்டுகொண் டாடுசை வருக்கே
யம்மை யப்பனு வடுக்கவந் தாடிநன் கருள்வா
னம்மை யப்பனி னருள்விளை யாடலா லுலக
மம்மை யப்பனை வைத்திவர் தலைத்தவ ரறிவார். (௩௮)

---

௩௨ புலியூர்—சிங்கநகர், வேங்கை—வேங்கைமரம், சிங்கதிசைத்தலைநகராதலினு லும், வேங்கைமரத்தினீழலினுடியமர்ந்ததனுலும், தென்காசிக்குப்புலியூரெனவும், பேரமையவேண்டுமென்பது' அப்பெயர்இற்றைக்கும் வழங்கிவருகிறது, வடக்கும் புலியூரிருத்தலின் இதுதென்புலியூரெனப்படும், ௩௪ ஆந்திரம்—தெலுங்குநாடு,

ஆண்ட வன்றரு முறுப்பினுட் காதுகண் ணதிக
மாண்ட வன்புகழ் சொலுமறை யவர்க்குள காதே
யாண்ட வன்மறை வினைக்கோயில் காணுய ரறிஞர்க்
காண்ட வன்றரு மிரண்டுநன் றவிர்ந்தன வாமால். (௩௯)

காதுகண்படைத் தவர்களுடன் காசிநா தனைக்கண்
டேது வேண்டினும் பெறுவா ரிலாதவர்க் கியாரென்
னோது வார்குரங் குலாய்த்திரி தலிற்கிடந் துழல்வார்
நீது றுதமா தவரெலாங் கண்டின்பந் திளைப்பார். (௪0)

இன்ன வாறுதென் காசியெம் மான்றிரு விளையாட்
டுன்ன ருட்பெருக் காற்றின முஞற்றுவன் றவங்கூர்
நன்னர் கண்ணுவற் காப்புரி கூத்துமூந் நாடும்
மன்னின் பாரிதரக் கண்டுவாழ் வனவென வகுத்தான், (௪௧)

வினையின் பார்தவ ரன்புரு வாகியே விழிநீர்
மனநின் றுய்ந்தன மெம்மையுய் விப்பவ வாவி
முனைனு றைந்தவெற் பம்மையோ டாடிய முதுவெற்
பெனுநின் றுபதென் வேறுமுண் டோநட மென்றார் (௪௨)

நல்ல கேள்வியீ தையன்மீர் நாட்டினேம் மறத்தோர்
வல்ல வேதியன் மணிகரு ணிகையின்வந் த்டிச்
செல்லத் தையமாக் கூட்டத்துட் டிருடின ளெளித்துக்
கொல்லம் போகவுட் குறித்தனன் கரைவழிக் கொண்டான் (௪௩)

தென்பு லிப்பதிச் சிவன்குல சேகர நாதன்
மன்பு றங்கொடு வலம்வரு மவற்கருள் வானு
யின்பு ருச்சிவை யோடுல கேசனுங் கிவர்ந்து
முன்பு வாவிவெற் பினின்விளை யாடிமுன் னின்றான். (௪௪)

வேறு.

வருமறை யவன்பூ ணூரோர் மங்கையோ டங்கு மூத்த
பருவனு நின்றாங் கேதென் படப்பணி கவர்வா னெண்ணி
யருகுற விடலைவீர னுகநோக் கினன்வி யந்தச்
சுருவனு னன்வி டாதெங் குற்றனை திருடவென்றே. (௪௫)

---

௪௫, நின்றாங்கே-நின்றாற்போல, தென்பட-எதிர்தோன்ற,

அழைத்தனன் களவின் றெங்கே யகப்பட்ட தெனலோ கேச
னுழைத்தனன் றனைத்தேர்ந்தோனென் றுணர்ந்துமெய்சொற்றான்முற்றும்
பிழைத்தனை யென்றுமுன்வைப் பித்தனன் மன்னுத் தோன்றிக்
குழைத்தனனிறையான்பார்ப்பான்கொண்டடைத்திடலையென்றான்

களவியற் றிடனு மாமோ களவினிச் செயேனிற் றைத்தை
வளவுவாத் தீர்த்த மாட வந்தவர் பொருள்கவர்ந்தா
யிளமதி சூடி யைகொந் திடச்செய்தாய் விடேனென் றானுங்
களவினிச் செயேனென் கின்றாய் நம்பிடக் கால்சொல்லென்றான்.

சத்தியஞ் செய்வலென்றான் றகாதுகள் ளனுக்கஃ தென்றா
னித்தினம் வேறு தேரே னென்னைநீ காத்தி யென்றான்
சித்தமம் மறையோ னுக்குத் திருத்திமே லுழைத்துண்பான்கண்
வைத்தனனுய்த்தான்கொண்டவத்தெலாமுடையோர்க் குய்த்தான்

ஒழிந்தன வெனும்பொ ருண்முன் னுளவிடை வந்தி ருப்பக்
கழிந்தவின் பார்தென் னற்றென் காசிநா தனைக்கொண் டாடிப்
பொழிந்தகண் ணண்ப னாகிப் பூசனை புரிந்து சென்றான்
மொழிந்தவவ் வாடல் கொண்டப் பெயாதம் முதுகுன் றென்றான்

கண்ணுவருக்கு ஆனந்த நடக்காட்சியருளிய

படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௩௫௪௫.



௪௬-உழைத்தனன்—மிகமுயன்றான். குழைத்தனன்—மனங்குழையப்பண்ணினான் இறை—அரசே! ௪௭—தைவளவுவா—வளம்பொருந்தியதையமாவாசி, ௪௯—அம்முதுகுன்று—அந்தவாலியம்பொற்றை,



இருபத்தைந்தாவது

# செண்பகபாண்டியனுற்பத்தி யாட்சிப்படலம்.

அருந்தவக் கண்ணு வர்க்கிங் கானந்த நடனக் காட்சி
திருந்துதென் காசி நாத னருளிய செய்தி சொற்றும்
பொருந்துசெண் பகமா றன்றன் புண்ணிய னருளாற் றோன்றி
யிருந்தவை மெச்ச வாழ்சீ ரினியெடுத் தியம்பு வாமால். (க)

மருவுசீமார் நற்கா லத்து மதிகுலன் வமிச மோங்கத்
திருவுயர் கொடைசி றந்து செய்யமுத் தமிழ்செ ழிப்பப்
பெருவரங் கீர்த்தி யார்ந்தெம் பிரானுல கேச னுக்குங்
கருவுறு மகட்பெற் றீய்ந்து கண்ணிய மாம னானான். (உ)

அவன்குல சேக ரத்தென் னவனரு ளுலக நாதன்
றவன்குழல் வாய்மொ ழித்தாய் தந்தையா மவன்ற வச்சே
யிவர்குல சேக ரன்று னீன்றசே யுலக நாதன்
சிவனருள் கூரின் றோன்கால் செழித்தெழுந் தவனி னத்தில். (ங)

வேறு.

வீர பாண்டியன் சவுந்தர பாண்டியன் வெற்றிச்
சூர பாண்டியன் றுரந்தர பாண்டியன் சுடர்வேற்
கோர பாண்டியன் குணநிதிப் பாண்டியன் குடைக்கீழ்
வார பாண்டியன் வழிமறித் தாண்டபாண் டியனே. (ச)

சுமுக பாண்டிய னுக்கிர பாண்டியன் சுசீல
சமுக பாண்டியன் சவுரிய பாண்டியன் சயந்த
விமுக பாண்டியன் கோவல பாண்டியன் விகிர்தக்
குமுத னுமடை யார்கண்ம தாந்தகோ டாரி. (ரு)

செருகு வேம்பலர்க் குமணபாண் டியன்றிதி யுளகோக்
கருணை யாகரன் மகாதள கேசரி கங்கன்
பெருகு மாணதி செயபாராக் கிரமனும் பெயரோன்
வருகு லத்திவா கரனுயர் மங்கல வழுதி. (சா)

தரும சேகரன் பராஞ்செயன் றமோதரன் சகரன்
கரும பூடணன் காங்கயன் கண்டன்மாற் கண்டன்
குரும ணிக்குண ராமன்கோச் செழியன்கூ டற்கோ
வரும சுந்தரன் சவுந்தரன் வாட்குச கீர்த்தி. (எ)

செயந்த னைத்தவிந் திரத்துய்ம னுக்கிர சேனன்
புயந்த மூஉம்பல பத்திரன் புரவலர் சிங்கன்
கயந்த னிர்த்தமாண் வரதுங்கன் கவியதி வீரன்
வியந்த கோற்குல சேகரன் விக்ரம சிங்கன். (அ)

இலங்கு தென்னவ ரிவரெலா முளசிறப் பிவர்காற்
றுலங்கு விந்தனென் றொருவன்மன் னுய்முடி சூடிக்
கலங்கு மெண்மையர்க் கஞ்சலே புரிந்தருள் காரிவால்
விலங்கு மொன்னலர்க் கேறென வாழ்ந்தனன் விளங்கி. (கூ)

பொருத விற்றிற முடையரைப் புறங்கண்டு புகழ்கூர்
விருத மைந்தசீர்க் கழலினன் வீரமேற் கொண்டோன்
றருதண் கொண்டலி னிரவலர்க் களிக்குமாண் டகவோ
னொருவ லாண்மையாற் புவியெலா மெச்சுவாழ் வுடையோன் (ய)

பெற்றி டும்புதல் வரிற்புகழ் பிறங்குமா தவம்போ
லுற்றி டுங்குல தீபவத் துங்கனின் முளைதான்
றுற்றி டுந்தவச் சுதன்சுதச் சுதனெனத் தோன்றிக்
கற்றி டுங்கலை வலானவன் மங்கலன் காலான். (யக)

விதிக்கும் விந்தனும் பெயரிறை வாழ்புரி விந்தை
யுதிக்கு மன்னவன் றன்னகர் விளங்குதே ளூர்காற்
பதிக்குஞ் சாம்புவன் பூசிக்குஞ் சயம்புவைப் பணிந்து
துதிக்கும் போதவ னொருமொழி வானிற்றோன் றியதே. (யஉ)

வேறு.

சொன்னதென் னென்றூற் றென்மேற் றுலங்குதிக் கினிற்போய் நீவிர், மன்னவை குவிரிங் கென்றூன் மகன்வடி வேலோன்வந்து, பின்னருள் புரிவ னுன்றன் பிள்ளையின் பிள்ளைக்கீது தென்னவ வுளங்கொள் கென்னத் தெரித்ததாம் வருமுன் செய்தி. (யங)

யக. சுதச்சுதன்—முறைமையுள்ள, (தவறாத) மைந்தன். மங்கலன்—மங்கலவழுதியினுடைய

அருங்கல னதுவே யாக வமைச்சருக் குரைத்தான் விந்தன், நெருங்கல முறுது நின்ற நிபுணரும் நிறுத்துத் தூண்டச், சுருங்கலன் றுயர்வாச் சேய்க்குச் சுடர்முடி சூட்டி யூரும், மருங்கலர் நாடுங் காக்க வழங்கிடிற் செங்கோ லென்றே. (௰௪)

வேறு

சிறந்தகொற் கையினிருந் திவர்ந்து செவ்விதி
னறந்தழை தருசெங்கோ லால வாயினும்
புறந்தழூஉம் விந்தையம் புரிக்க ணுஞ்செயுந்
திறந்தரு மாட்சிதான் சிறக்கு மென்றெணி (௰௫)

வேறு

சத்திரஞ் சிவிகை பாய்மாத் தந்திகள் படைக டேர்கள்
சித்திரத் தானை வீரர் செம்மைகூ ரேவ லாள
ரத்திர வல்லார் வந்தோர்க் கருத்தறச் சாலை யெல்லாம்
புத்திரர்ப்பெறுமில்வாழ்வார்ப்புரப்பவர்பொறுப்பென்றோர்ந்து (௰௬)

வேறு.

சந்தன மகிற்புகை சயன மெத்தைகள்
பந்தன வாயில்காப் பவர்க ளாகுமுன்
வந்தன வாதமும் மகிழ்ந்து துய்க்குமன்
மைந்தனன் குரத்தொடும் வாழ்வ தாய்ந்தரோ. (௰௭)

அரசுசெய் விந்தவேந் தகம கிழ்ந்துதன்
சிரசுள மணிமுடி சேய்க்கு நல்கினன்
முரசறைந் தவனுந்தன் முனைக்குச் சூட்டினன்
வரசுத னும்வன் சவுரி மன்னனே. (௰௮)

வேறு

சவுரிய பாண்டி யன்றன் றனித்துணை மங்கை லத்தாய்
செவுரிய பொறுமைத் தாய சீலமார் வயிறு வாய்த்தாள்
கவுரியி னருளி னாலே கனகமா மகுடந் தாங்கிப்
பவுரிகோ ளிரத மும்பல் பரிபடை சிறப்போன் றேன்ற. (௰௯)

குயிலுமான் புதனே வெள்ளி குருவைசே டிகமா மம்ச
மொயிலுற வேறிக் கேந்த்ர கோணமார்ந் தமிச முச்சம்
பயிலுநல் வேளை தெய்வத் தங்கிசம் பரிவிற் பற்ற
வெயிலுடைப் புதல்வ னாக மிளிர்ந்தபத் தாங்கிங் கட்கண். (௨௰)

௰௫. புறம்-மதில். ௰௭. ஆதமுன்-சாமரமுதலிய. அனவரதமும்-நித்தியமும். ௰௮ சேய்க்கு-குலதீபோத்துங்கனுக்கு.முனை- அவன்மகனாகிய சுதச்சுதனுக்குஅவனேசவுரியபாண்டியன். ௰௯ செவுரிய—செவ்விதுபொருத்தமாகிய

இலக்கினே தபத்திற் கீர்த்தி மூர்த்திமா னிலக்கி னத்திற்
கலக்கமி லதிப னாட்சி யுச்சகட் பேறிக் காணத்
துலக்கமா ரிலக்கி னாதி கேந்திரத் திரிகோண் பேரயாங்
கலக்கணி லிலக்கி னத்தை யதிபனை நற்கோள் பார்க்க. (உக)

கீர்த்திமேம் பாடு மிக்குக் கிளையுபர் வலிமை மிக்கு
மூர்த்திசே ரழகின் மிக்கு மொழிவளத் திறத்தின் மிக்குக்
கூர்த்திசை பணிசீர் மிக்குக் குழகனன் பார்தன் மிக்குப்
பார்த்திபர் மெச்சன் மிக்குப் பரவுசே யுதித்தா னந்நாள் (உஉ)

மருளறு கணித நூலோர் வல்லுநர் வலிமைத் தாய
வருளமை யுறுதி யெல்லா மறிந்துநன் றெடுத்துக் காட்ட
வெருளகல் சவுரி யப்பேர் வேந்தனுந் தாம்பூலாதி
பொருளனை வருக்குந் தானம் புரிந்தனன் களிசி றந்தான்.(உங)

அகவிதி யறந்தேர் தாய்க்குள் ளகமலர்ந் துவகை பூப்பச்
சுகவினைத் தாய ரைவர் துலங்கிறை மகற்கண் டின்பாய்ச்
சகவிதி வழக்காத் தூமஞ் சனமுழுக் காட்டி மற்றும்
மகவிழை யொடுசெய் தோம்பி வளர்த்தனன் வளர்வான் மைந்தன்

அருவமா யுருவ மாகி யருவுரு வாயப் பாலா
யிருவகைப் பவஞ்சத் தெந்த மெவற்றினு நிறைசி வன்றான்
பொருளவ னொருவன் றானே போற்றிடப் படுவோன் போற்று
முருவினர் மக்க ளென்றே துயர்குரு நெறிதேர் சேய்க்கு.(உரு)

ஆதியோ தெழுத்தாய் வான்போ லமுதலின் மகிழ்ந்து சேனைப்
பாதுகா வலனுண் சேனைப் பாலடை கொண்ட ருத்தி
வீதியார் செங்கை தாங்கி விழிக்கெதிர் கொளக்கண் டின்பார்ந்
தோதிமார் பணைத்து முத்தி யுச்சிமோந் தருமை செய்வார்.

பொருவின்முத் தவிநெய் நாளும் பொழியவுச் சிக்கிட் டேட்டி
வருவர்மெய் தூய்துற் றோங்க மதியிரண் டினிற்றெய் வக்காப்
பொருவலின் றியம்ப லேந்தி னுறுகைகா னூன்றிச் சென்னி
தருமுக நிமிர்த்த லேழி னூட்டலெட் டினிற்றால் பாடல். (உஎ)

---

உஉ. மூர்த்தி- உடம்பு கூர்த்திசை-மிக்கதிக்குகள். உச, தாயரைவர்-ஊட்டுந்தாய், கைத்தாய், செவிலித்தாய், பாராட்டுந்தாய், நற்றாய் என்னும் ஐவர். உரு, இருவகைப்பவஞ்சம்-சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சங்கள். உசு. வீதி-விசாலம். உஎ முத்து-ஆமணக்கு. அவிநெய்-அவித்தூற்றியநெய். காப்பு-காப்புக்கூறும்பருவத்து(முகநிமிர்த்தல்)-சாணை (அணையாடை) யிற்கிடக்கும் பிள்ளை, செங்கீரையாடல்-செவ்விய மழலையாடல் செங்கீரையாடலென்ப-சிலர் உடம்பைப்பிள்ளையசைத்தலே செங்கீரையாடலாம். சொற்பயில்வு கூறுதல் ஆறுமாதத்திலாமென்பர். அப்படிப்பண்டை வழக்கிலிருந்ததாகத் தெரியவில்லை யென்பார் கிழவு

ஒன்பதாந் திங்க டன்னி லுளுற்றுசப் பாணி கொட்டல்
பின்பதாம் பதினொன் றன்கண் பிறங்குசீர் முத்த மாடல்
வன்பதா ராண்டி லிங்கு வருகென வழைக்கை யாகித்
தின்பதா மதியி லெட்டில் வாசிகை சூடி யேத்தல். (௨௮)

தருவிய மதிபன் னெட்டிற் றாயவம் புலிய மைத்தல்
மருவிய விரண்டா மாண்டிற் சிறுபறை வயங்கத் தட்டல்
தருவியன் மூன்றா மாண்டிற் சௌளநல் வினையங் காடல்
ஒருவிலா வவ்வாண் டின்க ணுகந்துசிற் றில்சி தைத்தல். (௨௯)

களங்கமி னான்கா மாண்டிற் கவின்சிறு தேரு ருட்டல்
உளங்களி கூரா ணைந்தி லோதுபள் ளிக்கு வைத்தல்
விளங்கனி மணிப்பூண் பத்தா மாண்டினின் வியப்பாப் பூட்டல்
துளங்குபன் னிரண்டா மாண்டில் வாண்முதற் றொழில்ப யிற்றல்

வழங்குமங் குலமென் பானே டிரண்டுயர் வளர்ச்சி வாய்ந்து
புழங்குதுங் குமநெய் பூழின் புழுகிலா மிச்சி லாசந்
தழங்குவாய் நுரையின் வாசந் தனதமர் முனையிற் காற்றின்
முழங்குகாற் றொடி யாழி யரியென முனைத்தே றுன்னி. (௩௧)

சொல்லிய புருவத் தொன்று துலங்கிய நுதலி லொன்று
வெல்லியற் புயத்தி ரண்டு விளங்குறு சிரத்தி ரண்டு
புல்லிய தொடையி னான்கு புகல்சுழி பத்து மொத்த
நல்லியற் குதிரை யேற்றம் நலார்களின் மனம்போற் கற்றான்.

மருவிய முன்பு யர்ந்து பின்புதாழ்ந் தழகின் மன்னிப்
பொருவிறற் றுதிக்கை கால்கள் கொம்புவால் பொருந்து கோசக்
கருவிதாழ்ந் தருவி போலுங் கடம்பொழிந் தசைஇமு றக்கா
திருவிழி கனற்கான் றேங்கு மெறும்பியேற் றத்துந் தேர்ந்தான்

போற்றுமைங் கணையை மீறும் புரவிபூண் டியர்தே ரோர்ந்தான்
நூற்றினம் பாணி டால்க ளூறுநா றுளசுற் றுடை
யீற்றினைப் பொதிந்து செம்பொற் சரிகையார்த் திலங்கு தூவி
யாற்றிகழ்ந் தொளிம ணிக்கொ ளழகுதேர் நடாத்த னன்றால்.

---

௨௮. வாசிகை-மாலை. இது காமமாலை(அகவலடியும் கலியடியும் வந்து மய ங்கிய வஞ்சிப்பாவால் பாடுவதும் சொற்சீரடியென்னும் கட்டுரைச் செய் யுளாற், குலமுறையிற்செய்தகீர்த்திபைப்பாடும் மெய்க்கீர்த்திமாலையும் ஆகிய இவற்றிலொன்றுப்போலும்) ௩௧, பூழின்-பூழியின், சண்டப்பூழிபூழ்என வென்றுருபேற்றது, இலாசம்-பொரி, உன்னி-குதிரைகளில், ௩௪, தோல்-திரற்றி,

வேறு.

இலங்கிய வில்லசி யீட்டி சக்கரங்
கலங்கிடுந் தண்டுவேல் கருவி முற்றவுந்
துலங்கிடும் பல்படை சூழ்சி லம்பமல்
வலங்கிளர் முதன்மைகொள் வளத்த னுபினன். (௩௫)

எண்ணனன் கெழுதலோங் கிலைகிள் ளன்மலர்
வண்ணமாத் தொடுத்தன்மா டகப்பண் வாசித்தல்
பண்ணலைந் தொழில்கைவிற் பனம்ப யின்றன
னண்ணல்கைச் சித்திர மகில மெச்சுமால், (௩௬)

பரந்தபார் மலைவனம் பவ்வ மாறுக
ணிரந்தமாப் போய்வர நிறைவன் பாக்கமார்
தாரந்தமா யாசம்ப்ர தாயஞ் சாலநூ
லுரந்தரு தத்துவ வுணர்வுந் தேர்ந்தனன். (௩௭)

யோகினி சாலமோர்ந் துருவங் காட்டலும்
வாகினி வென்றிவர் வலிமை நாட்டலுஞ்
சாகினிக் கடாவிறல் சார்ப தாயுதம்
பாகினித் தாட்டிவெல் பதமு மோர்ந்தனன். (௩௮)

விழித்துள போதினு மெய்ம யங்கிவாய்
வழித்தரு முறையிலா துறங்கன் மானவாழ்
வழித்திவர் மோகன மறிந்து ளான்புவி
பழித்திடாத் தொடர்வசி யமும்ப டித்துளான். (௩௯)

தந்திரந் திகழ்மனத் தைரி யஞ்சிறந்
துந்திகல் கீழ்ப்பட வுறுதித் தத்துவப்
புந்திநன் றுற்றனன் புரியும் பேதனம்
மந்திரம் வைப்புகள் வரித்தல் கற்றனன். (௪0)

வேறு

உரைத்திடுங் குப்பதந் திரமுடன் வெளிப்பட்ட வொன்றை
நிரைத்திவண் மறைத்தனு நெடுங்கலை வித்தையாம் வாதம்
வரைத்திரு மதனவித் தையுங்கலா சாரமும் வயங்க
விரைத்திவர் வருணவித் தையுமிகக் கற்றனன் விரைந்தே. (௪௧)

---

௩௫, அசி—வாள், ௩௬, இலைகிள்ளல்—பச்சிலைகளால்கிளிமுதலியனவ மைத்தலென்ப, மாடகம்—யாழ், நிரந்தமா-நெருக்கிடையாக, தரந்தமாயாசம் ப்ரதாயம்—கடல்போலும், மாயையாலுண்டாக்கும் விசித்திரவித்தையாகிய, ௩௮, யோகினிசாலம்—காளிசாலம், வாகினி-படை, சாகினிக்கடா-ஆட்டுக் கடா, இறல்—விடை, பதாயுதம்-சேவல். பாகு—புயம்மோகனம்—ஆளைமயக்குந் தொழில், ௪0, உறுதித்தத்துவம்—மனநிலைத்தத்துவம், ௪௧, குய்யம—இரகசியம்

வேறு

மண்டிய குண்டிகா மதம தென்பதும்
பண்டியல் குளிகையா விளமை பண்ணலும்
மிண்டிய வஞ்சன வித்தை செய்வதும்
கொண்டியல் புதைபொருள் வெளிக்கொ ணர்தலும். (சஉ)

பாதுகை யேறியெண் படிக்குச் சேறலும்
போதுகைப் பாத்திரம் புறத்தோர் பாத்திரத்
தேதுகைத் தேறுவா வெனவ ரித்தலும்
கோதுறூர் நினைத்ததைக் குறித்துக் கூறலும். (சங)

விண்ணிய லும்பர காய வித்தையாம்
நுண்ணிய வுயிரின்மெய் நுழைந்து மீடலும்
திண்ணிய விரும்புமுன் சிலவு லோகங்கட்
பண்ணிய செம்பொனைப் படைத்துக் காட்டலும். (சச)

வேறு.

மந்தி ரத்தொடு கிரியைபா வனசத்தி வழியி
னெந்தி ரத்திறி யாவையு முணர்ந்தறி விசைகூர்
சந்தி ரன்குலந் தழைக்கவந் துதித்தசண் பகனென்
றிந்தி ரன்பணி பராக்கிர மத்தென்ன னிவனே. (சரு)

வேறு

ஆறு மூறும டுத்தகு டிப்பயி
ரேறு செந்நெல்வி ளைவிக்கு மிங்கிதன்
கூறு வாவியுங் கோயிலுங் கூவலும்
நூறு பூவனம் நாட்டிடுஞ் செவ்வியான். (சசு)

உத்தி யானமு மோங்குமெண் ணென்கற
வுத்தி யான வுபாக ளாகங்க
ளுத்தி யானவ முள்ளம னைகளு
முத்தி யானவ ளுதிய வாக்கமும். (சஎ)

ஆற்ற லைத்தலை வாழையு லாவெயி
லாற்ற லைத்தலை வாளைய ளிக்கவே
யாற்ற லைத்தலைக் கொண்டவ ருந்தவத் (சஅ)
தாற்ற லைத்தலைக் கொண்டவச் சாயையும்

---

சஉ, குண்டிகாமதமது-குடமெனப்படும்மாயோனுடன்மதமது, சங, போதுகைப்பாத்திரம்-மலர்போலும்விரிந்தகையாகிய பாத்திரத்தினிடத்து, ஏதுகைத்தேனும்—எத்தகையபொருளாயிருப்பினும், சஎ, உத்தியானம்—பூந்தோட்டம், உத்தியான—செல்வமாகிய அகளாகங்கள்—நிட்களமாகிய அறச்சாலைகளும், உத்தியால்-அறிவாலமைக்கப்பட்ட, உத்தியானவன்—சொற்றிருவி(புகழிலக்குமியி)னுடைய. ஓங்கும்எனக்கவியைமுடிக்க,

வேறு.

இலங்கிய வில்லசி யீட்டி சக்கரங்
கலங்கிடுந் தண்டுவேல் கருவி முற்றவுந்
துலங்கிடும் பல்படை சூழ்சி லம்பமல்
வலங்கிளர் முதன்மைகொள் வளத்த னுபினன். (௩௫)

எண்ணனன் கெழுதலோங் கிலைகிள் ளன்மலர்
வண்ணமாத் தொடுத்தன்மா டகப்பண் வாசித்தல்
பண்ணலைந் தொழில்கைவிற் பனம்ப யின்றன
னண்ணல்கைச் சித்திர மகில மெச்சுமால், (௩௬)

பரந்தபார் மலைவனம் பவ்வ மாறுக
ணிரந்தமாப் போய்வர நிறைவன் பாக்கமார்
தரந்தமா யாசம்ப்ர தாயஞ் சாலநூ
லுரந்தரு தத்துவ வுணர்வுந் தேர்ந்தனன். (௩௭)

யோகினி சாலமோர்ந் துருவங் காட்டலும்
வாகினி வென்றிவர் வலிமை நாட்டலுஞ்
சாகினிக் கடாவிறல் சார்ப தாயுதம்
பாகினித் தாட்டிவெல் பதமு மோர்ந்தனன். (௩௮)

விழித்துள போதினு மெய்ம யங்கிவாய்
வழித்தரு முரையிலா துறங்கன் மானவாழ்
வழித்திவர் மோகன மறிந்து ளான்புவி
பழித்திடாத் தொடர்வசி யமும்ப டித்துளான். (௩௯)

தந்திரந் திகழ்மனத் தைரி யஞ்சிறந்
துந்திகல் கிழ்ப்பட வுறுதித் தத்துவப்
புந்திநன் றுற்றனன் புரியும்பேதனம்
மந்திரம் வைப்புகள் வரித்தல் கற்றனன். (௪௰)

வேறு

உரைத்திடுங் குப்பதந் திரமுடன் வெளிப்பட்ட வொன்றை
நிரைத்திவண் மறைத்தலு நெடுங்கலை வித்தையாம் வாதம்
வரைத்திரு மதனவித் தையுங்கலா சாரமும் வயங்க
விரைத்திவர் வருணவித் தையுமிகக் கற்றனன் விரைந்தே. (௪௧)

---

௩௫, அசி—வாள், ௩௬, இலைகிள்ளல்—பச்சிலைகளால்கிளிமுதலியனவ மைத்தலென்ப, மாடகம்—யாழ், நிரந்தமா-நெருக்கிடையாக, தரந்தமாயாசம்ப்ரதாயம்—கடல்போலும், மாயையாலுண்டாக்கும் விசித்திரவித்தையாகிய, ௩௮, யோகினிசாலம்—காளிசாலம், வாகினி-படை, சாகினிக்கடா-ஆட்டுக்கடா, இறல்—விடை, பதாயுதம்-சேவல். பாகு—புயம்மோகனம்—ஆளைமயக்குந் தொழில், ௪௰, உறுதித்தத்துவம்—மனநிலைத்தத்துவம், ௪௧, குய்யம்—இரகசியம்

வேறு

மண்டிய குண்டிகா மதம தென்பதும்
பண்டியல் குளிகையா விளமை பண்ணலும்
மிண்டிய வஞ்சன வித்தை செய்வதுங்
கொண்டியல் புதைபொருள் வெளிக்கொ ணர்தலும். (சஉ)

பாதுகை யேறியெண் படிக்குச் சேறலும்
போதுகைப் பாத்திரம் புறத்தோர் பாத்திரத்
தேதுகைத் தேறுவா வெனவ ரித்தலும்
கோதுறுர் நினைத்ததைக் குறித்துக் கூறலும். (சங)

விண்ணிய லும்பர காய வித்தையாம்
நுண்ணிய வுயிரின்மெய் நுழைந்து மீடலும்
திண்ணிய விரும்புமுன் சிலவு லோகங்கட்
பண்ணிய செம்பொனுப் படைத்துக் காட்டலும். (சச)

வேறு.

மந்தி ரத்தொடு கிரியைபா வனைசத்தி வழியி
னெந்தி ரத்திநி யாவையு முணர்ந்தறி விசைகூர்
சந்தி ரன்குலந் தழைக்கவந் துதித்தசண் பகனென்
றிந்தி ரன்பணி பராக்கிர மத்தென்ன னிவனே. (சரு)

வேறு

ஆறு மூறும டுத்தகு டிப்பயி
ரேறு செந்நெல்வி ளைவிக்கு மிங்கிதன்
கூறு வாவியுங் கோயிலுங் கூவலும்
நாறு பூவனம் நாட்டிடுஞ் செவ்வியான். (சசு)

உத்தி யானமு மோங்குமெண் ணென்கற
வுத்தி யான வுபாக ளாகங்க
ளுத்தி யானவ முள்ளம னைகளு
முத்தி யானவ ளுதிய வாக்கமும். (சஎ)

ஆற்ற லைத்தலை வாழையு லாவெயி
லாற்ற லைத்தலை வானைய ளிக்கவே
யாற்ற லைத்தலைக் கொண்டவ ருந்தவத் (சஅ)
தாற்ற லைத்தலைக் கொண்டவச் சாயையும்

---

சஉ, குண்டிகாமதமது-குடமெனப்படும்மாயோனுடன்மதமது, சங, போது கைப்பாத்திரம்-மலர்போலும்விரிந்தகையாகிய பாத்திரத்தினிடத்து, ஏது கைத்தேனும்—எத்தகையபொருளாயிருப்பினும், சஎ, உத்தியானம்—பூந் தோட்டம், உத்தியான—செல்வமாகிய; அகளாகங்கள்—நிட்களமாகிய அற ச்சாலைகளும், உத்தியால்-அறிவாலமைக்கப்பட்ட, உத்தியானவன்—சொற் றிருவி(புகழிலக்குமியி)னுடைய. ஓங்கும்எனக்கவியைமுடிக்க,

அஞ்சு மஞ்சத் தரிவைய ராடவர்க்
கஞ்சு மஞ்ச வகையுண வாற்றலு
மஞ்சு மஞ்சு மறிவுடை மைந்தர்தா
மஞ்சு மஞ்சு மழகுற வார்ப்பவும், (சக)

கன்னி பாதம்ப ராவிக்கங் காநதி
கன்னி காசி முழுவதுங் காப்பவன்
கன்னி யானதி வீரங்கு லந்தருக்
கன்னி யாயப் படிச்செயக் கற்றுளான். (ருo)

கண்ட மட்டொளிர் தாமர் மணிமுடி
கண்ட மட்டமா ராகை மெலியவே
கண்ட மட்டகற் றுந்திறற் கட்கத்தான்
கண்ட மட்டதி சைக்கொரு காவலான். (ருக)

மாத ராசை யகற்றிம னுமுறை
மாத ராசை மணிமுடி வைத்தவன்
மாத ராசை யுலகின னென்னினு
மாத ராசை நிகருரை வாக்கினன், (ருஉ)

கன்னல் வில்லி கனற்கண் கடாவுமுன்
கன்னல் வில்லியன் கட்டழ காயினன்
கன்ன லாடகக் கொங்கைக லந்துளான்
கன்ன விற்கலை கற்கும கிழ்ச்சியான். (ருங)

காம னுடுநிம் பத்தொடை கட்டியே
காம னன கவுரிய ணைந்தருக்
காம னன கடவுள்சிங் காசன
காம னுமென் றிருந்த கருணையான். (ருச)

சேல னுடல் புரிதிரு மேனியான்
சேல னுடர் திரையிடு சீரினன்
கோல மானவன் காத்தருள் கொள்கைபோற்
கோல மாநிலங் காக்குஞ்செங் கோலினன்: (ருரு)

வேறு.

இன்னவா றியற்றியே யியற்செங் கோன்முறை
மன்னவா வியகுடி வளமு மாசிலாத்
தன்னவா வுளமகிழ் தரணி யோரெலாம்
பொன்னவா விருக்கையாய்ப் பொலிந்த காட்சியால், (ருசு)

ருரு—சேலன்—காட்சிக்குஎளியனுகி.

ஒருவருக் கெவருமே யுறவிற் கூடுவா
ரொருவருக் கெவருமே யுதவி செய்குவா
ரொருவருக் கெவருமே புன்மை கூறுவா
ரொருவருக் கெவருமே யுயிரி னிற்பரால். (௫௭)

ஆதலி னிந்நக ராசு மப்படிக்
காதலி னின்றுபார் காக்குங் காவலர
லோதலிற் கொடுமையிங் கொன்று மில்லையா
யிதலின் னுரையுயிர்க் கிரக்க மோங்குமே. (௫௮)

அவனியி லிவணர சாக்கம் போலவே
தவநிபு முத்தர மனித்தர் சார்ந்தனர்
எவர்நிதி குன்றினு மீன ரயிலலர்
சிவநெறி யோங்கலிற் சிறந்த தின்பமே, (௫௯)

தேசுறு மந்நகர் சிலர்வந் தோங்கலில்
வீசுரக னைகமலை விடர்கைச் சாரலின்
மாசுரத் திறங்கியே மறித்து முக்கிமுன்
னீசுரன் வைகைநாட் டினிற்செய் தென்றனர். (௬௰)

ஆசது கேட்டமைச் சரசற் கோதினன்
வாசகந் தேர்ந்துகை மலைக ணட்டினிற்
காசனஞ் செயற்கிறங் காமற் காப்பது
தேசமன் கடனெனச் சிந்தித் தானிறை. (௬௧)

பொருக்கென வடுபடை பொழியுந் தானையோ
டுருக்கெடுதீ திடுந்தழ லுருக்கும் வேல்களோ
டருக்கெழாக் கபக்குழா மறவி லக்குவான்
றிருக்கெடித் தலத்துமன் செல்ல லாயினன். (௬௨)

வேட்டமா டுவன்கொலோ விஞ்சை வல்லமன்
காட்டகக் கயமெலாங் கனிந்த ழைத்துநம்
நாட்டடா துரையுவா னகத் தோட்டுமோ
கூட்டமார் தானைகாண் குவமென் றுற்றனர். (௬௩)

---

௫௫ சேலன்-காட்சிக்கெளியனாகி ௬௰ ஓங்கலில்-மலையினின்றும் விடர்கைச்சாரலில்-காட்டுப்பக்கமாகிய மலையடிவாரத்தில், மாசுரம்-பாலைவனத்தில் ௬௨ அருக்கெழா-அஞ்சுகையுண்டாகாமல், கெடித்தலம்-சேரற்கரியவிடம்.

போயினான் கடவுக டொரும்பு ழைக்கையு
சாயினான் வரித்தனன் றடையிட் டப்புறம்
வாயினான் மறைமதில் வளைந்த நீயிரங்
கேயினாற் பிழையவ ணிருக்கென் றிட்டனன். (௬௪)

வேறு.

கல்லெனவு வாக்குழுமன் கட்டளையை யேற்றே
யொல்லென மலைக்கணிவர் வுற்றனவொ துங்கி
செல்லெனவெ றித்தவொரு தெள்ளியது ருத்து
வல்லெனவி றங்கபிற வாழ்ந்தனம றைந்தே. (௬௫)

எட்டினப டைத்திரளெ ழுந்தமத யானை
முட்டினகு ழாத்தொரிமு ழங்கியல றித்தான்
கட்டினநெ ருங்குபடை கைக்கொடுபி டித்தே
வெட்டினம ருப்பொடுகை வேழம்விழ வென்றே. (௬௬)

ஆனையின்கு ழாத்தினிதொ ராணைமத மீறித்
தானையினெ ருக்கடித னாந்துமலை யேறிச்
சோனையின்வ ளத்தபயிர் துன்னுமலை யாராக்
கானையினி ழிந்துசெலல் கண்டுசெழி யன்றார். (௬௭)

ஓடியக யத்தினைவி டாதுதொடர் வுற்றே
கூடியவ ளப்பில்படை கொண்டுதலை செய்ய
நாடியது கண்டசில வில்லரவ ணண்ணி
யீடியலி வேழமதை யாங்கள்விடே மென்றார். (௬௮)

விட்டிடுதி ரல்லதும வேந்தனொடு வந்திங்
கொட்டிடுதிர் போர்க்குவெல லும்மதெனி னீரே
கட்டிடுதிர் வேழமதை யல்லதுக டப்பீர்
பட்டிடுதிர் நிற்பினெனப் பார்த்திபன் மொழிந்தான். (௬௯)

அஞ்சலணி யூரினைய டுத்தனர்சில் வில்லர்
வெஞ்சலதி வெள்ளமென மீனவன்ப டைக்கண்
குஞ்சரம்வி டாதுசிலர் கூடினரி ருந்தார்
வஞ்சியதி பன்வினவி மந்திரியொ டோர்ந்தான். (௭௰)

---

௬௪ கடவு-வழி. உசானான்-ஆராய்ந்தான், மறைமதில-மந்திரக்கோட்டை ௬௬ ஒரி-ஒரீஇ (நீங்கி) ௬௭ கானையின்-காட்டாற்றின், செழியன்றார்-பாண்டியன்படை ௬௮ தலைசெய்ய-விலங்கிட, வில்லர்-சேரன்படைகள் (கானவர்)

குஞ்சரம வாய்வரின் கொடுக்குநிலை யெள்ளி
மிஞ்சியகொ டிப்படையின் மீனவனை வெங்கண்
டஞ்சிநெறி யோருமறி வாக்கன்முறை யென்றே
கொஞ்சமதி நூலறிஞன் கூறினனென் செய்வான். (எக)

மன்னவனெ னச்சொலிம தித்தகள கர்த்தர்
பன்னலையு ளேற்றுரைசெய் பண்புணர்வி லாத
தென்னவனை வென்றிடுவல் சீக்கிரமெ னுங்கே
வுன்னதப டைத்திரளை யுய்த்தனனெ ழுந்தான். (எஉ)

வல்லவனெ னப்படுப ராக்கிரம மாறற்
கொல்லவுள குஞ்ஞுபடை கொண்டிவர்வன் சேரன்
செல்லதிர்த லொத்திகலல் செய்பறை முழக்கிச்
சொல்லருவ லாண்மைகொடு தோன்றினன்முன் வந்தான்

பாண்டியகு லத்ததிப ராக்கிரம நின்பேர்
காண்டியகி லத்தொடுக டாகமுந டுங்கத்
தூண்டியயு தப்படைசு டர்க்கதிரொ ழிப்ப
வீண்டியடல் செய்வலென மந்திரியி சைத்தான். (எச)

மந்திரிசொல் செண்பகமன் வாங்கியுளு கந்து
தந்திரிமு ருக்கெனவ யங்குபடை தாங்கி
முந்திரிவ ளைப்புறுமு ழுப்பரிசை யொன்னார்
வெந்திரிய வோட்டினர் விளைத்தனர்வன் சாரி. (எரு)

அன்னவழி கண்டுதிய னுற்றலொடு முட்டத்
தென்னவனெ ருப்புதிர்சி ரப்படைக ளேவிப்
பன்னவமொ டொன்பதனி ரட்டிபடை பாய்மா
மின்னவெதிர் சென்றுதன மேம்படவி டுத்தான். (எசு)

மீனவனின் வெம்படைகண் மேலமர்செய் வஞ்சிக்
கோனவனி மெச்சுறு கொடுஞ்சிலை வளைத்துத்
தானவரு மஞ்சவிட வஞ்சிதலை தத்திப்
போனகரு மஞ்சிலர்பொ ருக்கெனவு ரைத்தார். (எஎ)

---

எங ஒல்ல-பொருந்த எச கடாகம்-அண்டகடாகம் அண்டத்தோடு அயுதம்-பதினாயிரம் எரு முருக்கு-எதிரிகளை அழி, முந்திரிவளைப்புறு-முந்திரியென்னும் எண்ணின் எழுத்தைப்போலவளைப்புற்ற

பஞ்சவனி ருக்குமொரு பாசறைம ருங்கே
வஞ்சவடி வாளொடுகை வேலொடும றத்தா
னெஞ்சவயி ரத்தொடுநி ணத்துதிர மோட
மிஞ்சவகிர் வித்தனர்வல் வில்லர்கைவு றற்கே. (௭௮)

பேரிகைப்ப முந்தொனிபெ ருக்கினர்மு ழக்கேழ்
வாரிகையெ டுக்குமுகின் மானவரு சேரன்
சோரிகைத வற்கெதிர்து ஞருடவி ஞேடச்
சாரிகைதி ரிந்தநிச மர்த்தொழில்வி ளைத்தான். (௭௯)

எட்டினப டைகள்கொடெ திர்த்தவன்முன் வந்து
வெட்டினர்வன் மாறனின்வி யன்கொள்படை வீரர்
கட்டினப தாகைகைகொள் காலுருள்கொ டண்டாற்
கொட்டினதி ரிந்தமலை யாளர்குட ரோடே. (௮௰)

வஞ்சியர்சி னப்படைவ ளைந்ததனை மாறன்
பிஞ்சியமர் செய்குவன்மி லைச்சியப னந்தார்க்
குஞ்சியலை யத்தொடர்கொ டுங்கணை விடுத்தா
னஞ்சியத டக்கியவ ளைங்கணை விடுத்தான். (௮௧)

குஞ்சரந டுங்கரிய னக்குலவு மாறன்
வெஞ்சரமெ டுத்தெறிய வில்லவனும் வில்லே
வஞ்சரத மாகவுட ஊறுசெய விட்டான்
வஞ்சரக லங்கிழிய வாள்வழுதி யெய்தான். (௮௨)

வேறு

கடுமுட்கொடு கைதவன் கனலுக வெய்தான
விடுமுற்கர வில்லவ னெல்லையின் மீண்டே
வடுமுற்றிட ஊறுசெ யம்பினை வாங்கித்
தொடுமுச்சியி னின்றுமா லையின்வரைத் தூர்த்தான். (௮௩)

பாபத்தழ விட்டனன் வஞ்சியர் பதிமாக்
கோபத்தநி கோரநெ டும்படை குலைய
வரபத்தனை விஞ்சையி னம்புபொ ழிந்து
தீபத்தவிர் செண்பக பாண்டியன் சிரித்தான். (௮௪)

உதியப்பெரு மன்னனு மோடியொ ளித்தான்
கதியற்றன னென்றுக ருத்தழி வுற்றே
மதியக்குல மன்னவன் வஞ்சியின் மாழை
பொதியத்திரள் வைப்பிடை முத்திரை போக்கி. (௮௫)

௮௩-கடுமுள்-நஞ்சுட்டியமுட்படை. முற்கரம்-சம்மட்டி, படைக்கலம்.

குடகத்துள செம்பொனும் வல்லவர் கொள்ளை
கடகத்தொடு முடுகுகள் சங்கிலி கவரி
படகத்திரை சேனைகள் கைமலை பாய்மா
வடகத்திரள் வரிசைக ளத்திர மனைத்தும். (அசு)

வேணத்தகு பணமுள முற்றவும் வேறு
பூணத்தகு பாயிழை பொன்மணி முற்றுங்
காணத்தகு மத்தனை யுங்கொடு காவின்
நாணத்தனை பூட்டின னுகனை மாறன். (அஎ)

அமராற்றிடை கூடிவ ரும்படை யற்றைச்
சமராடியி றந்தவர் தந்தலை மீதே
குமரா வல்லியி லங்குப ரிக்குழு வேற்றி
நமராமென லூர்ந்துந யந்துந டப்பார். (அஅ)

வேறு

மஞ்சலி வர்குட மன்னன்
எஞ்சலி னுடிழந் தேத்த
வஞ்சலி னூர்தொழ வண்ணல்
வெஞ்சலி லத்தனில் விட்டான். (அகூ)

கூடலி னூர்த்தகு ழாமுந்
தேடலி லாப்பொருட் சேர்வும்
வாடலில் வென்றிவ ளத்தா
ராடலின் மாறனை ணைந்தான். (கூ௦)

பாண்டியின் பாண்டியின் வந்து
வேண்டிய வென்றிவி ழாக்கொண்
டீண்டிய சீர்கொ டிலங்கி
யாண்டிவர் விந்தைய டைந்தான். (கூக)

---

அசு-வல்லவர்-கொள்ளை-சேரனைவென்றவல்லவராகிய பாண்டியன் படைகள் கொள்ளையாக. கடகம்-கங்கணம். முடுகு-மொடு அது, வெகுமதியாகவரும் கைப்பணிசங்கிலி-வீரசங்கிலி-படகத்திரை-திரைச்சீலை வடகம்-மேலங்கி, தோற்பரிசை-வரிசை-வெகுமானப்பொருள். அத்திரம்-மந்திர பாணங்கள். அஎ-நாகளை-மலையமானை அஅ-குமரா அழியாமையையுடைய, நமரமென-கண்டோர் எமன்மாரென்று சொல்ல அகூ-மஞ்சல்-மேகத்தாலுண்டாமிருட்டு.வெஞ்சலிலத்தன்-விரும்பப்பட்டதன்மையுடையனை.

வேறு.

மதிசெய பராக்கிர மனென பேரினைத்
துதிசெய நாடெலாந் துலங்க நாட்டினான்
திதிசெய வசந்தமா டமும்வண் செச்சையும்
விதிசெய வேலினன் வியப்ப வாழுவான். (௩௨)

அரசரின் மதிப்புற வடல்செய் தானையான்
முரசதிர் முன்றிலான் முதிய முத்தமிழ்
பரசதி மதுரவண் பாடல் வல்லவன்
சரசசல் லாபன்பேர் தழைக்குஞ் சீரினன். (௩௩)

துட்டரை யொடுக்குமுத் துங்கன் வாழுறச்
சிட்டரை வளர்த்தவர் சிறப்பச் செய்தவன்
கட்டளை யுதவியாற் களிப்பிப் பான்பல
பட்டறை யவரவர் பணிசெய் விப்பவன். (௩௪)

தருமமே வளர்ப்பவன் றரைவ ரம்பினுள்
வருமனு நெறிபுரி வலான்பல் லாலயந்
திருமதின் மண்டபஞ் சிகரி வீதிக
ளொருமனப் பட்டிவர் வுறச்செய் மாதவன். (௩௫)

ஆலய பூசனை யாறு காலமாங்
காலையு தயமுச்சி யந்தி காலநான்
மேலையி ரவரு வேளை யாமிரண்
டேலதி னுகமத் தியற்று விப்பனே. (௩௬)

திருதியில் லறந்துற வநஞ்செ ழித்திடக்
கருதிநல் லறவனுக் காக்குங் காவலான்
விருதிவ ரிவனைநேர் விபுலை யில்லெனப்
பருதியின் வாழுவான் பாண்டி மன்னனே. (௩௭)

## செண்பகபாண்டியன் உற்பத்தியாட்சிப்படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ௲௩௪௨

---

௩௨-செச்சை-மாடத்தின் மேன்மாடம், விதி-அமைத்த ௩௩-சரசசல்லாபன்,இனியகுணத்துடன் அளவளாவிப்பேசுபவன் ௩௪,உத்துங்கன்-மகத்துவன் கட்டளை-எளிமையினாற் கட்டுப்படுபவரை பலபட்டறை-பலப்பட்டு வரையறுத்திருக்கப்பட்ட, தொழிற்குடிகளை ௩௬-ஐதின்-அழகிதாக ௩௭-திருதி-துணையாகிய விபுலை-உலகம்

## இருபத்தாராவது

# செண்பகபாண்டியன் குளிகை பெற்ற படலம்.

செண்பக மாறன் றோன்றித் திறலுறு மாட்சி செய்த
தண்பகா மாண்பு சொற்றூந் தகவுறு மவன்மே லன்பா
வண்பகர் பன்னி ரண்டு வளத்தகதோ ளுடையோன் பூசை
பண்படப் புரிந்து பெற்ற குளிகையாற் படர்சீர் சொல்வாம். (க)

இந்திர போகம் போலு மிருநிதிச் செல்வ மோங்கி
முந்திர தாதி நான்கும் முறைசிறந் தாணை நீட
மந்திரப் பளிங்கு மாடம் வளரொளி விமானப்பந்தி
சந்திர காந்தக் கோயில் சார்கதிர் பருதி காட்ட. (உ)

சவுரிய மிகுந்த செங்கோற் றரையெலாம் புகழ்ந்து போற்றக்
கவுரியர் முறைமை தாங்கிக் கருதலர் திறைக ளுய்த்துச்
செவுரிய கழலிற் றாழத் திறல்புரிந் துலகங் காக்கும்
பவுரியன் பராக்ர மப்பேர்ப் பஞ்சவன் மகிழ்ந்து வாழ்வான். (ங)

அயலவர்க் கொருதாய் போலு மாருடற் குயிரே போலுங்
கயலவிர் விழிநல் லார்க்கோர் சாமனே போலுங் கல்விச்
செயலதிற் கும்பன் போலுந் தெருட்சியிற் சேடன் போலு
மயலறு செண்ப கப்பேர் வழுதியா மவன்வாழ் நாளில். (ச)

வேறு

திருவிந்தையி னுறைமாண்வழு தியினேங்கரண் மனையிற்
குருவிந்தம லையின்மன்னிய குலமேடையி னுள்புக்
கொருவிந்தென முருகோன்முனி யுருவங்கொடோர் நாளின்
வருவிஞ்சைம னமளிப்புடை வளர்வான்விளை யாட்டால். (ரு)

---

க-தண்பகா-சாந்தத்தால் பிரிக்கப்படாத, வண்பகர்-மிகுதியாகச்சொல்லப்பட்ட ங-செவுரிய-செம்மையான உரிமையுள்ள, பவுரியன்சைவவேடத்தையுடையவனாகிய ரு-குருவிந்தமலை:செம்மணிமலை,ஒருவிந்து ஒப்பற்ற நெற்றித்திலகம் வளர்வான்-கண்வளர்தல் செய்வான்

அருகங்கணோர் வயின்வேந்தனு மறுகோணுறு முக்கோண்
பெருகங்கமொ டிதமெழான்றனின் பெரிதாமுறைப் பெழுதி
வருகந்தனை யழகார்கய வலிவள்ளியம் மைகளோ
டுருகன்பொடு நவவீரரென் றுரைவாரையுங் கண்டே. (௬)

ஒருவான்றொழு தவனன்றுசெய் வழிபாடிவர் தற்பின்
பெருவாழ்வருண் முருகோன்கடி பெரிதும்பர வியதால்
வெருவாமகிழ் வுறுவேந்தனும் வியனாரறி வமைச்சுந்
திருவாசமி தெவனுண்டிது தெரிவோமென வெண்ணி. (௭)

சென்றாதி செயமென்றுளந் தெளியாவிரு கடிகை
மன்றாவர் திசையெட்டினு மணமீதினென் றறிவான்
பொன்றாணி யலைவார்பிற புதிதொன்றறி யாமற்
பின்றாழ்பரி சனம்விண்டனர் பெருமானது கேளா. (௮)

மனையுட்டெரி குவமென்றிறை மணிமண்டப முதலாச்
சுனையும்பிற தலமுற்றவுந் துருவித்திகழ் வனமார்
நனையுற்றொளி மலர்செண்பக நகையாரிரு வாட்சி
புனையுங்குட மலிகைமரு புகழ்முல்லைசெங் காந்தள். (௯)

வகுளம்பொலி காமஞ்சரி பவளம்மலி கைநீர்த்
தெகுளங்குள வரைமுண்டகந் திகழ்பிச்சிசெ வந்தி
முகுளங்கொடி மாநீர்செடி முழுதுந்தெரிந் தப்பால்
வெகுளங்கொழி யறவோன்றளிர் விரைவேர்களுந் தேர்ந்தான்.

தெரியும்வகை தெரிவேந்தனி செயமீதென வெண்ணி
விரியும்மொளி யறைமேடையின் மிசையேறினன் வெட்சி
சொரியுந்திரு வடிவேலவன் றுயில்பள்ளியி னருகா
வரியும்புகழ் முருகோன்விழி யதுதுஞ்சலி னமர்தல். (௰௧)

கண்டானுடல் புளகங்கொடு கால்ரேகைகை ரேகை
யுண்டாமழ குணர்வான்முடி யுழுகைகொடு தாழ்வான்
பண்டாரணன் முதலோர்திரு விளையாட்டதிப் படியோ
தொண்டாணவை கொளவோகுகன் றுணிவீதென நினைவான்.( )

---

௬-இதழ்-பொற்றகடுகயவலி-குஞ்சரவல்லி (தேவயானை) ௭-முருகோன்கடி-முருகப்பெருமானுடைய திருமேனிவாசனை ௯-சுனை-அரண்மனையகத்திருக்குளம் ௰-வகுளம்-மகிழமரம் காமஞ்சரி-நாயுருவி, நீர்த்தெகுளம்-புனல்நிறைந்த வரை-கரை முண்டகம்-தாழை-தாமரை முகுளம்-மலரும் வெகுளங்கொழி-அவ்விடத்துக்கோபந்தீர்ந்த ௰௧-வெட்சிசொரியுந்திரு- வெட்சிப்பூமாலையை மிகவணிதலாலுண்டாகிய அழகினையுடைய வடிவேலவன்-பாண்டியன்

முருகன்றனை யுருகன்பொடு முக்கோணறு கோணின்
வருகம்பம தில்குஞ்சரி வள்ளிக்கிடம் வலமுந்
தருகந்தனை நவவீரருந் தாழ்வேலனை யேத்தி
யருள்கண்டம னளிதாவரு மதுதான்பணி யுருவால். (௰௩)

கரவிந்தவி தத்தேதுயில் கந்தன்றிரு மெய்கொண்
டரவிந்தமென் முகமண்டல மாம்பற்றிரு வாயின்
வரவிந்தவொ ருண்டைவெளி வரல்போற்குகன் வழுதி
யுரவிந்தைகொண் டனன்வாயிலிட் டுயர்வான்வெளி யுகுத்தான்.

துயிலைத்தொலைத் தம்மாமுனி சொல்வானெனை யெவரு
மயிலைக்கட வியவேலவன் மரபானவ னென்பார்
குயிலைப்பசுங் கிளியைக்குளிர் புனலைக்கொழி பொருனை
கயிலைப்பொதி யிலின்மேவுவல் காலைச்சிறு சாலை. (௰௫)

செல்லுந்தின மிதிலேயுன தில்லுந்திய சிறுகால்
வெல்லுந்தளிர் மலர்காய்கனி விரைசந்தவி ருக்கம்
புல்லுந்தழை பொதிபாசலக் குளிராவது போல
வொல்லுந்தரத் தலையித னுள்பரமுமுற் றனமால் (௰௬)

என்றிவ்வுரை முனியோதிட வெண்ணித்தமிழ் வழுதி
நன்றிவ்வுரை பெற்றேனென நகையாடிந யந்தே
கன்றிவ்வுயி ருக்கோர்பர கதிகாட்டுதி யையா
வொன்றிவ்வழி முருகாவென வுறுதாள்பிடித் தனனால். (௰௭)

கிடந்தான்கிடந் ததுகண்டதி கேண்மைத்தவ முனியுன்
னிடந்தாழ்வில தாதற்கென திதனைவுறு குளிகை
கடந்தாமத மிலதாயுளங் கருதுந்தலஞ் செலவா
னடந்தார்தவிற் சேர்க்குமிது நல்கிற்றென நல்கி. (௰௮)

பொதியார்குறு முனிதாழிலஞ் சியின்வாழ்புகழ் குமர
னதியார்வமொ டணிமாவெனு மொருசத்தியை யருளத்
துதியார்கவி யதனாற்கரந் தொலைநாளினி லேந்தி
விதியாசம னஞ்செய்துபின் வெளிவிட்டனன் வேந்த. (௰௯)

---

௰௩-கம்பம்-நடுக்கம் அது-முருகனது திருமேனி, ௰௪ கரவு—கள்ளமாக துயில்—தூங்குதல் திருவாயின்வரவு—திருவாயினின்றும் வருவதாகிய உரவிந்தைகொண்டனன்——உள்ளக்கிளர்ச்சியைத்தரும் ஆச்சரியமுற்றவனாகி உகுத்தான்—உறக்கத்தின் வெளிப்பட்டாற்போல முருகன் உமிழ்ந்துவிட்டான் ௰௫ மரபானவன்-தன்மையையுடையவன் குளிர்விக்கும் கயிலைப்பொதியிலின்—கயிலையினும் பொதியிலினும் காலைச்சிறு—சிறுகாலையின் (விடியற்காலத்தின்) சாலை—பாதைக்கண்ணே. ஆசமனஞ்செய்து—உட்கொண்டு

அதனுதா மறையும்முனக் கருள்வேமென வருளி
யிதனுற்புவி வசியப்படு மெவணிசெல வெனினும்
புதனுவிமை கொட்டும்முனர் புகலாம்விணி ஞாூ
மதனுமென வடிவந்தரு மறைவீதென விண்டான். (உ0)

எனதாரித ழுமிழாவெளி யினில்வீழ்குளி கையின்சீ
ரனதாரக நிகராங்கெவு னத்துக்கதி கமதா
முனதாகுல மதுதீர்ந்திடு மொருவற்குரை செயலே
மனதாலறி கெனமாறனுக் கீந்தான்முனி மறைந்தான். (உக)

வேறு

ஈய்ந்திடு குளிகையை யெடுத்து மன்னவன்
காய்ந்திடு நவமணிக் கலன்கொள் காப்பினுட்
டோய்ந்தசெப் பிடைத்துகில் சுற்றிச் சூழ்ச்சியோ
டாய்ந்ததை வைப்பிட மறிந்து வைத்தனன். (உஉ)

மந்திரி தளகர்த்தர் மாருஞ் சோபித
முந்திரி கைப்பழ மொழிநல் லார்களுந்
தந்திரி மார்களுந் தயங்க வேழிசைக்
கந்திரு வருமொளி கண்டு நாணுவான். (உங)

மதுரித பாடலே யரம்பை வாசிப்பப்
புதுமது வேம்பலர்ப் புயங்கள் விம்மவே
விதுவளர்ந் தெனக்கலை விளங்க வோங்கியே
பொதுவினிற் பாரக்ரமன் பொலிந்து வைகினன். (உச)

அறந்தரு மாசிய லதுவ ழாமலே
கறந்தபாற் சீனியிற் கலந்து நற்குடி
சிறந்தொருப் பட்டுவாழ் செல்வ னுய்த்தனே
மறந்திடான் மறையணி மாச்செ பித்துளான். (உரு)

தனியிர வெலாஞ்செப தவத்தின் முற்றியோ
முனிவன தருளினன் முனைத்து வந்தவோ
நனியணி மாசத்தி நலத்தின் றன்மையோ
மணிவலி யோங்கிமாண் வாாத்த னுயினன். (உசு)

---

உ0-அதனுதரமறையும்-குளிகையோடு அகத்தியனுக்கருளிய மந்திரமூல (அவக்க) மாகியமந்திரத்தையும், புதனு-அற்புதமுடையவனுக தேவனுக. உக-கெவுனத்துக்கு-சித்தாது கெவுன குளிகைக்கு இது வான்வழிக்கொடு செல்லற்குக்கருவியாகச் செய்துகொள்வது. உஉ-காய்ந்திடும்-எறிக்கும் உச விது-சந்திரன்,

பெரிதுமுற் றவமுளான் பிசகில் லாமலே
யரியபே றிவனதா யதிதக் காட்சியுந்
தெரியமேம் பட்டனன் சித்த னுய்த்திகழ்ந்
தரியவண் முதற்பிறர்க் குரைத்தி லாதுளான். (உஎ)

சொல்லின னுதிக்குமுன் றாழ்வார் நாளிறை
நல்லியற் குளிகையி னலந்தி ளைத்திடப்
புல்லிவாய்க் கொடுகங்கை போய்க்கு ளித்தான்
மெல்லிய பூங்கழற் றொழுவி ருப்பினன். (உஅ)

குளிகையின் வேகமேழ் குவல யங்களை
வெளிகையி னுடிபோல் விரைவிற் காட்டிடத்
தெளிதையி னுற்பராக் கிரம தென்னநீர்த்
துளிகையின் கங்கைபோய்த் தோய்ந்து கந்தனன். (உகூ)

அந்திவா னிறத்திறை யருள்வெண் ணீறணி
புந்தியான் சிவசிவ புகன்று வில்வமும்
நந்தியா வர்த்தமு நறிய கொன்றையுஞ்
சிந்திர மல்லியுந் தெரிந்தெ டுத்தனன். (௩௰)

சூடியர்ச் சித்தவண் டெலங்கு மூர்த்தனை
நாடியே சூழ்ந்தன னயந்து கண்டனன்
பாடினன் றாழ்ந்தனன் பணிதென் னற்கருள்
கூடிய சிவன்விடை மேற்கொண் டுற்றனன். (௩க)

அருள்வடி வாம்விசா லாட்சி யம்மையோ
டிருள்விட கண்டனுங் கிவர்தல் கண்டிறை
தெருள்விரிந் தன்புமீச் சிறந்து வாழ்த்தினன்
பொருள்வளம் பலவரம் புரியப் பெற்றனன். (௩உ)

செய்யனு முத்தர காசித் தேவிறை
யுய்யலாம் படிபுரிந் துவண்ம றைந்தனன்
வையமாள் செண்பக மாற னேத்தியே
மெய்யவாய்க் குளிகையால் விரைந்து வந்தனன். (௩௩)

மருத்தினு மதிகதி வாய்ந்து செல்திறற்
பெருத்திறை யுலகெலாம் பேண்செங் கோல்செலத்
திருத்திகழ்ந் தாசுசெய் தென்னன் சைவநூற்
கருத்தினன் சித்தனிற் களித்து வாழுவான். (௩௪)

---

உஎ உரியவள்—மனைவி. உஅ சொல்லினன்—புகழையுடைய சூரியன்
௩௰-சிந்தியமல்லி—உதிர்ந்தபவளமல்லிகைப்பூ. ௩க மூர்த்தன்—விசுவநாதன்.

மடங்கலின் மடங்கிலா வலிய வாண்மைகூர்ந்
தடங்கல ரடங்கிட வடக்குஞ் சீரினான்
கடங்கவிழ் யானைவாம் பரியன் காத்தருட்
டடங்கடல் புயலெனத் தருஞ்செங் கையினன். (௩௫)

தினந்தனி வடகாசி சென்று செய்கட
னனந்தலின் முடித்தவந் தாசர் வாழ்த்திட
மனந்தனி லதிசய மகிழ்ச்சி யேகொடு
கனந்தழைத் தரசுசெய் காட்சி யோங்கினன். (௩௬)

பன்னிரண் டாண்டுகள் படிய றிந்திடாத்
துன்னிய கங்கைநீர் தோய்ந்து வந்தனன்
நன்னிய மத்திது நடக்கு நாள்களின்
மன்னியோர் மந்திரி மதியி னாய்ந்தனன். (௩௭)

இபம்புவன் வேந்தமந் திரியு மீரிரு
நபம்புரி தவமொழுங் கிகை நாற்கல்வி
செயம்புரி திறற்படைச் செழுமை நான்கரண்
வயம்புகு கணிதநூன் மன்னர்க் காவன. (௩௮)

ஆனவை களிலமைச் சாயு ழைக்குமோர்
நானவை தீர்மொழி நவிறு மூனவனால்
கோனவை யறிதராக் குலமொ ருண்மையை
மானவை யத்துநின் வயமு ணர்கிறேன். (௩௯)

எனக்கதை யுணர்த்துகென் றிறைஞ்சி வேண்டினான்
மனக்களி கொடுமனென் வலக்கை யேயெது
முனக்கொளிக் கிலன்சொல வுளத்து வைத்தியென்
றினக்குகன் செயல்பொது விசைத்திற் கேகினான். (௪௰)

மந்திரீ மகிழ்ந்துற மன்னன் றேவியா
மந்திரி சவுமிவில் வவதி யென்றபேர்த்
தந்திரி போன்மொழித் தாய்க திர்மகள்
சந்திரி கையினிது தலைவற் கோதுவாள். (௪௧)

கலைகளெட் டெட்டுநீ கற்ற வல்லவன்
கொலைகளி களவுபொய் குருத்து ரோகிக
ணிலைகடிந் தாளுத னிருபர் தங்கடன்
மலைகடந் தலைகடந் தடுமொய் வன்மையோர். (௪௨)

சார்ந்தடுவ லாரிடைத் தடுமொய் வன்மையோர்
தீர்ந்தறை யிவரிலார் திருவ ரென்றனள்
சோர்ந்தவ ரடுசமர் தொடங்கி லார்புரிந்
தார்ந்தசீர் நாட்டுவோர்க் கில மஞ்சுமால். (சங)

திக்குவெல் வயத்தவர் இருவர் சேரனை
யுக்குற வென்றதா லுந்தை யென்றனை
மிக்குகந் துன்றனை வேட்ட ளித்தனன்
புக்குயர் வூன்றுபின் பொறுமை வேண்டுமால். (சச)

என்றனு நாதநிற் கிகல டக்குரா
னன்றமைந் துள்ளமை நாட றிந்ததான்
மன்றமைந் தினியிறை மலர்ப்ப தந்தொழு
லொன்றதீ தவமென வுரைத்தி யென்றனன். (சரு)

அறிவுய ருணமனை யாவ டைந்ததாற்
குறியெனக் கேதோவதே குறித்துக் கூறினை
நெறியிஎரி யதுபுரி நிலைநிற் பேமெனப்
போறிவலா ரழைத்துசாத் புரிய நாடினான். (சசு)

நிகமமா கமமுப நிடத வல்லவர்
தொகவரத் தலமுதற் றூய முப்புகழ்
துகளறு காசிபோய்ச் சுரகங் கைபடிந்
தகவிசு வேசனை யர்ச்சிப் பாமென்றார். (சஎ)

மனைவியோ டரசுசாய் மகிழ்ந்த மர்ந்தனன்
நினைவினு டொறுமது நேர்ந்தி யக்குற
றனைவிரி யாதுவேள் சாற்று மாணையா
வினைவிலா மறைத்தா திருந்து வந்தனன். (சஅ)

அரசியெத் தலத்தினு மதிகங் காசியே
பரசுதீர்த் தங்களிற் பரமங் கங்கையே
சரசமார் விசுவநா தன்மிக் கோனதால்
விரசலிற் செலமனை வேண்டி னைகினாள். (சகூ)

இவ்வணந் தனித்தனி யெண்ணி வேந்தனு
மொவ்வா சியுமபொழு தோட்டிச் சில்பகல்
செவ்விது கழித்தனர் சிறந்து வாழ்ந்தன
ரவ்வணங் கூடுகா ளாகு மட்டுமே. (ருO)

செண்பகபாண்டியன் குளிகைபெற்ற படலம்முற்றிற்று

ஆகபாடல் கூகூகஉ

---

சஎ நிகமம்-நிச்சயம் அர்ச்சிப்பு-ஆமென்றார் அர்ச்சித்தல் நன்றாகும் என்றனர் சஅ அரசுசாய்-அரசனுங்கெட

## இருபத்தேழாவது

# செண்பகமாறன் காசி கண்டபடலம்.

காசி கண்டுசுழி னைக்க ணுட்டமுறு நற்ற வங்கைகொடு நா
டொறு, மாசி கண்டுவி சுவேசன் பூசைசெய்த டக்க மார்குளிகை
சேய்தா, நேசி கண்டுபெறு காதையீ தினியந் நிம்ப மாலைபுனை செ
ண்பகன், காசி கண்டதென னென்றபேர்கொளொரு காதை யைக்
கனிவோ டோதுவாம். (௧)

காதை கேட்டதவ ரன்பு மல்கியுவ கைசி றந்தனர்வ ணங்கி
னர், கோதை வில்லவதி யாய சௌமியொடு கூடிமாறன்வடகாசி
போய், மாதை யோர்புடைகொ ணுதன் சேவைபுரி வண்ணநன்
கருள்கவென்றனர், மேதை யோர்நசையை மெச்சி மாதவனும் வி
ள்ளு வான்களிசி றந்தரோ (௨)

பருதி கிழ்த்திசையெ ழும்பு முன்னரெழு பாண்டி யன்கு
ளிகை யின்றுணை, தருதி றங்கொடுபு குந்து காசியின்வி சால நே
த்திரித வேசனைக், கருதி யேத்திவர லோர்கி லாவசிகணவ னின்
பொடுரை காலையில், வருதி றந்தெரிய வாவி ; போய்மதியம் வருத
லென்னையென வேண்டினள். (௩)

வேறு

மந்தி ரத்தையும் மனைவியர் சுகத்தையும் வைப்புச்
சந்தி ரத்தையும் தனதுமா னத்தையுந் தகைய
வெந்தி ரத்தையு மந்திரி சொல்லையு மிகல்செய்
வெந்தி ரத்தையு முடையது விளம்பல ரென்றான். (௪)

கயப்ப தைத்தெரி வியாமையி னாசியுண் ணுணி
யுயப்ப தைப்பறத் தெரிவலென் றன்றுவிட் டொருநாள்
பயப்ப தைந்தரு வினுமுய ரெனதொரு பதியே
வியப்ப தைமறை யெனச்சொலா விடின்விடே னென்றாள். (௫)

மன்னன் மேலுமம் மறைசொலோண் ணுதென மறுத்தான்
சொன்ன தால்வருந் தோடமென் சொல்லெனத் தொடர்ந்தாண்
மின்ன ளுளரி வன்புதேர் தென்னன்செவ் வேளி
னன்ன ராணையவ் வாறுள தென்றன னயந்தாள், (௬)

---

௧-ஆனகண்டு-வாழ்த்துதல் செய்து, சேய்-முருகன், நேசி-அன்புடை
யவளாகி ௪ வைப்புச்சந்திரம்-புதையற்பொருள், எந்திரம் மறையெழுதிய
கோணச்சக்கரம்வெந்திரம்-கொடிய வலிமை,

அன்று விட்டெனை யயர்த்துவே ளண்ணலை யாட்கொண்
டொன்று நன்மைசெய் தானதூஉம் பயனெனக் குதவு
மென்று கந்தன ளிருந்தன ளெனினுமவ் வுண்மை
நன்று ணர்வது கருதினள் சவுமியாம் நங்கை. (எ)

உறங்கு வாணிகர் விழித்துமே கிடந்தன ளுரியன்
கறங்கு மெல்லெழ வைந்துநா ழிகைக்குமுன் கதித்தங்
கறங்கு லாவுகை யாலொர்பெட் டியைத்திறந் ததன்கண்
பிறங்கு செப்பினுட் குளிகைவா யிட்டனன் பெயர்ந்தான். (அ)

முன்றி னின்றுயோ கத்தனுய் மேலெழீஇ முதல்வன்
சென்றி யங்கினன் வடதிசை கண்டிலள் சிவச்சேய்
மன்றி ருத்தவங் கண்டருள் புரிந்தமை மதித்தாள்
நன்றி வண்குள மாடிவந் தாற்பொரா நடிப்பென், (கூ)

காண்டு மென்றுளங் கருதின ளிருந்தன ளன்று
யாண்டும் போலவந் தாற்றினன் பூசனை யரசன்
வேண்டு வரன்வழித் தவன்வரு வேளையி லிங்கே
யீண்டு ருக்கரந் திறங்கிறை யுருவினுய்த் தினித்தாள். (ம)

சாயை யீண்டா சுலாவவி னிறீஇயா சன்போய்த்
தூய காசிகண் டுடன்வால் வேளுடைத் தொழும்பா
னேயர் நேயனோர் குளிகைநல் கியதிற னிருப
னேய செய்தியை மறைமென விஃதென விருந்தாள். (மக)

நித்தங் காசிபோய் வருமிறை நினைவுகொண் டெனைக்கொண்
டத்த லத்தையுங் காட்டுமோ தொடர்ந்திடி னளியன்
கைத்த கற்றிடா னுட்கொளுங் குகனுநற் கருணைச்
சித்த னுகவி னியானிது செய்வலென் றுரைத்தாள். (மஉ)

தூங்கு கர்விறை முந்திதன் முந்தியிற் றெடுத்துப்
பூங்கு யின்மொழி தூங்கினள் போன்றனள் கிடந்தா
ளாங்கு மன்னெழுங் கால்விழித் தனளெனை யழைத்துத்
தாங்க ளேகினல் லறனெனத் தாண்மிசைப் பணிந்தாள் (மங)

அ உரியன்-கணவன் கதித்து எழுந்து பெயர்ந்தான்-புறப்பட்டான்
கூ. மன்றிருத்தவம்-அரசன் செய்ததல்லதவத்தினைநடிப்பென்-நடித்துக்கா
ட்டுவதென்னை? ம வேண்டும்-விரும்பும், இனித்தாள்-மகிழ்ந்தாள், மக,
சாயை-நிழலை, நேயன்,அன்பர்க்கன்புஞகிய அந்தமுருகன்வய-நடந்த,மஉ
-அளியன்-அன்பன்,-

பைந்தொ டியுடை நுனிமுடிந் தெழுந்ததோர் பான்மை
முந்தொ ரீர்முறை கேட்டமை நோக்கிடின் முயன்று
வந்தொ ருப்படு நிலையெனத் தேர்குநன் மதிகூர்
நந்தொ ரன்புடை நின்னெறி வுரையென நயந்தான். (௰௪)

தெரிந்த நீர்மையை மறைத்திடா தறைந்தன டேவி
விரிந்த வன்புமன் முருகனை வேண்டியீ தென்னை
புரிந்து ளாயியா னுணர்த்திடா துணர்ந்தவிப் பூவை
பிரிந்தி லாளழைத் தேகுமா றருளெனப் பிறழ்ந்தான். (௰௫)

அந்த வேளைவேள் வந்தா சேயிவ ளறிஞன்
முந்த யர்த்ததா நினைந்தெனை முயன்றுனைத் தொடர்ந்தாள்
சிந்தை கொண்டிவட் கூட்டியே கௌவருள் செய்தான்
மந்தி ரத்துவன் மையினழைத் தேகினன் மன்னன். (௰௬)

தடத்த வாண்மணி கருணிகை தன்னிலே சார்ந்து
மடத்த மாண்புறு சவுமியைக் கொடுசொ னம்வாரி
யிடத்த யாவொடு கங்கைபுத் திரர்கர மேந்தத்
திடத்த வாவுறு மறைசொலி வீசினன் செழியன். (௰௭)

தருப்ப ணம்புரிந் தில்லவள் கைபற்றித் தைவ
விருப்ப கங்கையின் வாவியின் விதிப்படி மூழ்கிப்
பெருப்ப மாரற நெரிப்பட்டுப் பிறங்குநன் றனைத்துந்
திருப்ப யில்புயத் தென்னவ னன்பொடுஞ் செய்தான். (௰௮)

உந்தி யின்புற வருமுதற் சந்திகோ ளுஞற்றி
நந்தி யின்றிரு வெழுத்துருக் காசிநா யகற்குப்
பந்தி யின்னமிழ் தாம்பல யலவகை படைத்துக்
கந்தி யின்கனி நறியதாம் பூலிகற் பித்தே. (௰௯)

ஆட கத்துகின் முன்புபோர்த் தியவரன் றனக்கங்
கிட கத்துற நிவேதன வகைகளு மியற்றிப்
பாட கத்தடிச் சவுமியாந் தேவியாற் பண்பு
நீட கங்கையி னெல்லிபோ னிரப்பியின் பார்ந்தே. (உ௦)

---

௰௪ நின்னெறிவு-எவ்வாறுநீ தெரிந்தாயென்பதை, ௰௫-என் பிறழ்ந்தான்-என்று சொல்லலானான். ௰௭-தடத்தவாள்-பெருமையையுடையஒளி பொருந்திய, மடத்த-பேதமையையுடைய, இடத்தயா-விசாலமாகிய அருள், கொடுக்கவுண்டாகிய அருள் ௰௯-உந்தியின்புற- கடல்போலுமின்பயிக, கோள் -கோட்பாடு, கந்தி- கமுகு

ஆசித் தார்க்கருள் விசுவநா தனைப்பாணிந் தலையே
வீசித் தாழ்விலாக் கங்கையைத் துதித்தனர் மேலாப்
பூசித் தாரிரு வருமுனம் போலமே லெழீஇநன்
வாசித் தாரகக் குளிகையி னோடுமூர் வருவார். (உக)

வருவ ழிக்கணே வைகையின் றுறையயல் வருங்கா
ஓருவ யோரடரித் தடங்கணாள் பூத்தன ளுடனே
திருவ திந்தவக் குளிகையுஞ் செல்கிலா திறக்கித்
தருவ னத்துவிட் டிடவுண ரிருவருந் தளர்ந்தார். (உஉ)

ஆத னன்மையோ தீமையோ யாவர்முன் னறிவார்
நீதர் மேல்வுந்துங் கிழ்ப்படு நிலைமைதா னென்னே
வேத ரஞ்சகர் தமையிறை விளித்தனன் வினவக்
காத ரந்தொலைத் துயவழி கரைந்தனர் கண்டான். (உங)

தான மீவதுக் கிருந்தனன் சவுமியோர் டிறைவன்
மீன நற்கொடி பறக்குமாங் கீரிரு விலக்க
மான நாளிருந் தறலமுழு கியபின னைந்தாம்
மான நாள்வர வதிந்தவன சொக்கனை வணங்கி (உச)

பாண்டி யன்னுப வாசமச் சுந்தரன் பதப்பூ
வேண்டிக் காசிசெல் லாவழி மினுடொடர்ந் தியன்ற
தாண்டி ருந்தெணிக் கவல்றமை யறிந்துமா பதிதா
னீண்டி யூர்க்கவண் காசிகா னெனக்கனு விசைத்தான், (உரு)

வழியு ணர்த்திலா மைற்றுயர் தீர்ந்திலன் வந்தான்
பொழியு ரத்திரை யிறைவியோ டெங்கணோ புகுந்தான்
கழிய நான்குநா ளாவெனக் கலங்கியூர் கவனறு
மொழியு ளப்புர மொத்தவன் புமைச்சுசா முயல்கால். (உசு)

நினைவ தாகிய மந்திரி தளகர்த்தர் நிலவூர்
மனைவந் தானென வறிந்தது மகிழ்ந்துமுன் வந்து
முனைவ வேந்தருக்கு முதல்வநின் முகமதி காணு
தனைவ ரும்மகந் தேம்பினே மிவண்விட லாமோ. (உஎ)

---

உங-ஆதல்-உண்டாதல், காதரம்—தீவினையால்வருந்தொடர்பு. உச அறல்-புனல். உசு. உசா-ஆராய. முயல்கால்-தொடங்கும்பொழுது. உஎ மனை-அரசனை. முனைவ-இராஜருஷியே. அகம்-இதயகமலம்.

என்றி றைஞ்சிவேண் டினர்நிலை யறிந்துகந் திறைவ
னன்றி யன்றமை யனைவரு மறியவா டினனு
னன்றி யாரவர் மெய்யுணர்ந் தேகினர் நயந்தே
மன்றி னஞ்செலல் போற்செலா தமைந்தனன் மனையில். (உஅ)

இறைவ னூரடைந் தாங்குகாண் காசியென் றிசைத்தா
னிறைவன் பார்துணை வியின்றொடர் பாலிது நிகழ்ந்த
வறைவ ராரிவண் காசிகாண் வழியென வயர்காற்
றிறைவ ளத்தமன் மனத்தருட் செயலொன்று தேர்ந்தான் (உகூ)

வளர்த வத்தர்வாழ் சண்பக வனத்துமா முனிவர்
கிளர்த போவனங் கிட்டினன் கேடின்மா தவத்திர்
தளர்தல் யானறத் தக்கணகாசிகாட் டுவா
ருளர்த ராதலத் துமையன்றி யெனப்பணிந் துரைத்தான். (ஙய)

அத்த கைம்மொழி கேட்டலு முனிவரு மரசற்
கொத்த வன்பினு லருள்செய வும்பரி னொருசொல்
சித்த னுவல கேசன்வந் துனக்கருள் செய்வான்
றொத்த விர்ந்திடென் றனுங்கொண்டார் றவலரு முவகை. (ஙக)

வாய்ச்ச திங்கென முனிவர்பால் வணங்கினன் விடைபெற்
றுச்சர் பத்துடன் வந்தன னரசனன் றிரவி
னீச்சு ரன்வர வேண்டியூ னின்றிமெல் லணைநீத்
தோச்ச மேடையிற் றரைகிடந் துரங்கிலா னுறன். (ஙஉ)

உலக நாதனே காசியா னிவனென வுரைத்தாங்
கிலக ருட்செய லாவிடங் காட்டுகென் றிருக்குந்
திலக செண்பக மாரனார் சிவனுரைந் தனனி
னலக னுவரு னினனெழுந் தருளினா னயந்தே. (ஙங)

மன்ன காசியி னிறக்கமுத் தியென நூல் வகுக்குந்
தென்னர் காசியிங் குளதுநீ தெரிகிலாய் போனு
மின்ன காசியே யிறப்பவர் பிறப்பவ ரிருப்போர்
நன்னர்க் காண்பவ ரெவர்க்குமே முத்தியை நல்கும். (ஙச)

---

உகூ நிறைவன்பு-கற்பெனுந்திண்மை. ஙய மகள்-மகளுக்கு. உளர்த விட்டு-குரவையிட்டுக்கொண்டு. ஙக றொத்தவிர்ந்திடு-துன்பத்தினீங்கிவிடு ஙஉ. ஒச்சம்-கீர்த்தியுள்ள.

ஒங்கு மாண்குழல் வாய்மொழி யாமுல கனையோ
டீங்கு மாண்குல சேகர நாதனு மிவர்க்கே
தீங்கு தீர்குல சேகரத் தெனறகருள் செய்தேந்
தாங்கு சீரவன் மகவுநம் பெயர்கொடு தழைத்தான். (௩௫)

உலக நாதமன் மகள்குழல் வாய்மொழி யுலகா
ளிலக வந்தன ளவளையான் மணந்தவ னினிப்பத்
திலக னுமரு காயினன் மலைக்கொடி சிறப்ப
நலகண் வைத்தருள் செய்தன னமையெனே யயர்த்தாய். (௩௬)

மேற்கி லேயரைக் காவதத் துள்மண விரிநீர்
மாற்கி ளர்ந்தசித் திரைக்கரை வளர்த்தசெண் பகக்கா
வேற்கி ருந்தவன் மேவுதென் காசியாங் கிருக்குஞ்
சூற்கி ளர்ந்தமை கண்டனன் சொல்வது கேட்டி. (௩௭)

நாளை யிங்கிருந் தெழும்பொழுக் கொன்றவ ணடக்கும்
வேளை யின்றொடர்ந் தாங்குநீ வருதியேல் விளங்கக்
காளை யூரியாந் தோன்றிநேர் காட்டுது மென்றுட்
கோளைத் தேற்றியே கினனுடன் கோன்விழித் தெழுந்தான்.()

வேறு.

இங்குதென் காசிவே றிருந்து மீச்சுர
னெங்குல தேவனு விருந்து மற்றவன்
பொங்குநம் பாலருள் பூத்துந் தேர்கிலா
தங்குநா டினனென தறிவென் னுயதே. (௩௯)

வேண்டுவார் வேண்டுவ வேண்டி யாங்கரு
ளாண்டவன் முருகனென் னவாவ ழிச்செயல்
காண்டுமாங் கெனக்கவாக் கதித்தனூல் வலார்
தூண்டலி னுபதத் தொழும்பிலை தீர்ந்ததே. (௪௦)

என்றுமன் னெணிவிசு வேசன் றடுதித்
தன்றுமந் திரிமுத லனைவ ருக்குமந்
நன்றுரைத் திவர்ந்திட நாடி னனுடன்
றொன்றுாப் படையெலாந் துவதைந்து நின்றனர். (௪௧)

---

௩௭-மால்-பெருமை. எற்கு-ஒப்புக்கு (ஏல்-ஒப்பு அது பொருத்தத்துக்கு
எனப்பொருள் தரும்)

விந்த நன்னகர்க்கபன் மேற்கெ றும்பொழுக்
கெந்தவெல் லைபிற்றொடர்ந் தெழுத லென்றுபோய்
வந்தறி விப்பவே வலரை விட்டனன்
சிந்தவர் பார்த்தறிந் திலர்வந் தோதினர். (சஉ)

விணுப்மயங் கினனிறை விவேகித் தெத்தவர்
சொனர்முக னைவர்த் தொடர்ந்து வேண்டுவ
லெனவெழீஇ மீவண்டினு னெழுந்தம் மாதவர்
முனனடந் தனர் தெனன் முகமலர்ந்தனன். (சங)

தொண்டக லாதமன் றொடர விண்புளங்
கொண்டமைச் சாதியோர் குழுமிச் சூழ்வரக்
கண்டன ரெறும்பொழுக் கதனைக் காதல்கூர்ந்
தண்டர்கோ னருட்செய லறிந்தி வர்ந்தனர். (சச)

வேறு.

சித்தர் கூட்டமோ சிவத்தொண்டாற்றுமாண்
பத்தர் கூட்டமோ பரிந்து சேறலை
யெரத்தங் கூரெறும் பொழுக்குச் சித்திரைக்
கைத்த டங்கரைக் கண்பு குந்ததே. (சரு)

எறும்பு போய்ப்புகு மெழிற்பு ழைக்கய
லறும்புன் மேட்டில கம்மை வைகமாட்
டுறும்பு ராரியாங் கொளிப்ப முன்னுற
நறும்பு லந்தமா நந்தி கண்டனர். (சசு)

பவள மல்லிகை பரந்த நீழலி
னவிர்சு டர்மயி லையின டிக்கணூர்
புவன நாச்சிபாற் பூப்ப டர்கொடி
தவழ்நற் சண்பகத் தாருண் டோர்மடு. (சஎ)

நந்தி முன்னுள நவிலு மம்மடு
சிந்தி வர்பெரு வெள்ளஞ் செய்தது
முந்தி தூஉஞ்செயன் முதல்வ னடலே
யந்தி வண்ணனுட் டளந்து சொல்வரார். (சஅ)

---

சசு-அறம்புல்-அறுகம்புல்.

அமைச்சு மன்னனு பருந்த வர்முக
மிமைச்சு நோக்கின ரிருந்த வர்சிவன்
செமைச்ச ரண்மனஞ் சிந்தி யென்றனர்
தமைச்ச மாதிபற் றுணிறீஇ யினோர். (௪௯)

சோதி யொன்றெறழீஇக் குலக்கு மாபதி
சேதி யென்னெனத் திருமுன் றந்தன
னோதி நின்குறி யாங்கொ ளிக்கதென்
றோதி வேண்டின னுகந்த தென்னனே. (௫௰)

மடுவு ணின்றெழ வரித்துத் தந்தி
னடுவு ருக்கீரக் தனனென னம்பேனே
கடுவு றுந்திருக் களர்தன் பேணியை
யிடுவு ரக்கையா னெடுத்து நாட்டினான், (௫௧)

அருள் வளச்செய லறிந்து போற்றினான்.
றெருள்வ ளங்கொடு சிவாக மம்பயில்
பொருள்வ ளந்தெரி புனித ரானிறீஇ
மருள்க ழன்றனன் மன்ன னென்றனன், (௫௨)

செண்பகமாறன் காசிகண்ட படலம்

முற்றிற்று.

ஆகப்பாட்டு ௲௭௱௪௰௪

---

௪௯ செமைச்சரண்-சேவடி



இருபத்தெட்டாவது

# தென்காசித் திருநகராக்கிய படலம்



செண்பக பராக்கிரம தென்னன்விசு வேச
னண்பொடுதென் காசிகண்ட நற்கதையு ரைத்தாம்
வண்படர்தென் காசிநக ராக்குவா லாறு
பண்படவெ டுத்தினிது பார்மகிழ விள்வாம். (௧)

விந்தமனன் சொல்லுகதென் காசிநகர் மேன்மை
சிந்தையுற வென்னமுனி வோர்களுரை செய்வார்
முந்தமக வானுயர்மை நாகன்முனி வோர்கள்
வந்தருள்கொ டேகியவ ளத்ததுதென் காசி. (உ)

குற்றமில கத்தியற்கு ளிர்ந்திறைப ணங்கா
ணற்றல மம்மைகுழல் வாய்மொழிந யந்தன்
புற்றுலக நாதன்மக ளாய்பணமு கந்த
தற்பமின்ம லைக்கொடிய ளித்ததுதென் காசி. (ங)

இன்னவகை யேயருளி லங்கிடுதென் காசி
நன்னகரி லெத்தனைபேர் நாடினது பெற்றார்
முன்னவா முற்றுதவு முப்புகழ் சிறந்து
மன்னகர்பு துக்கியரன் வாழ்தளிசெய் கென்றார். (ச)

ஓதலரி தென்னவனு ளங்களிது ளுப்பி
நாதனரு ளோரறிந யப்பனிடை மூழ்கி
மாதலந னீர்குறிவ ரங்கனோம கித்துக்
காதலுட னாரிறைவன் கற்கிசெய லானன். (ரு)

அந்நிலையி லிங்கமுயர் வாக்கியதி லீசன்
றன்னிலைய மாத்தகைய கெர்ப்பகிற கந்தான்
மன்னிடவ மைத்தனன்முன் மண்டபமெ லாஞ்செய்
துன்னியவ ணம்பாவு யர்ச்சியின்வ னைந்தான். (சா)

நிருக்கணவி ருத்தியைவ யிற்றுதியை நீடு
வருக்கமுரு தாமசியை வாத்தவலை யத்துப்
பெருக்கமும தற்குண்டு விந்துநிலை பெற்றேற
பருக்கமல சத்தியவை மன்னிடமு மெண்ணி. (எ)

தேவிதலை தெற்கதுவ டக்கணிதி ருத்தாள்
பாவிதலை நீக்குறுவ கோமுகப தாந்தம்
மேவிதலை வற்றபுய மீப்பொலியு மத்தி
யாவிதலை பெற்றிடுச தாசிவம தாக (அ)

---

ஈ அரண்வாழ்தளி-சிவாலயம். ரு கற்கி-தேவர்கோயில். சா.நிலையம்-தேவர்கோயில்

இன்னவகை தூற்றமதி னந்திகொடி யேறு
மின்னவள ராலயவி மானமிசை தூவிப்
பொன்னவம ணிச்சிகரி யூடுபொலி கண்டை
சொன்னவச னப்படிநன் ஞாரிகைது லங்க (௯)

வீதிகடி ருத்திவெளி மேடைவெளி யூடு
சோதிகவி னக்கமல மாலைதுசம் வாய்தற்
காதிகத வங்களணி யாத்தெரிச னத்தார்
தாதிகனி வெய்துமுக சந்திரரு திக்தே. (௰)

அந்தரம ளப்பவள மார்நெடிய மாடச்
சுந்தரவெ ளிப்பிரபை வீசுசுடர் சொன்ன
மந்தரம திற்பதிர்கள் பன்னிருவர் மாறுத்
தந்தரமொ டங்கமைத றன்னைநிக ராயும். (௰௧)

மருவியுயர் வாமயில்வ ளைந்ததிசை வாய்தல்
பொருவிலிர விக்கொடியர் போதுமொரு பொற்றேர்
தருவிசையி டுஞ்சிறிய காறடவு கின்ற
திருவினொடு மேவதிசி றப்புறவ குத்தான் (௰௨)

ஈரிருதி சைக்குரிய காளிகளி ருத்தி
யீரிருதி சைக்குரிய சாத்தரையி ருத்தி
யீரிருதி சைக்குளக ணேசரையி ருத்தி
யீரிருதி சைக்குவடு கேசரையு நாட்டி. (௰௩)

பன்னருநன் மைகொடண்ட பாணியொரு பானுஞ்
சொன்னவடு கேசனுயர் சூலகரன் மேலா
மன்னருள்கொள் காலவயி ரச்சிவனோர் மாட்டும்
நன்னருற வன்பொடுந யந்துநிலை யிட்டான். (௰௪)

கன்னிசுதன் சுந்தரக யத்தன்செண்ப கச்சேய்
மின்வெயிலு கந்தபிள்ளை வேண்டுமம்ப லச்சேய்
மன்னுமொப்ப னைச்சுதன்வ யங்கபிடே கச்சேய்
யின்னருள்மெய் கண்டபிள்ளை யெண்மர்பிள்ளை யாரும். (௰௫)

---

௯-கண்டை-பெரியமணிகள், ௰௫-கன்னிசுதன்- கன்னிதிசையிலிருக்கும்பிள்ளையார், சுந்தரகயத்தன்-சுந்தரவிநாயகர் (மேல்திசையிலிருப்பவர்.) செண்பகச்சேய்-செண்பக விநாயகர் (இவர் வடமேற்றிசையிலிருக்கும் பிள்ளையார்) வெயிலுகந்தபிள்ளை-வடக்கு விநாயகர் அம்பலச்சேய்-பொன்னம்பலப்பிள்ளையார் (வடகிழக்கிலுள்ளவர்) ஒப்பனைச்சுதன்- அலங்காரப் பிரிய விநாயகர், (கிழக்கிலிருப்பவர்) அபிடேகச்சேய்-அபிடேகப் பிரிய விநாயகர்(தென்கிழக்கிலிருப்பவர்) மெய்கண்டபிள்ளை-மெய்கண்டபிள்ளையார் (தெற்கிருப்பவர்) இவர்திருவாவடுதுறை மடத்துடன் சேர்ந்துளார்.

அங்கடணி மாலையென வாயளவ தாகிச்
சங்கமது டுத்தவட சானவிம ருங்காய்ப்
புங்கமலி யெண்ணொடு பூந்துறைகள் பத்தும்
பங்கமற மூழ்கிடமும் பாற்படவ குத்தான் (௧௬)

ஆகமமு ரைத்ததிரு பாணெடிரு நாலு
பாகமவை யொத்தபடி கோயிலின்ப ரப்பும்
மேகமது பூதுபுத வொன்பதும்வி திக்த
வாகமலர் சேறைசிறு வாய்தலும டுப்ப. (௧௭)

கீழுவமை யில்லதொரு கேணிலை பொன்மேரு
வாழுவண மாக்கியதின் வைத்ததென வோங்கி
யேழுவரை யுச்சியதி னேழுகுட மாக்கிச்
சூழுவகை யார்கதவ மேன்முகில்கள் சுற்ற. (௧௮)

சிகரியுயர் வித்தருகுசெய்த தெரு வீதி
பகரியனு றச்சதுர மாநெறிப டுத்தான்
மகரியல்பு றக்கொடிகொ டேர்முதல்வ குத்தான்
முகரிமையி னகர முன்பினுயர் வாய்த்தே. (௧௯)

முன்னரும ருச்சகர்ப ராவுகுரு மாரிம்
முன்னவரு மன்னவரு மூதுவணி கர்சீ
ரின்னவர்மு தன்மையவே ளாளரிவர் வாழு
நன்னருயர் வீதிகண லம்பெறவ குத்தான். (௨0)

ஆதிசைவர் மாணவர்க ளாயமகா சைவர்
வேதியர்கள் வீதிகளு மேம்படவ மைத்தான்
போதியகு லாலர்சுர பிப்பொதுவர் கீத
மோதிடுவ லாரியமு வச்சர்தெரு வாற்றி. (௨௧)

ஆறுமுரி யக்கடவு நீர்த்தடம னேகம்
வேறுமுக மாகவசி தீர்த்தமும்வி ளங்கக்
கூறுமுவ கைதருகு றிக்கொளறு பானன்
கிறுமுறை யேயருளி ருந்தபடி செய்தான் (௨௨)

ஈசனையி லிங்கவிசு வேசனையெ ழிற்கொள்
வாசனைசெ றிந்தமல ரர்ச்சனைவ ழங்கிப்
பேசனையி னுக்குமுரி மைப்படும பீட்ட
பூசனைபு ரிந்திடுபொ ருட்களைய ளித்தான் (௨௩)

மேகமுக டூடுறவி ளக்குபல சாலே
பூகமும னேககனி காய்பொலி மன்சாலே
பாகமுத சாலேபல பண்டநிறை சாலே
யாகமுறை செய்தலற மாடலிவர் சாலே. (உச)

ஆகியவி டங்கடோறு மானபொருள் வைத்தான்
போகியவ ணிற்செலவு பூர்த்திபெற மான
ராகியர்நி றீஇயினன விர்ந்தகரு லூலம்
பாகியா லாரதுகண் பார்வைகளில் வைத்தான். (உரு)

பூசனைதொ டங்கிசிய வேள்விபுரி சாலே
மாசறவ லமைத்ததைவ ளம்படவ லேங்தே
பீசரிமெ மம்மையுல காணல்விசு வேசன்
னீசருள்கொண் மன்கொணர்சை வாசிரியர் மேவி. (உசு)

வேறு.

பொன்னி னீள்குடம் பூரிப்பர் நூல்சுற்றி
மின்னி னாற்றுமி ளிர்மிலர் மாங்குழை
மன்னி நீடுமுக் கட்கனி வைத்ததிற்
பின்னி னாற்றிடு கூர்ச்சங்கள் பெய்தரோ. (உஎ)

தருப்பை மாலேபைத் தாங்கிய பொற்குடத்
திருப்பை யேமெழுக் கிட்டுறை கோலமேர்
பருப்ப நீள்கத லித்தழைப் பானெல்லின்
மருப்ப நேசரி வாவிதி னிட்டதன். (உஅ)

குடங்க ளாயிர மாயிரக் கால்கொண்ட
விடங்க ளூடுமெ டுத்துவைத் தர்ச்சித்துப்
படங்க டாங்குப டிம்மண்ட பத்தினி
விடங்க ளிட்டக்கி னிக்குண்ட மிட்டரோ. (உகூ)

ஓமத் தீவல மேசுழித் தோங்குற
நேமத் தீபநெய் யாதிநி ரப்பியே
பாமத் தீபநெய் வேத்யமெ பாந்தமே
லாமத் திடுவி சுவற்க ளிப்பரால். (௩௰)

ஊக மண்டலக் குண்டத்து ளோமநெய்
யீக மண்டலித் திட்டெழும் பும்புகைப்
பாக மண்டப சாலேப்ப ரிப்புகை
மேக மண்டல மென்னவின் மேவுமே. (௩௧)

வேத பாரகர் சந்துவி ளம்பலும்
சாத பாகத வாகம சைவர்கள்
போத பாவன மந்த்ரப்பொ ருள்களை
யோத லாயசு பாவமு மோங்குமால். (௩௨)

தொகுதி பல்பல சூழுமி டங்களி
விகுதி தித்துணை யென்றறி தற்கொணாத்
தகுதி யார்கும்ப வர்த்தனை சர்வமும்
பகுதி யின்படி பூசனை பண்ணினார். (௩௩)

படங்கள் கூர்ச்சம்பு ரோக்கணம் பண்ணிமெய்த்
தடங்கண் டேவிசு வேசன்வி சாலாட்சிக்
குடங்க லாவிழைத் திட்டம ணியொடுங்
குடங்க ளாட்டினர் கோன்மகிழ் வானரோ. (௩௪)

வேறு

இருவுபாத் தியமு மாவா கனமுமா ரோக்ய மீயுந்
திருவுரை யருக்கி யத்தாற் செல்வமே பொருந்தக் காணு
முருவுள மஞ்ச னத்தா லுகந்திடு நலமுண் டாகு
மருவுமெட் டயில மாட்டிற் காமிய போக மல்கும். (௩௫)

சாலிமா வபிடே கித்தாற் றருவது குணமே நெல்லிக்
கோலிய வுரோகந் தீர்க்குங் குளவிந்தம் வசிய மாக்கும்
வாலிய கவ்வி யந்தான் மாபாத கங்கள் போக்கும்
பாலினு லட்ட சித்தி பலித்திடும் பாங்கி னாலே. (௩௬)

வருத்திடுந் தயிரே யாட்டின் மனத்திடன் வெற்றி யுண்டாந்
தொகுத்தவா ரோக்ய மும்மரந் தூயதே னிசையுண் டாக்கும்
பகுத்திடு கருப்பஞ் சாறு செல்வத்தைப் படைக்கும் வாழை
யுகுத்ததிண் கனிகள் வேண்டும் பயிர்வள முதவு மன்னோ (௩௭)

கருதியே திரள்பஞ் சாமிழ் தந்தருங் கணத்திற் சீர்த்தி
வருதிறன் மாம்ப ழத்தால் மகாசெயம் வருஞ்சி றந்த
விருதியல் வருக்கைத் தீங்காய் வென்றிமுப் புவனத் துண்டாம்
பருதிகேழ் மாத ளைக்குக் கோபத்தைச் சமைப்ப டுத்தும். (௩௮)

வருகொழு மிச்சுத் துக்க மாற்றிடு மெலுமிச் சுத்தா
னொருகொடு மிருத்து காச முஞற்றிடு மிளநீ ருக்குத்
தருநவிந் திரபோ கந்தான் சாற்றிடுங் குச்சுப் புற்கோ
வருகொலைக் காமி யங்க ளாணவ மகன்றுபோமே. (௩௯)

௩௬. குளவிந்தம்=நறுமஞ்சள். ௩௮. பருதிகேழ்-பொன்னிறத்த

சகத்திர தாரை யாட்டச் சருவபாக் கியங்க ளுண்டாம்
பிகத்திரள் வில்வச் சேற்றால் விளங்குசா லோக மெய்தும்
மகத்துவ மந்த்ர புட்பஞ் சந்தனக் குழம்பை வார்ப்பின்
செகத்துளார் சிவசா மீபஞ் சென்றுமே சிறப்பா ரென்றும். (சώ)

தூபத்தைக் காட்டிற் பாப நாசமாந் துலங்கு கின்ற
தீபத்தான் மிருத்து நாசஞ் சாரூபஞ் சேரலாகும்
பூபத்தைச் சவாதைக் கோரோ சனைமருப் புழுகைச் சாற்றிற்
சாபத்தைத் தொலைத்துச் சாயுச் சியந்தரும் பூசனைக்கே. (சக)

தேசத்தைக் கொடுக்கு மாயுட் சீரையு முதவு மென்றோர்
நேசத்தை யுடைய வேந்த னிறையநல் கியபண் டங்க
ளீசத்தை புவனை யாம மெடுத்தெடுத் தபிடே கித்தார்
பாசத்தைக் கழித்தி சன்பாற் பாசமன் கண்டு கந்தான். (சஉ)

எடுத்தபி டேகஞ் செய்த வதனுக்கெண் மடங்கி மைப்பி
னடுத்தவப் பண்ட சாலை நிரப்பின ரமைச்ச ரன்னம்
மடுத்தனர் மடைய ரெள்ளு ததிசிறு பயற்று வர்க்கங்
கொடுத்ததிந் திருணிச் சாற்றாற் குழைவித்துக் குன்று குன்றாய்.

கறியிடு சம்பா வன்னங் கம்மென வீச வெண்மைக்
குறியிசை யானைக் கொம்ப னரியன்னங் குவடே போலுஞ்
செறியிடை யாத்தி ராதி திகழுப கரண வைப்பு
மறியிட விசுவ நாதர் மகிழமுன் னுறப்ப டைத்தார். (சச)

அளவிலாக் கதலி வாழை யிலைமிக வழைத்துத் தாணந்
துளவிய சுத்தி செய்து தூயவாப் பரப்பிப் பன்னத்
தளவிரி வதிலே முன்னஞ் சமைத்தவை யெல்லாஞ் வெவ்வே
றுளவிதி முறைப்ப டைத்தே முகத்துதி யொடுநல் குற்றார். (சரு)

அம்பக மலரொந் தாய்க்கு மத்தனும் விசுவே சற்கும்
நம்பகத் தன்பாற் சாந்த நலத்தினுன் ஞால மெய்ப்ப
வெம்பகல் விளக்குக் காட்டித் தூமத்தை விரையிற் செய்யச்
சம்பக மாற னீந்தா னிவேதனஞ் சாலச் செய்தான். (சசா)

சக. பூபம்—பட்டாபிடேகம், பணிகாரம். சங. மடையர்—மடைப்பள்ளியில்வேலைசெய்கிறவர். திந்திருணி—புளி. (இக்கவியில் மடையர்குன்றுகுன்றாய் மடுத்தனர் பின்முடிக்க. மடுத்தல்—நிறைத்தல்.) சச. யாத்திராதி—திருவிழாமுதலியவற்றிற்கு. உபகரணம்—மாளிகையிடத்தின்வைத்து. மறியிடல்—உணவிடுதல். இதுமகேசுரபூஜையைக்குறிப்பதாம். சசா. அம்பகமலர்—கண்மலர்.

அன்னவை யாவுங் கன்ன லமிழ்தெனக் கொள்வாய் வேடன்
றொன்னவை யூனூர் துய்த்தோய் துய்த்திசேர பங்கொண் டுற்ற
வென்னவை தீர்த்தி யென்று னினியசெண் பகமா றன்றன்
முன்னவைக் குகந்து காட்சி முழுதுல கேசன் றந்தான். (சஎ)

நின்றது கண்ட மாற னிரைந்தபே ராசை யோடுங்
குன்றது குழைவாய்க் கொண்டாய்குற்றமுங் குணமாக்கொள்வா
யென்றனூந் திருவு ளங்கொண் டெம்முல கம்மை யோடு
மொன்றதாம் விசுவ நாத னுளமகிழ் சிறந்து சொல்வான். (சஅ)

உண்பது பூண்ப தார வுடுப்பவும் புனைவுங் கொள்ள
நண்பது நானம் பூக்க ணலனெலாந் திளைப்ப நீயுன்
பண்பது வுடைய மைந்தர் சகோதரர் பற்றோர் நற்பார்ந்
தென்பது மையரு டன்வாழ்ந் திருத்தியா முகந்தோ மென்றும்

செய்யவாய் மலர்ந்து மேலுந் திருமுடி சூடடு மாசான்
மையாறு தீக்கை யரசான் வயங்கொள்வித் துவவல் லாசான்
றுய்யபெள ரணிக வோசன் றுலங்குதத் துவப்ர காசன்
மெய்கண்டா னுமையோர் பாகன் மிளிர்பாஞ் சொதிகாவென்றும்

அருளினன் மறைந்தா னெம்மா னரசனுங் கமைத்துப் பார்காத்
திருளின வதுதீர்த் தாண்டா னினியசெங் கோலோங் கிற்றால
தெருளினர் விசுவ நாதன் றிருத்தளி சிறக்க மேன்மேற்
பொருளினற்பூர்த்திசெயதுபொருவிலான்வளர்த்தானென்றான். ()

## தென்காசி திருநகராக்கிய படலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு குஎகூ



## இருபத்தொன்பதாவது

# திருக்கோயின் மகிமை யுரைத்தபடலம்.

ஓங்குதென் காசித் திருநக ராக்கி யுலகமுற் றுடையநாச் சியராம், பாங்குல கம்மை யுடன்விசு வேசன் பரிந்தருள் செயப் பராக் கிரமன், றுங்குநற் கதையீ தன்னதென் காசித் தலத்தி ருக் கோயிலின் மகிமை, யீங்குகேட் பவர்க்கு நன்மையுண் டாக வினிதெடுத் தினியறை வாமால், (க)

---

சஎ-வேடன்-கண்ணப்பநாயனர். சஅ. குன்று-மேருகிரி.

இமையவெற் பினைப்போ னீலவெற் பினைப்போ லெழுந் தம யேந்திரத் தினைப்போற், சிமையமந் தாம்போன் மேரு மால் வரைபோற் றென்றலஞ் சந்தனத் தேய்வை, யமையவீற் றிருக்கும் பொதியமால் வரைபோ லளவிலா முத்தபொன் பூ நீர், குமையவிழ்த் தெழிவி கூதனுண் டொளிதூய்க் கொழிக்குங் குற் றாலத்தொல் வரைபோல். (உ)

கொழுந்துகொண் டுயர்ந்த கோபுரம் நீண்ட கொடிமரந் திருமதில் வாய்த, லழுந்துமண் டபங்க ளாயிரக் காலி னதிசய நான்முறை யடைவி, னுழுந்துறை சாண்மற் றுளவிதழ்க் கம லத் தள்ளொளி விரிந்திடு தளத், தெழுந்துள சிங்கா சன மபி டேக மியற்றிடு கற்கட்டி வின்ன: (ங)

வலையமென் சலசப் பொய்கைகள் குறிஞ்சி மணிக்கதிர்த் திரளெறி தூவி, நிலையமுன் றதனுக் கயற்றிரு வீதி னீணி லைத் தேர்செம்பொன் மணித்தேர், கலையவிர் மதியம் புகுநெடு ங் கொடிகள் கன்னியர் நடம்பயில் கழகம், விலையவை பெருத் த பணியவாஞ் செயத்தான் மிகுபொருள் வேண்டுமென் பிரே.

ஒருவரு மிந்தப் படிசெயப் பேசகா தெனவுளன் மறுகி ன்ர் புனிதப், பருவரா யுழைத்தார் செங்கலான் மண்ணாற்பற் பல மடங்களு மீசன், மருவவே சோற்றுக் குவந்துசெய் தவ ரே மலைமக ளொருபுற மல்கித், திருவளர் மதியம் புனைந்துறை சிவனுற் சேவடிக் கமலமே சேர்வார். (ரு)

திகிரியந் தடக்கைக் கண்ணனம் புயங்க டேனொழுக் கூற் றெழுக்கொய்தே, வகிரிதழ் பொருந்த வருச்சனை செயவுன் மகி ழ்வுறு மான்மழு வண்ணல், பகிரிகழ யோடு முறைதிருக் கோயி லலகிடப் பரிவொடு மெழுகத், துகிலினை வி தானங் கட்டிடப் பலன்கள் சொல்சாந்தி ரசயணம் பலவாம். (சு)

உறைந்திடு சயம்பு லிங்கங்கள் வாண லிலிங்கங்கட் கொ ன்றனைக்குரோசத், தறைந்திட விருடி சுரர்நர ரிலிங்க மமை த்திடி னதற்கொரு குரோசம், நிறைந்தினி தான நிலத்தினு ளொருவ னெறியுயிர் தணந்திடு வானேற், குறைந்தில வருள் சேர்ந் தானடிக் கமலக் குளிர்நிழற் கயிலையி னடைவார். (எ)

உருவமிக் குமரசேர் பருவதந் தனிலு முபர்பிர யாகைய தனிலுந், தருவளர் கேதா ரத்தினு விளங்கு சாலங்க கேத்திரந் தனிலுங், குருவதி யாட கேச்சுரந் தனிலுங் கோச்சரங் கொங் கணந்தனிலும், மருவசித் திடுஞ்சால் விமுத்தம தனிலு வளர் மகேச் சுரத்திலு மன்னே. (அ)

இரணிய கருப்பத் தினுமதீ தத்து மியலூறு வாரணு சியி னும், ஆரணிசை புலியூர் மதுரைமா தலத்து மரணியத் தாரு கா வனத்தும், தாணியர்ச் சுனத்தும் புடார்ச்சுன புரத்துந் தங் னுயிர் தணந்தவர்க் கெல்லாம், முரணிலாக் கதிநல் கிடுத ன்மெய் யெனினு முதியதென் காசிமே லாமால். (௯)

வீடரு ளத்த னுறைதென்கா சியின்கண் வெவ்வழ லோ ம்பியவ் வழலிற், பீடருள் கிற்றுப் பிறைமுடி யோனைப் பிரச மென் மலர்கொண்டு தூவிற், ருடரு மென்ன வலஞ்செய்து தாழ்ந்து தணந்தவவ் வுடலதிற் றறிப்பிற், மூடரும் கதியே பெறுவரென் றுபர்சை வாகம வேதங்கள் மொழியும். (௰)

குறைவறு கோயிற் காண்டலின் முத்தி கூடிடும் பணிக்கு மும் மடங்கா, மிறைவனைப் பூசை செய்யினு மடங்கா யிவ் விர தத்தொடு மிசைந்தே, பிறைவனை யண்ணா லைந்தெழுத் தோதிப் பெருகிமுத் தவத்தொடு தணர்ந்தோர், முறைவழு வாது பெறும்பய னும் முழுவது மொழிந்திடற் கரிதே.(௰௧)

நன்னக ராந்தென் காசியா லயத்து ணற்கிண றுனந்தப் பொய்கை, யன்னவீ சான தீர்த்தநல் லாற்றி லாடினர் பிரம கத் திகண்முன், பன்னரும் பவந்தீர்ந் தோங்குமெய்ஞ் ஞானம் படைத்தனர் சிவனுல கடைவார், மன்னமுப் போதுந் தெரிச னை செய்வோர் வரன்கழ னிழல்வீற் றிருப்பார். (௰௨)

நித்திரை தெளிந்தே தேகசுத் தியினன் னியமத்தை முறை முறை நிறுவி, நத்திரைந் தீனு முத்தெறி தாங்க நதிக்க ணே நிரீக்கண முதலா, முத்திரை கொடுத்தும் மிருத்திறு மல க முறைசுசி பூசிச்சண் முகத்த, சித்திரை நதிநீ ராடினு ரிகத் திற் செயங்கொடு சிவனுல கிருப்பார். (௰௩)

---

௰௧. பணிக்கு—கோயிற்பணிசெய்தலுக்கு. ௰௨. நாற்கிணறு— அன்னபூரணிதீர்த்தமும், காசித்தீர்த்தமும் சகத்திரோசதீர்த்தமு ம், வயிரவதீர்த்தமுமாம். ௰௩. நிரீக்கணம்—பார்த்தன்முத்திரை. சண்முகத்தசித்திரை—மூழ்குவோர் தீமைகளைச்சண்ணுந்துறைமு கங்களையுடைய சித்திராநதி, (சண்ணுதல்—சபித்தழித்தல்.) அடுத் தபாட்டின்படி ஆறுநதிகள்வந்துகூடுமுகங்களுடைய நுசித்திராநதி யென்னலுமாம். கூடுமிடம்—சங்கமுகமெனப்படுதலுங்காண்க.

சிவமது கங்கை யோங்குமைந் தருவி திகழ்தலை மலையைய
ணுறு, பவமறு தீர்க்குஞ் சதாசிவ நதிபார் பரவுநெல் லீச்சுர
நதிமா, தவமது விளைந்தோர் படிதொல்குற் றாலத் தனியழ
காறுசண் முகவிந், நவமது செறிந்த சித்திரா நதிதோய் நர
ரெலாஞ் சுரர்களா வாரே. (௰௪)

சிவசயி லங்தொட் டுயர்தொல்குற் றாலந் திகழ்சதா சிவ
கிரி நெல்லித், தவமலை வரையோங் காரநல் வடிவாந் தனித்
திரு வாசியி னடுவே, நவவடி வாநின் றருளுல கேச னன்னக
ராயதென் காசி, யுவகையே யுதவும் பிரணவ புரமா முட்பொ
ருள் காண்பவ ருயர்ந்தோர். (௰௫)

மந்தர முலைவெண் ணகைக்கயல் விழியாண் மலைமகளொ
ருபுற மன்னுங், கந்தர விடத்தெங் கண்ணுதற் பரமன் கவின்
கொளா லயத்தின்முன் வந்து, தந்தர நந்தி பீடக்கீழ் முதலாத்
தகைவலஞ் சோமசூத் திராந்தஞ், சுந்தர விடத்தம விடபமேற்
சண்டஞ் சூழினிந் திறன்றொழு வாழ்வார். (௰௬)

திரவலத் தடிக்குப் பரிமகப் பேறு சித்தியுண் டெனமறை
புகலும், விரவலா யிண்டுச் சூழுவோர் செல்வ வியப்பினை விள
ம்பலாந் தகைத்தோ, வரவணி யிறைவன் றெரிசனை புரிவார்க்
காகுமே நினைத்தவை யனைத்தும், பாவரு ணந்தி மார்க்கண்ட
ன் றண்டி பத்தியான் மேம்படல் பாரீர். (௰௭)

பவளமு முருக்கும் பழிச்சிய வதரப் பைங்கொடி படர்
புய மலையிற், றவளவெண் ணிலவு கொழிதிரு மேனி தயங்
கிய முக்கணெம் மிறைசீ, ரிவளவென் றறியுந் தரமில வேனு
மேதகா ரணத்தியற் றமிழாற், றிவளவின் னிசைப்பாட் டருள்
கவிச்சுரர்கள் சிவனுல கதனில்வீற் றிருப்பார். (௰௮)

---

௰௪, சிவமதுகங்கை—குற்றாலத்தாறு. ஐந்தருவி—குமாரகோ
யிலில் வந்துகூடுமாறு. தலைமலையையணுறு—செங்கோட்டையாற்றி
னொரு பகுதியிற்கூடுவது. சதாசிவநதி—புளியரை வழிவருஞ்செங்
கோட்டையாறு நெல்லீச்சுரநதி—வடகரையாறு. அது நெல்லிமலையு
ற்றுவந்துகூடுதலாலப்பெயர்பெற்றது. அது கூடுமிடம்வீரகேரள
ம்புதூர்ப்பக்கத்திலுள்ளது. தொல்குற்றாலத்தனியழகாறு—முது
குற்றாலத்திஅழகனாறு. அதுமணிகருணிகைதீர்த்தத்துக்குக்கிழக்
கேவந்துகூடுவது

பெருகுபொன் னிலவு நவமணி பொடித்துப் பெயலன்றிப் பிண்டியா மருவு, மருகுதண் கமல மவிரித ழொன்பான் பன்னிரண் டவிழ்பதி னாறு, முருகுற வெழுதி யதன்பொருண் மையோ டுறைசிவ னொருபுறத் தமைத்தே, முருகுமொய் தளவ முதலவர்ச் சித்து முன்பணி பவர்நவை தீர்வார். (கூ)

## திருக்கோயில் மகிமையுரைத்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாட்டு கூஅாசெ

---

### முப்பதாவது

# ஆசாரவிதி யுரைத்த படலம்.

தாங்குவன் புலவர் முகமனுப் பகருந் தன்மையிற் சொலாது மெய் யாவே, யோங்குதென் காசிக் கோயிலின் மகிமை யொருசிறி துரைத்தன மறிஞ, ரீங்குறைத் தாறே முயன்றுமெய் காண்டற் கினித்தமி ழகத்தினிற் சைவப், போங்குளார்க் குளவா சாசநல் விதியைப் புகலுவா மினிதெடுத் தன்பால். (க)

வேறு

ஓதமுகார் சிவசயிலம் புளியாரை நெல்விவெற்பென் றுரைமுக் கூட, மாதிரமார் சயிலப்பன் சதாசிவனீச் சுரன்முப்பேர் மன்னி வாழ்வோன், வேததிரு வாசியதார் தென்காசி நன்னகர்வாழ் விசுவே சன்று, னுத்திரி கூடபதி சண்பகக்கா பிரணவத்தி னடுவீ டாமால். (உ)

பேரியலர் நகர்முதன்முத் தமிழகத்துஞ் சைவறெனப் பிறங்குமேலோர், நேரியலா சிரியாரு ளாசார விதியெடுத்து நிகழ்த்து வேனென், னுரியனுஞ் சூதனுரை கேட்டனைமி சத்தவரின் பார்ந்து போற்றிச், சீரியயா மதுகேட்டவ் வாறுமுக வருளென்வங் கித்தார் சொல்வான். (ங)

வேறு

கதிரெழற் கைந்து கன்னல்முன் னெழுந்து கண்ணுதலருள்வெண்ணீ றணிந்து, பொதியிலின் மருங்கார் புனிததென் காசிப் புண்ணியை யுலகநா யகியோ, டதிர்கழ லுலக நாயகனு வமையைப் பனிநினைந் தேத்தி, மதியொடு புரியும் பொருளறங் கருதி மாண்கமண் டலந்தடி யெடுத்தே. (ச)

குண்டிகை நிறையப் புனல்கொடு போய்த்தான் கூடிடை மடிகளோட் கிட்டுத், தண்டிகைத் தந்த நிலத்தினீர் தெளித்துச் சலம் வைத்துத் தலைத்துகில் சுற்றி, யெண்டிகை யதனினிருந்திபோய்த் தென்பா லிராவட பாற்பக னோக்கி, கண்டிகை தலைமுந் நூல்செவியேற்றிக்கை தட்டித்திரும்புபார்ப்போட்டே.()

மலத்தினைக் கழித்தே னறுமண் ணீரால் வழுவறக் குறிகுதங் கழுவி, பலத்திவர் கைகா லழுக்கிலா தலம்பிப் பல்விளக்கிடுதல்வேல் பூலால், நலத்தியை கொம்பான் மாவிலை யதனால் னன்குசெய் தொளிர்முகங் கழுவி, நிலததினி தழகாந் தூய்மைய ராகி னீணெறி பிசகிலா தாடி. (சு)

பன்னுற் றிடாத மண்ணெல்லித் தூளாற் படிந்துநீர் மடிகளோய்த் துடுத்தி, யுன்னலு மிருத்தை யிடக்கையின் மூக்கூ றுருட்டிமங் கிரித்துட ற் பூசி, மன்னலும் நீரிற் சுற்றிலுமவரைந்து வதனங்கண் மூக்கினைப் பிடித்துக், சன்னலுண் மூழ்கிக் காயமே துவர்த்திக் கலையிற் சந்தியைக் கழித்தே. (எ)

படித்தலை வீசு வெள்ளநீ ரதனின் பயங்கொள்ளும் பத்தினைக் கழுவிப், பிடித்ததன் வாயின் வேண்டுகில் பொதிந்து பின்புவா யமிழ்ந்துறப் பிறணீர் வடித்தவை யெடுத்துக் கொண்டுவந் ததனால் மகிதலந் திரவியஞ் சுசியாய். முடித்தமு தமைத்தே முதல்வற்குப் பூசை முயனுதன் முறையென லாமால் (அ)

அலகிடும போதும் மெழுகிடும் போது மரியதோர் காய்கனி யதனை, யுலகினி லரியும் போதினு மடிசி னுகந்திட வட்டினும் போதும், விலகினில் லாமம் லோடுநீ ருடனே மீன்புழுச்செந்துறுங்குடத்துள், ளிலகியவ் வுயிர்க்குக் கொலையுரு மதனை லெடுத்துநீர் வடித்திடல் வேண்டும். (கூ)

ஒருவரு முயிரைக் கொலைசெய லாகா தூறுசெய் தவர்வரும் பிறப்பில், வெருவவந் தழிக்குங் கன்மமா முருவாய் வீந்தவை சைவரை வாழ்த்துங், குருவளர் கோயில் களினுயிர் செகுக்குங் கொலைஞரைத் தேவுகள் வொடிய, கருவழித் திடுமா பதகராக் கருதிக் கடிந்திடு மெனமறை கழறும். (ம)

---

ரு. மடிகள்—உடைகளை. தண்டிகைத்து—கைத்தடியை நடத்தி கண்டிகை—கண்மணிமாலை, முந்நூல்—பூணூல்.

முறையிலா முறையி னடப்பவர் தமக்கு மூவரு மியற்ற
லும முறைநா. லறைவகை வினவி மன்னர்கள் கோற லாற்ற
லுங் கொலையிலே யருளாஞ். சிறையுயிர்ச் செகுக்கு மகத்தினிற்
சிறிய தெய்வவூட் டருளவிற் கொலையின், றுறையற மாமென்
றுரைப்பரு முளரா லுவாற முவர்க்கு நன் றென்க (௰௧)

கொலையிற்கொ டியாரை வேந்தொறுத் தல்பைங் கூழ்களை
கட்டத னெடுநேர், தலைமறைத் தமிழ்தேர் பழையனுங் களை
கொய் தவிற்புடை பெயர்த்தயல் வைத்தல். நிலையற மாக்
கொள் வழக்கறி மேலோர் நிருபருக் குங்கொலை யறமென். றலை
வுரைக் கில்லா சாதலாற் கொலையைய நெபனல் புறமறை யாமல்.

நிரைதரு பிரம மறிந்தவர் செய்யு நியமமா தியிற்றளர் வுறி
னுங், குறைவென லாகா தறிஞரிற் குறைகாண் குபதரா காது
தங் குறைகண், டறையதிற் றீர்த லழகென வறிக வறிஞரை
நடத்துத லருளாண், முறையிலா சவரை யெள்ளிடி னரகின்
மூழ்குவர் நலோர் துதித் துய்வார். (௰௩)

பிடியன நடையார் தமைக்குரு மாரைப் பேசிலாப் பசுக்க
ளை யாசை, மடியிலாத் தமிழ்தேர் புலவரை யழித்தல் மனங்
கொதிப் பித்திடல் வதைத்தல், கொடிதெதிர்த் தாட லுதவிடா
திருத்தல் நீசரின் செய்கையான் மேலோர், படியிலக் நீசர்ப்
பார்த்திடிற் பாவம் பரிதிபைப் பார்த்தொழித் துய்வார். (௰௪)

வேறு

பாசிலாதி சைவர்வாழி மறைகள் வாழி தமிழ்மறைத்
தேசம்வாழித் திசைகள்வாழி செந்நெல்வாழி யுலகுமை
காசிவாழி யுலகநாதர் கருணைவாழி கோன்மைகற்
பாசிலாது வாழியீச னடியர்வாழி வாழியே. (௰௫)

---

௰௨, பழையன்–பாண்டியன். அயல்வைத்தல்–வேறிடத்தில் நிலையிடுதல். அதுபயிர் வளர்ச்சியைக்கெடுக்கும் களைகளை வேரொடுபிடுங்கி பிறிதோரிடத்தில் வைத்தல் போல மக்கள் வளர்ச்சியைக் கெடுக்குமாக்களை அவர்களுக்கு இடையில் வைக்காமல் நாடு கடத்திவிடுதல் செங்கோலுழவர்க்குக்கடமைஎன்பதாம். நிருபருக்கும்– அரசருக்கும். இதில்வரும் உம்மையால்வேள்விசெய்வோருக்கும், பேய்க்கூட்டுக்கொடுப்பவருக்கும் கொலை அறமாதல்போலஎன மூன்வருவித்துக்கொள்க. தமிழகத்தரசர் வேட்டையாடினர் என்பதும் புறந்தழீஇயோர் வழக்கெனவறிக.

இக்கதைக்க ணன்புவைத்தெ டுத்திசைப்பர் கேட்பவர்
பக்கனட்பு வைத்துவேண்டும் பரிசிலல்கும் மேலவர்
மிக்ககாமி யங்கள்யாவும் விசுவநாத னன்புநன்
மக்களுஞ்சி றப்பவெய்தி மன்னர்மெச்ச வாழ்வரே. (௯௬)

வேறு

ஆயிரத்துப் பதினொரு மாண்டுற்பங் குனியினிரு பத்தேழா நாள், தூயிரதி சோதிதுலா லக்கினத்திற் றென்காசித் தொல் புராணம், பாயிரத்தோ டாயிரத்தெண் ணூற்றிருபத் தெட்டுப் பாப் பகர்ந்து முற்றிற், றேயிசவும பகலுவிசு வேசனன்பார் குமாரகவி யெழுதி யதே. (௯௭)

ஆசாரவிதி யுரைத்த படலம் முற்றிற்று

ஆகப்பாட்டு—௩௮௯௧.

---

தென்காசித்தலபுராணம் முற்றுப்பெற்றது

சிவம் சிவம் சிவம்




